


# உடல் தத்துவம்

ஆக்கியோன்

டாக்டர் பு மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.

முன்னாள் தனி அலுவலர்

சித்த மருத்துவப் பாட நூற்குழு,
மருத்துவக் கல்வி இயக்குநர் அலுவலகம்,
சென்னை-5

மற்றும்

முன்னாள் முதல்வர்

அரசினர் இந்திய முறை மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.



மிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்

1986



# உடல் தத்துவம்


ஆக்கியோன்

டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,

முன்னாள் தனி அலுவலர், சித்த மருத்துவப் பாட நூற்குழு,
முன்னாள் முதல்வர், அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரி
முன்னாள் இயக்குநர், இந்திய மருத்துவத் துறை, தமிழக அரசு





தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்
1984

விலை

# முகவுரை

எழில் தவழும் இளங்கன்னியாகத் தமிழணங்கைக் கண்டு சென்னி யிலே தவழும் உடல் தத்துவத்தைச் சித்தர் மெய்ஞானக் கலையாகப் புனைந்து கூறிப் பெருமிதம் அடைவது தமிழறிஞர் மரபாம். அதனு லன்றோ உடல் தத்துவம் மெஞ்ஞானமே என்று கூறும் அளவிற்கு உலக வழக்கில் வந்துற்றது.

ஆகவே, சித்தர் கூறிய மூலத்தினை அப்படியே தழுவியும் இடை இடையே பொருள் விளக்கத்திற்காக ஆங்காங்கே சொற்களை வருவித்துக் கொண்டும் இந்நூல் எற்ற குறிப்புகளுடன் உருவாக்கப்பட்டுள்ளது. சித்தர் உடல் தத்துவங்களை ஓரளவு உணர்ந்து கொள்ளவும், மேலும் அதனை ஆழ்ந்து கற்கத் தூண்டவும் இந்தத் தெளிவுரை பயன்படும் என்பது நம்பிக்கையாகும்.

மிக மிகப் பெரிதான இந்த அரிய முயற்சியிலே காணும் குற்றங் களைப் பொறுத்து, குணங்கண்டு இன்புறுமாறு, அனைவரையும் கேட்டுக் கொண்டு இதனைத் தமிழ் அன்பர்களுக்கு வழங்குவதில் பெருமை யுறுகிறேன்.

நம்முள் ஒவ்வொருவருடைய வாழ்வையும் ஒவ்வொரு நாளும் முக்கியமான வகையில் உயிர்த் தத்துவயியைபியல் பாதிக்கிறது எனினும் அறிவியல் துறையில் ஆர்வம் கொண்ட மாணவர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், பொதுமக்கள் போன்றவர்கள் இத் தகைய புதிய திகைப்பூட்டும் அறிவியலைப் பற்றி மிகக் குறைவாகவே தெரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆதலால் உயிர் இயைபியல் பல தரப்பட்ட உருவ மாற்றங்களில் அதன் உயர்வுடைய சாதனைகளின் வடிவத்தில் வெளிப்படுகிறதே அன்றி அதன் உரிய புகழை அபூர்வ மாகவே அது பெறுகிறது.

உயிர், உடல்தத்துவ இயைபியற்களைச் சரித்திர வரலாற்றுக் காலத் திற்கு முன்பே திருமூலர் தன் திருமந்திரப் பாக்களில் கூறியுள்ளார். திருமந்திரத்தை முதன்மையாகக் கொண்டும் ஏனைய சித்தர் நூற் களைத் துணையாகக் கொண்டும் இன்னும் தற்கால அறிவியல் அறி ஞர்களின் நூற்களைக் கொண்டும் அடிப்படையே தெரியாத அல்லது சற்றே தெரிந்துள்ள சாதாரண வாசகர்கள் புரிந்து கொள்ளும் அளவில் விளக்க முயற்சிக்கப்பட்டுள்ளது.

357/1A

வாசகர்கள் அறிவியலையே தொழிலாகக் கொள்ளப் போவதாக இருந்தாலும் சரி அல்லது "உடல் தத்துவம்" என்ற நூலைப் பொது அறிவு பெற வேண்டும் என்ற நோக்கில் படித்தாலும் சரி, உயிர், உடல் இயைபியலின் ஒளிமயமான எதிர்காலத்தில், அது சொல்லப்போகும் வைகளைச் சுட்டிக்காட்டுவதுடன் உயிர் இயைபியலின் வாய்ப்பைப் பற்றியும் பயனைப் பற்றியும உங்களுக்கு இந்நூல் தெளிவாக விளக்குமென நம்புகிறேன்

இந்திய முறை மருத்துவக் கல்லூரியைச் சார்ந்த சித்த வகுப்பிற்கு அச்சிட்ட சில பாட நூற்கள் இல்லாக் குறையை நீக்கக் கருதிய தமிழக அரசினர்க்கும், தமிழக நலத்துறை அமைச்சகச் செயலாளர் உயர்திரு என். அனந்தபத்மனுபன், ஐ. ஏ. எஸ்., அவர்களின் பெரு முயற்சியினுலும் தூண்டுதலினுலும் சித்த வகுப்புப் பாட நூற்களை எழுத சித்த மருத்துவப் பாட நூற்குழு வொன்றினை நிறுவிச் சித்த மருத்துவப் பாட நூற்களை நூல் வடிவில் கொணர வாய்ப்பளித்த இப் பெரியாருக்கும் சித்த மருத்துவர்களும், மாணவர்களும் என்ஞான்றும் மறவா நன்றியினைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

இக் குழுவை நிறுவி வேண்டிய உதவிகளைப் பலவாற்ருனும் புரிந்த துணைச் செயலாளர் திருவாளர் கே. சிதம்பரம், பி. எஸ்ஸி., அவர்கட்கும் என் நன்றி உரித்தாகுக.

ஈதன்றியும், மருத்துவக் கல்வி இயக்குநர் டாக்டர் திரு. டி. சனுர்த்தனன், எம். பி. பி. எஸ்., எம். எஸ்ஸி., அவர்கள் சித்த மருத்துவப் பாட நூற் குழுவை நன்கு செயல்படவைத்து ஆசிரியர்களுக்கு ஊக்கம் அளித்து வரும் இப் பெருந்தகைக்கு என்றும் நன்றி செலுத்த சித்தர் உலகம் கடமைப்பட்டுள்ளது.

புதிய மருத்துவக் கல்லூரிகளின் திட்டத் தனி அலுவலர் டாக்டர் திரு. டி. நாராயணசாமி, எம். பி. பி. எஸ்., எம். எஸ்ஸி., அவர்கள், கல்வித் துறையினின்று அரசினரால் நூலைச் செம்மையாக்குதற் பொருட்டு அமர்த்தப்பட்ட திரு மு. கோவிந்தராசன், எம். ஏ., பி. எட். அவர்கள், அழகிய முறையில் இந்நூல் வெளிவருவதற்குக் காரணமாய் அமைந்த அரசினர் அச்சக இயக்குநர் திரு. எம். கே. கோமேதகவேலு, ஐ. ஏ. எஸ்., மற்றும் அச்சக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் என் இதய நிறை நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சென்னை–5,
12—8—1968.

டாக்டர் பு. மூ. வேணுகோபால்

# பதிப்புரை

பாளையங்கோட்டை, அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி மாணாக்கர் களுக்கான பாட நூற்களில் இப் புத்தகமும் ஒன்று. அக்கல்லூரியில் பயிலும் மாணவ சமுதாயத்துக்கு ஏற்பட்ட பாட நூற்கள் பற்றாக்குறையை நீக்கும் பொருட்டு, பல்வேறு குழுக்களை அமைத்து பாட நூற்களை உருவாக்கும் பணி எங்கள் வாரியத்தினால் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அப்பணி இனிது நிறைவேறும் காலம்வரை உள்ள இடைக்காலத்தை நிரப்பும் வகையில், ஏற்கெனவே உள்ள பாடப் புத்தகங்களை மீண்டும் அச்சேற்றி வழங்குவது என்ற எங்கள் வாரியத்தின் கொள்கை முடிவிற்கு ஏற்ப, முன்னாள் இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால்,எச்.பி.ஐ.எம்., அவர்கள் ஆக்கிய "உடல் தத்துவம்" என்ற இந் நூல் மீண்டும் அச்சேற்றி உங்கள் முன் வைக்கப்படுகிறது.

உற்றுழி உதவியும், உறுப்பொருள் கொடுத்தும், சித்த மருத்துவத் திற்கு உறுதுணையாக விளங்கும் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் அமைச்சரவையின் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் எச். வி. ஹண்டே, அவர்களுக்கும் சித்த மருத்துவம் சீர் பெற வேண்டுமென சிந்தையெல்லாம் ஆர்வத்தை தேக்கி, செயல்முறையில் வெற்றிபெற துடிக்கும் எங்கள் வாரியத் தலைவர் முத்தமிழ் காவலர் திருமிகு கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கும், இப் பணி விரைவாகவும், மனநிறைவாகவும் உருப்பெற உறுதுணையாக இருக்கும் இந்திய மருத்துவத்துறை ஆணையர் மற்றும் அரசு செயலாளர் திருமிகு எம். கே. கோமேதகவேலு, இ. ஆ. ப., அவர்களுக்கும், இதில் தனிக்கவனம் செலுத்தி வரும் வாரியத் தனி அலுவலர் மருத்துவர் இரா. செயராம், எம்.டி. (சித்தா) அவர்களுக்கும், பிழைகள் களைய விழைவுக்கொண்டு கருத்தூன்றி அச்சுப்படிகளை திருத்தி தந்த ஆய்வு மருத்துவ அலுவலர், மருத்துவர் வெ. அருணாசலம், எம். டி., (சித்தா) அவர்களுக்கும், பெருகிய பணிகளுக்கிடையில் குறுகிய காலத்தில் அச்சுப் படிகளை திருத்தும் பணிக்கு உதவி நின்ற தமிழ் புலவர்களான திருமிகு புலவர் ம. முத்துசாமி அவர்களுக்கும், திருமிகு த. அழகப்பராசு, எம். ஏ., அவர்களுக்கும், திருமதி செ. இரா. பிரசன்னா, எம். ஏ., அவர்களுக்கும், தேவைக்கேற்ப சிறப்பாக

பணியாற்றி இவ்வாக்கப் பணிக்கு ஊக்கம் தந்த அலுவலக பணியாளர்களுக்கும், இந்நூலை திறம்பட அச்சிட்டு தந்த புதுக்கோட்டை அரசு கிளை அச்சக பொறுப்பாளர்களுக்கும் மற்றும் பணியாளர்களுக்கும் என் இதயம் நிறை நன்றிகள் உரித்தாகுக.

திருமதி குத்சியா காந்தி, இ. ஆ. ப.,
உறுப்பினர்-செயலாளர்,
தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்.

சென்னை-600 106,
1—4—1985.

# உட் பொதிந்தவை

பக்கங்கள்.

---

# உடல் தத்துவம்

❖❖❖❖❖

## பிரிவு 1

### அத்தியாயம் 1

---

#### பொருள் தத்துவம்

**தத்துவம்** என்ற சொல்லிற்கு உண்மை என்பது பொருளாகும். எனவே தத்துவஞானம் என்பது உண்மையை அறிவதெனப் பொருள் படும். உண்மை என்பதற்கு உள்ளது; அதாவது என்றும் உள்ளது என்பதே கருத்து. நம் உடல் உட்பட நாம் காணும் பொருள்கள் யாவும் என்றும் உள்ளவை அல்ல. என்றுமே உள்ள நிலையான பொருள் ஏதாவதுண்டா? உண்டாயின் அது எது? அதன் இயல்புகள் யாவை? என்பன போன்றவற்றை ஆராய்வதே தத்துவஞானம் எனப்படும்.

உண்மையாக என்றுமே உள்ள பொருள்களின் தத்துவத்தை ஆராய்வது மெஞ்ஞானம் என்றும், அழியும் அல்லது மறையும் அதாவது பகுதிகளாகப் பிரியும் பொருள்களை அறிவது விஞ்ஞானம் என்றும் கொண்டனர்.

மெஞ்ஞான ஆராய்ச்சி நம் நாட்டில் என்றோ முடிந்து அதன் முடிவுகளும் அறுதியாக வெளியிடப்பட்டு விட்டன. பின் வந்த ஞானிகளின் ஆராய்ச்சிகள் யாவும் அம் முடிவுகளைச் சரியாக விளங்கிக் கொள்வதன் பொருட்டே மேற்கொள்ளப்பட்டன.

மெஞ்ஞானத் தத்துவ ஆராய்ச்சியைப் பொழுது போக்கிற்காகத் தொடங்கவில்லை. சீவராசிகள் படும் அல்லலும், மனிதர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுமே இந்திய ஞானிகளை இவ்வாராய்ச்சியில் ஈடுபடச் செய்தன.

மெஞ்ஞானக் கொள்கைக்கும் மக்களது வாழ்க்கைக்கும் அதிகத் தொடர்புண்டு. இத் தத்துவஞானமும் வாழ்க்கையும் ஒன்றோடொன்று கருதுமளவுக்கு அவை இரண்டும் ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கின்றன. இதனாற்றான் சமயம் வேறு, தத்துவஞானம் வேறு என்றில்லாமல் இந்நாட்டில் இரண்டும் பிணைந்து கிடக்கின்றன.

மெஞ்ஞானிகளும், தத்துவ ஞானிகளும் தத்துவ ஆராய்ச்சியில் மட்டுமன்றி அவ்வாராய்ச்சிக்குத் துணையாகும் சாதனங்களை ஆராய்வதிலும் பெரிதும் ஈடுபட்டனர். சாதனங்கள் அறிவைப் பெறும் வழிகளைக் குறிக்கும். இவைகளைத் தத்துவ ஞானிகள் "பிரமாணங்கள்" என்பர். பொறிகள், நூல்கள் ஆகிய இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரமாணம் எனப் படும். இப்பிரமாணங்கள் தத்துவ ஞானத்தின் சிறப்பியல்புகளுள்

ஒன்ருகக் கருதப்படுகின்றன. தத்துவ ஞான முடிவுகளை ஆகமம், வேதம் என்ற நூல்களில் வெளியிடப்பட்டுள்ளன. இந்த ஆகம வேதங்களில் கூறப்பட்டவைகளுக்கு விளக்கம் கூறுவதில் ஏற்பட்ட வேறுபாடுகளால் பிற்காலத்தில் பல பிரிவுகள் தோன்றின. இந்தியத் தத்துவ ஞானிகள் அனைவரையும் இரு பெரும் பிரிவினராகப் பிரிப்பது வழக்கம். ஒரு பிரிவினர் ஆகமங்களில் கூறப்பட்டவற்றைச் சரியென ஒப்புக் கொள்ளுவோர். மற்ருெரு பிரிவினர் வேத உபநிடதங் களில் கூறப்பட்டவற்றைச் சரியென ஒப்புக்கொள்வோர். வேதத்தை ஒப்புக்கொள்ளுவோரை வைதிகர் என்ற சொல்லாலும் ஒப்புக்கொள்ளா தோரை அவைதிகர் என்ற சொல்லாலும் குறிப்பிடும் மரபும் உண்டு. உலகாயதர், சமணர், பௌத்தர் ஆகிய மூவருமே அவைதிகர் எனப்படும் பிரிவைச் சேர்ந்தவர்களாவர். வைதிகருள் சாங்கியர், யோக மதத்தினர், நையாயிகர், மீமாம்சகர், வேதாந்திகள், சித்தாந்திகளெனப் பல உட்பிரி வினர் இடம் பெறுவர். வேதத்தை ஆதரித்தமையால் எழுந்தவை சில பிரிவுகள், அவற்றை எதிர்த்தமையால் எழுந்தவை சில பிரிவுகள், ஆகமப் பிரமாணங்களைக்கொண்டு நிரூபிப்பது சிறப்பான அம்சமாக விளங் குகிறது. மற்றவை அளவைப் பிரமாணங்கள். தத்துவார்த்தத்தையறிய இவ்விரு பிரமாணங்களையும் அறிவது அவசியமாகும்.

பிரமாணங்கள்தான் அறிவைத்தரும் கருவிகள், அவைதான் அளவு கோல்கள். ஒரு பொருளை அளக்கத் தொடங்குமுன் அளவுகோல் சரியானதாவென அறிய வேண்டும். தத்துவஞானம் என்பது பிரபஞ்ச ஆராய்ச்சி, பிரபஞ்ச ஆராய்ச்சி பற்றிய முடிவை நாம் அடையுமுன் பிரபஞ்சத்தைப் பற்றி அறிய உதவிகளாயிருக்கும் கருவிகளைப் பற்றிய ஞானத்தை அவசியம் அறிய வேண்டும். இதனை அளவை என்னும் பிரமாணயியலில் காணலாம்.

எனவே, உடல், தத்துவ நூலில் முதலில் மெஞ்ஞான விளக்கம் தந்து அதனை யடுத்து வருவது விஞ்ஞான விளக்கமாகும். விஞ்ஞானமும் பொருள் தத்துவம் கொண்டுள்ளது. பொருள் மூன்று வகைப்படும், அவை, அருவப் பொருள், அருவுருப் பொருள் உருவப் பொருள் என்பவையாம். அருவப் பொருள் மெஞ்ஞானத்திலும், அருவுருப் பொருள், உருவப் பொருள்கள் விஞ்ஞானத்திலும் விளக்கப்பட்டுள்ளன. அருவப் பொருளை விளக்க மெய் கண்டான் நூலை உறுதுணையாகக் கொண்டு விளக்க வேண்டியுள்ளது. விஞ்ஞானத்தை அறிவது உடல் தத்துவ விளக்கத்திற்கு உறுதுணையும் இன்றியமையாததுமாகும்.

## பொருள்

பொருள் என்பது யாதோவெனில் சொல்லில் உணரப்படுவது. அது முதல், கரு, உரிப்பொருள் என மூவகைப்படும்.

முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறை சிறந்தனவே
பாடலுட் பயின்றவை நாடுங்காலை (அகத்திணை இயல்)

**முதற் பொருளாவது :** நிலமும், காலமும் என இருவகைப்படும்.

முதல் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே (அகத்திணை இயல்)

1. நிலம் எனவே நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீருக்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரண மாகிய ஆகாயமும் பெறுதும்.

2. காலமாவது மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது' நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு, உகம் எனப் பல வகைப்படும்.

**கருப் பொருளாவது** நிலத்திலும், காலத்திலும் தோற்றும் பொருள். அது தேவர், மக்கள், விலங்கு முதலியனவும், உணவு செயல் முதலா யினவும் பறை, யாழ் முதலியனவும் இன்னவான பிறவும் ஆகிப் பலவகைப்படும்.

**உரிப் பொருளாவது** மக்கட்குரிய பொருள். அஃது அகம், புறம் என இரு வகைப்படும்.

அகமாவது புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை பெருந்திணை எனவும் ஏழு வகைப்படும்.

அகப்பொருளாவது போக நுகர்ச்சி யாதலின் அதனால் ஆயபயன் தானே அறிதலின் அகம் எனப்பட்டது.

புறப் பொருளாவது மறஞ் செய்தலும், அறஞ் செய்தலும் ஆகலான் அவற்றால் ஆய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார். அஃதற்றாக, உலகத்துப் பொருள் எல்லாம் உணர்தல் வேண்டுமெனின் அது முதல், கரு, உரிப்பொருள் எனத் தொகை நிலையான் அடங்கும். அவ்வாறு வகுக்கப்பட்ட பொருளை உருப்பினும் தொழிலினாலும், பண்பி னாலும் பாகுபடுத்தி நோக்க வரம்பிலவாய் விரியும். இக் கருத்தினாலே உலகத்துப் பொருள் எல்லாவற்றையும் முதல், கரு, உரிப் பொருள் எனக் கூறி உருவத்தினால் உருவப் பொருளினையும் தொழிலினாலும் பண்பினாலும் அருவப் பொருளையும் ஓதினார் என உணர்க.

"நிலம், தீ, நீர், வளி விசும் போடைந்துங்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"
(தொல்காப்பியம் பொருளதிகாரம் 635)

" மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும் புதை வம்ரு வளியும
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்
கைம்பெரும் பூதத்தியற்கை போல" (புறநானூறு 2)

என்றாகலினாலும், இவவுலகம் ஐம்பெரும் பூத அணுக்களினால் ஆயது என்று சொல்லப்பட்டது. இவவைம் பெரும் பூத அணுக்களில் ஒவ்வொரு அணுக்கள் தோறு 96 தத்துவங்கள் பொருந்தியிருக்கின்றன.

இவ்வுலகத்தில் காணப்படும் முதல், கருப் பொருள்களாகிய அருவ உருவப் பொருள்களில் இத்தொண்ணூற்றாறு தத்துவங்கள் பொதிந்து கிடக்கின்றன.

இதனையே,

பேதமை சார்வாச் செய்கை யாகும்
செய்கை சார்வா வுணர்ச்சி யாகும்
உணர்ச்சி சார்வா வருவுரு வாகும்
அருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா வூறா கும்பமே.
ஊறு சார்ந்து நுகர்ச்சி யாகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பறறா கும்மே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழி முறைத் தோற்றம்
தோற்றஞ் சார்பின் மூப்புப் பிணி சாக்காடு
டவல மாற்றுக் கவலை கையா றெனத்
தவலிறுன்பந் தலைவரு மென்ப
ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
(மணிமேகலை—பவத்திறமறுகெனப்பாவை நோற்ற காதை)

இன்னும்,

பேதமை செய்கை யுணர்வே யருவுரு
வாயிலூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் விணைப்பயன்
இன்றென வகுத்த வியல்பீராறும்
பிறந்தோ ரறியிற் பெரும் பேறறிகுவர்
அறியா ராயினாழ் நர கறிகுவர் (மணிமேகலை)

என்னும் கூறப்பட்டுள்ளது.

"மானந்தி எத்தனை காதம் அழைக்கினுந்
தாளந்தி யஞ்சின் தனிச் சுடராய் நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி ஒன்பதின் மேவி நின்றானே." (திருமந்திரம் 1716

"உருவம் அருவும் உருவே டருவும்
மருவு பரசிவன் மன் பல்லியிர்க்குங்
குருவு மென நிற்குங் கொள்கைய ஞருந்
தருவென நல்குஞ் சதா சிவன் தானே" (திருமந்திரம் 1733)

"நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிக நாப்பண்
நாலான ஒன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் தானே". (திருமந்திரம் 1734)

கட்புலனும் திணை பால் வேறு பாட்டுருவும், கட்புலனுகா அருவும், கட்புலனுயினும் வேறுபாடு தோன்ரு அருவுருவும் ஆகிய முத்திறப் பிழம்புகளாய் உலகத்தில் பொருள்கள் திகழ்கின்றன. இம் முத்திறப்பட்ட பிழம்புகளில் அருவப்பொருள் ஒன்பது திருமேனிகளையுடையன.

உருவம் நான்கும் கீழ்படி யென்றும்
அருவம் நான்கும் மேற்படி யென்றும்

அருவுருவம் நடுப்படியென்றும் அழைக்கப்பெறும்.

உருவம்— 1. அயன்
2. அரி
3. அரசன்
4. ஈசன்

அருவுருவம்—1. சதாசிவம்

அருவம் —1. விந்து
2. நாதம்
3. சக்தி
4. சிவம் ஆக ஒன்பதாம்.

மற்றும்

ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந் தெய்வம்
நீதியுள் மாதெய்வ நின்மலன் எம்மிறை
பாதியுள் மன்னும் ப்ராசக்தியாமே. (திருமந்திரம் 1737)

மேல் ஓதிய ஒன்பான் திருப்படிமங்களில் ஒவ்வொன்றிலும் ஓர் பாதி தனதாகக் கொள்ளும் நிலை பெற்ற வனப் பாற்றலாகிய பராசக்தியாகும்

எனவே,

சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஒத்தவும் ஆமீசன் தானுன வுண்மையே (திருமந்திரம் 1738)

சத்தி தத்துவத்துக்கு மேல் விளங்கும் இயக்க நிலை அறிவுப் பேராற்றலாகிய பராசக்தியாகும். அப் பேராற்றலினுள் திகழ்வது இயற்கை உண்மைச் சிவனிலையாகும். அதன் மேல் யாதினும் தோயாது அருவப் பெருவெளி நிற்கும். அந்நிலையம் ஆற்றலாகிய சத்திக்கு இயைந்த அறிவாகிய சிவம் வீற்றிருந்ததனுலும் மெய்மையாகும்.

கொழுந்தினை காணிற் குவலயந் தோன்றும்
எழுந்திடங் காணில் இருக்கலுமாகும்
கரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையுளானே. (திருமந்திரம் 1739)

பரம் என்றிடத்தில் சிவமும் சத்தியும் ஒரு காற்றிலே உடைய மெய்மை தோன்றும், ஆகவே சக்தி சிவமாகும். சிவம் சக்தியுமாகும். இவ்விரண்டு பொருளானதும் ஒன்றே. அகங்கை, புறங்கை போன்று இயல்பால் இருநிலை என்ப. சக்தியும் சிவமும் இல்லாமல் எப்பொழுதும் தோற்றமுறுது. சக்தியே யாண்டும் எல்லா பொருள்கட்கும் தாங்கும் நிலைக்களம். ஆனால் சிவசக்தியே உலகப் பொருள்களாகச் சமைந்தது என வற்றுக் கூறுவர்.

ஆகவே உலகத்தில் காணப்படும் முதல், கரு வென்னும் பொருள்கள் உருவமாயும் உருவருவமாயும் அருவமாயும் தோற்றமளிக்கின்றன. அருவமும் உருவமும் பிரிக்கப்படாதது. அருவத்தில் உருவமும் உருவத்தில் அருவமும் பிணைந்து கிடைக்கின்றன என்பதை நன்கு சித்தாந்த நூல்கள் கூறுகின்றன

இதனையே திருமூலர் திருமந்திரத்தில்

பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்து
அருவா யுருவாய் அருவுருவாகிக்
குருவாய் வருஞ் சத்தி கோனுயிர்ப் பன்மை
உருவாயுடனிருந் தொன்ரு யன்ருமே (திருமந்திரம் 2442)

உயிர்க்குயிராகிய வுருவா யருவாய்
அயர் புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருள் மூடமாமே(திருமந்திரம் 2170)

"நந்தை பரமனும் என்னம்மை கூடமும்
முந்த வுரைத்து முறை சொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம் பெருங் கண்ணியை
உந்தியின் மேல் வைத்துகந்திருந்தானே. (திருமந்திரம் 1740)

சிவ தத்துவமும் சக்தி தத்துவமும் மணி யொளி போலப் பிரிப்பின்றிக் கலந்து கூடிய கூட்டம் ஒரு பாகத்தமர்ந்த சேர்க்கை என, திருமூலர் கூறுகிறார்.

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப
பரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணை கூர் முகங்கள்................ (கந்தபுராணம்)

அற்றமில் உருவமாகுவன், அருவம் ஆகுவன், அருவுரு வகன்ற பெற்றியுமாவன், மறைகளுந் தெரியாப் பெரியவன், பெரியார்க்கும் பெரியான், சுற்றிடும் பொருள்கள் அனைத்துமாய் அலவாய்த் தோன்றிய தனிப் பெருந் தோன்றல்.

(கந்தபுராணச் சுருக்கம்)

எனவே, வடிவும், வடிவு இல்லது, வடிவம் இல்லதுமாயது என்ற முத்திறப்பட்ட சகல நிட்கள திருமேனிகளாக விளங்குகின்றன எனப்பட்டது.

மற்றும் இக்குறிப்பையே,

"அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
அருவுருவ மன்றுகு முண்மை—அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர் மணம் போற் றெருக்கு."

(ஏழாஞ் சூத்திரம்)

என்று சிவஞான போதமும்,

"ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப மிலய
மொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவமாகித் தேவியுமாய்த்
தேசமொடு செல்வமாகிப்,"

"அருவினி லுருவந் தோன்றியங் காங்கி பாவமாகி
யுருவினிலுருவ மாயே யுதித்திடு முலக மெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோ டபேதமாகு
மொருவனே யெல்லாமாகி யல்லவா யுடனு மாவன்"

எனச் சிவஞான சித்தியாரும் விளக்குகின்றன.

எனவே, காரண காரியப் பரம் பொருள் அருவாய், உருவாய், அரு வுருவாய்த் தோன்றி யருளப்பட்டது. இந்நிலைமை தொன்மையிலேயே இயற்கையாக அமைந்த நன்மைப் பண்பாம். இனி அருவம், அருவுருவம், உருவம் ஆகியவற்றை ஆராய்வோம்.

---

## அத்தியாயம் 2.

### அருவப் பொருள்.

அருவப் பொருள் ஒன்பது திருமேனிகளை யுடையது. அவை, சிவம், சக்தி, விந்து, நாதம் என நான்கும் மேற்படி; சதாசிவம் மட்டும் நடுப்படி; அயன், அரி, அரன், ஈசன் என நான்கும் ஆகிய ஒன்பதும் திருமேனிகளாகும். இவைகளை முறையே,

1. அறிவு
2. ஆற்றல்
3. ஒலி
4. ஒளி
5. அருளோன்
6. ஆண்டான்
7. படைப்போன்
8. காப்போன்
9. அழிப்போன் எனச் சித்தாந்த சாத்திர நூல்கள் கூறுகின்றன வென்பதை மேலே கண்டோம்.

**சிவம் இயல் :** சிவம் என்ற சொல் முதன் முதல் எந்த நூலில், எந்த மொழியில் காணப்படுகிறது என்பது ஆராயத் தக்கதாகும். புறநானூறு போன்ற மிகப் பழைய தமிழ் நூற்களிலே சிவன் என்ற சொல் காணப்படவில்லை. வேத காலத்தில் தோன்றிய இருக், யதுர், சாம வேதங்களிலும் காணப்படவில்லை. எனினும், சிவன் என்ற சொல் இல்லாதபோதும், சிவபெருமானைக் குறிக்கும் "நீலமணி மிடற்றொருவன்," "கறை மிடற்றண்ணல்" போன்ற அநேக சொற்கள் உபயோகித்திருத்தலைப் புறநானூற்றில் காணலாம்.

சைவ சித்தாந்தமும், ஆகம நூலும் தமிழருக்கே உரியதாக இருந்தும் "சிவன்" எனனும் சொல் பழைய தமிழ்ச் சங்க நூல்களில் காணப்படாமைக்கு காரணங்களில்லாமலில்லை. தென்னகத்தில் ஆகம நூல்கள் தமிழ் அறிவர்களிடையே மனப்பாடமாக இருந்தது. வாழையடி வாழையாக மனப்பாடமாக இருந்ததே ஒழிய அவ்வமயம் எடுகளில் எழுதப்படவில்லை. தென்பாலி முகத்தில் அநேக கடற்கோள்களினால் தமிழர்கள் நான்கு பக்கமும் சிதறி ஓடினர். தமிழர்களும், நாகர்களும் சிந்து கங்கை இடைவெளி தீரத்தை அடைந்தார்கள். ஆகமமும் அவ்விடம் சென்றது. எஞ்சிய தமிழகத்தில் ஆகமம் மறைந்தது. இக்காரணங்களால் பிற்காலத்தில் எழுந்த பழந் தமிழ்ச் சங்க நூல்களில் "சிவன்" என்ற சொல் காணப்படவில்லை. சிந்து கங்கை இடைவெளி தீரத்தில் பரவிய நாகர்களும், தமிழர்களும், ஆகம நூற்களுக்குப் புத்துயிர் அளித்து மறுமலர்ச்சி அடையச் செய்தார்கள். மனப்பாடமாக இருந்த ஆகம நூற்கள் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டன. அங்குச் சொல்லாட்சி வடமொழியான

படியால் காலக் கிரமத்தில் ஆகம நூல் வடமொழியில் பதிந்துவிட்டது. எனவே, தமிழர் நாக பரம்பரையிலுதித்த அரசர்களிடையே சைவ சித்தாந்தம் மிகவும் சிறப்பாகப் போற்றி வரப்பட்டது. அம் மன்னர்களின் ஆட்சி நிலை குலையவே, அன்னூர்கள் தெற்கு நோக்கிப் போந்தார்கள். அவ்வாறு போந்தவர்கள் வாகடர்களும், பல்லவர்களுமாம். இம் மன்னர்கள் தென்னகத்தில் குறுநில மன்னர்களாகி, பிறகு பெரிய தொரு அரசையே தோற்றுவித்தார்கள். அவ்வாட்சியுடன் சைவ சித்தாந்தமும் சிறந்தோங்கியது. ஆனால், வட மொழியிலே வலுவுற் றிருந்தது. இச் சம்பவங்கள் எல்லாம் வரலாற்று காலத்திற்கு முன்பு நடந்ததாகும்

ஆகவே தென்னகத்தில் சைவ சித்தாந்தம் சற்று மறைந்தே இருந் தது. கங்கை நாட்டை விட்டு தென்னகத்திற்கு வந்து மறுபடியும் தமிழில் மறுமலர்ச்சி யடையும் வரையில் ஆகம நூற்களுக்கு இருண்ட காலமாக இருந்தது.

வரலாற்று காலத்துக்கு முன்பு வடக்கில் போற்றியிருந்த ஆகம நூலின் கருத்துக்களை தென்னகத்தில் திருவாடுதுறையில் முதன் முத லாக இனிய தமிழில் திருமூலர் தன திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங் களாக கூறியுள்ளார். அவ்வமயம் பிறமொழி ஆட்சியானபடியால், திரு மந்திரமும் கி.பி. 700 வரையில் மறைந்து கிடந்தது. ஆனால், கடைச் சங்க நூற்களில் "சிவன்" என்ற சொற்கள் மிகவும் பொலிந்து கண்ணுற் றது. கடைச் சங்க காலம் ஏறத்தாழ கி.மு. 760 முதல் கி.பி. 300 எனலாம். நிற்க, கி.பி. 700-க்கு மேல் தமிழில் சைவ சித்தாந்தத்தி லும் தேவார திருவாசகத் தோத்திரப் பாடலிலும் "சிவன்" சொல்லாட்சி பெற்றது. கி.பி. 1300-ல் மெய்கண்ட தேவர் தோன்றி தமிழில் முறை யாக சைவசித்தாந்தத்தைச் "சிவஞான போதம்" என்ற நூலை வெளி யிட்டார். அதனைத் தழுவி மெய்கண்ட சாத்திரத்தோடு மேலும் பதின் மூன்றும் உண்டாயது.

முறையான சைவ சித்தாந்தம் தமிழில் வரலாற்று வாயிலாக கி.மு. 900-க்கும் கி.பி. 1200-க்கு மிடைப்பட்ட காலத்தனவாகிய ஆகம நூற் கள் தென்னகத்தில் இடம் பெற்றிருந்த போதிலும், கி.பி. 400-க்கும் கி.பி. 1300-க்குமிடைப்பட்ட காலத்தில் தமிழில் முறையான சைவ சித்தாந்த நூல்களும் மெய்கண்டான் சாத்திரமும் வெளியிடப்பட்டன என்பது திண்ணம்.

"சிவம்" என்ற சொல்லினைப் பற்றிய ஆராய்ச்சியை இம்மட்டோடு நிறுத்தி "சிவன்" என்பது என்னென்பதை ஆராய்வோம்.

சிவனைக் கடவுள் என்று குறிப்பிடுகின்றனர். கடவுள் என்ற தனித் தமிழ்ச் சொல்லின் பொருளிலிலேயே சைவ சித்தாந்த கருத்துப் பெரிதும் அடங்கியுள்ளது எனக் காட்டுவதுண்டு. கடவுள் என்பது தனித் தமிழ்ச் சொல். அது புறநானூறு, தொல்காப்பியம் போன்ற மிகப் பழைய தமிழ் நூல்களிலே காணப்படுகின்றது. கடவுள் என்றால் இயக்குதல்; எனவே, கடவுள் என்பதற்கு உலகை இயக்குபவர் என்பது கருத்து. கடவுள் என்பதற்கு உள்ளத்தைக் கடந்தவர் எனப் பொருள் கூறுவது. முண்டு. கடவுள் உலகைக் கடந்தவர் எனப் பொருள் கூறுவதுமுண்டு

கடவுள் உலகைக் கடந்தவர். அதே சமயம் உலகிலும் உள்ளவர் என கொள்வது, உலகினுள்ளும் உயிர்களினுள்ளும் நிறைந்து நிற்கும் நிலையை "உள்" என்ற சொல்லும், அவற்றைக் கடந்து நிற்கும் நிலையைக் "கட" என்ற சொல்லும் குறிக்கும். உலகை இயக்குபவன் இறைவன். அவன் உலகெங்கும் நிறைந்தவன். அதே சமயம், உலகைக் கடந்து நிற்பவனுமாவான். கடவுள் என்ற சொல்லிலே அடங்கியிருக்கும் இக் கருத்துக்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் மிகப் பழைய நூல்களாகிய தொல்காப்பியம், புறநானூறு ஆகியவற்றிலேயே இசசொல் குறிப்பிடத் தக்கது. அவற்றைக் கீழ்க்கண்ட வரிகளில் காணலாம்:—

1. "அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடான்" (புறம் 158)

2. "கடவுள் ஆலத்து" (புறம் 199)

3. "ஆலமர் கடவுளன்ன—நின்
கடவுள் சான்ற கற்பு" (புறம் 198)

4. அறங்குறித் தன்று பொருளாகுதலின்
மருள் தீர்ந்து மயக்கு ஓரீஇ (புறம் 29)

ஆகவே, கடவுள் சிவன் போன்ற மற்ற சொற்களாலும் அதற்கேற்ப பிற மொழியாலும் உணரப்படுவதெல்லாம் அருவப் பொருள். ஊனக் கண்களால் காண்பவை அல்ல. அறிவால் உணரப்படுவதே. அதனை நேரடியாகக் கூறுவதே சைவ சித்தாந்தம். சிவனைப் பற்றியோ கடவுளைப்பற்றியோ நிரூபிப்பது சைவ சித்தாந்தம். இது இரு பிரிவினைக் கொண்டது. சுபக்கம் என்றும் பரபக்கம் என்றும் இருவகைப்படும். சுபக்கம் என்பது கடவுள் உண்டென்பதை நிரூபிப்பது.

ஒரு பொருள் உண்டென்பதை நிரூபிக்கப் பொதுவாக மூன்று வழிகள் உண்டு. அவ்வழிகள் அளவைகள் எனப்படும். உரைகல், கருதல், காண்டல் என மூன்றுமே அளவைகள். இவைகள் அளவை நூலில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுள் முதலாவதாகிய உரைகல், ஒரு பொருளை அனுபவத்தால் அறிந்த மகான்களின் அல்லது அறிஞர்களின் வாய்மொழி மூலம் அறிதலாகும். அவர்களது வாக்கைக் கேட்பதன் மூலம் அறிதலாகும். இம் மூன்றினுள்ளே கடவுளுண்டு அல்லது சிவன் உண்டு என்பதற்கு முக்கிய ஆதாரமாகச் சைவசித்தாந்திகள் கைக் கொள்வது உரைகல்லே. ஏனைய அளவைகளைக் கொண்டு சிவத்தை நிரூபிப்பது கடினம். இக்காரணத்தால்தான் சிவம் உண்டென்பதை ஒப்புக்கொள்வோர் அனைவரும் உரைகல்லையே முக்கிய அளவையாகக் கொள்ளுகின்றனர்.

இறையருள் பெற்ற அநுபூதிமான்களுடைய வாக்குகளே இன்று வேதம் என்றும் ஆகமம் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

கருதல் அளவை மூலமாகவும் சிவத்தை நிரூபிக்கலாம். வேத ஆகமங் களிலே கூறப்பட்டவற்றை மேலும் வலியுறுத்த கருதல் பிரமாணம் பயன்படும். சில சமயம் வேத ஆகமங்களை ஒப்புக்கொள்ளாதவர்களுக்குக்

கடவுள் உண்டென்பதை நிரூபிக்க கருதல் மட்டுமே பயன் படும். கருதலைக்கொண்டு சிவத்தை மூன்று விதமாக நிரூபிக்கலாம். உலகிலுண்மையைக் கொண்டு அதனைப் படைத்தவனும் உளன் என நிரூபிப்பது. இரண்டாவது, இப்படைப்பின் நோக்கத்தை ஆராய்வதன் மூலம் படைத்தவனும் உளன் என நிரூபிப்பது. மூன்றாவது, பொருள்களிலுள்ள குறைகளைக் கொண்டு குறைவில்லா பரிபூரணமான பொருளும் உண்டென நிரூபிப்பது.

சைவர்கள் உலகைக் கொண்டு நிரூபிக்கும் விதம் மிகவும் சுருக்கமானது. பானையைக் கொண்டு அதனை வனைந்த குயவன் ஒருவன் உளன் என்பது அறியப்படுகிறது. அதைப் போலவே, உலகத்தைக் கொண்டு அதனைப் படைத்தவன் ஒருவன் இருந்தேயாக வேண்டும் என்பது உறுதியாகின்றது. பானை தன்னைத் தானே ஆக்கிக் கொண்டது என்று கூறுதல் பொருந்தாது. அது என்றைக்கோ ஒரு நாள் ஆக்கப் பட்டது அல்ல; அநாதி தொட்டே ஆக்கப்பட்ட படியே உள்ளது என்றும் வாதிக்க முடியாது. இதைப்போலவே, உலகம் தன்னைத் தானே படைத்துக் கொண்டது என்றோ அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்தில் படைக்கப்பட்டது அல்ல, என்றுமே இந்த நிலையிலேயே உள்ளது என்றோ, வாதிடல் பொருந்தாது. பானை தானாகவே உற்பத்தியானது பொருந்தாது. உலகம் பகுதிகளையுடையது. பகுதிகளையுடைய பொருள் எதிலும் அப்பகுதிகளைத் தாமாகவே வந்து சேர்ந்து கொள்வதை நாம் எங்கும் கண்டதில்லை. அப்பகுதிகளை ஏற்ற மாதிரி யாராவது ஒருவர் ஒன்று சேர்த்தால்தான் அவை ஒன்று சேர்ந்து ஒரு பொருளாகும். பானை என்றைக்கோ ஒரு நாள் வனையப்பட்டது அல்ல. அது என்றுமே உள்ளது என்பது பொருந்தாது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் ஒரு காலத்தில் தோன்றி இன்னொரு காலத்தில் அழியக் காண்கிறோம். இதிலிருந்து உலகம் முழுவதற்கும் இக்கதியுண்டென்பது தெளிவாகிறது. உலகம் படைக்கப்பட்ட பொருள் எனக்கொண்டு அதனைப் படைததவன் உளன் எனச் சைவ சித்தாந்திகள் நிரூபிக்கும் விதம் எடுத்துக்காட்டப்பட்டது.

சிவத்தை ஆண் பாலாக உருவகப்படுத்துவதன் காரணம் என்ன எனின், ஆண், பெண், அலி என்னும் மூன்றுமல்லாத பதியாகிய சிவம் சர்வான்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களைத் தோற்றுவித்தலால் ஆண்பாற் படுத்தி பலவிதமாக உருவகப்படுத்தப் பட்டிருக்கின்றதைக் காண்கிறோம். ஆண்பால் படுத்தி வழக்கில் வந்தமையால் சிவத்தைச் சிவனென, வழங்க நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. உண்மையில் சிவத்துக்கு பால் வேற்றுமையே கிடையாது. உருவமும் கிடையாது.

சிவத்தின் பண்புகளைக் கூறுமிடத்து, திருவள்ளுவர் எண் குணத்தான் என்கிறார். அவை 1. வயத்தனுதல், 2. தூய உடம்பினுதல், 3. இயற்கையுணர்வினனுதல், 4. முற்று முணர்தல், 5. இயல்பாகவே பாசங்களின்று நீங்குதல், 6. பேரருளுடைமை, 7. முடிவிலாற்றலுடைமை, 8. வரம்பிலின்பமுடைமை என்பனவாம். இதனையே உமாபதி சிவாச்சாரியார்

..................பதி பரமே யதுதான்
நிலமரு வுருவன்றிக் குணங் குறிகளின்றி
நின்மலமா யேகமாய் நித்தமாகி

அலகிலு யிர்க்குணர்வாகி அசலமாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வது தற்சிவமென்பர் பெரிதாய்த் தெரிந்துளோரே.

இவ்வாறு தெளிவாகக் கூறுகிறார்.

சிவமே மேலான பொருள், உருவமும் இல்லை; குறியும் இல்லை; குணமும் இல்லை; அழுக்கு அற்றது அது ஏகம். அழிவில்லாதது. உயிர்களின் அறிவுக்கு அறிவு. சலனம் அற்றது; எல்லை அற்றது ஆனந்தமே உருவானது. மாறுபட்டவர்களுக்கு அரியது. வழிபடுபவருக்கு எளியது. சிறியவற்றுள் சிறியது. பெரியவற்றுள் பெரியது. அறிவுடையோர் அதனைச் "சிவம்" என்பர். இதனையே

எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக் கொண்டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே.

என்று திருமந்திரம் 1551-ஆம் பாடலும் விளக்குகிறது. மேலும் இதன் விளக்கத்தைக் கீழ்வரும் பாடல்களில் நன்குணாலாம்:—

1. அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து.

2. தன் நிலைமை மண் உயிர்கள் சார்த் தரும்சக்தி
பின்னம் இலான் எங்கள் பிரான்.

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின
அருமைக்கும் ஒப்பின் மையான்.

4. ஆக்கி எவையும் அளித்தா சுடன் அடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

5. அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன்.

6. எங்கும் எவையும் எரியுறுநீர் போல் ஏகம்
தங்கும் அவன் தானே தனி.

7. நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலம் இலன் பேர்சங் கரன்.

சிவத்தைச் சிவன் என்றும் கடவுள் என்றும் அநுபூதிமான்கள் கூறினர். முதன் முதல் ;முடிவுக்கு முடிவான பொருளைக் கண்டவர் சிவபெருமான். அம் மாபெரும் சித்தனின் பெயரையே முடிவுக்கு முடிவான பொருளுக்கு ஏறிட்டுக் கூறப்பட்டுள்ளது. ஆகவே, மெய்கண்டான் நூலில் 'சிவன்' என்றால் மாபெரும் சித்தனுகிய சிவபெருமான் கண்டு ஆகமத்தில் கூறியதைக் குறிக்கும். இந்நூலில் கூறுவதெல்லாம் எல்லாப் பொருளையும் தன்னுள் அடங்க வைத்திருப்பதனுல் பெரியோனாக இருப்பதோடுகூட, மிகமிக நுண்ணிய பொருளினுள்ளும் தான் அடங்கியிருக்கும் தன்மையும் உடையது சிவம். ஆதலால் புரியட்டமாகும். இங்ஙனம் அணுவுக்குள் அணுவாய்த் தங்கியிராவிட்டால் எந்தப் பொருளும் நிலை கொள்ளாது. அணுவுக்கு அணுவாகச் சிவம் இல்லாவிடின் எங்கும் நிறைந்த பொருளாக வழங்கப்படமாட்டாது. இதனால் புறத்தே நிறைந்திருத்தலேயன்றி அகத்தும் அங்ஙனமிருப்பது சிவம்' என்பது உணரப்படும். ஆகவே, சிவம் நுண்மைநிலை உணரப்பட்டது. இந்நுண்மை நிலைதான் யாவரையும் யாவற்றையும் ஆட்டுவிக்கும் நிலையாம் சிறப்புடையது. உயிர்க்குயிராம் நொய்மை நிலையிலும் சிவத்துக்கு எவரும் இணையாகார். மற்றும், சிவம் ஒன்றே முத்தொழிற்கும் உரியது. ஏனையோர் தத்தமக்குரிய தொழிற்கே உரியராவர். இதனால், பிரபஞ்சத் தோற்ற ஒடுக்கங்கள் சிவத்தாலே உள என அறியலாம். தானே யாவற்றிற்கும் முதன்மையாயிருத்தலே கடவுள் தன்மையாம். இத்தன்மை சிவத்திற்கே இயல்பாக உள்ளது. ஏனைய எவர்க்கும் எதற்கும் இல்லை. முதல்வன் ஒருவராலும் அறிய முடியாதவனல்லன். அறிவர்க்கு எளியன்; அல்லார்க்கு அரியன்.

எனவே, அறிவுடைய உயிரானது மனத்தோடு கூடி, ஒரு காரியத்தை நினைக்கிறது. பிறகு, அறிவினால் இந்த விதமாய்ச் செய்யவேண்டுமென்று பகுத்துத் திட்டமிடுகின்றது. ஆனல், காரியத்தைச் செய்யும்போது அதற்கு ஓர் உடம்பு வேண்டியிருக்கிறது. ஆன்மாவானது ஒரு தொழிலைச் செய்யும்போது ஓர் உருவத்தை மேற்கொண்டே ஆகவேண்டியுள்ளது. உடம்பு இல்லாவிடில் உயிர் எத்தொழிலும் செய்ய இயலாது. உடம்பை அசைப்பதற்கு உயிரின் நினைப்பே போதும். ஆனல், பிறிதொரு பொருளை அசைப்பதற்கு உடம்பு (உருவம்) வேண்டியுள்ளது. உயிருக்கு இவ்வகையான உடம்பு அதன் வினைக்கேற்ப அமைகிறது. உயிரும் நினைத்தல், அறிதல், தொழிற்படுத்தல் என்ற மூன்று நிலைகளை அடைவதை நாம் அறிகிறோம். இங்ஙனமே சிவமும் உயிர்களுக்குப் படைத்தலாதி தொழிலியற்ற விரும்புகையில் உருவங்கொள்ளுகின்றது. ஆனால், சிவத்தின் சங்கற்ப சக்தியாலடைகிறதேயன்றி, நம்போன்று வினையினல் அமையப் பெறுறுவதன்று. சிவம் அநாதியாகவே வினையின் நீங்கிய இயல்புடையது. ஆதலால், சிவத்திற்குக் கன்ம உடம்பு கிடையாது. எல்லாத் தத்துவங்களையும் தன்னுள் ஒடுங்கச் செய்தலும், அத்தத்துவங்களை உயிர்களின் பொருட்டாக உபகரித்தலும், அவற்றை உயிர்கள் பற்றி நின்று துய்த்து அறிவு விளக்கம் பெறச்செய்தலும் என்கிற இந்த மூன்று தொழில்களுக்கும் சிவமே முதலாகும். இந்த நிலைகளை இலயம், போகம், அதிகாரம் என்ற பெயர்களால் ஓதுவர் அறிஞர். இம்மூவகைச் சிவபேதங்களும் சுத்த மாயா தத்துவங்களைக் கடந்து நிற்பதே சுத்த சிவம். இதனையே இறைவன், முதல்வன், கடவுள் எனவும் செப்புவர்.

சிவம் எனப்படுவது முழு வியாபக அருவப் பொருளாம். உயிர் அவ் வியாபகத்துள் அடங்கிய வியாப்பியப் பொருளாம். ஆதலால் உடல் வியாப்திப் பொருளாம். சிவம் எல்லா இடங்களிலும் இருப்பது. ஆதலால் **எங்கும் தங்குவது** என்பது. "சொல்லினும் முடிவினும்" என்னும் பட்டினத்தடிகள் பாடலும், "வானாகி மண்ணாகி" என்னும் திருவாசகத் தாலும், "இரு நிலனாய்த் தீயாகி" என்னும் தேவாரப் பாடல் முதலா னவை சிவம் எங்குமாகி, எவையுமாகியும் நிற்கும் நிலையினை உணர்த்து கின்றவையாம். நீருக்கும் நீரோடு கலந்துள்ள உப்புக்கும் ஆகாயம் இடந்தந்து நிற்பது போல்வது இந்நிலை. எப்பொருளிலும் சிவம் நீருள் வெளிபோல் கலந்தும் உள்ளது. அங்ஙனம் சிவம் கலந்திராவிட்டால் உடல் அல்லது உருவப்பொருள் அசையாது. உயிர் அறியாது. இதனால் "**எவையும் தங்குவது**" எனப்பட்டது எவையும் தங்குவதற்கு இடமா யிருப்பது என்று பொருள்பட்டது. ஆகாயம், நீருக்கும் உப்புக்கும் இடந் தந்து நிற்பினும் ஆகாயம் உப்புத் தன்மை அடையாது. உப்பு நீருக் குள்ளேயே வாழினும், மீன்கள் உப்பு ஏறிய உடம்பினை அடைவதில்லை. எனவே, ஆகாயம் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பினும் உவாரந் தன்மையெய்தாமல் தனிப்பட விளங்குதல் போல் சிவமும் எங்கு தங்கி னும் எவையுள்ளும் தங்கினும் தோய்வு உறான். "ஏகம் தங்குவது தனிதாமே" எனப்பட்டது. சிவம் நடுவு நிலையின்பாற்பட்டது. "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்று திருவள்ளுவர் சொல்வது போலும். "நினக்கு மற்றொருவரும் இலர்; கேளிரும் இலரே" என்று பரிபாடலில் கூறியதுபோலும் சிவம் **சலம் இலன்** எனப்பட்டது.

**சக்தி இயல் :**

ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி
போதா லயத்த விகாரந்தனிற் போத
மேதாதி யாதார மீதான உண்மையே. (திருமந்திரம் 1677)

நிலமுதல் நாதம் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு மெய்களுக்கும் மேலாகப் பேராற்றலாகிய திருவருட் சத்தி வீற்றிருக்கும் இயற்கை யுணர்வின் இருப்பிடமாகிய தனி முதற் சிவம் அதற்குமேல் காணப்படும்.

உலகில் எடுத்தது சத்தி முதலா
உலகில் எடுத்தது சத்தி வடிவாய்
உலகில் எடுத்தது சத்தி குணமாய்
உலகம் எடுத்த சதாசிவன் தானே. (திருமந்திரம் 1684)

சிவம் தன்னைவிட்டு நீங்கா ஆணையாகிய சத்தியே வினை முதற் காரணங் கொண்டு உலகினைக் கருத்தளவானே படைத்தருளுகிறது. அதனால், சத்தியே உலகின் காரணம், உலகின் வடிவம், உலகின் குணம்.

எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே.

,(திருமந்திரம் 1714)

சிவத்துக்கு நெஞ்சம் அறிவாற்றலாகும் (ஞான சக்தி); அறிவுப்பெரு வெளியாகிய வனப்பாற்றல் பரையாகும் (பராசத்தி); நடப்பாற்றல் ஆதியாகும் (ஆதி சக்தி); அழகிய போர்வை திருவளர் அன்பாற்ற லாகும் (இச்சா சக்தி); தொழிலாற்றல் கிரியை ஆகும் (கிரியா சக்தி). எனவே, சிவத்தின் அனைத்தும் திரு ஆற்றல் மயம் என்பது தெளிவு.

இதனையே,

"சத்திதா முதமாதி தானுகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னுதியாகுந் தரும் வடிவான வெல்லாஞ்
சத்தியுஞ் சிவமுமாகுந் சத்திதான் சாத்தனுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே.

சிவஞ் சத்திதன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்று
முவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும்
பவன் பிரம சாரியாகும் பான்மொழி கன்னியாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்குத் தன்மைதான் தெரியு மன்றே"

என்று சிவஞான சித்தியார் வலியுறுத்துகிறது.

மற்றும், சிவம் நிமித்த காரணமாகி, அச்சிவத்தை அகலலில்லேன் என்றும் பண்புடைய சத்தியே, அச்சிவம் ஐந்தொழிலை இயற்றுவதற்குத் துணை காரணமாயிருத்தலால் பெண்பாலெனப்பட்டது. உலக வழக்கில் ஆற்றலைப் (சக்தியைப்) பெண்பாலாகவே உருவகப்படுத்தி உணரப்பட்டுள் ளது கவனிக்கத்தக்கதாகும். ஆராயுமிடத்து சக்தி ஆற்றலே அன்றி வேறல்ல.

சக்தியும், சிவமும் ஒரு விதத்தில் ஒன்றுகவும், இன்னொரு விதத்தில் அவை இரண்டும் வேறு எனவும் அறிஞர்கள் கூறுவர். இறைவனும் அவனது சக்தியும், சூரியனும் அவனது ஒளிக் கதிர்களும் போன்றவை. சூரியனின்றி ஒளிக் கதிர்கள் இருக்க முடியாது. ஆயினும் கதிர்கள் தான் சூரியன் ஆகமாட்டா. ஆகவே தீயினுக்குச் சூடு போலவும், பூவுக்கு மணம் போலவும், மணிக்கு ஓசை போலவும் விளங்குகின்றன சிவமும் சக்தியும். எனவே, ஆற்றல் என்னும் பராசக்தி சிவத்தினிடமாகப் பாதியுள் மன்றி இயங்குகிறது. சிவத்தின் ஒன்பது திருமேனிகளிலும் சக்தி உடனிருந்து தன்னைவிட்டுப் பிரியாமல், ஓர் பாதி தனதாகக் கொள்ளும் நிலைபெற்ற வனப்பாற்றலாகிய பராசக்தியாகும். அரு உருவ, அருவுருவ முத்திறப் பொருள்களில் சிவத்துடன் சக்தி சரிபாதி இடம் பெற்றிருக்கிறது என்பது வெள்ளிடை மலை.

சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்
சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்
சத்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்
சத்தி சிவமாகுந் தாபரந் தானே. (திருமந்திரம் 1725)

என்று திருமூலர் வாக்கு வலியுறுத்துகிறது.

சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே. (திருமந்திரம் 1707)

சத்தியும், சிவனும் ஆகிய இரண்டும் நிலைத்திணை, இயங்குதிணை, ஆகிய இரண்டன் கண்ணும் இயைந்து இயக்குவர், சத்தி, உருவம், சதாசிவம் அருவருவம் ஆகவே சக்தி இன்றேல் சிவமில்லை. சிவமில்லையேல் சக்தி இல்லை. எனவே, தோற்றக் கிரமமே இல்லை. சக்தி ஆற்றல் சிவம் பரம் ஆக மெய்களில் முப்பத்தாறுள் உயர்ந்து சிறந்து விளங்குகின்றன.

**விந்து (ஒளி) இயல் :**

“தானே யுலகுக்குத் தத்துவனாய் நிற்குந்
தானே யுலகுக்குத் தையலுமாய் நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவுமாய் நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே” (திருமந்திரம் 1941)

முன் கூறிய சிவமே உலகினுக்கு என்றும் ஒரு படித்தாய் நிற்கும் மெய்ப்பொருளாகும். சிவமே உலகியல் நடத்தற் பொருட்டுத் தையலாகிய திருவருளாயும் நிற்கும். சிவமே உலகினுள் ஒவ்வொரு அணுக்கள் தோறும் தரனுமாய் மிளிர்ந்து அவ்வணுக்குள்ளே இன்பருளச் சம்புவுமாய் நிற்கும். சிவமே தண்சுடராகிய திருவருட் பேரொளியாய் நிற்கும். இது அண்டாதித்தன் எனப்படும். இவ்வொளிவளையம், முக்கோணம், வட்டம், அறுகோணம், துளை, இருவட்டம் ஆகிய அணுவகை அடையாளங்களாகக் காணும். இவ்வித அடையாளங்களில் தூய தன்மையாகச் சுழன்று கொண்டிருக்கும். அச்சுழலை ஆராயின் முன்சொன்ன அடையாளங்களில் பதினாறு இதழ் தாமரை காணப்படும்.

அணுவனுள் அணுவனாகிய சிவம் மண் என்னும் மெய்ப்பொருளைப் பிளந்து விண்ணின் கண்ணாய்ச் சுழலும்போது தன்னையும் மற்ற மெய்ப் பொருள்களையும் தன் கதிரால் விளக்கி நின்றிடும். அவ்வாறு நிற்கையில் மற்ற மெய்ப் பொருள்கள் கண்டும், கொண்டும், உண்டும், கூடியும், அன்புற்றுக் களிக்கின்றன. இதனைத் திருமூலர்,

"மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்து நின்றானே"

(திருமந்திரம் 1946)

என்று திருமந்திரத்தில் கூறுகிறார்.

ஒளியை அண்ட ஒளி, பிண்ட ஒளி, மன ஒளி, ஞான ஒளி, சிவ ஒளி என ஐம்பெரும் பிரிவில் அடக்குவர். இவைகளை முறையே அண்ட ஆதித்தன், பிண்ட ஆதித்தன், மன வாதித்தன், ஞான வாதித்தன், சிவ ஆதித்தன் என்பர்.

**பிண்ட ஆதித்தன் :** உயிர் என்னும் அணுக்கள் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும் அருவாகிய சிவம் அவைகளை விட்டு அகலாது நின்று ஆற்றல் புரியும். அதனால் மலங்கள் அல்லது பாசங்கள் அடங்கும். இவ்வாறு அணுக்களில் அருள் புரியும் ஆற்றலை அக ஒளி என்றும் அகஞாயிறு என்றும் உணர்த்தப்படுகிறது. அகத்துவமுயற்சியால், அக ஒளியைக் காணலாம். அக்காட்சியிற் பல அண்டங்கள் ஒன்றொடொன்று நெருங்கிச் சுழன்று கொண்டு நிற்கும் உண்மைநிலையினை உணர்வர்.

**மணவாதித்தன்:** அணுவனுள் வலப்பால் உயிர்ப்பைப்பிங்கலை என்றும் ஞாயிறு என்றும், இடப்பால் உயிர்ப்பை இடைகலை என்றும், திங்களென்றும் அனலாகிய தீயும், கலை எனப்படும் நடு நாடி ஆகிய சுழுமுனையும் சேர்ந்து நான்கு கலைகள் இயங்குகின்றன. வெப்பக்கதிரினை வீசும் ஞாயிறும் தட்பக்கதிரினை வீசும் திங்களும் மேல் கீழாய் நேரொக்கத் தோன்றுங் காலம் உவா வெனப்படும். முற்கூறிய நான்கு கலைகள் உவா என்னுமிடத்தில் கூடிப் பொருந்தியிருப்பது அறிவுப் பிழம்பாய் நிற்பது.

**ஞானதித்தன் :** அறிவுச் சுடர் என்பதாகும். இவ்வறிவுச் சுடர் மூலத திடமாக நின்று ஓசை வடிவாய்த் தோன்றும். அவ்வோசை மேல்நிலை நாதத்தின் செயல். அந்த மேல் நிலையில் விந்துவினின்று நுண்ணோசை; நினை வோசை; மிடற் றோசை; தன் செவிக்குக் கேட்கும் ஓசை; பிறர் செவிக்குக் கேட்கும் ஓசை என்ற ஐந்து ஓசைகள் தோன்றும். அது போலவே பரநாதத்திலிருந்து ஐவகைக் கலை தோன்றியது. அவை 1. நீக்கி, 2. நிலைப்பி, 3. நுகர்வி, 4. அமைப்பி, 5. அழுத்தி என்பன இவ்வைந்துவகை ஓசையினோடும் ஐவகை ஒளியோடும் சிவம் அறிவுச சுடரை இயக்குவான். இவ்விதம் தோன்றலை அருணோதயம் எனப்படும் (அருள் நன் தோற்றம்) இதனைத் திருமூலர்,

"விந்து அபரம் பரமிரண்டாய் விரிந்து
அந்த அபரம் பர நாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்து
உந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே.

(திருமந்திரம் 1956)

உள்ள அருணோதயத் தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத்தின் செயலென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்கு
உள்ளன ஐங்கலைக் கொன்றும் உதயமே."

(திருமந்திரம் 1957)

என்று திருமந்திரத்தில் கூறுகிறார்.

**சிவ. ஆதித்தன்**

கடங் கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்து
அடங்கிட நின்றதும் அப்பரி சாமே. (திருமந்திரம் 1965)

நிலத்தே நீர் நிரப்பி வைக்கப்பட்ட குடங்கள் பலவற்றிலும் வானத்தே காணப்பெறும் கதிரவன் தோன்றுவன். அக்கதிரவன் பலகுடங்களிலும் ஒரே வடிவாய்த் தனித் தனி வெவ்வேருகக் காணப்படுவன். அங்ஙனம் காணப்படினும் கதிர்வன் ஒருவனே. குடமாகிய கடம் பலவாதல் பற்றி அவன் நிழலுரு பலபோன்று தோன்றினும் உண்மையில் கதிரவன் ஒருவனே. அக்கதிரவனைத் தாந்தாம் கண்டவாறே குடத்துள் அடக்கிவிட வேண்டுமென்று குடத்தை மூடினால் அக்கதிரவன் அக்குடத்துள் அடங்குவதுண்டோ? இல்லை. அதுபோல் சிவத்தின் கலப்பால் எல்லா அணுவனுமாகிய உயிருடனும் அணுவினுடனும் தனித்தனி வெவ்வேறும். ஆனால், அவ்வணுவகத்தே காணப்படும் உயிர்தோறும் நீக்கமற விரவி நிற்கும் சிவம் ஒன்றே. சிவம் கதிரவனைப் போலே அணுவில் அடங்காது சிவம் அணுவகத்தும் புறத்தும் யாங்காணும் எஞ்ஞான்றும் விரவி நிற்கும்.

தானே விரிசுடர் மூன்று மொன் றாய் நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட்டாகுமே. (திருமந்திரம் 1966)

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல் அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாகுமே. (திருமந்திரம் 1967)

ஞாயிறு, திங்கள், தீ என்னும் மூன்றும் தனித்தனியே ஒளிதரும் ஒளிப்பொருள்கள். அவை மூன்றும் சிவத்தின் ஒளியினைப் பெற்றே ஒளி தருகின்றன. அவற்றைச் சிவம் அயன், அரி, அரனாக நன்று ஆக்கியும், நிறுத்தியும், அழித்தும், அருளுகின்றது. ஆகவே, சிவமே எல்லாவற்றிற்கும் புகலிடமாகவுள்ள வெளியாகவும் நின்றருள்வன். இருள் என்னும் பாசத்திற்கு ஓராற்றான் நிலைக்களமாய் நீக்கத் தொழிற்றுணைவாய் நிற்கும் சிவமே.

இச் சிவ ஒளியின் அருள்பெற்று திகழ்ந்து சுடரும் தீ, ஞாயிறு, திங்கள், நிலம், புனல், அனல், மாருதமாகிய காற்று, வானம், பல்உயிர்க ளென்னும் அணுவன்கள் ஆகிய எட்டு திருவுருவங்களாக வெள்பபட்டு நின்று இயங்கும் சிவத்தின் நிலைக்களன்களாகும்.

ஒளியை யறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியியல் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக வுடனிருந் தானே. (திருமந்திரம் 2632)

ஆருயிரின் இயற்கை நிலை அறிவொளியாகும். அருளால் அதனை நாட்டின் அவ்வுயிரின் நிலைக்களமாகிய உடம்பின் நாட்டமும் மறையும். ஒடுக்கமாகிய மறைவே இயல்பாசவுள்ள உருவமாம். உடம்பினை நாடின் மீண்டும் உடல் உருவெடுக்கும். ஆருயிரின் அறிவொளித் தன்மையை அறியின் சிவ வுருவாம் ஒளியும் வெளியாகும்.

மேலொளி கீழதன் மேவிய மாருதம்
பாலொளி யங்கி பரந்தொளி யாகாசம்
நீரொளி செய்து நெடுவிசும் பொன்றிலும்
மேலொளி யைந்தும் ஒருங்கொளி யாமே. (திருமந்திரம் 2636)

ஒளி ஐம்பூத ஒளியாகத் திகழ்கிறது. அவை மேலொளி (ஆகாயம்); மாருதம் ஒளி (காற்று); தீ ஒளி; நீர் ஒளி; நிலம் ஒளி என்பன.

மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய வாறொளி தூய்மொழி நாடொறும்
உன்னிய வாறொளி யொத்தது தானன்றே. (திருமந்திரம் 2637)

சிவத்தினிடமாக மிளிர்வது வெள்ளொளி. அவ்வெள்ளொளியினின்றும் தோன்றிய ஐந்து வர்ண ஒளிகளில் மேலானது பராசக்தியின் சிவந்த ஒளி, வெள்ளொளி அறிவுப் பண்பாகும். செவ்வொளி ஆற்றல் பண் பாகும். மற்ற நான்கு வர்ண ஒளிகள் ஆதி, இச்சை, ஞானம், கிரியையாகிய சக்தியின் பிரிவுகளிலடங்கும்.

இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
துலங்கொளி போல்வது தூங்கருட்சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
உளங்கொளி யுள்ளே யொருங்கு கின்றனே. (திருமந்திரம் 2640)

சிவ ஒளி பேரொளியாகும். அவ்வொளியின் அருட்கதிராய் நின்று ஒளிர்வது அருள் அறிவுப் போற்றலாகும். உலங்கொளியாவது அருள் நிறை ஆருயிராகும். விளங்குகின்ற இம் மூன்று ஒளியுமாக விரிந்த சுடரையுடைய சிவ ஒளி தோன்றி ஒளிக்குள் ளொளியாய் ஒருங்கி

உடனின்றருள்கின்றது. உள்ளங்கொள்ளும் ஒளியாக நிற்பது ஆருயிர். அவ்வுயிர்க்கு உயிராய் ஒளிக்கு ஒளியாய் விளங்குவது சிவ ஒளி. ஆகவே தூய அறிவு விண்ணில் ஒடுங்கும். ஒடுங்கி வளம்பெற வழங்கும் ஒளிக் கதிர்க் கூட்டத்துள் நிற்பது சிவமாகும்.

விந்து சிவத்தின் ஒன்பது திருமேனிகளில் ஒன்று. இதனையே காரண மாயை எனப்படும். விந்துவினல் சிறந்த குண்டலியும், பெரு வெளியில் மாயாகாரியமான வைந்தவம் ஒன்பதும், அவற்றின் முறையால் அயன் முதலிய ஒன்பதின்மரும், திருவருள் முறையாகக் கரணங்கள் கலைகள், வைகரி முதலிய ஒடைகள் ஆகிய எல்லா ஆக்கப்பாடுகளும் தோன்றும். ஆகவே, விந்துவினின்று நல்லுயிர்களை இயக்கிச் சிவம் கொள்ளும் திருவுருவ வகை இருபத்தைந்தாகும். அவை வருமாறு:

1. சிவக்கொழுந்து
2. அம்மையப்ப பிள்ளை
3. ஒற்றைத் தாளர்
4. எச்சத் தலைவர்
5. விடையூர்தி
6. நந்திவர்த்தர்
7. கூத்தப் பெருமானர்
8. கொடுஞ் சினத்தர்
9. பெண்ணெரு கூற்றண்ணலார்
10. ஆல்மர் செல்வர்
11. திருநீலகண்டர்
12. சலந்தரனெடுக்கி
13. ஆழியருள்வோன்
14. அந்தகாசுரன் ஒடுக்கி
15. திரிபுர ரொடுக்கி
16. கங்கை தாங்கி
17. உற்றுழி யுதவி
18. சிவச்சுடர்க்கொழுந்து
19. மீனெடுக்கி
20. ஆமையொடுக்கி
21. பன்றியொடுக்கி
22. ஆளரியொடுக்கி
23. முதுகெழும்பு தூக்கி
24. காலவைநவர்
25. பலிப்பகவன்

இவ்விருபத்தைந்து சிவ வடிவத்தின் விளக்கத்தைக் காஞ்சி புராணம் சிவ புண்ணிய பாடலி (3-35)-ல் காண்க.

இதனையே திருமூலர் கீழ்வரும் அடிகளில் கூறுகிருர்:

செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்
செய்திடு நாதபே தத்திற் னுலாறுஞ்
செய்திடு மற்றவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாறுறு சேர்தத் துவங்களே. (திருமந்திரம் 1887)

அன்றியும் விந்துவில் வாகேசி, தற்பரை, செலுத்துங் குடிலை, இன்புறுத்துங் குண்டலி என்ற ஆற்றல்கள் பொருந்தியிருக்கின்றன.

வந்திடு பேத மெலாம்பர விந்துமேல்
தந்திடு மாமாயை வாகேசி தற்பரை
உந்து குடிலையோ டேமுறு குண்டலி
விந்துவில் இந்நான்கு மேவா விளங்குமே. (திருமந்திரம் 1888)

மேலும்,

நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பா லாக்கல் ஆகிய ஐங்கலைகளும், விந்துவில் தோன்றுவதுமன்றி எழுச்சி, இறுப்பு, மனம், எண்ணம், ஆள் என்னும் ஐந்து கருவிகளும் பொருந்தியிருக்கின்றன. இவ்வைந்தும் அயன, அரி, அரன், ஆண்டான், அருளோன் என்பவைகளிடம் செயலாற்றுகின்றன.

இதனை,

விளங்கு நிவர்த்தாதி மேவக ராதி
வளங்கொள் உகார மகாரத் துளவிந்து
களங்கமில் நாதாந்தங் கண்ணினுள் நண்ணி
உளங்கொள் மனுதியுள் அந்தமு மாமே

(திருமந்திரம் 1889)

என்னும் அடிகளினால் காண்க.

**நாதம் (ஒளி) இயல் :**

ஆதி யனுதி யகாரணி காரணி
சோதிய சோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மணி மங்கலி
ஓதியென்னுள்ளத் துடனியைந்தாளே.

(திருமந்திரம் 1090)

தொடக்க நடப்பாற்றலாகிய ஆதியும்; தொன்மை வனப்பாற்றலாகிய அனுதியும், தனக்கோர் காரணம் இல்லாதவளும் தான் எல்லா வற்றுக்கும் காரணமாயுள்ளவளும்; ஒளிக்குள் ஒலியாய்த் திகழ்பவளும், பேரின்ப மருளும் அழகிய முதல்வியும், இனிய அமைதி தருபவளும், மனதின் கண் சிவநினைப்பை நிலைபெறச் செய்பவளாகிய மனோன்மனியும் மங்கல குணமுடையவளும் ஆகிய இறைவி திருவைந்தெழுத்தை உயிருக்கு உயிராய் நின்று ஓதுவித்து உடனாக இருந்தருளினள்.

இருளது சத்தி ஒளிய தெம் அண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்
தெருளது சிந்தயைத் தெய்வமென்றெண்ணில்
அருளது செய்யும் எம் ஆதிப்பிரானே.

(திருமந்திரம் 1095)

அறிவாற்றலாகிய மாயயினைத் தொழிற்படுத்தும் திருவருளம்மை யின் தன்மை நிறம் இருளாகும்:

காரணி சத்திகள் ஐம்பத்திரெண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத்திருவாரய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னருளாகி நின்றாளே.

(திருமந்திரம் 1364)

எல்லாவற்றிறிக்கும் காரணமாக இருப்பன எழுத்துக்களே. அவற்றிற்குரிய தெய்வங்கள் ஐம்பத்திரண்டு. அத்தெய்வங்களை இயக்கும் திருவருட் கன்னியும் ஐம்பத்திருவராவர்.

தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமும் ஆக்கி அழித்தவள்
தானே யனைத்துள அண்ட சகலமே.

(திருமந்திரம் 1336)

சத்தி நான்கு பூதங்களுக்கும் இடங்கொடுத்து மேலோங்கி நிற்கும் வெளியாகிய வானம் போன்று எங்கும் நிறைந்துள்ளது. நிலத்திணை இயங்குதிணை என்னும் எல்லா உயிர்களுக்கும் இருவினைகட்கு வேண்டிய வாறு உடல்களைப் படைத்தளிப்பதும் அதுவே. துடைத்தளிப்பவளும் அதுவேயாகும். அதுவே தாங்கும் கலப்பால் அண்டமும் உலகமும் அனைத்துமாகுவள்.

அண்டத்தினுள்ளே அளப்பரிதானவள்
பிண்டத்தினுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தினுள்ளே குணம் பல காணினுங்
கண்டத்தில் நின்ற கலப்பறியார்களே.

(திருமந்திரம் 1337)

அண்டமாகிய பேருலகின் கண் பிரிப்பின்றி நிறைந்து நிற்கும் திருவருளம்மை அளத்தற்கரிய வியத்தகு தன்மையள். பிண்டமாகிய உடலின் கண்ணும் வெளிக்கு வெளியாம் அருள் வெளியாவள்.

மணி கடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்க ஒண்ணாதே.

(திருமந்திரம் 586)

அகத்தவத்தால் உள்ளெழும் தெள்ளிய பண்ணார் இன்னோசை பத் தென்ப. அவை; மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், வண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் என்பன. இப்பத்தினையும் ஒத்த ஓசை அகத்தே பயிலப் பெறும். இதுவே ஒலி என்றும், நாதம் என்றும் பெயர் பெறும்.

ஓரெழுத்தாலே உலகெங்குந் தானாகி
ஈரெழுத்தாலே இசைந்தங் கிருவராய்
மூவெழுத்தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத்தாலே மயக்கமே உற்றதே.

(திருமந்திரம் 865)

ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைந்தும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தின் நிலையிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக் கொள்ளீரே.

(திருமந்திரம் 942)

சப்த ரூபாமாகவுள்ள மந்திரங்கட் கெல்லாம் முதாலாக ஓதப்படும் ஓங்காரத்துடன் ஏனை உயிரெழுத்துப் பதினைந்துங்கூட மொத்தம் உயிரெழுத்துப் பதினாருகும். மெய்யெழுத்து முப்பத்தைந்தாகும். ஆக மொத்தம் ஐம்பத்தொன்றையும் நாத எழுத்தாகிய "ஓம்" என ஒலித்துக் கொள்க.

ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவதறிந்தபின்
ஐம்ப தெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே.

(திருமந்திரம் 944)

ஓங்காரத்துடன் கூடிய ஐம்பத்தோ ரெழுத்துக்களாலாகியதே பொதுவும் சிறப்புமாகக் கூறப்படும் தொன்மைத் தமிழ் மறையும் முறையும் என்ப.

எனவே, ஒன்பது திருமேனியுள் அமைந்த ஒலி (நாதம்) பரத்திலிருக்கின்ற ஒலியாம். ஒலியும் ஒளியும் ஒன்றினுள் ஒன்றுள்ளது; பிரித்தலாகாது. திருமூலர் ஒலியும் ஒளியும் (நாதமும் விந்துவும்) சேர்ந்த நிலையைக் கீழ் வருமாறு கூறுகிருர்.

விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல
வந்த வனன்மயிர்க் கால்தோறும் மன்னிடச்
சிந்தனை மாறச் சிவமக மாகவே
விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே.

(திருமந்திரம் 1926)

விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்த இப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் சிவோகமே.

(திருமந்திரம் 1932)

விந்துவும் நாதமும் மேவியுடன் கூடிச்
சந்திரனோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதியாகுமே.

(திருமந்திரம் 1934)

விந்து, நாதம் என்னும் இரண்டும் கட்டுற்று விளைய விளைந்தது உயர் திணை. வினைக்கீடாக ஆணையால் தோன்றிய இயங்குதிணை நிலத்திணையாகிய பல் உயிர்கட்குள்ளும் ஆறறிவு நிரம்பப் பெற்றது உயர்திணை. விந்துவும் நாதமும் அருளால் பொருந்தியுடன் கூடித் திங்களுடன் தலைபடுமாயின் ஆயிரம் இதழ்த் தாமரைப் பரவெளியினின்று உற்றெழும் அமிழ்தம் வந்து வெள்ளம் போன்று இடையறாது பெருகும். மற்றும் திருமூலர் இதனையே

செய்திடு நாத பேதத்தி றனலாறுஞ்
.....................

(திருமந்திரம் 1887)

என, இருபத்து நான்கு நாத பேதங்கள் உள என்று கூறியுள்ளார்.

**சதாசிவம் இயல் :** அருவுருவமாகிய சிவத்தைச் சதாசிவமெனப்பட்டது சிவனின் ஒன்பான் திருமேனிகளில் நடுவிலுள்ளது சதாசிவமாகும்.

உருவும் அருவும் உருவோ டருவும்
மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங்
குருவு மெனநிற்குங் கொள்கையை னுகுந்
தருவென நல்குஞ் சதா சிவன்தானே.

(திருமந்திரம் 173)

ஒன்பது திருமேனிகளிலும் அருளால் பொருந்தி யிருப்பவன் சதாசிவன் ஆருயிருர்களுக்குத் தம் முதல் குருவாய்த் தோன்றியருள்பவனும் சிவனே. வேண்டுவார்க்கு வேண்டுவதே வள்ளலாதலின் தருகவென வேண்டியதும் இல்லையென்னாது அப்பொழுதே வேண்டுவ நல்குவது சதாசிவம். அருவமாகிய சிவமும் உருவமாகிய சத்தியும் வேறுருவில் ஒருடம்பாய் திகழ்கின்றமையால் எல்லாம் சதாசிவமே. சிவமும் சக்தியும் கூடிய நிலை எல்லா அண்டங்களுக்கும் நன்மையருளும் சதாசிவம். ஆராக் காதலுடன் இடையறாது அகலகில்லேன் அகலகில்லேன் என்றுத் தொடரும் சக்தியோடு சேர்ந்த சிவ நிலை சதாசிவம் என்பர். நீதியுள் நிறைந்த நீள்பெரும் அருவ வுருவப் பொருள். சிவத்தின் ஓர் பாதி தனதாகக் கொள்ளும் நிலைப்பெற்ற வனப்பாற்றலாகிய பராசக்தி இணைந்தநிலை சதாசிவமென்பது. ஆகவே, சிவம், சக்தி ஆகிய இவ்விரண்டும் பொருளால் ஒன்றே. அகங்கை, புறங்கை போன்று இயல்பால் இருநிலை என்ப. சக்தியும் சிவமும் இல்லாமல் எப்பொருளும் தோற்றமுறாது. சக்தியே யாண்டும் எல்லாப் பொருட்கட்கும் தாங்கும் நிலைக்களம். அதனால் சக்தியே உலகமாகச் சமைந்தது என்பர்.

தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே.

(திருமந்திரம் 60).

சத்தியோடு கூடிய சிவனே சதாசிவன். சதாசிவன் எனினும் அருளோன் எனினும் ஒன்றே. சிவமும் சத்தியும் கூடி ஒரு கூறாய் உயிர்க்குயிராய் உண்ணின்று உயிர்த்தலாகிய செலுத்தலைச் செய்வதும் திருவருளே. அத்திருவருள் குளிர்ச்சியாயிருத்தலின் அவனும் தண்ணளியன் ஆவன்.

தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்துச் சத்திஓர் சாத்துமா னாமே.

(திருமந்திரம் 371)

ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனும்
ஆகாயம் பூமி காண அளித்தலே.

(திருமந்திரம் 387)

அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம் அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்துசெய் வாளே.

(திருமந்திரம் 388)

சிவம் தொலைவில் தோன்றும் சுடர் சோதியாயுள்ளான். சிவத்தின் அன்பினால் அவனைத் தொடர்ந்தொரு சத்தி தோன்றிற்று. அச்சத்தியின் ஆர்வத்தால் ஒலி (நாதம்) தோன்றும். அவ்வொலியின் பின் ஒளி (விந்து) தோன்றும். அதன்பின் அறிவும் (சிவம்) ஆற்றலும் (சத்தி) ஆகிய சிவசக்தி என்னும் இரண்டும் ஒப்ப நிற்கும் சதாசிவம் மெய். அதன்பின் தோன்றும் நிலம் முதலாகிய பூதம் ஐந்திற்கும் சக்தியையுடைய பெரும் பொருள் ஒப்பில்லாத சிவன் எனப்படும் சாத்துமான். இதுவரையும் நிலை வேறுபாட்டு நிகழ்ச்சி முறைகளாகும். இம்முறை ஒன்றினின்று ஒன்று தோன்றுவதன்று. வீட்டில் பல அறைகளைத் தடுக்கப்படுவதுபோல் அமைப்பதாகும். இதனைப் பகுப்பமைப்பு எனப்படும். இதுவே விருத்தி யெனப்படும். படம் குடிலானாற் போல என்பதும் இது.

வான், வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐம்பூதங்களும் அவற்றை முறையே இயைந்தியக்கும் கண் காணி மெய்கள் அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐவரும் தோற்றக் கேடில்லாத திருவருளினாற்றலுடன் போந்தவைகள். அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் இவர்களால் நான்கானும் பருமையான வான் முதல் ஐந்தும் தோன்றின. ஆகவே அருளோன் சதாசிவம் என்ப. திருவருள நிலைக்களமாக நிற்கும் திரிபுரை (திரிபுரி) சக்தி

அருளோனாகிய சதாசிவத்தின் உடலாய் அமையும். அந்நிலையில் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் நடக்கும். அவ்வைந் தொழில்கள் அருளால் புரியப்படுத லால் அருளோன் என்றும், அருள் மயமான சக்தியும் அருளை நல்கு பவனான சிவனும் சேர்ந்த இணைப்பைச் சதாசிவமெனப்பட்டது.

குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப்போல் எங்கள் கோல்நந்தி வேண்டில்
அசைவில் உலகம் அதுஇது வாமே.

(திருமந்திரம் 428)

கலம்பல படைக்கும் வேட் கோவாகிய குயவன் தகுதியாம் மண்ணைச் செய்வன செய்து திரிகையில் ஏற்றுவன். ஏற்றிய மண்ணை அக்குய வன் நல்லுள்ளத்தில் எண்ணியவாறே பல்வேறுவகைக் கலங்களாக்கு வன். அங்ஙனம் ஆக்குவது தன் பொருட்டு அன்று. ஆருயிர்களின் நன்மையின் பொருட்டேயாம். அவ்வுயிர்களின் வளர்ச்சி முறைக்கு ஏற்றவாறு பல்வேறு கலங்கள் வேண்டப்படுவனவாயின. அக்குயவனைப் போல் எங்கள் பேரறிவுப் பெருந்தலைவராம் சாதசிவம் (நந்தியடிகள்) உன் முகமாய்த் திருவுள்ளங்கொள்ளில் காரணத்தில் அசைவில்லாத தன் வைப்பாற்றலாம். சக்தியினின்று அது இது என்று சொல்லப்படும் பலவகையான உடல் உலகம் உண்பொருள்கள் தோன்றுவவாயின. இவ் வருளால் தொழிலினை ஆருயிர்களின் நன்மையின் பொருட்டே சதாசிவம் செய்தருள்கின்றன. அவ்வுயிர்களின் பொருட்டே அவையும் பல்வேறு வகையாக அமைந்துள்ளன.

விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்குங்
கொடையுடை யான்குணம் எண்குண மாகுங்
கடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே.

(திருமந்திரம் 429)

அகன்றான் அகலிடம் ஏழு மொன்றாகி
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனும் ஆகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே.

(திருமந்திரம் 433)

ஆரும் அறியாத அண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல் நிற்கின்ற நேர்மையைச
சோராமற் காணுஞ் சுகம் அறிந்தேனே.

(திருமந்திரம் 343

சதாசிவன் கலப்பினால் விரிந்த உலகங்கள் எழுடனும் ஒன்றாகி, நீக்கமற நிறைந்து நின்றது. சதாசிவன் அங்ஙனம் கலந்து நிற்பினும் இவன்தான் இறைவன் என்று சுட்டி யுணர்த்தப்படக்கூடிய அத்துணை எளியனும் அல்லன். அதுபோலவே சதாசிவம் அதன் கலப்பினால் ஆருயிர்களுடன் ஒன்றாகி நீக்கமற நிற்கின்றனன்; ஆகவே சதாசிவமே சிவ குருவாய் வந்தருளி வழிகளை நவின்றருளி, நம்புவார்களுடைய நம்பிக்கைக்கு முழு உரிமை வாய்ந்தவன் நம்பன்.

**ஆண்டான் (ஈசுரன்) இயல் :**

உள்ளத் தொருவனை உள்ளூறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே.

(திருமந்திரம் 417)

உயிருக்குயிராய் உள்ளத்தே நீங்காது நிற்கின்ற ஒப்பில் முழு முதல் பொருளாம் சிவத்தை உள்ளத்து ஒன்று என்பர். சிவமே உள்ளூறு சோதியாகும், சிவம் ஒவ்வொரு உள்ளந்தேதறும் ஓரடிச் சிற்றள வேனும் விலகாது நின்றருள்கின்றது. உள்ளமும் சிவமும் வேறறக் கலந்து உடனாக இருப்பினும், உள்ளமாகிய உயிர் தன் சிற்றறிவினாலும் சுட்டறிவினாலும் அச்சிவத்தைக் காணமாட்டாது. முற்றறிவினால் காணு மாயினும் அம் முற்றுணர்வினைச் சிவம் வெளிப்படுத்தி யருளுதல் வேண்டும். சிவம் தன்னை வெளுப்படுத்தாமலிருப்பதே மறைப்பருள் என்று கூறப்படும். சிவம் தன்னைக் காட்டாத நிலையை ஆண்டான் அல்லது ஈசுரன் எனப்பட்டது. ஆருயிர்க்கண் சிவத்தின் உண்மை நிலையினை அறியமாட்டாத நிலையை ஆண்டான் எனப்பட்டது என்பதை அறிக.

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் இவ்வண்ண மாகி நின்றானே.

(திருமந்திரம் 425)

சிவம் ஆருயிர்கட்குக் கட்டு, ஒட்டு என்னும் ஈரிடத்தும் உள்ளது வாகிய சிவம் உடனாய் நின்று முறையே சுட்டுப்பொருளைச் சுட்டிறந்து நின்ற முற்றுப்பொருளாகிய தன்னையும் காட்டும் அவ்வுயிர், கட்டு நிலையில் காட்டுகின்ற சிவத்தையும் காண்கின்ற தன்னையும் காண மாட்டாது. ஒட்டு நிலையில் தன்னையும் சிவத்தையும் சிவத்தின் துணையால் கண்டின்புறும்.

**அயன் (படைப்பு) இயல் :**

நாதத்தில் விந்துவும் நாத விந்துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே.

(திருமந்திரம் 369)

சதாசிவத்தில் ஓசையாகிய நாதத்தினின்றும் ஒளியாகிய விந்து தோன்றும். நாதவிந்துக்களாகிய இரு மெய்களினின்றும் சிவன் சிவை என்றும் மெய்கள் தோன்றா நிற்கும். சிவன்பால் பேரறிவும் சிவையாகிய சத்தியினின்று பேராற்றலும் வெளிப்படும். விந்துவாகிய சிவத்தில் இச்சை தோன்றும். சக்தியினிடமிருந்து கிரியை ஆற்றல் தோன்றும்.

இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது ஆக வழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே.

(திருமந்திரம் 370)

உடல் உலகு உண்பொருள்களாகிய காரியம் தோன்றுதற்கு இடமெனப்படும். இல்லாயுள்ளது "மாயை". அம் "மாயை" சத்தியால காரியப்படும். அம்மாயையினை இத்தகைய உறுதிப்பொருள்களாகச் சத்தியின் இடமாக நின்று ஆக்கியருளிய அப்பெரும் பொருள் புகழ்ச்சி மொழிகளுக்கு எட்டாத தொலைவிலுள்ளதாகும்.

புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானுய்ப்
புவனம் படைப்பானப் புண்ணியன் தானே.

(திருமந்திரம் 373)

ஒருவன் (சிவம்) ஒருத்தியாய் (சக்தி) ஓர் அணுவின் (உலகு, உயிர், சதாசிவம்) கண்ணே தோற்றுவித்துத் திகழும் சிவபெருமான் புவனம் முழுவதையும் படைப்பவனுவன். பேரறிவும் பேராற்றலும் சீராக ஒருங்கமைந்த இவற்றிற்கு ஐம்பெரும் சதாசிவ அணுவன்கள். அவ்வை வரும் முறையே அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் ஆவார்கள். ஆகவே அயனும் சிவத்தின் திருவாணை பெற்றவனாதலினாலும் அயனுடன் கலப்பால் சிவன் ஒன்றுயிருப்பதால் அதனையும் சிவம் என்பர்,

புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்
தண்ணிய மானே வளர்த்திடுஞ் சத்தியுங்
கண்ணியல் பாகக் கல்வி முழுவதுமாய்
மண்ணியல் பாக மலர்ந்தெழு பூவிலே.

(திருமந்திரம் 374)

சிவமும் சக்தியும் பொருந்தி சதாசிவமாகத் திகழ்கின்ற காலத்து மாணுகிய உடல் மெய்யினை வளர்த்தருளும். கண்ணுதலாகிய திருவுள்ளங் கொண்ட இயல்பினுலே ஐம்பூதம் முதலிய தத்துவங்கள் ஒன்ருேடொன்று கலந்து நிலம், நீர், நெருப்பு, வளி, விசும்பு முதலிய உலகங்களாக விரிந்து தோன்றும். இப்பூதங்கள் அகத்தும் புறத்தும் காணப்படும். புறத்துக் காணப்படுவது அண்டம் எனவும், அகத்துக் காணப்படுவது பிண்டம் எனவும் கூறுவர்.

நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்கும் அக் காற்றிடை
ஓர் வுடை நல்லுயிர்ப் பாதம் ஒலி சத்தி
நீரிடை மண்ணின் நிலைப் பிறப்பாமே.

(திருமந்திரம் 375)

ஐம்பூதங்களுள் மண்ணுனது எல்லாவற்றையும் தாங்கி நிலைப்பிக்கச் செய்யும் தன்மை வாய்ந்தது. அதனுல் மண்ணின் நிலைப்பிறப்பாம் என்றனர். அதன் மேல் விளங்கும் நீரகத்துச் சுவை இன்பம் தோன்றும். அதன் மேல் நெருப்பிடத்து ஒளி தோன்றும். அதன் மேல் காற்றினிடத்து உயிர்ப்புப் பிறக்கும். அதன் மேல் வானத்தினிடத்து ஒலி தோன்றும். ஐம்பூதங்களும் ஐந்து தன் மாத்திரைகளினின்றுந் தனித்தனி தோன்றுவன். ஒரு பூதத்தினின்று மற்றொரு பூதம் தோன்றுவதன்று. அங்ஙனம் தோன்றுவனவாகச் சொல்லுவது வற்றுரையே. வானத்தினின்றும் காற்றுத் தோன்றும் என்பதற்குரிய காரணம் காற்றினிடத்து அதன் இயற்கைப் பண்பாகிய ஊறுமட்டு மன்றிச் செயற்கையாகிய வானத்தின் பண்பாம் ஓசையும் விரவியிருப்ப தால் அச் சிறப்பு நோக்கி வானத்தினின்றும் காற்று தோன்றிற்று என்பதாம். காற்று ஊற்றுத்தன்மாத்திரையினின்று விரவியிருக்கும் ஓசையோடு சிறப்புற்று நிற்கும் ஊற்றுத்தன் மாத்திரையின் ஆகாயம் எனக் கூறுவர். அவ்வாகாயத்தினின்றுங் காற்று தோன்றும் என்பர். மேவும் வேற்றுப் பண்பிடமாய் விளம்புவரால் தாவில் சிறப்புணர்த்துதற்கு. ஆதலால் அமையும் என்க. இப்படியே மற்றைப் பூதங்களும் தோன்றும் என்ப.

நின்றுயி ராக்கு நிமிலன் என்னுருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்துய ராக்கும் உடற்குந் துணையதா
நன்னுயிர்ப் பானே நடுவு நின்ருனே.

(திருமந்திரம் 381)

உயிருக்கு உயிராய் நின்று எல்லாவற்றையும் இயைந்து இயக்கும் சிவம் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியது. அச்சிவமே எல்லா சீவன்களுக்கும் ஆருயிராக உள்ளான். ஆருயிர்களை அன்பு செய்வ தற்குக் கருவியாக உடலுடன் ஒன்றும்படி பொருத்துபவனும் அவனே. அக்காலத்து அவ்வுயிர்கள் முன் செய்து கொண்ட வினைக்கீடாக "பேறு இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு" என்னும் ஆறும் அவ்வுயிர்களுக்குக் கருவினுள் அமையப்படைத்தருள்வன். சிவன் "உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு" நின்றவன்.

**அரி (காப்பு) இயல் :**

தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
ஓங்கி எழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கி நின் றானும் அத் தாரணி தானே.

(திருமந்திரம் 405)

சிவம் பல்லுயிர்களையும் வேற்றக் கலந்து தாங்குவதாகிய காத்தலையும் புரியும் அரிய இயல்பு வாய்ந்தவன். அவ்வுயிர்களை ஒடுக்கும் பேரொடுக்கக் காலத்துக் காப்பதும் அவனே. மற்றவை எதுவும் இல்லை, மிகச் சிறந்து தோன்றும் தலைமைப் படிப்பினை எய்துவதற்குறிய செறிவு நெறியைக் காப்பவனும் அவனே. செறிவு வழியாற் பெறப் படும் தானே ஆவன்.

உடலாய் உயிராய் உலகம் தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர் பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந் தானாகி
அடையார் பெருவழி அண்ணல் நின்றானே.

(திருமந்திரம் 400)

முழு முதல் விழுப்பொருளாம் சிவன் கலப்பால் உடல், உயிர், உலகமாகவும் நின்றனன். கடலாய், அக்கடனீரைப் பருகிக் கருக்கொண்ட கருமுகிலாய் நின்றனன். அம்முகிலால் பொய்யாது பெய்யப்படும் நீர் நிறைவானாகவும் நின்றனன். இவை அனைத்திலும் இடையென்று சொல்லப்படும் உள்ளுறைபவனாக நிற்பவனும் அவனே, ஓருபடித்தாய் அழிவின்றி நிற்பவனும் அவனே. எங்கும் தானாகி நிற்பவனும் அவனே. யாவையும் காத்தருள்பவன் அவனே.

உற்று வனைவான் அவனே உலகினைப்
பெற்று வனைவான் அவனே பிறவியைச்
சுற்றியே சாலும் குடமுஞ் சிறு தூதை
மற்றும் அவனே வனையவல் லானே.

(திருமந்திரம் 403)

உலகனைத்தையும் முதற்காரணமாம் மாயையினின்றும் படைத்தருள்பவன் சிவன். ஓரறிவு முதல் ஆறறிவு ஈறுகவுள்ள உயிர்கள் என்னும் பாகுபாடு பருவுடலைப் பற்றியனவேயாகும். இந் நிலை எய்துவதற்கு முன் ஆண்டவன் படைத்தருளும் எட்டுறுப்புக்களோடு கூடிய நுண்ணுடம்பினையேயாம். நுண்ணுடம்பு யாவர்க்கும் ஒன்று போல் அமைந்த இயற்கைப் பிறப்புடம்பாகும். வினைக் கீடாகச் செய்ய வேண்டிய தொழிலுக்கு வாய்ப்புடைய உடம்பு இது செயற்கையுடம பாகும். இவற்றைப் படைத்தும் காத்தும் அருள் புரிவான்.

**அரன் (அழிப்பு) :**

இலயங்கள் மூன்றினும் ஒன்றுகற் பரந்த
நிலையன் றழிந்தமை நின்றுணர்ந் தேனல்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலை தந்த மானிலந் தான்வெந் ததுவே.

(திருமந்திரம் 408)

இலயங்கள் என்று சொல்லப்படும் ஒடுக்கங்கள் மூவகைப் படும். அவை, நாளொடுக்கம், ஊழி யொடுக்கம், பேரூழி யொடுக்கம் என்பன. அவற்றுள் ஊழி முடிவின் நிலைமை ஒரு காலத்து அழிந்தமையை அவனருளால் நின்றுணரப்பட்டது. உலைப்பானையிலிட்ட மெல்லிய அரிசி செவ்வியுற ஆக்கப் பெறும். அதுபோல் உலகம் உயிர்கள் செவ்வியுற ஆக்கப் பெறுபவதற்கு நிலைக்களமாகும். சிற்றூழி முடிவில் மான் என்று சொல்லப்படும் மூலப்பகுதியால் தரப்படும் சில மண்ணுலகங் கள் அழியும்.

நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன் அருள் உண்மையே.

(திருமந்திரம் 411)

நித்த சங்காரமாகிய நாளொடுக்கம் ஒவ்வொரு நாளும் நிகழ்வது அஃது உறக்கத்து அறிவு அடங்கியிருப்பது. இதனை நீள்மூடம் என்ப. இதுபோல் ஒவ்வொரு நாளும் நிகழும் விழிப்புநிலை, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம், என்பனவும் அவ்வத்தலைப்புக் கூட்டி நாளொடுக்கம் என்ப. ஆருயிர்கள் இளைப்பாறுதற் பொருட்டுத் தொன்மையிலேயே அமைக்கப்பட்ட ஒடுக்கம் சாக்கிரா தீதமாகிய நிலை. இஃது ஐவகை நிலைகளுக்கும் அப்பாற்பட்ட நிலை. ஆருயிர் கருவிகளுடன் கூடித் தொழிலுறுது அறியாமையுடன் மட்டும் ஒட்டியிருக்கும் தொழிலற்ற ஒடுக்க நிலை. இதுவே சுத்த சங்காரம் என்ப. உய்த்த சங்காரம் என்பது திருவருள் நோக்கத்து ஒடுங்கியிருக்கும் ஓர் நிலை. காரணவுடம்போடுகூடி திருவருளில் ஒடுங்கி யிருப்பதாகும். இவை யனைத்தையும் திருவுள்ளத்தான் இயற்றி அப்பால் நிற்கும் நிலை பரன் உண்மையாகும்.

பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்
பாழாய் அடங்கினும் பண்டைப்பாழ் பாழாகா
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம். பயிராய் அடங்கும் அப் பாழிலே.

(திருமந்திரம் 41[illegible])

இவ்வுலகத்துத் தோன்றிய உயிர்கள் உலகு உடல்களைக் கடந்து பாழில் ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கினும் அப்பாழ் பண்டைப்பாழாகா. பண்டைப் பாழ் என்பது மலம் நீங்காத நிலையில் ஊழிகள் தோறும் ஒடுங்குமிடம். நிலைத்த சிவ வாழ்வினைக் கொடுக்காத வொடுக்கமென்பது அயன், அரி என்னும் இருவர் ஆட்சிக்குள் நிகழும் வாழாச் சங்காரமாகும். இவ்விருவர் ஊழிகளிலும் உயிர் திருவடிப்பேறு எய்தாது ஒடுங்கிக் கிடக்கும் நிலை பாழ்நிலை என்க.

---

## அத்தியாயம் 3

---

### அருவுருப் பொருள்

அருவப பொருளாகிய சிவத்தையும், அச்சிவத்தின் ஒன்பது திருமேனிகளையும் ஆராய்ந்தோம். இனி அருவுருப் பொருளைக் கவனிப்போம்.

அருவுருப்பொருளை (1) சித்துப் பொருள், (2) அசித்துப் பொருள் என இரு பெரும் பிரிவாகக் பிரிப்பதில் உலக வழக்கில் இடையூறில்லை. மற்றும் இதனையே (1) சேதனப் பொருள், (2) அசேதனப் பொருள் எனக் கூறுவாருமுளர். எனெனில் உலகிலுள்ள எல்லாப் பொருள் களிலும் "உயிர்" என்ற மெய் நித்தியமாக உளது என்று ஆகம நூற்கள் பகர்கின்றன. இவ்வழக்கிற்கும் இடர்பாடில்லை. ஆகவே சித்துப் பொருளின் மூல அலகு சித்து அணுவாகும். அசித்துப் பொருளின் மூல அலகு அசித்து அணுவாகும். இவ்விரு மூல அலகுகள் உலகில் அருவுருப் பொருளாக விளங்குகின்றன.

ஆனால் (1) உயிருள்ள பொருள், உயிரற்ற பொருள் என்றும் (2) சீவப் பொருள்; அசீவப் பொருள் என்றும், (3) அழியும் பொருள்; அழியாப் பொருள் என்றும் பெரும் பிரிவாகப் பிரிப்போமானால் அநேக இடர்ப்பாடுகள் உண்டு. அருவுருப் பொருளாகிய "உயிரை" நிரூபணம் செய்வதிலும் மிகமிகக் கடினம் ஏற்படும்.

சித்துப் பொருள் (அறிவுள்ள பொருள்) எல்லாவகையிலும் மிகத் தூய்மையானது. சர்வ வல்லமை சித்துப்பொருளிலுள்ள உயிருக்கு ஐந்து வேறுபாடுகளுண்டு. முக்கியமாக விழிப்புநிலை, கனவு, உறக்கம் என்ற மூன்று அவத்தைகளைக் கொண்டுள்ளது. இயக்கமுண்டு. இந்திரிய முண்டு, அறிவுமுண்டு.

அசித்துப் பொருள் (அறிவற்ற பொருள்) களுக்குள்ளேயிருக்கும் உயிர் ஐந்துவித அவத்தைகளுள் உறக்க அவத்தை மட்டுமே கொண்டுளது. அசித்துப் பொருள் மாயாகாரியத்தால் தோற்றுவிக்கப்பட்டது. வல்லமை யற்றது. இயக்கமற்றது. இந்திரியமற்றது. ஆகவே அருவுருப் பொருள் களின் மூல அலகுகளாகிய (1) உயிர், (2) அணு ஆகியவைகளின் பாகு பாட்டை நன்குக மனதில் பதிய வைத்தாலொழிய, அருவுருப் பொருள் விளக்கத்தின் உண்மை விளங்காது. உயிர் (அறிவு, பசு, ஆன்மா, சீவன்—என்ற பல பெயர்கள்) அருவுருப் பொருளாக நித்தியமாக எல்லா அணுக்களிலும் (1) சித்து அணு, (2) அசித்து அணு என்பவைகளில் முக்காலமும் உளது. உயிர் எல்லா அணுக்கள் தோறும் அகத்தே உளது. உயிர் அறிவுற்றிருந்தால் அதனை அறிவுற்ற அணு என்றும்; உயிர் அறிவற் றிருந்தால் அறிவற்ற அணு என்றும் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு அணுக்களும் உயிரைக் கொண்டுள்ளன. எனவே உருவமுள்ள பொருள் களில் அருவுருப் பொருளாகிய உயிர் அகத்தே உளது. புறத்தே உளதல்ல. புறத்தே இருந்து உருவப் பொருள்களினுள் சென்றடைவதுமல்ல. அகத்தே யிருந்தும் புறத்தே போவதுமில்லை.

முதலில் அசித்து அணுவைப் பற்றி ஆராய்ந்து; பிறகு சித்து அணுவைக் கவனிப்போம்.

## அசித்து அணு

அணு என்பது தத்துவ ஞானத்தின் பயனாக முடிவுக்கு முடிவானது தான் எனச் சித்தாந்திகள் பகர்ந்தனர். இவ்வுலகத் தொடக்கத்தை அறிய வேண்டுமாயின் அதன் முடிவை ஆராய வேண்டும். முடிவு எங்கேயோ அங்கேதான் தொடக்கம், தொடக்கத்தை அறிய வேண்டுமானால் அழிவை ஆராய வேண்டும் பொருளுக்கு அழிவென்பது பகுதிகளாகப் பிரிதல் இதற்கு மேல் அழிக்க முடியாதநிலைவரை அழித்துக்கொண்டு போனால், அணுக்களில் முடியும். இவ்வணுக்கள் தான் உலகின் ஒடுக்கம். இவற்றிலிருந்து தான் உலகம் உற்பத்தியாகிறது. இத்தத்துவ ஞானத்தை போதிப்பது தான் ஆகம நூற்கள். அணுவைப் பற்றி வேதங்களில் கூறப் படவே இல்லை.

## பதி, பசு, பாசம்

அணு என்ற சொல் இன்றைய நாளில் சர்வ சாதாரணமாக எல்லாருக்கும் தெரியும். "அணுயுகம்" என்று சொல்லப்படும் காலத்திலே அணுவைப் பற்றி தெரியாதவர் இல்லை. அணு என்ற சொல் எல்லாருக்கும் மிக எளிதாகத் தோன்றுகிறது.

அணுவினையும் அணுவிலுள்ள துணுக்குகளையும் ஆகம வாதிகள் வரலாற்று காலத்திற்கு முன்பே கண்டறிந்தார்கள். கண்ட முடிவைப் கர்ண பரம்பரையாகச் சுவடிகளில் எழுதியுள்ளார்கள். அம்முடிவுகளைப் பின்னர் கையாண்டவர்கள் சமய வாயிலாகப் பறைசாற்றவே சித்தாந்த நூற்களில் இடம் பெற்றது. எனினும் கூர்ந்து ஆராயுமிடத்து இற்றைய காலத்து அணு தத்துவம் சித்தாந்த நூலில் பொதிந்து கிடக்கிறது.

அணுக் கொள்கைகளை வேத காலத்திற்கு முன்பிருந்து ஆரியரல்லாத அனுபூதிமான்கள் (சுமார் கி. மு. 3,000) கூறியுள்ளனர் என்ற சான்றை ஆகம நூற்களில் காணலாம். தமிழறிஞர்களின் கற்பனைத்திறன் வானத்தையும் கடந்து அண்டத்தையும் எட்டியிருந்தது. புலன்களுக்குப் புறம்பாய்ச் சின்னஞ் சிறு கடுகிலிருந்து உலகினும் பன்மடங்குப் பெரிதான நட்சத்திரங்கள் வரை எங்கும் நிறைந்துள்ள அணுவும் அவர்களது ஆராய்ச்சிக்குட்பட்டிருந்ததை இன்று நாம் காண்கிறோம்.

கதிரவனது ஒளியில் மின்னும் தூசும் வானவெளியில் வனப்புடன் விளங்கும் வான வில்லின் மென்மையும் சின்னஞ்சிறு துகள்கள் உலகில் இருக்கவேண்டும் என்று அறிவுறுத்தும். ஒரு பொருளைத் துண்டித்துக் கொண்டு சென்றால் கடைசியில் அது என்னவாகும் என அவர்கள் ஆராய்ந்தனர். இவ்வாறு அப்பொருளைத் துண்டித்தலுக்கும் ஒரு முடிவுண்டு. பொருளைத் துண்டித்தால் கடைசியாகப் பெறும் துகள்களை

அவற்றை அணுககள் என அழைத்தனர். பொருள்களில் இத்துகள்கள் நிறைந்துள்ளன. அணுக்களின் தன்மைகளும் இவற்றின் அமைப்பும் வேறுபடுவதால் பொருள்களும் பலவேறு தன்மைகள் கொண்டு விளங்கு கின்றன என அவர்கள் கருதினர். ஆகையால் இதைப்பற்றிய கருத் துக்களை அவர்களிற் பலர் ஆராய்ந்தனர்.

முதன் முதல் நம் நாட்டில் அணுக்கொள்கையை மிகத் தெளிவாயும் விரிவாயும் ஆராய்ந்தவர்கள் ஆகமவாதிகள். ஆதியில் உலகில் தோன்றிய துகள்களைப் பூதாதிகள் என்றனர். கண்ணுக்கெட்டாத துகள்களான இவை உரு, பண்பு முதலிய இயல்புகள் இல்லாதன. இத்துகள்கள் ஆற்றலை மேற்கொண்டு தன் மாத்திரைகள் எனும் துகள்களாக மாறுகின்றன. பல தன் மாத்திரைகள் ஒன்று கூடி ஒரு பரமாணுவாகத்திரள்கின்றன. நாம் காணும் பொருள்கள் பரமாணுக்களின் தொகுதிகளாகும். தன் மாத்திரைகள் விரைவாய்த் துடிப்பதால் ஒளியும் வெப்பமும் தோன்று கின்றன. பொருள்களில் வினையும் இராசயன வினைவுகளையும் சித்தர்கள் தம் கொள்கையால் விளக்கியுள்ளனர். அக் கொள்கைகள் தற்கால இராசாயன வினைவுகளேயும் சித்தர்கள் தம் கொள்கையால் விளக்கியுள்ளனர் அக் கொள்கைகள் தற்கால இரசாயன நூலுண்மைகளையே ஒத்திருக் கின்றன.

பழங்காலத்தில் சுமார் கி. மு. 5000 அளவில் சித்தாந்த ஆகமவாதி கள், சைவர்கள், சமணர்கள், பௌத்தர்கள் விஞ்ஞான தத்துவ அறிவைப் பெருக்கியவர்களாவார்கள். அவர்கள் பொருள்களின் தோற்றத்தை ஆராய்ந்தார்கள். இவர்களது அணுக்கொள்கை மிகவும் விரிவானது. அணுவுக்கு ஆதியும் இறுதியும் இல்லை. அது பிரிக்க முடியாத சிறு துகளாகும் பொருள்கள் அனைத்தும் அணுக்களின் தொகுதிகள் ஒரு பொருளின் மணம், நிறம், சுவை முதலிய தன்மை கள் அப்பொருளிலுள்ள அணுக்களின் தன்மையைப் பொருத்திருக்கும். அணுக்களின் சேர்க்கையால் வெவ்வேறு பொருள்கள் தோன்றுகின்றன என இவர்கள் கருதினர்.

இவர்களுக்கு அனுசரணையாகச் சாங்கியர்கள், நையாயிகர, வைசேடிகர் அணுக்களே பொருளின் ஆதி உறுப்புகளாகும் என்றனர். இவற்றைத் தவிர விசும்பு என்ற வேறொரு பொருளுண்டு. அது எங்கும் பரவி நின்று ஒளியும் ஆற்றலும் ஓரிடத்திலிருந்து இன்னொன்றுக்கும் பரவ உதவும் ஒரு சாதனமாகும். நீர் அலைகள்போல் பரவும் தன்மையுடை யது என்றூர்கள். அணுக்கள் இயக்கம் பரவும் தன்மை நிறை முதலிய பண்புகளை உடையவை.

நால்வகை அணுக்களின் புணர்ச்சியாலும் பிரிவாலும் இராசயன வினைவுடள் நிகழ்கின்றன. இரசாயன மாறுதல்கள் நிகழப் பெரும் பாலும் வெப்பம் தேவையாகவுள்ளது. கந்தகத்தையும் இரும்பையும் ஒன்று சேர்த்துச சூடேற்றினுல் அவற்றினிடையே இரசாயன வினைவு நிகழ்ந்து புதுப்பொருள் ஒன்று தோன்றுகிறது. இதைத் தவிர, கூடியிருக்கும அணுக்கள் வெப்பத்தால பிரிந்து வேறு வகை அணுக்களாவது உண்டு என்றனர்.

ஒளியும் வெப்பமும் அணுத்தன்மை கொண்டவை யென்றும் கூறினர். இவ்வளவு சிறந்த கொள்கைகளைப் பழங்கால கிரேக்கர்களும் வெளியிடவில்லை என்று உறுதியாகக் கூறமுடியும். இதை மாக்ஸ்முல்லர், மாக்டொனல் முதலிய அறிஞர்கள் தெளிவாக்கியுள்ளனர்.

விஞ்ஞான அறிவென்னும் சுடரை முதன்முதல் தூண்டிய பெருமை ஆகமவாதிகளையே சாரும். ஆனால் சுடர் ஒளிவிட்டு எரிந்து நம் நாட்டின் அறியாமை இருளைப் போக்கும் பேறு நமக்குக் கிடைக்காமற் போயிற்று ஆனால் இச்சுடரிலிருந்து மேற்கே பறந்து சென்ற ஒரு பொறி மேனாட்டாரது விஞ்ஞான விளக்கை ஏற்ற உதவியது. பிற்காலத்தில் நம் நாட்டில் மறுபடியும் இருள் சூழ்ந்த போதும் மேனாட்டில் அவ்விளக்கு என்றும் அழியா ஒளியாய் விளங்கிக் காலஞ் செல்லச் செல்ல இன்று நம் நாட்டில் இருட்டை அகற்றி முன்னிருந்த ஒளியை நினைவிற்குக் கொண்டுவரச் செய்கிறது.

ஆகவே உயிர், உலகு என்ற சிந்தனைகள் உலகில் மனிதன் தோன்றிய நாள் முதல் அவன் உள்ளத்தை இயக்கிக்கொண்டு வருகிறது. மனிதன் உலகோடு தொடர்புடையவன். அவன் உலகில் உற்பத்தியான ஒரு உருவத்தோற்றம். உலகின் சக்திகளே அவனை ஆக்கியிருக்கின்றன. கணித பௌதிக, இரசாயன விதிகளை அனுசரித்தே உற்பத்தியானவன். இவைகட்கே வசமாய் வளர்ந்து ஆயுளை முடித்துக் கொள்கிறவன். இந்த உண்மைகளைக் கொண்ட உயிரியலையும் அனுசரித்து உலகில் தோன்றியிருக்கும் கோடானு கோடி சீவராசிகளோடு தொடர்புற்றிருப்பவன் பிற்காலத்தில் தோன்றப்போகும் மனித வர்க்க மாறுபாடுகளுடன் தொடர்பு கொள்ளக்கூடியவன். மனிதனைத் தனியாகச் சிந்திக்க இயலாது. பரம்பரையில் இணைத்தே சிந்திக்க வேண்டும். உலகில் தோன்றி வாழ்கின்ற பிராணிகள் தோறும் உறவுடையவன் என்பதற்குரிய குறிகள் மனிதக் கரு வளரும்போது விளங்குகிறது. தத்துவ உணர்ச்சி உள்ளவர்கள் "மனிதனை மனிதனாக உயிரியலோடு ஒத்திட்டார்கள்." சமய உணர்ச்சியுள்ளவர்கள் "ஆதி அந்தமற்ற கடவுளோடு தொடர்புடையவன் மனிதன், கடவுளின் சக்தியே மனித உடலில் ஒளிர்கிறது" என்றும் கூறுகின்றனர்.

தனி மனிதனை மட்டும் சிந்திக்கும்போது அவன் முடிவு உடையவன் என்று சொல்லுகிறோம். ஆனால் பரம்பரையாய்ப் பார்க்கும்போது இறப்பில்லாத ஓரமிசம் தொடுக்கப்பெற்று வாழ்ந்து வருவதை உணர்கிறோம்.

எல்லை இல்லாதனவான பொருள்களில் எங்கும், எப்பொழுதும் நீங்காமற் பொருந்திக் கிடந்து தோன்றுகின்ற வரம்பில் அறிவினையுடையதுவாகிய அதுவே எங்கட்கு இறைவன். திண்மை தருகின்ற உயிரினோடு ஒப்பற்ற நிலம், நீர், தீ, காற்றாகிய நால்வகை அணுவுமே அவை, அவ்வணுக்கள் உற்றும் கண்டும், உணர்த்திடப் பெய் வகை தம்முட் கூடுதலும், பிரிதலும் செய்வனவாம். பல பொருள்களாகவும் உடல்களாகவும் தம்முள் வெவ்வேறாகத் திரட்சியுற்று அமைவதும்

உளதாகும். அங்ஙனம் அமைந்தவை, வெவ்வேருகிப் பிரிந்து விரிவதும் உளதாம். "அணுக்கள் திரள்வதும் விரிவதுமாகிய அவ்வகையினை ஆராய்ந்து அறிவது எதுவோ அதுவே உயிர் எனப்படுவதாகும்" என்ற கருத்தினை மணிமேகலையின் வாயிலாய் உணரலாம்.

"வற்ப மாகி யுறு நிலம்; தாழ்ந்து
சொற்படு சீதத் தொடுசுவை யுடைத்தாய்
இழினென நிலஞ்சேர்ந்து ஆழ்வது நீர்; தீத்
தெறுதலும் மேற்சே ரியல்பும் உடைத்தாம்
காற்று விளங்கிய யசைத்தல் கடன்"

நிலவணுக்கள் வன்மையுடையனவாக விளங்கும். நீரணுவானது கீழே வீழ்ந்து குளிர்ச்சியான தன்மையோடு சுவையும் உடையதாகி "இழின்" என்னும் ஒலியுடனே நிலத்தைச் சேர்ந்து, பின் நிலத்தின் ஆழத்தே சுவறியும் போய்விடும் தன்மையாகும். தீ அணுக்கள் எரிப்பதும் மேல் நோக்கி எழுகின்றதோர் இயல்பும் உடையதாகும், காற்றணுவானது குறுக்கிட்டு அசைத்தலைச் செய்கின்றவொரு தன்மையினை உடையது.

"இவை
வேற்றியல்பு எய்தும் விபரீதத்தால்
ஆதி இல்லாப் பரமா ணுக்கள்
தீதுற்று யாவதுஞ் சிதைவதுஞ் செய்யா
புதிதாய் பிறந்து, ஒன்று ஒன்றிற் புகுதா;
முது நீரணு நிலவணுவாய்த் திரியா
ஒன்றிரண்டாகிப் பிளப்பதுஞ் செய்யா
அன்றியும்; அவல்போற் பரப்பதும் செய்யா
உலாவும், தாழும் உயர்வதுஞ் செய்யும்
குலாம்மலை பிறவாக் கூடும் பலவும்;
பின்னையும் பிரிந்துதந் தன்மையாகும்
மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பமும்ஆம்
வேயாய்த் துளைபடும்; பொருளா முளைக்கும்
தேயா மதிபோல் செழுநில வரைப்பு ஆம்"

இவை நான்கும் தமக்கு ஒரு வித ஆதியும் அற்று அநாதியாகவே விளங்கும் பரமாணுக்கள் ஆகும். இவை வேற்றியல்புகளை எய்துகின்ற விபரீதத்தாலும் கேடுற்றுச் சிறிதும் இல்லாதவாறு சிதைவுறுவது என்பது என்றும் இல்லையாகும். புதிதாக ஓரணுவானது பிறந்தது என்பதும் ஒன்று மற்றொன்றிற் சென்று புகுவதென்பதும் ஒருபோதும் இல்லையாகும். அநாதியான நீரணுக்கள் நிலவணுக்களாகத் திரிபு அடைவதும் இல்லை. ஒன்று இரண்டாகி பிளக்கப்பட்டு போவது என்பதும் கிடையாது அல்லாமலும் நெல் அவலாகப் பரந்து போவது போல இவை தம்மின்

விரிந்து பரப்பதும் இல்லை. இவை உலாவுவதும் தாழ்வதும் மேலெழுவதும் ஆகியவற்றைச் செய்யும் இயல்பினவாம். நிலவணுக்களாற் பொருந்தி அமையப்பெற்ற மலையானது நொறுங்கிப் பின் மணலாகிப் பிறவொன்றாக கூடுதலும் உண்டு, பலவாகச் செறிந்தபின், பின்னையும் பின்னையும் பிரிந்து தம்முடைய பழைய அணுத்தன்மையினவாக ஆகவும் செய்யும் மரமாகச் செறிந்துள்ள அணுக்கள் மேலும் திண்மையாகிச் செறிவுற்று வைரமாக விளங்கி வன்மைத் தன்மையினை அடைதலும் உண்டு. மரமே மூங்கிலாக உள்ளே துளையுடன் இருப்பதும் நிகழுவதாம் வித்தாகி இவை மீண்டும் முளைக்கவும் செய்யும். தேயாத முழுமதி போல வட்டமான செழுமை பொருந்திய நிலப்பரப்பாகவும், இவையே செறிந்து அமையவும் அமையும்.

"நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழின்
குறைந்தும் ஒத்தும் கூடா வரிசையின்
ஒன்று முக்கால் அரைகாலா யுறும்
துன்றுமிக் கதனால் பெயர் சொல்லப்படுமே
இக்குணத்து அடைந்தால் அல்லது நிலனாய்ச்
சிக்கென் பதுவும் நீராய் இழிவதும்
தீயாய்ச் சுடுவதும் காற்றாய் வீசலும்
ஆயதொழிலை அடைந்திட மாட்டா"

எல்லாப் பொருள்களிடத்தும் நிறைந்துள்ள இவ்வணுக்கள் பூதங்களாக நிலவுமிடத்து தத்தமக்குரிய அளவிற்குறைந்தும் ஒத்தும் கூடாவாம். ஒன்று முக்கால், அரை, கால் என்றாகி இவை தம்முட் பொருந்தும். பொருந்தும் அணுக்கள் மிகுதியானவற்றினாலேயே அந்தச் செறிவின் பெயர் சொல்லப் பட்டு நிலவிவரும் இவ்வளவாக அணுக்கள் செறிவுற்றால் அல்லாமல் நிலமாய் வண்மையுற்றிருப்பது என்பதுவும் நீராகப் பள்ளம் நோக்கி ஓடுவது என்பதுவும், நெருப்பாகச் சுடுவது என்பதுவும் காற்றாகி வீசுவது என்பதுவும் ஆகிய தொழில்களை அவை அடையமாட்டாவாம்.

"ஓரணுத் தெய்வக் கண்ணோர் உணர்குவர்
தோரார், பூதத் திரட்சியுள், ஏனோர்
மாலைப் போதில் ஒரு மயிர் அறிவார்
சாலத் திரண் மயிர் தோற்றுதல் சாலும்"

ஒவ்வோர் அணுவையும் தெய்வத் தன்மையுடைய கண்களைப் பொருந்திய வர்கள் தனித்தனயே கண்டு உணர்வார்கள். அஃதற்ற பிறர் எல்லாரும் பூதத் திரட்சிகளினுள்ளே அவ்வணு உண்மையினை அறிந்து தெளிவு கொள்ள மாட்டார்கள. அது மாலை வேளையிலே கதிரவன் மறைந்துள்ள போது தலையிலுள்ள ஒவ்வொரு மயிரையும் தனித்துக் காணாராகி மிகுதி யாகத் திரண்டு உள்ளே மயிர்க்கற்றையின் திரட்சியை மட்டுமே யாவரும் காண்பதோடு ஒப்புடையதாகும்.

மேலே கூறியவை "மற்கலி கோசர்" என்ற ஆசீகவவாதிகளின் மூன்றும் தீர்த்தங்காரர் இயற்றிய நூலில் காணப்படுவதாக மணிமேகலையில் சாத்தனூர் கூறுகிருர்.

"ஆர்ப்புறு மனத்தின் ஆங்கார விகாரமும்
ஆகாயத்திற் செவியொலி விகாரமும்
வாயுவில் தொக்கும் ஊறெனும் விகாரமும்
அங்கியிற் கண்ணும் ஒள்யுமாம் விகாரமும்
தங்கிய அப்பில்வாய் சுவையெனும் விகாரமும்
நிலக்கண் மூக்கு நாற்ற விகாரமும்
சொலப் பட்டி வற்றில் தொக்கு விகாரமாய்
வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தமென
ஆக்கிய இவை வெளிப் பட்டு இங்கு அறைந்த
பூத விகாரத்தால் மலை மரம் முதல்
ஓதிய வெளிப் பட்டு உலகாய் நிகழ்ந்து
வந்த வழியே இவை சென்று அடங்கி
அந்தமில் பிரளய மாய் இறும் அளவும்
ஒன்ருய் எங்கும் பரந்துநித் தியமாம்"

ஆரவாரம் பொருந்திய அந்த மனத்தினது ஆங்காரமாகிய விகாரமும் ஆகாயத்தினாலே எழும் செவிக்கு ஒலியாகிய விகாரமும், வாயுவினாலே மெய்க்குத் தோன்றும் ஊருகி, விகாரமும் நெருப்பினால் கண்ணுக்குத தோன்றும் ஒளியாகிய விகாரமும் நிலத்தினுல் மூக்கு வழியே நுகரப்படும் நாற்றமாகிய விகாரமும் என்று சொல்லப்படும். இவற்றில் மெய்யான விகாரமாய் வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்று உண்டாகிய இவை ஐந்தும் வெளிப்படும். இங்கே சொல்லப்பட்ட பூத விகாரத்தால் மலை, மரம் முதலியனவாகச் சொல்லப்பட்டன. எல்லாமே வெளிப்பட்டு உலகமாகவும் நிகந்து தாம் வந்த வழிடே அவையவை சென்று ஒடுங்கி ஒழிவில்லாத பிரளயமாய் இறுதியில் அனைத்துமே அழியும் அளவும் ஒன்ருகி எவ்விடத்தும் பரந்து நித்தியப் பொருள்களாகவே விளங்கும்.

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்ப ருந்தமை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இல் நுழைகதிரின்கன் அணுப் புரையச்
சிறியவாகப் பெரியோன்; தெரியின்"

ஆராயுமிடத்து, அண்டமாகிய பேருலகின் பகுதிகள்ல் உருண்டை வடிவமான விளக்கமும், அவற்றின் எல்லையற்ற இயல்புகளும், பல்வகை வளப் பொருந்திய பெருமை மிக்க தோற்றங்களும், அவை ஒன்றிற் கொன்று மேலாக நின்ற எழுச்சியின் வேறுபாடுகளைக் கூறுங்கால் நூற்றொரு

கோடிக் கதிகமாக அளவில்லாமற் பறந்து பெருகியுள்ளன. அத்தகைய உலகுக்கெல்லாம் வீட்டினிலே பலகணிவாயிலாகப் புகுகின்ற பகலவன் கதிர்களிலே நெருக்கமகாக் காணப்படும் அணுக்களை யொப்பச் சிறியன வென்று சொல்லும் படியாகத் தான் பெரியனுய், விளங்கும் முதல்வன்

"அணுத்தரும் தன்மை இலயோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
நூலுணர் உணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
.....................................
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணல் யானுங் கண்டேன் காண்க
.....................................
சிவனெனயானுந் தேறினேன் காண்க"

(திருவாசகம்.)

அணுவிற் காணப்படும் நுட்பத் தன்மையிலும் வியக்கத் தக்க நுட்ப மானவன். ஆய்ந்தறிதற்கு அல்லது பெறுதற்கு அரிய பலவற்றுள்ளும் அருமையிலருமை யுடையோன். எல்லாப் பொருள்களையுந் தழுவி நின்று அவற்றை வளர்த்துக் காப்பான், கல்வியறிவினுலே நேரே அறியப் படாத நுட்பமுடையோன்; மேலுங் கீழுமாய் எங்கும் நிறைந்தவன்; முடிவும் மூலமுமில்லாதவன்; இயங்காப் பொருள் எல்லாவற்றினுங் கலந்து அவையேயாய் நின்றவன்; அந்தமும் ஆதியும் இல்லாதவன்; எத்தகைய விண்ணவரும் காணவொண்ணுத பொருள் ஆவான்; ஆணு மல்லன் பெண்ணுமல்லன் அலியுமல்லன் என்று திருவாசகத்தில் அணுவைப் பற்றிக் கூறப்படுகின்றது.

சுருங்கக் கூறில், இன்றைய நாளில், அணுவினைக் கண்ணால் காண முடியாது என்றும், அரைகோடி அணுக்களை வரிசையாக அணிவகுத்து நிற்க வைத்தால் இங்கு எழுதும்போது வைக்கும் முற்றுப் புள்ளிக்குள் அடங்கி விடும். மிக மிகச் சிறிய அணுவின் குறுக்கு அளவினையும் சரியாகக் கணக்கிட்டு இருக்கிருர்கள். இதன் எடை, அகலம், நீளம், கனம், அதன் அமைப்பு, அதன் ஆக்கப்பாடு, அழிவாற்றல் இவ்வளவும் அறியவல்ல தாகிவிட்டது இவ்வறிஞர்கள் சித்தர்கள் கூறிப் போந்ததை உணர்ந்து கொள்ளாதது பேதமையாகும்.

இவ்வறியாமையினாலன்றோ, உலகம் உயிருள்ளனவும், உயிரில்லா தனமுமாக நிலவுகின்றது. உயிர்களின் "அறிவினைப் பற்றி முடிவாக ஒன்றும் கூறுவதற்கில்லை. ஆனால் உயிரற்றதாகக் கிடக்கும் சடத்தினைப் பற்றியே அறிவது எளிதாகிறது" என்றார்கள். சடத்தின உண்மையில் என்னவென்று கூற முடியுமா? கூற ம்யன்றபோது தத்துவ ஆராய்ச்சி யாளர்களில் ஒருவர் கூறுவதுபோல் ஒருவர் கூறாமல் "சூன்யம்" என்றும் "உள்பொருள்" என்றும்; "இல் பொருள்" என்றும்; "பொருளற்றது" என்றும்; "மாறுவது" என்றும்; "மாறாதது" என்றும்; "சித்து" என்றும்; "அசித்து" என்றும் பலவாறு கூறி, பண்டைய நாளி லிருந்தே ஒருவரோடொருவர் முரண்பட்டுப் பல சமயங்கள் தோன்றின. ஆனால் ஆகம சித்தாந்திகள் பதி, பசு, பாசம் என்ற மூன்று நித்திய மூலப் பொருள்கள் சேர்ந்தது "அணு" என்று அறுதியிட்டுக் கூறியிருக் கிறார்கள். சித்தாந்திகளின் அணு ஆராய்ச்சியும் இன்றைய நாளை அணு ஆராய்ச்சியும் ஒருவித முரண்பாடில்லாமல் விளங்குகிறது. இங்குச் சமய வாயிலாக நோக்காமல் தத்துவ ரீதியாக ஆராய்ந்தால் இவ்வித ஒற்றுமை புலப்படும்.

ஆகவே உலகம் (பாசம், சடம், உலகத்தில் உருவமாகக் காணப்படும் பொருள்கள்) கூடியவரையில் மாறாமலே தோன்றுகிறது. பாழான சூன்யமாகத் தோன்றாமல் பொருளுண்மை உடையதாகவே தோன்று கிறது. இதனைச் சடப்பொருள் (உருவப் பொருள்) என்றும் இந்தப் பொரு ளுண்மை சூடு, ஒளி, காந்தம், மின்சாரம் முதலான சக்திகளாக இயங்கவும் கண்டனர். "உறைந்து கிடந்தால் பனிக்கட்டி, உருகி வழிந் தால் தண்ணீர்" என்பது போல "சக்தி உறைந்து கிடக்கின்றதே சடம், சடம் ஆற்றலாய் உருகி வழிவதே சக்தி" என்றே சொல்லப்பட்டது. இதனையே சிவ வாக்கியர்,

"உயிராவ தேதடா? உடம்பாவ தேதடா
உயிரையு முடம்பையு மொன்று வியப்பதேதடா

உயிரினு லுடம்பு தானெடுத்த உண்மை..........." என்று கூறுகின்றார்.

மலை மலையாகத் தோன்றுவன எல்லாம் மணல் மணலாகக் கரை கின்றன. மணலிலும் பெருமணல், சிறுமணல், நுண்மணல் எனக் குறைந்து தேய்ந்துகொண்டே போகக் காண்கிறோம். இவ்வாறு ஒவ் வொரு பொருளும் அடிப்படையான சிற்றமைப்பில் முடிகிறது. பனிக் கட்டி சூட்டினால் உருகித் தண்ணீராகி, தண்ணீரின் அணுத்திரளைகள் சூட்டினால் நீராவியாகி நீரின் அணுத்திரளைகள் வரும் என்பர். அணுத் திரளைகளைப் பிரித்துப் பார்த்தால் அணுக்கள் வரும். அப்போது தண்ணீரின் இயல்பு அங்கு இராது. தண்ணீரையும் இரு வேறுப் பிரிப்பவையே உலகத்தின் அடிப்படை பொருள், இவ்வடிப்படைப் பொருள்கள் உலகில் உள்ளனவாம. இவை தத்துவங்கள் எனப்படும். இவைகள் தம்மோடு தாமும் பிறிதுமாகக் கலந்து அணுக்களாகவும், அணுத்திரளைகளாகவும்,

பொருளாகவும் ஆகின்றன. இப்படிப்பட்ட கலவைகள் எண்ணற்றதாகி இத்தனை வகையால் பல்கிப் பெருகும் உலகம் தொண்ணூற்றாறு தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது. இத்தொண்ணூற்றாறு தத்துவங்கள் அணுக்கள் தோறும் பொதிந்து பல்வேறு சடப் பொருளாகிக் காணப்படுகின்றன.

இவ்வாறாகச் சித்தர்கள் தங்கள் யோக வல்லமையால் உலகைப் படைத்து, காப்பாற்றி, அழித்து நிர்வகிக்கும் காரணகாரியப் பொருள் எது என்று ஆராய்ந்தார்கள். பல்லாயிரம் ஆண்டுகளில் செய்த யோக வல்லமையினால் அக்காரண காரியப் பொருளை அணுவினுள் அணுவாக வுள்ளது என்று மாபெரும் சித்தன் சிவபெருமான் உபதேசித்தார். பிற்காலத்தில் அவர் வழி வழி வந்த யோக சித்த மாணாக்கர்கள் அக்காரண காரியப் பொருளுக்குச் சிவபெருமானின் பெயர் முழங்கவும், அம் மாபெருஞ் சித்தனும் முடிவில் காரணகாரியப் பொருளாகவே சென்றடைந்தமையால் அதனைச் "சிவம்" என்றும் "பதி" என்றும் போற்றினார்கள், ஆகவே அணுவினுள் கிடக்கும் பரம அணுவினை ஆதிபிரான், பதி, சிவம், கடவுள் என்ற பல பெயர்களால் போற்றினார்கள். இதுதான் உண்மை விளக்கமாகும்.

ஆனால், இன்றைய நாளில் பதி என்றாலும், சிவன் என்றாலும், மாபெருஞ் சித்தனாகிய ஆதி குரு சிவபெருமானையே உருவமாகக் கண்முன் நிறுத்திச் சமய மனப்பான்மையோடு கருதுகிறார்களேயொழிய மெய் கண்டான் நூலில் உரைத்தவாறு காண்கிலர், பதி என்ற பரம அணுவைச் சமயக் கொள்கையாக இல்லாமல் வெறும் விஞ்ஞானத் தத்துவமாகப் போதிக்க முற்பட்டால் மக்களிடையே மெய்ப்பொருளின் வல்லமையும் பெருமையும் சிறப்பும் எங்குக் குன்றிப் பொய்ப் பொருளாக நிலவி சொல்லொணாத தீமைகளுக்கு உள்ளாகுமோ என்ற பீதி போலும் என்று கருத இடமளிக்கிறது.

எவ்வாறாகிலும் அணுக்கள் தோறும் பதி என்ற பரம அணுவைத் தத்துவ ரூபமாகக் கற்றுணர வேண்டுவது இன்றியமையாத கடமையாகும். அதிலும் சித்த மருத்துவர்கள் அவசியம் கற்றுணர வேண்டும்.

காரண காரியப் பொருளை "பதி" என்றும், அப்பதியோடு அகல இல்லேன் என்றிருக்கும் பொருளைப் 'பசு' வென்றும் அப்பசுவைப் பதியினிடமிருந்து பிரிக்க முயலும் மிகக் கவர்ச்சியுடையதைப் 'பாசம்' என்னும் மூன்று நித்திய அணுக்களை அணுவில் கண்டு மொழிந்தனர்.

## பதி

சிவ பெருமான் பதி, பசு, பாசத்தை நந்தி எம்பெருமானுக்கு உரைக்க, நந்தி தேவர் கைலாயத்தில் திருமூல வர்க்கத்தாருக்குப் போதித்தார். இதனைத் திருமூலர் திருமந்திரத்தில்,

பதி பசு பாசம் பயில்வியா நித்தம்
பதி பசு பாசம் பகர்வோர்க் காறுக்கிப்
பதி பசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதி பசு பாசம் பயில நிலாவே,

(திருமந்திரம் 2373)

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளையும் நிலை வேறுபாட்டால் விரித்தும், தொழில் வேறு ஒற்றுமையால் தொகுத்தும் ஐம்பெரும் பொருள்களாக அமைத்தனர். அருஞ்சைவர் பதி, பசு, பாசம் மூன்றும் மீநிறைவு, வீழ்நிறைவு, மிடை நிறைவு என்ற முறையில் ஒன்றனுள் ஒன்று, அடங்கி விளங்கும்என்பர். இவற்றை முறையே வியாபகம், வியாப்பியம், வியாத்தி என்பர்.

பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாகுமே.

(திருமந்திரம் 2384)

பாசத்துடன் பயின்று வரும் ஆருயிர் முதல் பரமாகும். இயற்கையிலேயே சுமையுடையதாகு மென்ப. அப்பாசப் பிணிப்புச் சுமையுடைமையால் அவ்வுயிர் பசுவெனப்பட்டது. ஆருயிர் பாசம் பயின்று தூயவாதற் பொருட்டுப் பதியும் அப்பசுவுடன் கலத்தலால் பதியும் பசுவாகுமென்ப, ஆருயிருக்குப் பாசத்தினைப் பயிற்றுவித்தற் பொருட்டு பதியும் பாசமாக விளங்கும்.

அணுவின் மெய் பொருளை யறிவது அறிவு. எனவே மெய்ப் பொருள் ஒன்றும், பொய்ப் பொருள் ஒன்றும், இவைகளை யறியும் அறிவுப் பொருள் ஆக மூன்று பொருள் உண்டென்பது பெறப்படும். இவற்றுள் மெய்ப்பொருள் பதி அல்லது சிவம் எனவும்; பொய்ப் பொருள் பாசம் எனவும்; அறிவுப்பொருள் பசு அல்லது ஆன்மா எனவும் சொல்லப் படும். பதி பொருள் எக்காலத்தும் தோற்றக் கேடுகளின்றி நிர் விகாரமாயிருப்பதொன்றாதலின் அதுவொன்றே மெய்ப்பொருள் எனவும் பாசமும் பசுவும் பதியைப் போலவே அநாதி நித்திய பொருள்களாயிருக்க உலகத்தின் போகங்களுக்குட்பட்டு காரியம் செயல்படும்போது விகாரங்களில் மருவுதலால் பொய்ப் பொருளேயாமெனப்பட்டது.

பதி, பசு, பாச இலக்கணங்களை விவரிக்கும் முன் அவைகள் நித்தியப் பொருள்கள் என்று நிரூபிக்க அவசியமேற்படுகிறது. அதனை விவரிப்போம்.

ஒரு பொருள் உண்டென்பதை நிரூபிக்கப் பொதுவாக மூன்று வழிகள் உண்டு. வழிகளைப் பிரமாணங்கள் எனக் குறிப்பிடுவது வழக்கம். இவைகளை முன்பு விளக்கியுள்ளோம். இவற்றுள் ஆகமம் அல்லது சுருதி, ஒரு பொருளை அனுபவத்தால் அறிந்த மகான்களின் வாய் மொழி மூலம் அறிதலாகும். அவர்களது வாக்கைக் கேட்பதன் மூலம் அறிவதால் இதை ஆகமப் பிரமாணம் எனவும் குறிப்பதுண்டு. கடவுள் உண்டென்பதை ஒப்புக்கொள்வோர் எல்லாரும் ஆகமப் பிரமாணத்துக்கே முதன்மை கொடுக்கின்றனர். ஏனைய பிரமாணங்களைக்கொண்டு கடவுளுண்டு என்பதைப் பரிபூரணமாக நிரூபிப்பது கடினம். இறையருள் பெற்ற அனுபூதிமான்களுடைய வாக்குகளை இன்று ஆகமம் என்றும் வேதம் என்றும் குறிப்பிடப்படுகின்றன. ஆகவே, கடவுளுண்மைக்கு இவ்

வேத, ஆகமங்களின் வாக்குகள் ஆதாரமாகின்றன. ஆனால், அநுமானப் பிரமாணத்துக்குச் சித்தாந்தத்தில் இடமில்லை என்பது கருத்தல்ல. ஆகமத்திலே கூறப்பட்ட உண்மையை அநுமான மூலமும் நிலைநாட்டச் சித்தாந்திகள் முயன்றிருக்கின்றனர். இதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று வேதத்திலே கூறப்பட்டவற்றை மேலும் வலியுறுத்த அநுமானப் பிரமாணம் பயன்படும். மற்றது, ஆகமத்தை ஒரு பிரமானமாக ஒப்புக்கொள்ளாதவர்களுக்குக் கடவுள் உண்டென்பதை நிரூபிக்க அநுமானம் மட்டுமே ஓரளவு பயன்படும். இந்த இரு காரணங்களாலும் சித்தாந்திகள் கடவுள் உண்மையை அநுமான மூலமான காரணங்கள் காட்டியும் நிரூபிக்கின்றனர். சித்தாந்திகள் உலகைக் கொண்டும் கன்மத்தைக் கொண்டும் நிரூபிக்கின்றார்கள்.

பதி (இறைவன்) உண்டென்பதற்குச் சைவ சித்தாந்திகள் கூறும் காரணங்கள் பொருத்தமற்றவை எனச் சிலர் மிகக் கடுமையாகக் கண்டித்திருக்கின்றனர். அதற்குச் சைவ சித்தாந்திகள் கண்டனங்களுக்குக் கூறும் சமாதானங்களைக் கவனிப்போம்.

ஒரு பானையைக் காணும் எவரும் அதை வனைந்தவனை நேரே காணாவிடினும் வனைந்தவனும் உளன் என்பதை ஆட்சேபிப்பதில்லை. இதைப் போலவே நாம் காட்சிக்குப் புலனாகும் இந்த உலகத்தைக் கொண்டு காட்சிக்குப் புலனாகாவிடினும், அதனைப் படைத்தவனும் உளன் என்பதை உறுதியாகக் கொள்ளலாம். இது சைவ சித்தாந்திகள்வாதிக்கும் விதிகளுள் ஒன்று. இந்த வாதத்திற்கு உலகம்தான் அடிப்படை. உலகம் என ஒரு பொருள் உண்மையிலேயே இருக்கின்றது என்பதை ஒப்புக்கொண்டால்தான் அதைப் படைத்தவனைப் பற்றிய பேச்சுக்கே இடமுண்டு. ஆனால், உலகம் உண்மை என்பதற்கு என்ன ஆதாரம்? நமது கண்ணுக்குத் தெரிகின்றது என்பது மட்டும்தானே ஆதாரம். ஆனால், கண் முதலிய நமது புலன்கள் எவ்வளவு தூரம் நம்பத்தக்கன? நமது கண்கள் நம்பத்தக்கன அல்ல என்பதைச் சைவ சித்தாந்திகளே ஒப்புக்கொள்ளுவர். புலன்கள் நம்மை எத்தனையோ சமயங்களில் ஏமாற்றி விடுகின்றன. அநித்தியமானவற்றை நித்தியமானவையாகத் தோன்றும்படி செய்கின்றன. இத்தகைய புலன்கள் காட்டும் உலகம் உண்மை என எங்ஙனம் ஒப்புக்கொள்ளலாம்.

புலன்கள் ஒரேவொரு சமயம் உள்ளதை உள்ளபடி காட்டவில்லை என்பதற்காக உலகமே பொய் என வாதாடுவது பொருந்தாது. உலகம் உண்மையல்ல எனக் கருதும் வேதாந்திகள் கூட இல்லாதது அல்ல என்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். இந்த உலகம் ஒரு தோற்றம் என்று வைத்துக்கொண்டால்கூட இத்தோற்றத்தைத் தோற்றுவிக்க ஒருவன் ஒருத்தி, ஒன்று வேண்டுமல்லவா? என்று சமாதானம் கூறுகிறார்கள்.

உலகம் உண்மை என ஒப்புக்கொண்டாலும் அது என்றைக்கோ படைக்கப்பட்டது எனக் கொள்ளாது என்றுமே இந்த நிலையிலேயே உள்ளது என ஏன் கொள்ளலாகாது. அது அழிந்து அழிந்து தோன்றுகிறது எனச் சைவ சிந்தாந்திகள் கொள்வது போலக் கொண்டால்தான், அதனை

அழிக்க ஒருவனும், பின்னர் படைக்க ஒருவனும் தேவை. ஆனால், அங்ஙனம் உலகம் முழுவதும் அழிந்தழிந்து தோன்றுகிறது என்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை. அதனைக் கண்டவர் எவரும் இலர். எனவே, படைப்பவன் ஒருவன் தேவை எனப் பேசுவது பொருந்தாது என்ற ஆட்சேபனை.

உலகம் முழுவதும் ஒரே காலத்தில் அழிவதையும் பின் படைக்கப் படுவதையும் யாவரும் கண்டதில்லை என்பது உண்மை. உலகிலுள்ள ஓரினப் பொருள்கள் பல ஒருங்கு ஒரே காலத்தில் உற்பத்தியாகிப் பின் ஒரே காலத்தில் யாவும் ஒருங்கே அழிவதைக் காண்கிறோம். இதிலிருந்து அகில உலகுக்குமே ஒருநாள் இக்கதி ஏற்படுமென்பதை யூகித்தறியலாம். யாவரும் காணவில்லை என்ற காரணத்தால் ஓர் உண்மை உண்மையாகாது போய்விடுமா? என்ற சமாதானம் பகர்கின்றனர்.

ஆகவே, உலகம் உண்மை; அது படைக்கப்பட்ட பொருள், எனவே, அதனைப் படைத்தவனும் இருந்தேயாக வேண்டும் என்பதை விளக்கினோம். படைத்தவன் ஏன் படைத்தான்? எங்ஙனம் படைத்தான்? என்ற இரு வினாக்கள் எழும். இறைவன் உலகை மட்டுமே படைப்பவன். உலகோடு சேர்த்து உலகிலுள்ள உயிர்களையும் அவன் படைப்பவன் அல்லன். இறைவன் உலகை மட்டுமின்றி உலகிலுள்ள உயிர்களையும் படைக்கின்றான் எனக் கொண்டால் இப்படைப்புக்கு ஒரு காரணமும் இல்லாது போய்விடும். அன்றியும் படைக்கப்பட்டவை யாவும் அழியும் என்பது நியதி. உயிர்களும் படைக்கப்பட்டவை எனக் கொண்டால் அவைகள் அழிவுடையவை என்பது கருத்தாகும். ஆனால், சைவ சித்தாந்திகள் கொள்கை இதுவல்ல. உயிர்கள் நித்தியமானவை என்பதும், அவை அநாதி தொட்டே ஆணவமலமென்னும் பாசத்தால் கட்டுண்டு அல்லற்படுகின்றன என்பது சைவ சித்தாந்திகளின் கொள்கை. இந்த ஆணவமலத்திலிருந்தும் ஆன்மாக்கள் நீங்குவதற்குத் துணையாகவே, இறைவன் இவ்வுலகைப் படைக்கிறான், இதுவே படைப்பின் நோக்கம் என்றனர்.

இறைவன் சித்துப் பொருள். இந்த உலகம் சடப் பொருள். சடப் பொருளாகிய உலகுக்கு மூலம் சடப் பொருளாகுமேயொழிய சித்துப் பொருளாகாது என்பது சைவ சித்தாந்திகளது அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்று. சடத்திலிருந்து சடம் தோன்றுமே யொழிய சித்திலிருந்து சடம் தோன்றாது. இக்காரணத்தால் தான் சடவுலகுக்கு மூலமும் ஒரு சடப் பொருளாகயிருத்தல் வேண்டும் எனச் சைவ சித்தாந்திகள் கொள்ளுகின்றனர். வேதாந்திகளும் சித்தாந்திகளும் அடிப்படையிலே மாறுபடும் இடங்களிலே இதுவும் ஒன்று என்பதை இங்குக் குறிப்பிடல் வேண்டும். வேதாந்திகள் கொள்கைப்படி உலகுக்கு நிமித்த காரணமும் பிரமம் முதற் காரணமும் பிரமம், இங்ஙனம் கொள்வதில் சைவ சித்தாந்திகளுக்கு ஏற்படாத இடர்பாடு ஒன்று அவர்களுக்கு ஏற்படுகின்றது. அறிவே சொரூபமான பிரமத்திலிருந்து அதற்கு நேர்மாறான சட உலகு எங்ஙனம் உற்பத்தியாகின்றது? என்ற வினாவுக்கு அவர்கள் விடை பகரவேண்டிய இடர்பாடு ஏற்படுகின்றது. இவ்விடர்பாட்டைப் போக்க வேதாந்திகள் பிரமத்திலிருந்து அதற்கு நேர்மாறான உலகம் உண்மையாகவே உற்பத்தியாகவில்லை. உற்பத்தியாவதுபோல் தோன்றுகின்றது என்கின்றனர் போலும்.

மண்ணிலிருந்து பானையை வனையும்போது மண் பலவித மாற்றங்களை அடைகின்றது. இறைவனிலிருந்தே உலகம் உற்பத்தியாகின்றது எனில், இறைவனும் பல விகாரங்களை அடைய வேண்டி நேரிடும். ஆனால், இறைவன் எக்காலமும், எவ்வித விகாரமும் அடையாதவன் என வேதங்கள் கூறுகின்றன. **இறைவனின் இருந்தல்ல, மாயையில் இருந்துதான் உலகம் உற்பத்தியாகின்றது** எனச் சைவ சித்தாந்திகள் கொள்ளுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

சூரியனால் தாமரை மலர்கின்றது. அதனால் சூரியன் எவ்வித விகாரமும் அடைவதில்லை. இது போன்றதே இறைவனது நிலையும். இறைவன் புரியும் படைத்தல் தொழிலால் அவன் சிறிதும் பாதிக்கப் படுவதில்லை.

சித்துப் பொருளாகிய இறைவன் தனக்கு நேர்மாறான சடப் பொருளாகிய மாயையை எங்ஙனம் இயக்குவான் என்பது அடுத்தாற்போல் எழக் கூடிய ஆட்சேபனையாகும். அதற்கு விடையாகத் திருமூலர் கீழ்வருமாறு விளக்குகிறார்.

அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலு மாமே.

(திருமந்திரம் 1971)

இவ்வாறு மொழிந்தார். அணுவாகிய ஆருயிர்க்கு உயிராய் நுண்ணியதாய் விளங்கியது ஆதியாகிய சிவம் ஆகும். அச்சிவத்தை உணர்வில் அளவின்றி நுனிகி ஆராய் வல்லார்கட்கு அணுவுக்கு அணுவாய் திகழும் சிவத்தை அணுகுவது கூடும் என்கிறார்.

இன்னும்,

அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீசனவ னெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே.

(திருமந்திரம் 1973)

மிகவும் நுண்மையாகிய அணுவாம் உயிரினுள் சிவம். அச்சிவத்தினிடம் ஆருயிரும் வேற்றக்கலந்து நிற்கும் கலப்புச் சொல்லொணாது என்கிறார்.

ஆகவே, அணுவிற்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய் உள்ள பரம அணுவை, "பதி" என்றும், "சிவம்" என்றும் இறைவன் என்றும் ஆதி சைவர்கள் கூறிப் போந்தனர். அதனையே தமிழ் வட்டமெழுத்து காலத்திலிருந்த திருமூலர் திருமந்திரத்தில் பரம அணுவைப் பல விடங்களில் பதி என்றும் பசுவென்றும் செந்தமிழில் விளக்கமாக மொழிந்திருக்கிறார்.

தானே அணுவுஞ் சகத்துத்தன் நொய்ம்மையும்
மாணுக் கனமும் பரகாயத் தேகமுந்
தாணுவ தும்பர காயஞ்சேர் தன்மையும்
ஆணுத வுண்மையும் வியாபியுமாம் எட்டே.

(திருமந்திரம் 629)

இறைவன் தானே நேரே மாயையை இயக்குகிறான் எனச் சைவ சித்தாந்திகள் கொள்வதில்லை. இறைவன் தனது சித்த சக்தியைக் கொண்டே மாயையைத் தொழிற்படுத்துவான் என்பதே சைவ சித்தாந்திகள் கொள்கை. இறைவன் வேறு; அவனது சக்தி வேறு என வினவலாம். ஒரு விதத்தில் இறைவனும் அவனது சக்தியும் ஒன்று; இன்னொரு விதத்தில் அவை இரண்டும் வேறு என அவர்கள் கூறுவர். இறைவனும் அவனது சக்தியும், சூரியனும் அவனது ஒளிக் கதிர்களும் போன்றவை. சூரியனின்றி ஒளிக்கதிர்கள் இருக்க முடியாது. ஆயினும், கதிர்கள்தான் சூரியன் என நாம் கொள்வதில்லை.

ஆகவே, இறைவன் அல்லது பதி என்று சொல்லும்படியான அருவப் பொருளானது அவன், அவள், அது ஆகியவர்களால் உலகில் காணும் பொருள்களெல்லாம் மூன்றுவித தோற்றத்தை அளிக்கின்றன. ஆக்கல் அல்லது உற்பத்தி; காத்தல் அல்லது வாழ்தல்; அழித்தல் அல்லது மறைத்தல்; என்னும் இம்மூவகைச் செயல்களுக்குட்பட்டு நடைபெறுவதனால் முதல் அல்லது மூலப்பொருள் ஒன்று உள்பொருள் இருப்பதென்று அனுமானிக்கப்படுகிறது. இச்செயல்களுக்குக் காரணம் வேண்டற்பாலது. காரணமும் காரியமும் ஒருங்கே உள் பொருளோடு இருத்தல் பற்றி காரணமில்லாமல் காரியமில்லை. காரியமில்லாமல் காரணமில்லை எனக் கொள்ளப்பட்டது. இவ்விரண்டும் இருத்தல் பற்றி இல்லாததில் காரண காரியமில்லை என்பது வெள்ளிடைமலை. எனவே, இல்லாததில் இல்லாததுதான் கிடைக்கும். இக்கருத்தைச் சிவஞான போதத்தில் கீழ் கண்டவாறு காணலாம்.

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே; ஒடுங்கி உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

இது நிற்க, திருமூலர் திருமந்திரத்தில் கீழ்வருமாறு கூறியுள்ளார்:—

தாங்கிய தன்மையும் தானணுப் பல்லுயிர்
வாங்கிய காலத்து..........

உயிர் யோகப் பயிற்சியால் அணுவாக நின்று பல உயிர்களோடும் செறிந்து அவைகளைத் தாங்கிய காலத்தும் அவற்றை அழித்த காலத்தும் அதற்கோர் மாறுதலில்லை என்பதாம்.

அணிமாதி சித்திக ளானவை கூறில்
அணுவில் அணுவின் பெருமையில் நேர்மை
இணுகாத வேகார் பரகாய மேவல்
அணுவத் தனை யெங்குந் தானுத லென்றெட்டே.

(திருமந்திரம் 648)

அணுவுக் கணுவாதலின் என்ற பெருமையைக் கூறுகிறார்.

அணுவின் துரியத்திலான நனவும்
அணுவசைவின் கண்ணுன கனவும்
அணுவசை விற்பரா தீதஞ்சுழுத்தி
பணியிற் பரதுரியம்பர மாமே

(திருமந்திரம் 2242)

ஆருயிராகிய அணுவின் பேருறக்க நிலையாம் துரியத்தில் உண்டாகும் விழிப்பு நிலையும், ஆருயிரின் புடைப்பெயர்ச்சியில் உண்டாகும் கனவும், அப்புடைப் பெயர்ச்சியின் கண் தன்னை இழப்பாதகிய உறக்கமும் பொருந்திய இடத்து அப்பால் நிலை எய்தும். எய்தவே சிவம் ஒன்றும் சிறப்பு எய்தும்.

அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணு வொன்றிலாத சிவமுங் கலந்தால்
இணையறு பால் தேன் அமுதென இன்பத்
துணையது வாயுரையா ற்றிடத் தோன்றுமே.

(திருமந்திரம் 2401)

ஆருயிராகிய அணுவும் அவ்வுயிரினைச் சிவத்திதுடன் கூட்டுவதாகிய பரம அணுவின், சக்தியும் ஆகிய மூன்றும் யாண்டும் எவ்வகைத் தடையுமின்றி இலங்கும் சிவம் கலந்திருப்பதால் ஒப்பிலாது உயர்ந்து பதியாய் விளங்குகிறது.

மேலொடு கீழ்ப்பக்க மெய்வாய் கண்ணுசிகள்
பாலிய விந்து பரையுட் பரையாகக்
கோலிய நான்கவை ஞானங் கொணர்விந்து
சீலமி லாவணுச் செய்தியதாகுமே.

(திருமந்திரம் 2421)

விந்து எனப்படும் ஒளி வடிவாய் திரு தொழில் ஐந்தும் வெளியிட்டு ஆவியின் கண் (அணு) புரிவதே சக்தியின் அருளாகும்.

உற்றிடுங் காரிய காரணத்தோடற்
அற்றிட வச்சிவமாகும் அணுவனே.

காரிய உபாதி எழுமாகிய உயிர் உபாதியும் காரண உபாதி எழும், பதி உபாதியும் உள்ளவிடத்துத் தோன்றும் வருத்த உபாதியும் முற்றும் தோன்றுதவாறு அற்றெழிதல் வேண்டும். அற்றெழிந்த விடத்து அவ் வணுவாகிய ஆருயிர் சிவமாகும்.

பற்றுய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக்கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றுரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே.

(திருமந்திரம் 239)

ஆகவே திருமூலர் உயிரைக் குறிப்பிடுந்தோறும் அணுவென்றே பறை சாற்றியிருக்கிறார். அணுவினுல் அணுவினைப் பரம அணுவென்று உபதேச சித்திருக்கிருர்.

மற்றும் கி. மு. 800–ல் வாழ்ந்த ஆசிவகவாதிகள் அணுக்களைப் பற்றி மிகவும் தெளிவாகவும் விஞ்ஞான ரீதியில் கூறியுள்ளார்கள். ஆனுல், அவர்கள் இறைவனை ஏற்காததினுல் மனித சமுதாயத்தில் மேம்பாட்டுச் சிறப்பிக்கப்படவில்லை.

எனினும் ஆசிவகவாதிகள் அணுவைப் பற்றி கூறிய கருத்தைக் கீழே காணலாம்.—

எல்லையில் பொருள்களில் எங்கும் எப்பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படுகின்ற
வரம்பு இல் அறிவன் இறை: நூற்பொருள்கள் ஐந்து
உரம்தரு உயிரொடு ஒரு நால்வகை அணு
அவ்வணு உற்றும், கண்டும் உணர்த்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதும் செய்யும்
நிலம், நீர், தீ, காற்று என நால்வகையின
மலை மரம் உடம்பு எனத் திரள்வதுஞ் செய்யும்
வெவ்வேறு ஆகி விரிவதும செய்யும்
அவ்வகை அறிவது உயிர் எனப்படுமே.

(—மணிமேகலை. சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட கதை. 110–119)

அணுக்கள்தான் இப் பிரபஞ்ச உற்பத்திக்குக் காரண காரியப் பொருள் என்று பகர்ந்தார்கள், ஆனுல், அவர்கள் நால்வகை அணுத்திரளை மட்டும் கூறிப்போந்தனர்.

இன்னும் கி. பி. 200-ல் வாழ்ந்த சங்கப் புலவருள் ஔவையார் தன் அகவலில்

அணுவிற் கணுவாய் அப்பாலுக்கப்பாலாய்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி

இவ்வாறு கூறிப்போந்தார்.

கி. பி. 700-ல் இருந்த சிவவாக்கியர் என்னும் திருமிசை ஆழ்வார்

"அணுத் திரண்ட கண்டமா யனைத்தும் பல்லி யோனியாய்
மனுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்
சனிப்பேது? சாவதேது? தாபரத்தினூடு போய்
நினைப்பதுதேது? நிற்பதேது? நீர் நினைந்து பாருமே"
அணுவினோட கண்டமா யளவிடாத சோதியைக்
குணம தாக வும்முளே குறித்து நோக்கின் முக்தியாம்

என்று உரைத்துள்ளார்.

நீலகேசி என்னும் சிறுங்காப்பியத்தில் அணுவைப் பற்றி கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது:—

அணுமே யினவைந் தவைதா மனைத்துங்
குணமே யிலவாங் குழும் பிரியு
முணன்மே யினுமுள் புகுதல் லுரையேங்
கணமே யெனினும் மொரு காலமிலே (67

அடங்கல் குறிக் கோண் முதலாயினவாய்க்
கிடந்த கதிருட் கிளந்த பொருணுந்
தொடங்கி யுரையுாந் தொகையா குவதே
யுடங்கே யணு வைந் துருவாயுளதே (674)

நில நீ ரெரி காற்றுயிரின் னியல்பும்
பலநீ ர்வற்றின் படுபா லவைதாம்
புலமா கொலியொன் றெழிய முதற்காஞ்
சலமாயது தண்மையையே முதலாம். (675)

எறித்தன் முதலாயின தீ யினவாஞ்
செறித்தலிரை யோடிவைகாற்றினவர
மறித்தல் லறிதல் லவைதா முயிராங்
குறித்த பொருளின் குணமாமிலிவையே. (676

இதனையே மாபெரும் கவி கம்பர் கி. பி. 1200-ல்

"முக்கணன் முதலினோரை
உல்கொரு மூன்றி னோடும்
புக்க போர் எல்லாம் வென்று
நின்ற என் புதல்வன் போலாம்
மக்களில் ஒருவன் கொல்ல
மாள்பவன்? வானே மேரு
உக்கிட அணு ஒன்று கூடி
உதைத்தது போலு மம்மா?" என்று பாடியுள்ளார்.

(கம்ப; இராவணன் வதைப்படலம்.)

இவ்வாருகவே ஆருயிரை அணுவைக் குறிக்கோளாக கி. பி. 14 ஆம் நூற்ருண்டில் அருணந்தி சிவச்சாரியார்

அழிந்த பின் னுக் கடாமே யசிலமாய் வந்து நின்று
கழிந்திடும் கன்மத் தென்னிற் கன்மமு மணவுங் கூட
மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலான் முடியா செய்தி
யொழிந்திடு மணுரு பங்களுலகெலா மொடுங்குமன்றே. 11

காரண வனுக்கள் கெட்டாற் காரியவுலகின் றென்னில்
காரண மாடையாகக் காரியக் காணலாகுங்
காரண மாயை யென்னை காண்பதிங் கனுவே யென்னிற்
காரண மாயையே காண் காரிய மணுவிற் காண்டல் 12

காரிய மென்ப தென்னை காரண வனுவை யென்னிற்
காரிய மவய வத்தாற் கண்டனங் கடாதி போலக்
காரிய வுருப லெமல்லா மழிதருங் காரணத்தாற்
காரிய வுறுப்பின் மாயை தருமெனக் கருதிடாயே. 13

தாற்றமு நிலேயுமீறும் மாயையின் றெழிலதென்றே
சாற்றிடும் உலகம் வித்துச் சாகாதியணுக்களாக
எற்றதே லீண்டு நிற்கு மில்லதே லியைவதின்ரும்
மாற்றம் நீ மறந்தா யித்தால் மாயையை மதித்திடாயே. 14

என்று சிவஞான சித்தியார் சுபக்கம் அணுவைப் பற்றி திடமாகக் கூறியுள்ளார்.

இன்னும் சிவஞான சித்தியார் சுபக்கத்தில்

மூவகை யணுககளுக்கும் முறைமையின் விந்துஞானம
மேவின தில்லையாகில் விளங்கிய ஞானமின்ரும்
ஒவி விந்து ஞான முதிப்பதோர் ஞானமுண்டேற்
சேவுயர் கொடியினுன் றன் சேவடி சேரலாமே. 26

அருவினிலுருவந் தோன்றியங்காங்கி பாவமாகி
யுருவினி லுருவமாயே யுதித்திடு மூலகமெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோட பேதமாகு
மொருவனே யெல்லாமாகி யல்லவா யுடனுமாவன். 27

அருவுரு ஈனுதாகும் விகாரமு மவிகாரத்தின்
வருவது மில்லே யென்னின் வான் வளியாதிபூதந்
தருவது தன்னின் மேக சலனசத் தங்களோடும்
உருவ மின்னுருமே றெல்லாம் உதித்திடு முணர்ந்து கொள்ளே 28

என்று அணுவை அருவுருவமாக விளக்கியுள்ளார்.

சுப்பிரமணிய பாரதியார் அணு பற்றிக் கீழ்வருமாறு கூறுகிறார்:—

இடையின்றி அணுக்களெல்லாம் சுழலுமென
    இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்
இடையின்றிக் கதிர்களெல்லாம் சுழலுமென
    வானூலார் இயம்புகின்றார்.
இடையின்றித் தொழில் புரிதல் உலகினிடைப்
    பொருட்க ளெல்லாம் இயற்கையாயின
இடையின்றி கலைமகளே ! நினதருள்
    எனதுள்ளம் இயங் கொணுதோ ?

என்று கலைமகள் தோத்திர வாயிலாக அணுவின் பெருமையைக் கூறினர்.

ஆகவே, இதுகாறும் அணுவாகிய பதியைப் பற்றி நம் தமிழ்ப் பேரறிஞர்கள் கூறியதைக் கவனித்தோம். அணுவில் அடங்கிய பதி, பசு, பாசம் என்று மூன்று தினுக்குகளைத் திருமூலர் திருமந்திரத்தில்

பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற் பசு பாசம் அனுதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற் பசு பாசம் நிலாவே. (திருமந்திரம் 159)

இவ்வாறு உரைத்தருளினர். பாசத்திற்கு அறிவு இல்லை. பாசத்தினுல் ஏற்பட்ட உலகப் பொருள்களுக்குச் சடம் என்பர். உலகத்தில் பசுக்கள் (உயிர்கள்) எண்ணில. உயிர்கள் பலதரப்படுவன. தம்மைப் பிணித்துள்ள பாசங்கட்கு ஏற்ப அறிவின் பெருக்கமும் சுருக்கமும் அறியாமையும் உடையன. எவ்வாறிருப்பினும் உயிர்களை யாண்டும் தகையும் பாசம்போலவே அவற்றால் தகைவுறும் உயிர்களும் நித்தியமானப் பொருள்கள் ஆகும். பாசப் பிணிப்பினை இவை அநாதி முதலே பெற்றுள்ளமையால் உயிர்களையும் பசு என்பர்.

பசுக்களைப் பாசம் விடுவதில்லை. பாசத்தைப் பசுக்களாலும் நீக்கிக் கொள்ள முடியவில்லை. இப்படி இருப்பதனால் உலகப் படைப்பு முதலான ஏற்பாடுகளே தேவையில்லை. ஆனால் இந்த ஏற்பாடுகள் முக்காலமும் நடந்துகொண்டேயிருக்கிறது. இந்த ஏற்பாடுகளை உயிர் என்ற அணு செய்துகொள்ளவேயில்லை. செய்துகொள்ளமுடியவுமில்லை. ஆதலால், இந்த இரண்டிலும் மேம்பட்டதான பொருள் இருந்தாக வேண்டும். பாசப்பகைப்பொருளாக அப்பொருள் இல்லாவிடில் உயிர்களால் பாசம் நீங்கி உதவ முடியாமற்போம். உயிர்களின் சார்பில் அப்பொருள் நின்று அருள் புரியாவிடில் உயிர்களால் பாசம் நீங்கி உய்தி அடைய முடியாது. உயிர்கள் பக்கமிருந்து பாசத்தை ஓட்டி உதவவல்ல பெரும்பொருள் ஒன்று இருந்தாக வேண்டியுள்ளது. இப்பொருள் ஒருபோது தோன்றி ஒருபோது மறையும் பொருளாயிருந்தால், உயிர்கட்குச் சந்தானமாக நின்று உதவிக்கொண்டிருக்க இயலாமற்போம், ஆதலால் இப்பொருளும் எப்போதும் இருக்கும் நிலையான பொருளாகும். ஆகவே, பொருள்களின் எண்ணிக்கை எவ்வளவாகக் கூறப்படினும் பதி, பசு, பாசம் என்கிற இம்மூன்றிலேயே அடங்கும். இம்மூன்றும் நித்தியமானவை. இதனாலேதான் சித்தாந்தம் நித்திய பொருட்களை மூன்றென்றே அறுதியிட்டுரைக்கிறது. இவற்றை அவ்வவ் சமயத்தாலும் வெவ்வேறு பெயரிட்டு அழைப்பர். எங்ஙான மழைப்பினும் பொருள்கள் மூன்றென்பதே சித்தாந்தம். தாயுமானவர் பாடலில் "என்று நீ அன்று நான்" என்று கூறப்பட்டிருத்தலாலும்; "எஞ்ஞான்று தனை உலிம் அஞ்ஞான்றியமே" என்று பண்டாரமும் மணிக்கோவையினுள் கூறப்பட்டிருப்பதாலும்; "சாவதேது சனிப்பதேது" என்று சிவவாக்கியர் பாடலாலும் இக்கருத்துக்கள் நித்தியப் பொருளை உணர்த்துகிறது. பதிப்பொருள் ஒன்றுதான் இரண்டல்லவென்று தெரிவிப்பதாகும். எனவே, பதி (பரம அணு, பரம்மான்மா), பசு (ஆன்மா, உயிர்) எனப் பொருளிரண்டாக உணரப்பட்டு, பதிக்கும் பசுவுக்கும் உள்ள இயல்புகள் ஆராயப்படுகையில் பாசப்பொருள் உண்மை தெளியப்படுவதால் பொருள் மூன்று என்ற பக்கத்திற்குத் தடை ஏதும் இல்லையாயிற்று. இந்தத் தெளிவுதான் மூன்று நித்திய துணுக்குகள் அணுவாகத் திகழ்கிறது என்று திருமூலர் பகர்ந்தார். பகர் மூன்றில் என்பதால் இந்த உண்மை வேறு வேறு விதமாக மயங்கிக் கூறப்படுதலும் உண்டென்பது தெரியப்படும். பதி சிறப்புடைப் பொருளாதலின் முதற் கூறப்பட்டது.

இனி சிலர் பதி ஒன்றே நித்தியப் பொருள். ஆகவே, அநாதியானது. ஏனையவெல்லாம் நித்தியமானவை அல்ல என்றனர். ஆனால், திருமூலர் பதியினைப்போல் பாசம் அநாதி என்று அறுதியிட்டுக் கூறுகிறார். பதியே நித்தியப் பொருள் எனக்கூறும் பொருள் எதுவோ அது பதியின் வேறாய பொருளாகும். அது பதியை உணரமாட்டாமைக்கு ஏது எதுவோ அதுவே பாசப் பொருளாகும். பாசம் பசுவின் இயல்பன்று. அறிவே பசுவின் இயல்பு. எனவே பாசம் எனப்படுவது பசுவை அநாதியே பதிந்து நிற்பதாகிய குற்றமாகும். இந்தப் பந்திப்பு பசுவின் கேவல நிலையிலேயே இருத்தலின் பசுவின் அநாதியானதே. அநாதி என்றால் தோற்றம் ஆராயப்படாத முதன்மையுடையது என்பது பொருள். பதி பாசமற்ற அநாதிப் பொருள். பசு, பாசங்களும் அநாதித் தன்மையில் பதியினைப் போன்றவையே என்பது சித்தாந்தம்.

பசு எனப்படும் உயிரானது பதியினைப்போல் அநாதியான தாயினும் பதியினை அணுகி நிற்கலாமே என்றால் பசு இயல்பாகவே சிற்றறிவு விளக்க முடைத்தானினது. உணர்த்த உணரும் சித்தப் பொருளாம். பதியால் உணர்த்தப்பட்டுப் பதியைச் சென்றனையுமே அன்றித் தாமாகச் சென்றனையும் வன்மையுடைய தன்று. பசுவானது பாசத்தோடு பந்தித்திருக்கும் வரையில் பதியைச் சென்றணுகாது.

பாசம் என்பதும் நித்தியப் பொருளேயாம். ஆனால் சடப் பொருளாம். ஆதலால் பதியை அடைதல் இல்லை. பசுவைச் சார்ந்தன்றி புடைபெயராது. பதி பேரறிவுப் பிழம்பாதலின் இந்தப் பாசம் பதிப் பொருளை ஒரு போதும் அணுகாது.

பசு

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறு நூறுயிரத் தொன்றுமே.

(திருமந்திரம் 1974)

என்று திருமூலர் ஆருயிரின் வடிவத்தைக் கூறலுற்றார். பசுவின் மயிர் ஒன்றனை எடுத்து நூறுபங்கு செய்தல் வேண்டும். பின்பு அந்நூற்றினில் ஒன்றினை எடுத்து ஆயிரம் கூறு செய்தல் வேண்டும். அந்நிலையில் ஏற்படும் ஒரு கூற்றினை நூறுயிரம் கூறு செய்தால் எவ்வளவு ஏற்படுமோ அவ்வளவாகும் ஆருயிரின் வடிவம். ஆகவே, பசு அல்லது ஆன்மாவின் வடிவம் அணு, பதியைக்கொண்ட அணு. பரம அணுவுக்கு அணு உடல். இவை இணைபிரியா. ஆனால், பசுவுக்கும் பதிக்கும் சிற்சமயம் பாசத்தினால் திரை போட்டு நிற்கும். பசுவுக்கு உருவமில்லை எல்லாப் பொருள்களிலும் காணக் கிடக்கிறது. அநாதியான சிற்றறிவு மயம். ஆனால், சிற்றறிவைப் புறம்பாகப் பாசத்தின் ஒரு பிரிவான ஆணவ பாசம் திரைப்போட்டிருக்கிறது. பாசத்தினால் கட்டுண்டிருப்பதால் பசு என்பதாயிற்று.

பசு என்பது எப்பொழுதும் தனிப்பட்டிருப்பதில்லை. பசு பதியோடாகிலும் பாசத்தோடாகிலும் கலந்தேயிருக்கும். தன்னைத்தானே மாற்றிக் கொள்வதில்லை.

பசுக்கள் அளவில்லாதனவாய் உள்ளவை. எந்தப் பொருளைச் சார்ந்தாலும் அந்தப் பொருளைப் பிரதிபலித்துக் காட்டும் படிகம்போன்ற தன்மை வாய்ந்தது. பசு எதனோடு சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதன் தன்மை, உருவம், குணம் எல்லாவற்றையும் அடையப் பெறுகிறது. ஆனால், எதனோடும் அப்பொருளாக மாறிவிடுவதில்லை.

சக்தியைப் பெறத்தக்கவை. அநாதியே பாசத்தில் கட்டுண்டு கிடக்கிறது. அறிவில் பொருளும் அல்லாமல், தாமே அறியும் பொருளும் அல்லாமல், பதி அறிவித்தால் அறியும் சிற்றறிவுடையனவாய் உள்ளது தாமே அறியும் தகுதியுமில்லாதது. ஆகவே, பசுவைப்பற்றி கூறுமிடத்து, சிவஞான போதம்

உளது, இலது, என்றலின் எனது உடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்த்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா

என்று இவ்வாருகப் போதிக்கிறது.

இல்லை என்று சொல்லும் அறிவுடைதயது ஒன்று உண்டாதலால்; எனது உடல் என்று உடலுக்கு வேருக யான் எனத் துணிதல் இருத் தலால்; ஐந்து புலன்களையும் அறிவதொன்று இருத்தலால் ஐம்புலன் ஒடுக்கத்துக் கனவு நிகழ்ச்சிகளை விழிப்பு நிலையிலும் அறிவதொன்று தெரிதலால்; உறக்கம் உண்டானுல் உயிர்ப்பு இருந்தும் நுகர்வுச்செயல் கள் இல்லாமையால் விழிப்பில் அவற்றைக் கொள்வது உயிர்ப்புக்கு வேருனதொன்று என்பது தெரியப்படுதலால், பாசத்தின் கருவிகளால் தொடுக்கப்பட்ட உடம்பினுள் அக்கருவிகளுக்கு வேருன பெயரும் இயல்பும் உடையதாய் "உயிர்" என்று ஒரு தனிப் பொருள் உள்ளது என்று கொள்ளப்பட்டது.

அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று அவை
சந்தித்து; ஆன்மா சகச மலத்து உணராது
அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே

என்று உயிரின் இயல்பைச் சிவஞான போதம் கூறுகிறது.

உயிர் என்பது, மனம் முதலிய அகக்கருவிகள் எல்லாமாவது அவற்றுள் ஏதேனும் ஒன்று என்பதாவது ஆகாதாயினும் ஆணவமலங் காரணமாக அதன் அறிவ அறிவதில்லாமல் அமைச்சரோடுகூடிய அரசன்பால் அந்த அகக் கருவிகளுடன் கூடியிருந்து விழிப்பு நிலை, கனவு, உறக்கம், பெருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் ஐந்து வகையான உணர்வு நிலைகளையும் உடையதாகிறது. ஆகவே மனம் முதலிய அகக் கருவிகளுடன் கூடி ஐவகை உணர்வு நிலைகளை அடைதல் உயிரின் இயல்பாகும்.

பதிக்கும் பசுவுக்கும் அநேகமாக வித்தியாசமில்லாத போதிலும் முக்கியமாக மூன்று விதங்களில் வித்தியாசம் காணப்படுகிறது.

(1) பதி எல்லாவற்றிலும் கலந்தும் கடந்தும் இருக்கிறது. பசு எல் லாவற்றிலும் கலந்து கலந்த பொருளின் தன்மையைப் பிரதிபலிக் கிறது. பதி பரிசுத்தமானது. பசு ஆணவ மலத்தால் கலப்புற்றது.

(2) பதியின் வல்லமை, குணம், சக்தி ஆகிய இவைகளில் முக்கால மும் மாறுவதே இல்லை.

(3) பசு தன் தன்மையில் மாருவிட்டாலும் கலப்புற்ற பொருளின் வல்லமை, குணம், சக்தி ஆகியவற்றைப் பிரதிபலிக்கச் செய்கிறது.

(3) பதி எல்லாவற்றையும் அறிவிக்கும் வல்லமையுடையது. பசு பதியின் உதவியால்தான் அறிய முடியும். ஆகவே பதி அருவ சித்தம். பசு உருவ சித்தம்.

பாசம்.

பாசம் என்பது தளை அல்லது கட்டு. பாசம் (அறிவில்லாத) அசித்துப் பொருள். அறிவித்தாலும் அறியாத பொருள். ஆகவே பொதுவாக உலகு எனப்படும்.

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந்து அறியா; ஆங்கவை போலத்
தாம் தாம் உணர்வின் தமி யருள்
காந்தம் கண்ட பாசத்தவையே (ஐந்தாம் சூத்திரம்)

பதி பசுவின் அறிவிற் கலந்து மறைந்து நின்று அவ்வறிவைத் தொழிற் படவைக்கும் கருவியைப் பாசம் என சிவஞான போதம் கூறுகிறது. பதி தானும் ஒரு பாசம் போலக் கலந்து மறைந்து அவற்றையும் தொழிற்படுத்துகின்றது. பாசத்துள் ஒன்றாக இருந்து இப்படி இயக்கும் ஒன்றின் இயல்பை விளக்குவதினால் பாசத்தின் இயல்பை இவ்வாறு சிவஞான போதம் கூறுகிறது.

ஆகவே அறியும் தம்மையும் அறிவிக்கும் தம்மையும் பாசம் அறியமாட்டா. அந்நிலையிலுள்ள அவற்றைப்போல உயிர்களும் தம் உணர்விற்குக் காரணம் பதி என்று அறிவதில்லை. எனவே, பாசம் அல்லது உலகு உயிர்களில் இரண்டறக் கலந்து நிற்கும். இதனையே சிவஞான போதத்தில்

அவையே தானேயாய் இருவினையின்
போக்கு வரவு, புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்குமன்றே

மேற்கண்டவாறு கூறப்பட்டிருக்கிறது.

அதனையே திருமூலரும்—

பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவெண்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற
பாசம் பயிலப் பதிபசு வாகுமே (திருமந்திரம் 2334)

என்று கூறுகிறார்.

பாசத்துடன் பயின்றுவரும் பசு முதல் தரமாகும். இயற்கையிலே பாசம் சுமையுடையதாகும். அப்பாசப் பிணைப்புச் சுமையுடைமையால் அதற்குப் பசுவெனப்பட்டது. பசு, பாசம், பயின்று தூயனூர் பொருட்டுப் பதியும் பசுவாகும். பசுவுக்குப் பாசத்தினைப் பயிற்றுவித்தற் பொருட்டு பதியும் பரடாகும் என்று மேற்சொன்ன செய்யுளால் கூறப்பட்டது.

பாசம் மூன்று வகை என்றும், ஐந்து வகையாகப் பிரிபடும் என்றும் கூறு நிற்பர். ஆணவம், மாயை, கன்மம் என மூன்றும் ஆணவம், மாயை, கன்மம், மாயேயாம், திரோதனம் என ஐந்தென்றும் சொல்வர், இதில் ஆணவம் அனாதி என்றும், மற்ற நான்கும் இடையில் வந்து செயற்கையாய்ச் சேர்வனவாதலால் ஆகந்துகம் எனவும் பகன்றனர்.

**ஆணவப் பாசம் :** சித்தாந்தத்திலேதான் ஆணவத்தை வலியுறுத்திக் கூறப்படுகிறது. மற்ற சமயங்களில் ஆணவத்தைப் பற்றி கூறவில்லை.

ஒன்றதாய் அநேக சக்தியுடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மாவின் தன் அறிவொடு தொழிலை யார்த்து
நின்று போத்திருவத்தை நிகழ்த்திச் செம்பினிற் களிம்பேய்ந்
தென்று மஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே

என்று அருணந்தி சிவனார் விளக்குகிறார்.

தான் ஒன்றேயாய் எண்ணிறந்த சக்திகளைக் கொண்டு எண்ணில்லாத பசுக்களோடு விரவி நிற்கும். உயிர்கள் கருவி கரணங்களோடு கூடாது கிடந்த நிலையிலும் அவற்றின் அறிவு செயல் விழைவுகளைச் சிறிதும் விளங்கவொட்டாது மறைப்பதாய் உயிரது சகல நிலையில் அவற்றின் அறிவு முதலிய செயல்களை மேலோங்கா வண்ணம் கீழ்ப்படுத்துவதாய் எக்காலத்தும் உயிர்கட்கு அறியாமையைச் செய்து கொண்டிருப்பதாய் உள்ள பொருளே ஆணவம் எனப்படும். மற்றும் ஆணவம் உயிர்களின் வியாபகத் தன்மை விளங்கவொட்டாது பற்றி ஆணவம் என்ற பெயரும் பெற்றது. உயிர்கள் ஆணவத்தால் குற்றமுறுவதால் இது ஆணவம் எனவும் படும்.

ஆணவம் அனாதி, பதி பசு ஆகியவைகளைப்போல் ஆணவமும் அனாதி பசுவுக்கு அறியாமையை ஊட்டுவது. இதற்கு மூலமலம், சகசமலம், என்ற பெயர்களுண்டு. பதியாகிய அறிவை விளங்கவொட்டாமல் பசுவுக்குத் தடை செய்யும் இயல்பினையுடையது. பசுவுக்குத் தன்னையும் காட்டாமல் பிற பொருளையும் காட்டாமல் மறைத்துநின்று தன்னையே அணுகும்படி செய்யும் இயல்புடையது. ஆணவம் ஒன்றாக இருந்தாலும் அதில் எண் வகையான இயக்கச் செய்கைகளால் கோடானு கோடி பசுக்களைப் பரிபாலிக்கிறது.

பசுவின் தன்மையையும் தன்னையும் மறைத்துக்கொள்ளும் அபார சக்தியுண்டு. பசுக்கள் தோறும் ஒன்றறகலந்து தொக்கியிருந்து பசுவின் சுய செய்கைகளைச் செய்யவொட்டாமல் தடுத்துக்கொண்டிருக்கும் அன்றியும் மாயையோடு கலந்தபோது ஆணவம் பசுவோடு தோய்ந்திருக்கும். பசுவின் உதவியால் தன்னை அறிவிக்கப்பட்டபோது பசுவைவிட்டு நழுவி விடும். ஆணவ மலம் மறைவாக நீங்கின காலத்து பசு பதியோடு சேர்ந்து நிற்கும்.

**கன்மம் :** ஆணவத் தொடர்பால் உயிர்கள் செய்யும் வினைகளின் (காரியங்கள்) தொகுதியே கன்மம் அல்லது கர்மம் ஆகும்.

கன்மங்கள் பிறவிகள்தோறும் (தோற்றங்கள்தோறும்) பசுவோடு சேர்ந்து செல்லுகிறது. பசு மாயையின் காரியத்தால் பரு உடலில் வந்து நின்றபோது கர்மம் உடலாலும், வாயாலும், செய்கையாலும் இரு வினைகளை உண்டாக்கிக்கொள்கிறது. பாசத்தை விட்டு பசு விலகியபோது பசுவோடு செயலற்றுக் கிடக்கிறது. பசு மறுபடியும் பாசத்தோடு செயலாற் றும்போது கன்மமும் தொடர்ந்தே வந்து செயல்புரிகிறது.

**மாயை :** மாயை உலகத்தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாய் நின்று உயிர் அல்லது பசுவின் இயக்கமற்ற தன்மையையும் செயலற்ற தன்மையையும் நீக்கி அதை உயர்த்தவல்லது. மாயை சுத்த மாயை ; அசுத்த மாயை ; பிரகிருதி மாயை என மூவகைப்படும். இம் மூவகை மாயைகள் உடல் தத்துவங்களின் தோற்ற ஒடுக்கத்திற்குக் காரணமாய் நிற்கின்றன. ஆணவ மலத்தால் அழுந்தி அறிவிழந்து கிடக்கும் உயிர் (அணு) கட்கு உடலும் கருவிகளும் (தத்துவங்களும்) பிறவுமாய் அமைப்பது இம்மாயையே. பாசமாகிய மாயை இருள் எனப்படும். ஆகவே இருள் கருமை நிறம் உடையது. இக் கருமைப் பொருளே (கரி) உலகத் தோற்ற ஒடுக்கத்திற்குத் துணைக் கருவியாக உள்ளது.

**சுத்த மாயை :** நாதம், விந்து, சதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என ஐவகைப்படும்.

**அசுத்த மாயை :** காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மூலப்பகுதி என எழு வகைப்படும்.

**பிரகிருதி மாயை :** ஐம்பூதங்கள், ஐம்பொறிகள், ஐம்புலன்கள், கர்மேந்திரியம், அந்தக்கரணம், ஆக இருபத்து நான்கு.

**மாயேயம் :** மாயையின் காரியங்களான உடல் கருவி உலகுகளைக் குறிப்பது.

**திரோதனம் :** திரோதனம்தான் நிமித்த காரணமாயிருந்து மல சக்திகளைத் தொழிற்படுத்தும் சிவசத்தியாம். சிவசத்தியாயினும் மலத்தைத் தொழிற்படுத்துவது பற்றி மலமென உபசரிக்கப்படுகிறது.

மேலே கூறியவண்ணம் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதனம் என்ற ஐவகைப் பாசங்கள் உயிர்களாகிய நேர்மின்னோட் டத்திற்கு எதிர் மின்னோட்டங்களாக (உயிர்க்கொல்லிகளாக) நித்தியமாய் நிலவுகின்றன. தோற்ற ஒடுக்கங்களை அடைந்து நிலையத்திலும் துறக்கத்

திலும் நிரயத்திலும் சென்று சுழன்றுகொண்டிருக்கின்றன. இவைகள் பதியையும், பசுவையும் சுற்றிச் சுழன்றுகொண்டே தோற்ற ஒடுக்கங் களைப் புரிகின்றன. இச் சுயற்சியை நீக்கி, பசுபதியை அடைவது வெள்ளிடைமலையாகும். பசு சிவமாகும்.

பண்டைத் தமிழகத்தின் ஆதி சைவர்களாகிய அறிவர்கள் முதல் கடல்கோள் தொட்டு (கி.மு. 5000) உலகையும் மாயா காரிய உபகரணங் களோடு உலகைப் பிரதிபலிக்கும் உயிரையும் இவைகளின்கண் ஊடுருவிப் பாய்ந்து கலந்தும் கடந்தும் நிற்கின்ற நித்தியமாகிய மாபெருமை வாய்ந்த இறைவனையும் ஆராய்ந்து இம் மூன்று அநாதியான நித்திய துணுக்குகளை முடிவு செய்து இதற்குமேல் யாதொன்றுமில்லை என்று முடிவுக்கு முடிவுகொண்டார்கள். இந்த முடிவைத்தான் "சித்தாந்தம்" என்று அறுதியிட்டுக் கூறினர். இச் சித்தாந்தத்தை முதன் முதலிற் உலகிற்கு உபதேசித்த மாபெரும் சித்தனின் பெயர் விளங்க வேண்டு மென்ற கருத்துடனே காரண காரிய பொருளாகிய முடிவுக்கு முடிவைச் "சிவம்" என்று பிற்காலத்தில் நிலவிய அம் மாபெரும் சித்தனாகிய சிவபெருமானின் மாணவ வர்க்கத்தார்கள் பெயரிட்டனர். சிவபெரு மானைப் பண்டைய காலத்தில் குருவாகத் தொழுதவரைப் பிற்காலத்தில் இறைவனாக அனுசரிக்கவே விஞ்ஞான ரீதியில் திருவாய் மலர்ந்தருளிய சித்தாந்தம் வைதீக மனப்பான்மையாகவும் சமயக் கொள்கையாகவும் மாறிவிட்டன. இதுதான் உண்மை நிலையாகும்.

ஆகவே, இம் மூன்று நித்திய அநாதி துணுக்குகளாகிய பதி, பசு, பாசம், அணுவில் விளங்கா நின்று சுழல்கின்றன. அதனாலன்றோ திருமூலர்,

"அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங்கூறிட்டு
அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலுமாமே"

(திருமந்திரம் 1971)

என்று பசுமரத்தில் ஆணி அறைந்தாற்போல் பகர்ந்திருக்கிறார். ஆகவே, பதி, பசு, பாசம் என்பவைகள் அணுவில் காட்சியளிக்கின்றதை அறிவிலும் விஞ்ஞானத்திலும் சிறந்த சித்தர்கள் கூறிப் போந்தார்கள். இத்திருவாய் மொழிகளை—இவ்வாழ்ந்த கருத்துக்களை விஞ்ஞானமாக ஏற்காமல் வைதீக மனப்பான்மையோடு திரையிடப்பட்டு நின்று நிலவுவது வருந்தத்தக்கப் பொருளாக இருக்கிறது.

எனினும ஆராயுமிடத்து இன்றைய விஞ்ஞான சமுதாயத்தில் அணுவினைக் கண்ணால் காணமுடியாது என்ற எண்ணம் நம்மிடையே ஊன்றிக் கிடக்கின்றது. ஆனால், நம் முன்னோர்களாகிய தமிழ்ப் பேரறிஞர்கள் அணுவினுள் தாண்டவக் கூத்து புரிகின்ற பதி, பசு, பாசம் என்பவைகளைக் கூறினார்கள். பிற்காலத்தில் போந்த தமிழ்ப் பேரறி ஞர்கள் பதியை அணுவினுள் பரம அணுவென்று பறைசாற்றின் இறைவனுக்கு எங்கு இழுக்கு நேர்ந்து நாத்திகம் பரவுமோ என்று வாளா விடுத்தனர் போலும்!

சமணர்கள் சித்தாந்தத்தை ஒட்டியே அனுசரித்தும் சமணக் கொள்கையில் பதிப்பொருளை இறைவனாகச் சம்மதிக்காததினால் நாத்திகமாகக் கருதப்பட்டுப் புறக்கணிக்கப்பட்டே வந்தது. ஆனால் வைசேடிகர்களும், சாங்கியர்களும், முற்கால மீமாம்சக்காரர்களும் கிட்டத்தட்ட ஆகமவாதிகளாக இருந்தும் போதிய வரையில் வேதத்தைத் தழுவினதால் வேதாந்திகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர்.

சுருங்கக்கூறில் பதி, பசு, பாசங்களை உலக உபகரணங்களுக்காக விஞ்ஞான ரீதியில் ஏற்றும் பேரின்ப வீட்டை அடைய வைதீக மனப்பான்மையை உணர்த்திக்கொள்வது தான் மிகவும் பொருத்தமாகும்.

இன்றைய நாளில் அணுவினைக் கண்ணால் காணமுடியாது என்றும் அரைகோடி அணுக்களை வரிசையாக அணிவகுத்து நிற்கவைத்தால் இங்கு எழுதும்போது வைக்கும் முற்றுப்புள்ளிக்குள் அடங்கிவிடும். மிகமிகச் சிறிய அணுவின் குறுக்கு அளவினையும் சரியாகக் கணக்கிட்டு இருக்கிறார்கள். இதன் எடை, அகலம், நீளம், கனம், அதன் அமைப்பு, அதன் ஆக்கப்பாடு, அழிவாற்றல் இவ்வளவும் அறிய வல்லதாகிவிட்டது. இவ்வறிஞர்கள் மகான்கள் கூறிப் போந்ததை உணர்ந்துகொள்ளாதது பேதமையாகும்.

இவ்விளக்கத்தைத் திருமூலர் தம் திருமந்திரத்தில் மிகத் தெளிவாக அருளி இருக்கிறார்.

மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங்கிருந்து உயிருண்ணு மாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத்துள் நின்று
சத்த முதல் ஐந்துந் தானுண்ணுமாறே. (திருமந்திரம் 2131)

சிலந்தியானது தன் வாயினால் தன்னுடம்பினின்றும் நூல் இழைக்கின்றது. அந்நூலால் தனக்கு வேண்டிய உணவுகளை அகப்படுத்தும் வலைகளை அமைத்துக்கொள்கிறது. மேலும் தான் தங்குதற்குரிய கூடும் அமைத்துக்கொள்ளுகிறது. அவ்விடத்தையே மத்திமம் என்றருளினர். அதுபோல் பதியும், பசுக்கள் ஆடுதல் புரியும் இடமாம் உடம்பினை அமைத்தது. அவ்வுடம்பிலிருந்து பசு ஆட்டம் புரியும். பதியும் ஐம்பொறி சேர் உடம்பகத்து அவ்வுயிர் ஐம்புலன்களையும் நுகர்தற்பொருட்டுத் தானும் உடங்கியைந்துக் காட்டி காண்கிறது. ஆகவே பதி அவ்வுடம்பகத்து (பாசம்) உயிர்க்குயிராகத் தங்கி அருளுகின்றது. தன்னைத் தாங்கும் தகுதியும் அதற்குப் பதியே அளித்தருளியது.

ஆகவே, அணுவில் பதி, பசு, பாசம் என்ற துணுக்கள் இருக்க கண்டதுமல்லாமல் திருமூலர் அணுவினுள் மேலும் காரண காரியக் கருவிகளைக் (தத்துவங்கள் மெய்), கணக்கிட்டுக் கூறுகிறார்.

நாலொரு கோடியே நாற்பத்தெண்ணுயிர
மேலு மோரைந்நூறு வேருயடங்கிடும்
பாலவை தொண்ணூ ற்ருெடாறுட்படுமவை
கோலிய ஐயைந்து ளாகுங் குறிக்கிலே. (திருமந்திரம் 2138)

நான்கு கோடியே நாற்பத் தெண்ணுயிரத்து ஐந்நூறு மெய்கள் சிறப்பாகக் காணப்படும். அவை அனைத்தும் தொண்ணூற்ருறென்று கூறப்படும் மெய்களினுள் அடங்கும். அவற்றையும் அடக்கிக் கூறினுல் இருபத்தைந்து என்கிருர். ஆனுல் சைவர்களுக்கு முப்பத்தாறு மெய்கள் என்று கீழ்க்கண்டவாறு விளக்குகிருர்.

ஆகின்ற தொண்ணூற்ருெடாறும் பொது என்பர்
ஆகின்ற வாருறருஞ் சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்கு
ஆகின்ற நாலாறையைந்து மாயா வாதிக்கே

(திருமந்திரம் 2139)

அணுவில் குறைந்தது முப்பத்தாறு தத்துவங்கள் இருக்கின்றனவென்று திருமூலர் கூறியுள்ளார். இவ்வாருக மகத்துவம் பொருந்திய அணு இன்றைய நாளில் சர்வ சாதாரணமாக எல்லோருக்கும் தெரியும்படியாக ஆகிவிட்டது. "அணுயுகம்" என்று சொல்லப்படும் காலத்திலே அணுவை பற்றி தெரியாதார் இல்லை.

சிற்சில விஞ்ஞானத் துறைகளைப் பற்றிய விவாதங்களை நடத்தும் போது இந்த அணு என்னும் சொல் திருத்தமான பொருளில் இல்லாமல் ஓரளவு வழங்கப்படுகிறது என்று கருதுகிருர்கள். எத்தனையோ துறைகளில் விஞ்ஞானிகள் அணுக்களை ஒட்டிய ஆராய்ச்சிகளை நடத்தி வருகிருர்கள். இவைகளை எல்லாம் அணு என்னும் உரிச்சொல் குறிக்கிறது. ஒரு வகையில் பார்த்தால் இந்தச் சொல் வழக்குச் சரிதான். ஆனுல் குறிப்பாகவும், துல்லியமாகவும், திருத்தமாகவும் உள்ள சொல்லை வழங்க வேண்டுமானுல் அநேக இடங்களில் இந்த ஆராய்ச்சிகளைக் குறிப்பிட துணுக்கள் (கதிர்கள்) என்னும் உரிச்சொல்லையே வழங்க வேண்டும் என்று விஞ்ஞானிகள் கருதுகிருர்கள்.

மூலங்களில் மூன்று முக்கிய அணுக்கள் இருக்கின்றன. அவை சாதாரண அணுக்கள், நிலையான அணுக்கள், நிலையில்லா அணுக்கள் எனப்படும். இந்த நிலையில்லா அணுக்களை அணுக்கதிர்கள் என்கிறார்கள். ஆகவே ஒவ்வொரு மூலகங்களிலும் மூன்றுவித அணுக்கள் உள்ளன. அவற்றுள் ஒரு வகைக்கு நிலையில்லா அணு இவ்வகையைச் சேர்ந்தவை சிதைந்து பிரிந்தழிந்து போகின்றன. மற்றென்று நிலையான அணு என்று பெயர். இவ்வகையைச் சார்ந்தவை ஒரு நாளும் மாறுவதில்லை அநேகமாக ஒவ்வொரு மூலகத்திலும் மூன்று வகையான அணுக்களாவது இருக்கின்றன என்று அணுக்களைப் பற்றி ஆராய்ச்சி இன்றைய நாளில் செய்துள்ளவர்கள் அறுதியிட்டுக் கூறுகிருர்கள்.

இதனையே திருமூலர் திருமந்திரத்தில் அணுவின் மூன்று அணுக்களைக் கீழ்வருமாறு கூறுகிறார்.--

அறிந்தணு மூன்றுமே யாங்கணுமாகும்
அறிந்தணு மூன்றுமே யாங்கணுமாக
அறிந்த அணுதி வியாத்தனுமாவன்
அறிந்த பதி படைப் பானங்கவற்றையே (திருமந்திரம் 2375)

யாங்கணும் அறியும் தன்மை வாய்ந்த அணு மூவகைப்படும். அவை ஒரு மலம், இருமலம், மும்மலம் என்னும் பிணிப்பால் ஆவன. ஒரு மலத்தார் இடையின மெய்யையும், இருமலத்தார் மெல்லின மெய்யையும் மும்மலத்தார் வல்லின மெய்யையும் ஒத்தன எனக்கூறலாம். வல்லின மெய் மொழிக்கிறுதியில் நில்லாமை மிக்க செருக்குடை மும்மலக் கட்டினை யொக்குமாதலால் நிலையில்லா அணுவை ஒக்கும். மெல்லின மெய் மொழிக்கிறுதியில் வருதலானும் மெல்லென்று ஒலித்தலாலும் இருமலக் கட்டினை ஒக்குமாதலால் நிலையான அணுவை ஒக்கும். இடையின் மெய் மொழிக்கிறுதியில் பயின்று குழைந்திருப்பதால் ஒருமலக் கட்டினை ஒக்குமாதலால் சாதாரண அணுவை ஒக்கும் என்று திருமூலர் பகர்ந்திருக்கிறார்

## (தத்துவங்கள் தொண்ணூற்றாறு)

திருமூலர் வாக்கினுல் அணுவில் 40048500 மெய்கள் அடங்கியிருப்பதை உணர்ந்தோம். எண்ணிலடங்காதனவாயுள்ள மெய்களை நம்போன்றவர்களால் கற்றுணர வாழ்நாள் போதாது. எனெனில்

வேதநூற் பிராயம் நூறு மனிதர் தம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப்போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகனதாகும் பசி, பிணி, மூப்பு, துன்டம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே.

மனித வாழ்வில் இன்ப துக்கங்கள் நிறைந்திருப்பதால் மேற்சொன்ன மெய்களை அறிவது கடினம் என்பதாம்.

திருமூலர் கூறிய அணுவின் மெய்களனைத்தையும் அறிய சித்தர்களாலாகுமே அன்றி வேறொருவராலும் கணக்கிட்டுக் கற்றுணர இயலாது இங்குக் கூறும் தொண்ணூற்றாறு தத்துவங்கள் அருவுருவப் பொருளாகிய அணுவினுள் கிடப்பதைக் கண்ணால் நேரிடையாகக் காணமுடியாது. எனினும் தொண்ணூற்றாறு தத்துவங்களைக் கொண்டு அணு பல அணுக்களால் ஆகிய உடலில் அமையும்போது உருவத்திற்கேற்ப பெரிதாகி ஒன்றோடொன்று பின்னி இணைந்து பதிந்துச் செயல்புரிகின்றன.

இத்தொண்ணூற்றாறு தத்துவச் சேர்க்கையால் உயிர்கள் உண்டாகி உயிர், உருப்பெற்றுப் பெருகிப் பெரிதாகி உடல் பெற்று வாழ்ந்து தன் இயற்கைக் கடனை ஆற்றித் தன் இனத்தைப் பெருக்கி, முதுமை

அடைந்து அழிந்து பழையபடி தொண்ணூற்ருறு தத்துவங்களாக் மாறிப்போவதும் காலச்சக்கரத்தின் வியப்பான நியதியை உடல் தத்துவ நூலில் கவனித்தற்பாலதாகும்.

தத்துவம் என்பது கருவியாகும். உயிர் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது. அவ்வாறு அனுபவிக்கும் அனுபவங்களுக்குத் துணை செய்யும் கருவிகளே தத்துவங்களாம். அணுவில் அமைந்து மாயா காரியம் புரியும் தொண்ணூற்ருறு தத்துவங்களைக் கீழ்க்கண்டவாறு உய்த்துணரலாம்.

உறுதியாம் பூதாதி யோரைந்தாம்
உயர்கின்ற பொறியைந்து புலனைந்தரம்
கருதியாங் கன்மவிந் திரியமைந்தும்
கடிதான ஞானவிந் திரியமைந்தும்
திருதியாந் தீதாய கரண நான்கும்
திரமான அறிவொன்றும் நாடிபத்தும்
மறுதியாம் வாயுவது பத்தாகும்
மகத்தான வாசய மஞ்சுகோச மஞ்சே
அஞ்சவே யாதார மாறுமாகும்
அரியமண்டல மூன்று மலமூன்றும்
கொஞ்சவே தோடமூன் றீடணமூன்
றேதகமாய் குணமூன்று வினையிரண்டாம்
தஞ்சவே ராகமெட் டவத் தையைந்து
தயங்கியதோர் கருவிகடான் றெண்ணூற்ருறு
ஒஞ்சவே யொவ்வொன்ருய்.................
......விரித்துச் சொல்வேன்.

தத்துவங்களைக் கீழ்க்கண்டவாறு உய்த்துணரலாம்:—

அவையாவன:

1. அவத்தைகள் (ஐந்து):

1. விழிப்புநிலை
2. கனவு
3. உறக்கம்
4. பேருறக்கம்
5. உயிர்ப்படக்கம்

2. ஆதாரங்கள் (ஆறு) :

1. மூலாதாரம்
2. சுவாதீட்டானம்
3. மணிபூரகம்
4. அனுகதம்
5. விகத்தி
6. ஆஞ்ஞை

3. மண்டலம் (மூன்று):

1. அக்னி
2. ஞாயிறு
3. திங்கள்

4. மலம் (மூன்று) :

1. ஆணவம்
2. மாயை
3. கன்மம்

5. தோடம் (மூன்று) :

1. வாதம்
2. பித்தம்
3. கபம்

6. ஈடனை (மூன்று) :

1. பொருட்பற்று
2. புதல்வர்பற்று
3. உலகப்பற்று

7. குணம் (மூன்று):

1. சத்துவம்
2. இராசதம்
3. தாமதம்

8. இராகம் (எட்டு):

1. காமம்
2. குரோதம் (பிணக்கு)
3. உலோபம் (பிடிபாடு)
4. மோகம் (பிரியம்)
5. மதம் (கர்வம்)
6. மாச்சரியம் (உட்பகை)
7. இடும்பை (இகழ்தல்)
8. அகங்கா ரம் (கோபம்)

9. நாடி (பத்து);

1. இடகலை
2. பிங்கலை
3. சுழுமுனை
4. சிகுவை
5. புருடன்
6. காந்தாரி
7. அத்தி
8. அலம்புடை
9. சங்கினி
10. குகு

10. வாயு (பத்து);

1. பிராணன்
2. உதானன்
3. வியானன்
4. சமானன்
5. அபானன்
6. நாகன
7. கூர்மன்
8. கிருகரன்
9. தேவதத்தன்
10. தனஞ்சயன்

11. அந்தக்கரணம் (நான்கு):

1. மனம்
2. புத்தி
3. சித்தம்
4. அகங்காரம்

12. அறிவு (ஒன்று); 1. அறிவு (ஆன்மா)

13. கன்மேந்திரியம் (ஐந்து):

1. வாய்
2. கால்
3. கை
4. எருவாய்
5. கருவாய்

14. கண மேந்திரிய தன்மாத்திரை ( (ஐந்து);

1. பேசல்
2. நடத்தல்
3. செய்தல்
4. மல நீர்க்கழி தல்
5. விந்துக் கழித்தல்

**15.** ஐம்பொறிகள் (ஐந்து) :

1. மெய்
2. செவி
3. கண்
4. நாக்கு
5. மூக்கு

**16.** ஐம்புலன்கள் (ஐந்து) :

1. ஊறு
2. ஓசை (கேட்டல்)
3. ஒளி (பார்த்தல்)
4. சுவை (ரசம்)
5. நாற்றம் (கந்தம்)

**17.** ஐம்பூதங்கள் (ஐந்து) :

1. விண்
2. வளி
3. தீ
4. நீர்
5. மண்

**18.** ஆசயம் (ஐந்து) :

1. இரைக்குடல் (அமர்வசாயம்)
2. செரிகுடல் (பகிர்வசாயம்)
3. சலவாசயம் (சலப்பை)
4. மலவாசயம் (மலக்குடல்)
5. சுக்கிலவாசயம் (வெண்ணீர்க்குடல்)

**19.** கோசம் (ஐந்து) :

1. பருவுடம்பு (அன்னமயக்கோசம்)
2. வளியுடம்பு (பிராணமயக்கோசம்)
3. மனவுடம்பு (மனோமயக்கோசம்)
4. அறிவுடம்பு (விஞ்ஞானமயக்கோசம்)
5. இன்பவுடம்பு (ஆனந்தமயக்கோசம்)

**20.** வினை (இரண்டு) :

1. நல்வினை
2. தீவினை

**திருக்கூத்து**

எங்குந் திருமேனி எங்குஞ் சிவசக்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமாயிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. (திருமந்திரம் 2674

சிவம் தான் செய்யும் திருவருட்தொழில்களனைத்தும் சக்தியின் வாயிலாகச் செய்யும் காரியங்களெல்லாம் திருக்கூத்தெனப்படும். சிவத்தின் நுண்ணறிவு அம்பலமாகத் திகழ்கிறது. அதனைச் சிற்றம்பலம் எனப்படும். அணுக்கள் தோறும் சிவம். சிவம் தோறும் சிற்றம்பலம். அணுக்கள் எல்லா வுயிர்களும், எல்லாவுலகங்களும், எல்லா உலகியற் பொருள்களும் நிறைந்து ஆனபடியால் எங்கும் உள்ளன. அதனால் அனைத்தும் சிவவண்ணம். எனவே, எங்கும் சிற்றம்பலம். எங்கும் சிதம்பரம். அவற்றால் எங்கும் தங்கும் சிவ திருவிளையாட்டே எல்லாமாகும்.

சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பதமாம் அந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரன்றே (திருமந்திரம் 2675)

சிவம் ஆற்றியருளும் திருத்தொழில்கள் ஐந்தாகும்.

பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட
தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்து
ஏகாந்த மாம்பிர மாண்டத்த என்பவே (திருமந்திரம் 2682)

அண்டங்கள் ஒன்பது வகைப்படும். அவை ஐம்பெரும் பூதங்களாகிய பூத அண்டமும், அவற்றின் வேறுபட்டவையாகக் காணப்படும் பேத அண்டமும், இவைபோன்ற போகாண்டம், யோகாண்டம், மூதாண்டம், முத்தாண்டம், மோகாண்டம், தேகாண்டம், தாகாண்டம் ஆகியவைகளுமாம். இவைகளெல்லாம் ஒற்றித்து நிற்பதே பிரமாண்டம். இப்பிரம்மாண்டத்தில் சிவம் திருக்கூத்து புரிகிறது.

பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில் திருவம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லை யினீறன்றே (2702)

அண்டங்கள் ஒரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத் (2703)

எழுவகை அண்டங்களும் அவற்றின் உறுப்பாகக் காணப்படும் ஐம்பெரும் பூதங்களிலும் விரவி நிற்கும் வானங்கள் ஐந்தும் பதியாகக் கொண்டு அதன் புறத்துத் திருக்கூத்துயியற்றுகின்றது. (மண்ணில் ஆகாயம், நீரில் ஆகாயம், தீயில் ஆகாயம், வாயுவில் ஆகாயம், ஆகாயத்தில் ஆகாயம் ஆக ஐந்து.)

அண்டங்கள் தத்துவமாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்

அண்டங்களும் அவற்றின் அடக்கமாகிய தத்துவங்களாகும். ஐம்பெரும் பூதங்கள் ஐம்பெரும் நிலைகள் ஆகும்.

ஒன்பதும் ஆட ஒரு பதினொருட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட
இன்புறும் எழினும் எழைம்பத் தாறாட
அன்பது மாடினன் ஆனந்தக் கூத்தன்றே

(திருமந்திரம் 2736)

புரிந்தவன் ஆடிற் புவனங்களாடுந்
தெரிந்தவன் ஆடும் அளவெங்கள் சிந்தை
புரிந்தவனாடிற்பல் பூதங்கள் ஆடும்
எரிந்தவன் ஆடல் கண்டின் புற்றவாறே

(திருமந்திரம் 2740)

தத்துவம் ஆடச் சதாசிவந் தானடச்
சித்தமும் ஆடச் சிவசக்தி தானட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினன் ஆனந்தக் கூத்தன்றே

(திருமந்திரம் 2743)

சிவமாடச் சக்தியும் ஆடச் சகத்தில்
அவமாட ஆடாத அம்பரம் ஆட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்த சித்தாந்தத் துள்ளே

(திருமந்திரம் 2745)

ஒன்பது சிவத்தின் பெருநிலைகள் சித்தால் திருக்கூத்து ஆடுதலாகிய தொழில்நிலை எய்தும். எய்தின காலத்து, தொண்ணூற்றாறு தத்துவங்கள் ஆடும், ஐம்பூதங்கள் ஆடும். சிவம் உலகு தொழிற்பட வேண்டுமென நோக்கால் நோக்காசிவ ஆடுதலைப் புரியும். புரியவே புவனங்கள் ஆடும். சிவம் ஆடும் வரையில் பல பூதங்களும் ஆடும். இத்திருக் கூத்து புரிவது உலக நன்மையையும் உலகோர் நன்மையையும் நின்று நிலவுதற் பொருட் பேயாம். அதனால் சிவமாட மெய்களாகிய தத்துவங்கள் ஆடின என்பதாம். அன்றியும் மெய்களாகிய தத்துவங்களை இயக்கும் சக்தியும் ஆடுகிறது சக்தியாத்துவமாகிய மெய்களுக்கும் சுழற்சி நல்கித் தானும் சுழன்றுகொண்டு நிற்கும். ஒளிவடிவாய்த் தத்துவங் கடந்த வியத்தகு புதுமைசேர் தத்துவம் ஆடுவதாயிற்று. அத்திரு ஆடலினாலேயே எல்லை யவும் ஆடுவதாயிற்று இவ்வுண்மை யெல்லாம் வேதாந்த சித்தாந்த மெய்மையினுள் காணலாம்.

ஆதி நடஞ் செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடஞ் செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே

(திருமந்திரம் 2741)

மேலோதிய வுண்மையினை உள்ளவாறு நல்லறிவில்லாத புல்லறிவாளர்கள் ஆதியைப் பாதித்திருமேனியாகவுடைய சிவபெருமான் ஏனையோரைப் போலத் தன்பொருட்டு நடம் புரிகின்றனன் என்பர். சிவம் "அவையே தானேயாய்" நின்று திருக்கூத்து புரியும் உண்மை நுண்மைச் செய்கையினை யாரும் அறிகிலர். சிவத்தின் திருக்கூத்தை அறியும் பேறு பெற்றபின் அவ்வாடல் சக்தியினால் நிகழ்வதென்னும் உண்மையினை உணர்ந்தனர்.

## அத்தியாயம் 4

### பஞ்ச பூத பஞ்சீகரணம்

ஐம்பூதங்களில் யாதாவதொரு பூதம் நிலை சக்தியிலிருந்து சலன சக்தியை அடைகிறதோ அந்தப் பூத அணுவாக, பெரிதாகி, உருவமாக மாறுகிறது. அவ்வமயம் மற்ற தொண்ணூற்றைந்து தத்துவங்கள் அப்பூத அணுவில் தொக்கி மறைந்து இருக்கின்றன என்பதைக் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

**இனி, அருவுரு பூதங்களிலிருந்து உருவ பெரும் பூதங்களாக மாறும் வழியை அறிவாம்.**

அருவுரு ஐம்பூதங்கள் நிலை சக்திகளிலிருந்து சலன சக்திகளாக அடைந்து அந்தந்தப் பூதங்களுக் கேற்ப அணுத்திரளைகளாகவோ பன் மடங்கு பெருகி பெரியதாக உருவப்பொருளாகவோ மாறுகின்றன. இப்பஞ்ச பூதங்கள் அருவத்திலிருந்து உருவப் பொருளாக மாறும் காரியத்தைத் தான் பஞ்சபூத பஞ்சீகரணம் என்று சித்தர்கள் கூறியுள்ளனர்.

(1) மண்ணினில் ஒன்று மலர் நீரு மங்காகும்
பொன்னினில் அங்கி புகழ்வழி யாகாயம்
மன்னு மனோபுத்தி யாங்காரம் ஓரொன்றாய்
உன்னின் முடிந்த தொரு பூத சயமே (திருமந்திரம் 2112)

(2) மண் டிணிந்த நிலனும்
நிலமேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீரு மென்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போல (புறம் 2)

(3) நிலந்தீ நீர்வளி விசும் போடைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை ஐம்பால் இயனெறி வழா அமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்
(தொல், பொருள், மரபியல்)

(4) தேவருறை கின்ற சிற்றம்பலம் என்றுந்
தேவருறை கின்ற சிதம்பர மென்றுந்
தேவர் உறைகின்ற திருஅம்பல மென்றுந்
தேவர் உறைகின்ற தென் பொதுவாமே (திருமந்திரம் 866)

(5) ஆமே பொன்னம்பலம் அற்புதம் ஆனந்தம்
ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்
ஆமே பிரளயமாகும் அத்தாண்டவம்
ஆமே சங்காரத் தருந் தாண்டவங்களே (திருமந்திரம் 867)

அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாயெழ
அப்பினில் அப்புறம் ஆகாசமாமே (திருமந்திரம்–1237)

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்ச பூதை பாவிகாள்
அஞ்செழுத்திலே ஓர் எழுத்து அறிந்து கூறவல்லீரேல்
ஆம்பலத்தில் ஆடுமே.
(சிவவாக்கியர்)

அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்
அமலந் திரோதாயியாகு மானந்தமாம்
அமலஞ் சொல் ஆணவ மாயை காமியம்
அமலந் திருக்கூத்தங் காமிடந்தானே (திருமந்திரம் 875)

அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட வூறு முறுமந்திரமே (திருமந்திரம் 940)

தானே இருநிலந் தாங்கி விண்ணாய் நிற்குந்
தானே சுடும் அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழை பொழி தையலுமாய் நிற்குந்
தானே வடவரைத் தண்கடற் கண்ணே. (திருமந்திரம் 1141)

விரிந்த எழுத்தது விந்துவும நாதமும
விரிந்த எழுத்தது சக்கரமாக
விரிந்த எழுத்தது மேல் வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே. (திருமந்திரம் 1236)

## பிரபஞ்சத்தில் முக்காலமும் செயல்புரியா நின்ற, பஞ்ச பூத் பஞ்சீகரணம்.

**விண்:** இருநூறு கோடி வருடங்களுக்கு முன்பு, பூமி சூரியன் போன்ற கிரகங்கள் தோன்ருத காலத்தில் எங்கும் பரந்து இருள் மயமான வெட்டவெளி இருந்தது. அவ்வெட்டவெளியில் தான் இன்று வானத்தில் காணும் எல்லா கிரகங்களும், நட்சத்திரங்களும் உருண்டை வடிவமாகக் காண்கிரேம். வானத்தில் எல்லா கிரகங்களும் நட்சத்திரங் களும் உருண்டையாய் இருப்பதைப் பார்த்து நம் அறிஞர்கள் பூமியும் உருண்டை வடிவம் என்று கூறிப் போந்தனர். கோள்களும், விண் மீன்களும் ஆகாய வெளியில் அனைத்தும் சுற்றுகின்றன. தங்களைத் தாங்களே தட்டாமல் சுற்றுகின்றன. ஒரே இடத்தில் சுற்றவில்லை. ஒரே இடத்தில் ஒருகண நேரம்கூட நிற்காமல் சுழன்று கொண்டே வருகின்றன. இவைகளெல்லாம் இவ்வாறு யாத்திரை செய்யும் வெட்ட வெளியை, ஆகாயம், விண், வான், வெளி என்று கூறுகிரேம். இந்த வெட்ட வெளியில் சஞ்சரிக்கும் அனைத்தும் சேர்ந்ததே பிரபஞ்சமாகும். அதை பேரண்டம் என்றும் கூறுவர்.

இவ்வாறே கண்ணினல் காணமுடியாததாகிய அணுவிலும் வெட்ட வெளி இருக்கிறது. பதி, பசுவாகிய மத்திமத்துக்கும் பாசத்திற்கும் இடையே வெட்டவெளி இருக்கிறது. அதாவது இடைவெளி, அந்த வெட்டவெளியில் பாசம் தன் சுபாவ கவர்ச்சித் தன்மையோடு பதி, பசுவைச் சுற்றி வருகிறது. இதனைச் சிற்றண்டம் என்றும் சொல்வர்.

இப் பிரபஞ்ச வெளியிலும் சரி, சிற்றண்ட வெளியிலும் சரி ஆகாயத் தில் மிதந்துள்ள அணுக்கள் சதா ஒன்ருெடொன்று மோதலும், இணைதலும், பிணங்குதலும், பிரிதலும் என்ற காரியங்களைப் புரிகின்ற காலத்தில் ஒலி பிறக்கிறது. இவ்வாறே ஒளி, தீ போன்ற சக்திகள் பெருவாரியாகத் தோன்றின.

**வளி:** விண் அணுக்களின் மாயா காரியத்தால் வளி அணுத் திரளைகள் தோன்றின. வளி அணுத்திரளைகள் எப்போதும் நிலையாக இருப்பதில்லை. சதா சலனமுற்றுக் கொண்டே இருக்கின்றன. இவ்வாயு அணுக்கள் ஒன்ருெடொன்று மோதலும், இணைதல், பிணங்குதல், பிரிதல் என்ற காரியங்களினுலும் ஒளி பிறக்கின்றது. ஒளியின் தொகுதியே விண் மீன்களாகி ஆகாய மண்டலத்தில் மிதக்கின்றன. விண் மீன் தொகுதிகளில் நட்சத்திர மண்டலங்கள் ஏற்பட்டன. அவ் வாருக ஏற்பட்ட நட்சத்திரங்களுள் சூரியனும் ஒன்றே. சூரியனைச் சுற்றி அநேக கிரகங்கள் சுற்றுகின்றன. இம்மாதிரியான சூரியன்களைக்கொண்ட நட்சத்திர மண்டலங்கள் கோடானுகோடி. ஒவ்வொன்றிற்கும் உள்ளது இடைவெளி. இவ்விடைவெளிக்குள் நட்சத்திரங்கள் இயங்குகின்றன. ஆகவே, சூரிய நட்சத்திரங்கள் ஆகாயம், வளி மண்டலங்களில் சஞ்சரிக் கின்றன. சஞ்சரிப்பது மல்லாமல் ஆகாயத்திலும் வளியிலும் சுழல்கின்றன.

எனவே, இந்தப் பரந்த வெட்ட வெளியில் ஒளியின் ஆற்றல் ஒருங்கு சேர்ந்து எரிப்பிழம்பாய் விளங்கா நின்றது சூரியன். இவ்வெரிபிழம்பி லிருந்துதான் நாம் வாழும் பூமியும் மற்ற கிரகங்ளும் தோன்றின. அதாவது சூரியனிலிருந்து பூமி, வெள்ளி, வியாழன், புதன், செவ்வாய், சனி முதலியவைகள் தோன்றின.

தீ. (சூடு) : வாயுக் கோளத்தின் மத்தியில் அடர்த்தி அதிகமாயும் அவற்றைச் சுற்றி அடர்த்தி குறைவாயு மிருந்தது. வாயுக் கோளங்கள் திரண்டு எழும்போது அவற்றின் மையத்தில் அடர்த்தியும் அழுத்தமும் அதிமகாயுள்ள, இந்த வாயுக் கோளங்களில் மத்தியில் ஒருவித ஈர்ப்புச் சக்தி (கவர்ச்சி ஆகர்ஸனசக்தி) ஏற்படுகிறது. இந்தச் சக்தியால் வாயுக் கோளத்தின் மேற் பரப்புக்களிலுள்ள வாயு உள்ளிழுக்கப்பட்டு, அக் கோளம் வரவரச் சுருங்கிக்கொண்டே போகின்றன. அந்தச்சுருக்கத்தின் போது சூடும் ஒளியும் ஏற்படுகிறது. இதே சமயத்தில் இதேகாரியம் வாயு கோளங்களுக்கிடையேயும் ஏற்பட்டு அக்கோளங்கள் நன்கு இறுகாதபடி சிதறியும் விடுகின்றன. சிதறிய துண்டுகள் ஆகாய வெளியில் ஒன்றுக் கொன்று வெகுதூரத்தில் தனித்தனியே இறுகி அழுத்தமடைந்து பிரகாசிக்கத் தொடங்குகின்றன. இந்தச் சூடு இப்போது பன்மடங்கு அதிகரித்துக் கற்ப னைக் கெட்டாத அளவு உயர்ந்து விடுகிறது. சூட்டினால் அந்தக் கோளங்களில் உள்ள பொருள்களின் அணுக்கள் சிதைந்தும் சிதைந்த அணுக்கள் உண்டாவதுமாக ஒன்று சேர்ந்து புதிய வாயு அணுக்கள் உண்டாவதுமாக அப்போது அவ்வாயுக் கோளங்களிலிருந்து சூடுசக்தியும் ஒளிச் சக்தியாகவும் ஆகாச வெளியில் வீசுகின்றன். இவ் வாருக ஏற்பட்டதுதான் சூரியன்.

நீர்.—மேற்சொன்ன ஆவிப்பொருள்களிலேயே நீர்ப்பொருள்கள் நிறைந்திருந்தன. ஆவிப்பொருள்கள் உருகிய கனமான பொருள்களாய் உருண்டை வடிவத்தின் மத்தியில் சென்றடைந்து இலேசான பகுதிகள் மேலே படிந்த பிறகும் ஆகாய வெளியின் குளிர்ச்சி பூமியைப் பாதித்துக் கொண்டே இருந்தது. குளிர்ச்சியால் மேல்பகுதிகளெல்லாம் திடமான கெட்டிப் பொருள்களாக இறுகி விட்டன. இறுக்கத்தால் ஏற்பட்ட நெருக்கடியாலும் வாயுவாலும் சூடும் ஏற்பட்டதின் காரணமாக உள்ளே தங்கிவிட்ட கனமான பொருள்கள் நீர் நிலையிலேயே இருந்து விட்டன.

பூமி பிறந்த பல ஆயிரம் வருடங்களுக்குப் பிறகும் சூரிய வெப் பத்தால் சூடடைந்து கொண்டே வந்தது. அதே சமயம் ஆகாச வெளியின் குளிர்ச்சி அதை இறுக்கியது. பூமி அக் குளிர்ச்சியைத் தாங்கும் அளவுக்குச் சிறிய வெப்பத்தைக் கிரகித்துக்கொண்டு மீதி வெப்பத்தை ஆகாச வெளியில் வீசியது. சூரியனுடைய வெப்பம் தொடர்ச்சியாகக் கிடைத்துக் கிரகித்துக் கொண்டேயிருந்த காரணத்தால் பூமி யின் மையப் பகுதி மேலும் மேலும் சூடாக்கிக் கொண்டே வந்தது. பூமிக் கடியில் வாயுக்கள் வேறு அடைக்கப்பட்டுக்கிடந்தன. இவ்வாயுக்களெல் லாம் உட்புற வெப்பத்தால் விரிவடைந்து பூமியை உள்ளிருந்து அமுக் கின. மையத்தைவிட மேற்பரப்பு இளகியிருந்ததால் அவ்விளகிய பரம்

பிளைப் பிளந்துகொண்டு வாயுக்கள் வெளியே எறியப்படும்போது பூமிக் கடியில் உருகியிருந்த பாறை முதலியன உலோகங்கள் வெளியே எறியப் பட்டன. இதனுல் பூமியைச்சுற்றி வாயுமண்டலம் ஏற்பட்டது.

பூமியை வியாபித்த வாயுக்கள் சூரிய வெப்பத்தால் இலேசாகி மேலே சென்றன. மேலே சென்ற நீராவி குளிர்ந்ததால் நீராக மாறிற்று. நீர் பூமியின் ஈர்ப்புச் சக்தியால் கீழே இழுக்கப்பட்டு மழை யாகப் பெய்ய ஆரம்பித்தது. மழைநீர் பட்டவுடன் அது பூமியின் சூட்டினுல் மறுபடியும் ஆவியாகி மேலே போயிற்று. மேலே சென்று குளிர்ந்தவுடன் மறுபடியும் மழையாகப் பெய்தது. இவ்வாறு இடை விடாமல் மழை பெய்தது.

நாளாவட்டத்தில் ஆகாசத்திலுள்ள பொருள்கள் வாயுமண்டலத்தில் சேர்ந்து பெரியதொரு மேகமண்டலம் பூமியைச் சூழ்ந்துகொண்டது. இந்நிலையில் பூமியின் மேற்பரப்பு குளிர ஆரம்பித்தது. இடைவிடாமல் மழை பெய்யவும், மழைநீர் பூமியில் விழுந்து நிலப்பரப்புகளில் ஆறு களாகவும், நதிகளாகவும் ஓடியது. காலஞ் செல்லச்செல்ல பள்ளத் தாக்கில் தேங்கி நின்றவைகள் கடல்களாக விளங்கா நின்றன.

**மண் :** எரிபிழம்பாய் உருண்டை உருவமாய் வந்த பூமி காலக் கிரமத்தில் ஆகாய வெளியில் ஏற்பட்ட வாயுமண்டலங்களாலும், ஆவி மண்டலங்களாலும் நானு வித உலோகங்களும் காரச் சாரங்கள், உப்புகள் சேர்ந்ததொரு உருண்டைப் பகுதியாகி, தன்னையும் சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றிக்கொண்டு இன்று நாம் வாழும் பூமி மண்பூதமாக விளங்கா நிற்கின்றது.

---

## அத்தியாயம் 5.

---

### உருவப் பொருள்கள்.

உலகத்திலே தோற்றுகிறவைகளெல்லாம் தொண்ணூற்ருறு தத்துவங்களைக் கொண்டு இந்திரியப் பொருள்களாகவும் அநிந்திரியப் பொருள்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. இந்திரியப் பொருள்களிலே பிராணிகளும் தாவரங்களும் அடங்கும். அநிந்திரியப் பொருள்களிலே ஆகாயம், வளி, தீ, நீர், மண் உருவப் பூதங்கள் அடங்கும்.

### அநிந்திரியப் பொருள்கள்.

**ஆகாயம்:** வெட்டவெளி என்றும், அம்பலம் என்றும் கூறுவர். இவ்வெட்டவெளி, பிரபஞ்சத்திலும் அணுவிலும் அகத்தும் புறத்தும் இருந்து நிலவுகிறது. ஆகாய அணுவிலும் பஞ்சபூதங்களும் அடங்கியுள்ளன. மாயேயாம் அருவ ம்ண்பூதமும், மாயை அருவ நீர்ப்பூதமாகவும், கன்மம் அருவதீப் பூதமாகவும், ஆணவம் வளிப்பூதமாகவும், திரோதானம் அருவவெளி பூதமாகவும் உள்ளன.

ஆகாய அணுக்களில் கிடக்கும் ஐம்பெரும் பூதங்கள் உற்றும், கண்டும் உணர்த்திடப் பெய்வகை கூட்டுறவால் திரண்டு இந்திரியப் பொருள்களும் அநிந்திரியப் பொருள்களும் தோன்றுகின்றன. ஐம்பூதங்கள் திரளும் போது அவத்தையும் சலனமுற்று உயிர் அகத்தே இயங்கி புறத்தே சடம் தோன்றிஞல் இந்திரியப் பொருள்கள் ஏற்படும். அவத்தை சலனமுருமல் அடக்கம் அல்லது உறக்கத்திலேயே இருக்குமாஞல், அநிந்திரியச் சடப் பொருள் ஏற்படும். இவ்வித எல்லா மாயாக் காரியங்கள் கன்மமென்னும் அருவதீப் பூதத்தால் நடக்கின்றன.

மேற் சொல்லியவாறு பிரபஞ்சத்தில் வெட்டவெளியில் அணுக்கள் ஒன்ருகக் கட்டுப்படுதல், வெவ்வேருன அணுக்களை ஒன்ருேடொன்று கூட்டப்பண்ணுதல், இழுத்தல், சேர்த்தல் அல்லது நாட்டம் செய்தல், மோதல், தள்ளல், பிரிதல் போன்ற காரியங்கள் சதா புரிந்துகொண்டே இருக்கின்றன. இதஞல் அதிர்வு ஏற்பட்டு ஒலி உண்டாகிறது. ஆகாய அணுக்கள் அதிர்வடையும்போது அது தன்னைத் தொட்டுக் கொண்டிருக்கும் காற்றின் இம்மிகளை அதிர்வடையச் செய்யும். அதிரும் இம்மிகள் தங்களை அடுத்துள்ள இம்மிகளை அதிரச் செய்கின்றன. இவ்வதிர்ச்சிகள் ஒலிக்குமிடத்தைச் சுற்றிலும் அலைகளைப்போல் பரவுகின்றன. இவ்வொலி ஆகாயத்தில் முக்காலமும் நடந்துகொண்டேயிருக்கின்றன. இந்த ஒலிக்கு "ஓங்கார ஒலி" என்று பெயர். பதிப்பொருளுக்கு "அ" என்ற ஒலியும், பசுவுக்கு "உ" என்ற ஒலியும் பாசத்திற்கு "ம" என்ற ஒலியும் கிடைக்கப்பெறும் என்று சித்தர்கள் தங்கள் யோகவல்லமையால் உணர்ந்து கூறியுள்ளார்கள். இம்மூன்று ஆதி ஒலிகள் சலனமுறும் காலத்தில் "ஓம்" என்ற ஒலி வெட்டவெளியில் சதா ரீங்காரம் செய்துகொண்டிருக்கிற தத்துவத்தைப் பகர்ந்துள்ளனர்.

ஓர் நீர்நிலையிலுள்ள தண்ணீரின் அசைவற்ற பரப்பின்மேல் ஒரு கல்லை எறிந்தால் கல் விழுந்த இடத்தின் மையத்திலிருந்து சுற்றி அலைகள் ஏற்படுகின்றன. நீர் அலைகள் பரப்புவதைப்போல் வெட்ட வெளியிலும் ஒலி அலைகள் பரவுகின்றன. ஓர் அலையின் எழுச்சிக்கும் அடுத்த அலையின் எழுச்சிக்குமிடையே ஒரு யூகக்கோடும் வரைந்தால் கோட்டினின்று உயரக்கிளம்பி உச்சியை அடையும் பாகத்தை இரசோ குணம் என்றும், உச்சியிலிருந்து இறங்கும் கோட்டைத் தொடும் பாகத்தை தமோ குணம் என்றும் அலையின் இவ்விரண்டு கோட்டினைக் தொட்டுக் கொண்டிருக்கும் கோட்டை, சத்துவ குணம் என்றும் சித்தர்கள் கூறியுள்ளார்கள். அலைகளின் முக்கோணத்தில் மூன்று குணங்கள் உள்ளன. இம்முக்கோணத்தின் மையத்தில் கிடக்கும் நிர்குணம் சலனமுற்றால் குணங்களின் பேதா பேதங்களுக்கேற்ப புத்தி என்னும் தத்துவம் தோன்றுகிறதென்பர். அலைகள் பரவும்போது அவை பரவும் திசையில் நகாந்து செல்வதில்லை. இம்மிகள் மேலும் கீழுமாக அசைந்து கொண்டிருக்கின்றன. இம்மி அசைவு அணுக்களின் குணங்களின் பேதங்களைப் பொருந்தியிருக்கும். சில அதிக அதிர்வு அலைகள், சில குறைந்த அதிர்வு அலைகள். அதிர்வு இல்லாமல் சலனமற்றவையாய் இருக்கும்.

எனவே, சீவன்களின் உடல் அமையும்போது ஆகாயம் செவிப் பொறியாக அமைகிறது. அதனிலுள்ள அணுக்கள் ஒலி அலைகளின் அதிர்வை இழுத்துக்கேட்கும் சக்தி ஏற்படுகிறதினால் சீவன்கள் ஒலியைச் கேட்கின்றன. பதிவு செய்கின்றன.

**வளி:** காற்று, வாயு, கால் என்ற பெயர்களில் வழங்கப்படுகின்றன. முக்கியமாக, காற்றுகள் பஞ்சபூதங்களுக்கேற்ப ஐம்பெரும் காற்றுகள் உள. ஆனால் ஒவ்வொன்றாக, அவைகள் தனித்துக் காணப்படுவதில்லை.

**விண்வளி:** இது எங்கும் பரவியிருக்கிற ஏராளமான பொருள். இதனைக் காலிலிகம் என்பர். இது வளி அணுவில் ஐந்தில் நான்கு பங்காகவுள்ளது. காலிலிகம் என்பது நிறம், மணம், உருசி அற்றவளி. விண்வெளி சற்றே ஆகாயத்துக்கு நிகரானது. இது எரிவதில்லை. அதற்கு உதவியாவதுமில்லை. சீவன்களுக்கு அவசியம் வேண்டியது. காலிலிகம் எந்தப் பூதியத்தோடாவது தானாய் சேராமல் இன்னொன்றின் உதவியைக் கொண்டு சேரும்.

நிறுக்கக்கூடிய பதார்த்தங்களுள் காலிலிகம் காங்கைக்கு அதிக நாட்டமுள்ளது. பொருளில் சேர்ந்திருக்கும் காலிலிகம் காங்கையோடு கலந்து மறுபடி வாயுவாகிய தன் பூதிய நிலைமைக்கு வரப்பார்க்கும். விண்வெளி காங்கையினால் இப்படி இலேசாக மாறுவதாலும் மற்றும் பூதியங்களுக்கு மொத்த சொற்ப நாட்டமுள்ளதாகயிருப்பதாலும் அதன் கலவைகள் மெத்த நிலையற்றவைகள். அநேகம் மெத்த சொற்ப ஏதுக்களால் சடுதியில் கூறுகளாகப் பிரியும். இப்படி பிரியும்போது காலிலிகம் பெரும்பாலும் மெத்த பெலமான வெடியோடு வாயுவாகப் பறக்கும். வளியில் ஆகாய கூறுணபடியால் "ஒலி" யை எழுப்பும், ஆகையினாலே "ஒலிவாயு" என்பர்,

**வளிவாயு:** பிராணவாயு என்பர். பூதியங்களுள் பிராணவாயு அதிக ஏராளமானது. அதிலும் அது சுத்தமாய், அதாவது வேறொன்றோடும் கலவாமல் தனிமையாய் ஒருக்காலும் இயற்கையில் இல்லை. வளி அனுவில் ஐந்தில் ஒன்றுக்குக் கதிக்கும்.

மேலும் உயிருள்ள பொருள்களில் முக்கியமான பங்காயும் சீவனைத் தாங்குகிறதாயும் எவ்வித தகனத்துக்கும் வேண்டியதாயும் இருக்கின்றது. பிராணவாயு சேர்ந்துண்டான வைரப் பொருள்களுள் அநேகப் பொருள்கள் போதிய சூடேற்ற பிராணவாயுவைக் கக்கும்.

**பிராணவாயு:** நிறம், மணம், உருசியற்றதாகையால் அது விண்வெளி அணுப்போல் தோற்றும். என்றாலும் விண்வெளியைவிட சற்றே பாரம் கூடியது. அநேக பொருள்களுக்கு நாட்டமுடையது. இது எப்பொரு ளோடாவது சேர்வதால் காங்கை பிறக்கும். இது ஒரு பொரு ளோடு சேருகையில் வெளிச்சம் காங்கை இரண்டும் பிறக்குமாகில் அச்செயலுக்குத் தகனம் (Combustion) என்றும், பொருள் எரிகிறதென் றும் சொல்லப்படும். மேலும் இப்படி பிராணவாயுவோடு சேர்ந்தெரியும் பொருள் தகி எனவும் அதை எரிக்கும் பொருளாகிய பிராணவாயு தகனி எனவும் பெயர்படும்.

பிராணவாயு சீவனுக்கு அவசியம் தேவையானது. ஆகையால் பிராணன் வளியிலிருந்து ஓயாமல் சுவாசிக்கப்படும். பிராணவாயு இல்லாமல் அணுவில் ஒரு உயிரும் இருக்கமாட்டாது. பிராணனுக்கு இரண்டு நிலைகளுள்ளது. அவை வினை நிலைமை; அடக்க நிலைமை. களி மண் முதலிய பொருள்களில் சேர்ந்தும், நீரிலும், தீயிலும், வளியிலும் வாயுவாகச் சேர்ந்திருக்கிற பிராணன் தன சத்துக்களை எல்லாம் செயலற்ற அடக்க நிலமையிற்கொண்டிருக்கும் (Passive condition)இந்த நிலைமை யானது பிராணனின் தன்மைகளுள் ஒரு அந்தபாகும். தகனத்திலும் வெடிப்பிலும் வலுத்த சத்துடன் காட்டுகிற வினை நிலை மற்ற அந்த மாகும். இதில் பிராணன் வேறு மாதிரியாகிய வெளிச்சம் (ஒளி) காங்கை யென்ற பிரபையான தோற்றங்களை காட்டி ஒன்றுக்கொன்று முழுதும் எதிரான கலவைகளைச் சேர்த்துத்தான் மாறக்கூடிய தோற்றங்களை எல்லாம் எடுத்து கடைசியில் உலகத்திலேதான் ஒதுங்கவேண்டிய இடத்தில் போய் அடங்கும்.

உலகத்தில் பிராண வாயுவினால் உண்டாகும் பலன் எவ்வளவென்று நிதானிக்க முடியாது. சுவாசிப்பதில் நாள்தோறும் மனிதர்களுக்கும் ஓயாமல் நடந்துகொண்டிருக்கிற தகனம், நொதிப்பு, அழுகுதல், உக்குதல் முதலியவற்றில் எடுபடும் பிராணன் கணக்கிடமுடியாது. "உள்ளது போகாது இல்லது வாராது" என்ற தத்துவத்தில் நடக்கிறது. முக்கியமாக ஒளிக் கூறு பிரதானமானபடியாலும் உயிர்வர்க்கத்தில் தீ அம்சத்தையும் உடையதாலும் இரத்தத்தாதுவாகவும் அமைந்திருப்பதைக் காணலாம்.

**தீ காற்று அல்லது தீவளி:** மேற்சொன்ன இரண்டு வளிகளைவிட பாரமும் பச்சை நிறமும் மூச்சடைக்கும் மொச்சும் உள்ளவாயு. தகனத் திற்கு உதவியாகும். பிராணனுக்கு ஒளியும் தீயும் உண்டு. இதற்குத் தீ மட்டும் உண்டு. இதற்கும் நீராவிக்கும் உலோகங்களுக்கும் மெத்த நாட்டமுண்டு.

**நீர்வளி:** தனிமையாய் இல்லை. அது நீராவியிலேயே அதிகமாக இருக்கிறது. வேறு அநிந்தரப் பொருள்களில் இது அதிகம் இல்லை. பிராணி தாவர பதார்த்தங்களில் இது அதிகம் இருக்கும். இது நிறமற்ற ஓர் வாயு. சுத்த நீராவி உருசி மணமுற்றது. இது பிராணனோடு கலந்து மணம் வீசும்.

**மண்வளி:** இருள்மயமான கறுப்பான நொறுங்கத்தக்க கரையாத மணமும், உருசியுமற்ற காற்றேயாகும். சூடேறுதிருக்கில் இதற்கும் மற்ற பதார்த்தங்களுக்கும் நாட்டமில்லையாதலால் எக்காலத்துக்கும் மாறுது. இக்காற்று தனிமையில் கிடைப்பதில்லை. மண்வளி இயற்கையில் (1) வைரம், (2) மினிரம், (3) கற்கரி, (4) கெல்கரி போன்றவைகளுள் கலப்புற்று அடங்கிக் கிடக்கிறது. எப்போதும் பிராணனோடு கலந்தேயிருக்கும். நீர்வளியோடு கலப்பற்ற காலத்தே தாவர வர்க்கமாயும் விண்வளியோடு நாட்டமுற்றால் சீவராசிகளும் தோன்றுகின்றன. முக்கியமாக மண்வளிக்குச் சில வாயுக்களையும் நீராவிகளையும் அதிக அளவாக உறிஞ்சி தன்னுள்ளே அடக்கி வைக்கும் தன்மையுள்ளது. கடும் குளிரினால் நீராவிகளை உறிஞ்சி அடக்கி சூட்டினால் பிரிந்துவிடும். அநிந்திரியப் பொருள்கள் ஆகுவதற்காக முக்கிய காரண பூதமாகயிருக்கிறது.

## தீ

**தீ.**—தீயும் ஒளியும் ஒன்றுக்கொன்று பின்னிக்கிடக்கும் நிலையை வெளிச்சம் எனப்பட்டுள்ளது. எனினும் ஒளி எங்கேயோ அங்கே தீ அல்லது சூடும் தீ எங்கேயோ அங்கேயே ஒளியுமிருக்கும்.

தீ என்பது வாயுவிலும் மெல்லிதாய் சடப்பொருள்கள் எல்லாவற்றிலும் ஏகத்துக்குப்பரந்து அவை எல்லாவற்றிலும் பரபிரமாணமாய ஊடுருவிப் பாய்ந்திருந்து உணர்தீயாகவோ மறைதீயாகவோ இருக்கக் கூடிய தீ அணு தீ பொருள்களின் அணுக்களிலாவது, வாயுவிலும் மிக மெல்லியதாய் அவைகளில் செறிந்திருக்கும் பொருளிலாவது உண்டாகிற அற்ப அசைவின் பேறேயாகும்.

இரும்புச் சலாகையின் ஒரு தலைப்பை நெருப்பில் வைத்துக் காய்ச்சும் போது மற்றத் தலைப்பும் சூடு கொள்ளும். தீ என்னும் பொருள் ஒன்று நெருப்பிலிருந்து இரும்பிலேறி அதிலே அணுவிலிருந்து அணுவுக்குச் சென்று அடங்கலும் பரம்பும். அவ்விரும்பை கையால் தொட அப்பொழுது கையிலுமேறுவதால் தீ அல்லது சூடு உணர்ச்சியுண்டாகும். அல்லாமலும், நெருப்பு இரும்பின் அணுக்களில் அல்லது அவைகளில் செறிந்திருக்கிற நுண்ணிய பொருளில் ஓர் வகை அசைவையுண்டாக்க அவ் வசைவு எந்த நேரிலும் சென்று பரமாணுவின் அசைவுகள் சத்தத்தைப் பிறப்பிப்பது போலவே தீ யென்னும் உணர்ச்சியை உண்டாக்கும்.

தீ என்ற பொருள் தனித்ததாகக்கருதப்பட்டாலும் இயல்பில் தனித்ததாகத் தோன்றினதுமில்லை. செயலால் காட்டப்பட்டதுமில்லை. அது சுயப் பொருளாக இருக்கவில்லை என்று சொல்வது பலமான நியாயமாகும். மேலும் மேலும் உறிஞ்சுதலால் அளவற்ற காங்கையைப் பிறப்பிக்கலாம்.

எரியும் பொருள் தழற்சி கொண்டு அதிலுள்ள வாயுவும் தழற்சி கொள்ளும். தழற்சி கொண்ட வாயுவைச் சுவாலை என்பர்.

பொருள்கள் சூடாய் அல்லது குளிராயிருக்கிறதைக் கொண்டு சூடு அல்லது தீ என்னுஞ் சடப் பொருள் ஒன்று உண்டென்று அறிகிறோம். பொருள்களில் தீ உணரத்தக்க தாய்க்கதித்தால் அவை சூடென்றும் குறைந்தால் குளிரென்றுஞ் சொல்லப்படுகின்றது.

தீ, உணர்காங்கை, மறை காங்கை என்ற இரண்டு நிலைகளிலும் இருக்கக்கூடியது. இந்த நிலைகள் ஒன்றுக்கொன்று மெத்த வித்தியாச மாகும். ஒரு பொருள் சுடத்தக்கதாய் அதிலிருந்து பறிகிறதும் ஆன தீயை உணர் தீ எனப்படும். பொருள் சுடாமல் குளிராமல் இருக்கத்தக்க தாய் அதில் ஏறுகிறதும் பறிகிறதுமான காங்கை மறை காங்கை எனப் படும். தீ எந்தச் சடப்பொருளிலும் எப்போதும் இருக்கும். ஆயினும், அந்தப் பொருளில் அது எம்மட்டென்று திட்டமாய்ச் சொல்ல இயலாது. ஒரு பொருளிலிருக்கும் உணர்த் தீயைத் **தாபமானியின்** கருவியால் பிரமாணம் கொள்ளலாம்.

அயற் பொருள்களெல்லாம் ஒரே அளவான உணர் காங்கை அடையத் தக்கதாய் காங்கை அவைகளுக்குள் செறிவது காங்கைக்குரிய தன்மை யாகும்.

தீயிற்குச் சூரியன் தீ அணுக்களின் திருக்கூத்தினால் அல்லது மாயாகாரி யங்களினால் (மின்சாரம்) முக்கிய ஊற்றாகும். திருக்கூத்தில் உரைவும் அமுக்கமும், தட்டல் என்ற செயல்களாகும். இறுக்கத்தாலேயும் தீ பிறக்கும்.

மேலே சொன்னவைகளைவிட பூமியில் தாவரங்களிலும் ஓயாமல் நடக்கும் மாயா காரியங்களின் (இராசயன மாறுதல்கள்) வேறாக இவை களின் உறுப்புகளிலிருந்து சூடு பிறக்கின்றன. இதற்கு உயிர் காங்கை என்று பெயர்.

சூடு பொருள்களின் மூன்று வகையாய் ஊடுருவி பாயக்கூடும். (1) பொருளின் நுண்ணில் இருந்து நுண்ணுக்குக் காங்கை செல்லுதல் காங்கை பாய்தல் எனப்படும். பொருள்கள் சூட்டைத் தங்களுக்கூடாகச் செல்லவிடுந்தன்மையில் ஒன்றுக்கொன்று அதிக வித்தியாச முடையன. சில பொருள்கள் காங்கை செல்வதைத் தடுக்கிறதில்லை. அது சிலவற்றுக் கூடாக மெல்லவும் சிலவற்றுக் கூடாக வில்லங்கமாகவும் செல்லும் சூட்டைச் செல்லவிடுந்தன்மையைப் பற்றி பொருள்கள் எல்லாம் ஏற்படும் பொருள் என்றும், ஏறப்படாத பொருள் என்றும் இரு வகுப்பாகப் பிரிக்கப்படும். அதாவது காங்கையைத் தங்களுக்கூடே தாராளமாகச் செல்லப்படும் பொருள்கள் சூடேறப்படும் பொருள் என்றும், அதை வில்லங்கமாகச் செல்லவிடும் பொருள்கள் சூடேறப்படாத பொருள் என்றும் பகர்வர். எவ்வகை பொருள்களுக்குள்ளும் உலோகங்களே அதிகதியாய்க் காங்கையைச் செல்லவிடுகின்றன. இத்தன்மை அந்தந்த உலோகத்திற்குத் தக்கதாய் வித்தியாசமாகும். பொருள்களின் திண்மைக்குத் தக்கதாக அவைகளில் காங்கை செல்லுங்கதி இருக்கும் என்பது பொதுவிதி. இறுக்கமான பொருள்களில் சூடு கதியாயும் இலேசான பொருள்களில்

தடங்கலாயும் செல்லும். பொன்னிலும் கல்லிலும் சூடு கதியாய் செல்லும். நீர்களிலே சூடு செல்லப்பண்ணும் சத்தாகிய சூடேறு மெத்தக் குறைவு. நீர்களைப் பார்க்க வாயுக்களில் சூடேறு என்று தன்மை குறைவு. சிறப்பாக வெட்டவெளியில் மெத்தக் குறைவு.

திடப்பொருள்களிற் போல நீர்களிலும் வாயுக்களிலும் காங்கை ஊடு செல்லாது. ஆயினும் இவைகளின் அணுக்கள் இடம் பெயர்ந்து மாறி மாறிக் காங்கை ஊற்றோடு வந்தணைவதால் அதிகதியாய் இவைகளுக்குள் காங்கை செறியும். நீர் சூடாகையில் அதின் கீழ்ப்பகுதியின் நுண்கள் காங்கை அடைந்து மிதக்கும். அது ஆறுகையில் மேற்பகுதியில் உள்ள நுண்கள் குளிரடைந்துதாழும். ஆகையால் தண்ணீரின் காங்கை ஒன்றில் கதிப்பதாலும் மற்றதில் குறைவதாலும் நுண்கள் ஓட்டங்கொள்ளுகின்றன. ஆகாயத்திலும் மற்ற வாயுக்களிலும் நீர்களிற் போல காங்கை பரம்பும். சூடான எந்தப் பொருளிலும் ஆகாய அணுக்கள் பட்டவுடனே அது எழுப்பும் காங்கையினால் நீர்களிலும் வாயுக்களிலும் சுற்றோட்டம் உண்டாவதுபோல பூமியெங்கும் கடலிலும் ஆகாயத்திலும் சூரியனுடைய வெப்பத்தால் அதிக தீவிரமான பரந்த சுற்றோட்டங்கள் உண்டாகும்.

ஒரு பொருளைச் சூழவிருக்கும் பொருள்களின் காங்கை அதன் காங்கைக்குச் சரியானாலும் வித்தியாசமானாலும் அது இடைவிடாமல் காங்கையைச் சுவாலிக்கும் அல்லது கிரணிக்கும் என்பர். ஒரு பொருள் குளிராகிறது என்பது அது வாங்கும் காங்கையினாலும் அதிகமான காங்கையை விடுவதினாலேயுமாகும். வாங்கும் காங்கையும் பறியும் காங்கையும் சமமாகிய பொருளின் உணர் காங்கை மாறாது விடுவதிலும் அதிகமான காங்கையை வாங்குமாகில் அது சூடு கொள்ளும்.

பொருளிலிருந்து பொருளுக்குச் செல்லும் காங்கை மூன்று வகையாய்ச் செல்வாகும். அது அப்பொருளில் பட்டுத் திரும்பும். அது அப்பொருளால் வாங்கப்படும். அது அப்பொருளை ஊடுருவிச் செல்லும்.

அழுத்தமான உலோகப் பொருள்கள் தங்களில் படும் சூட்டை முதல் தரமாய்த் திருப்பும். காங்கையை இப்படித்திருப்பிவிடும் செயலுக்கு விம்பித்தல் என்று பெயர். காங்கையை உறிஞ்சுந்தன்மை அந்தந்தப் பதார்த்தத்துக்குத் தக்கதாய் வித்தியாசப்படும். இதனை உறிஞ்சு எனப்படும். காங்கையைக் குறைவாய்த்திருப்பிவிடும் பொருள்கள் அதை அதிகமாய் உறிஞ்சும். காங்கையைத் திறமாய் கிரணிப்பவைகள் அதை அதிகமாய் உறிஞ்சும். குறைவாய்த்திருப்பும்.

சூரியனிலிருந்து வரும் வெளிச்சத்தைப் போல் அதிலிருந்து வருங் காங்கையும் குறையாமல் உருவொளியுள்ள எல்லாப் பொருள்களுக் கூடேயும் செல்லும். நெருப்பு முதலியவைகளிலிருந்து வருங் காங்கையோ வெளிச்சத்தை ஊடுசெல்லவிடுகிற பல பொருள்களால் மறிபடும்.

காங்கை திண்மையும் உருவொளியுமான பொருள்களுக்கூடே செல்லும் அளவு அதனுடைய ஊற்றின் வெப்பத்துக்குத் தக்கதாக இருக்கும். காங்கை வித்தியாசப் படுவதற்குத் தக்கதாய் எல்லா சடப் பொருள்

களுடையவும் நிலை மாறும். காங்கை ஏறுவதால் வைரப் பொருள்கள் நீர்களாகும். நீர்கள் வாயுக்களாகும். காங்கை குறைவதால் வாயுக்கள் நீர்களாகும். நீர்கள் வைரப் பொருள்களாகும்.

எந்தச் சடப்பொருள்களிலும் காங்கையுண்டு. அதிலும் சமநிறை வுள்ள வெவ்வேறான பதார்த்தங்கள் ஒரே பாதையில் நிற்பதற்கு வெவ்வேறளவான காங்கை வேண்டியதாகிறது.

பதார்த்தங்களின நிலை, பருமை, வடிவம் என்பவைகள் மாறுவதற்கு ஏதுவான காங்கைச் செயல்களுள் விசாலித்தல், நீராதல், பற்பமாதல் இம்மூன்றும் அதிக தோற்றமானவைகள். காங்கை தான் செறியும் பொருளின் நுண்களை ஒன்றிலிருந்து ஒன்று வில்கும்படி செய்யும் தள்ளும் சத்தொன்றை அதற்குள் செலுத்துவதால் அப்பொருளை விசாலிக் கப்பண்ணும். காங்கை ஏறுவதால் பொருள்கள் விசாலிப்பதும் அது குறைவதால் அவை சுருங்குவதுமாகிய சத்து இயற்கையிலுள்ள மகா வலிய சத்துக்களிலொன்றென்று கருதப்படுகிறது. நீர்கள் காங்கையால் சமயீனமாகவும் அதிகமாகவும் விசாலிக்கும். நீரிலும் வாயுக்களே காங்கைக்கு அதிகமாய் விசாலிக்கும். ஆகவே, காங்கையால் வைரப் பொருள்களிலுண்டாகும் முதல் மாறுதல் விரிவே. காங்கைக்கு உருகுதல், உரைதல், நீராவி ஆதல் (பற்பமாதல்), சிறுகுதல் (Condensation) போன்ற செயற்களை உண்டுபண்ணும்.

தீப்பொருளைப் பற்றி, கற்றுணரும்போது அப்பூதத்தோடு ஒன்றி யிருக்கும் ஒளியைப்பற்றி ஆராய்வோம். ஒளியைச் சாதாரணமாக வெளிச்சம் என்பர். தீ எங்கிருக்கிறதோ அங்கேயே ஒளி திகழ்கிறது. ஆகவே தீயின்றி ஒளியில்லை. ஒளியின்றி தீ இல்லை. ஒளியான பிரபஞ்சப் பொருள்களில் உள்ளும் புறமுமாக நின்று இயங்குகிறது. சில பொருள்களில் அதிக அமைந்து ஒளிர்விட்டு பிரகாசிக்கும். சில பொருளில் குறைந்து உள்ளேயிருந்துகொண்டு மங்கிக் கிடக்கும். இனி ஒளியைப்பற்றி விவரிப்போம்.

## ஒளி (வெளிச்சம்)

வெளிச்சம் இன்னதென்று விளங்காது. இதனை விளக்குவதற்கு இரண்டு கோட்பாடுகள் உண்டு. ஒன்று காலக்கொள்கை மற்றது அலைக் கொள்கை.

பிரபையுள்ள எதும் பொருளிலிருந்து மெத்த நுண்ணிய அணுக்கள் கண்ணுக்கு வருவதினலேயே வெளிச்சம் உண்டாகிறதென்பர்.

அலைக்கொள்கையின்படி எல்லா வெளிகளிலும் எப்பொருளிலுள்ள கண்ணறைகளிலும் நாம் எண்ணவும் கூடாத அளவு நொய்மையான இசிவுள்ள பதார்த்தமாகிய ஆகாயம் நிறைந்து செறிந்திருக்கின்றது. இது பிரபையுள்ள எப்பொருளிலுமிருந்து ஓயாமல் வருகின்ற அலைகளால் அலைவு படக்கூடிய தன்மையுள்ளது. இதிலுண்டாகும் அலைவுகள் கண்ணிற்பட ஒளியென்ற உணர்ச்சி உண்டாகும். முக்கியமான வெளிச்ச ஊற்றுகள் வான சோதிகளே. போதியளவாகச் சூடேற்றும் பொழுது எப்பொருளும் ஒளி வீசும்.

வெளிச்சம் எதிலிருந்துண்டானாலும் அது ஊடு செல்லும் பொருளாகிய மாத்தியம் ஏகத்துக்கு ஒரே தடிப்பாயிருந்தால் அதன் திரணங்கள் நேராகவே செல்லும். பிரபையுள்ள பொருளிலிருந்து புறப் படும் வெளிச்ச கிரணங்கள் நான்கு திசையும் சிதறிச் செல்லும். வெளிச் சத்தின் இத் தன்மைக்கு விகமம் என்று பெயர்.

ஒளி ஓர் பொருளில் விழும்போது அது மூன்று வகையாய் செலவாகும். அது மடங்கித் திரும்பக் கூடும். அது பொருளில் செறிந்து மறையக் கூடும். அது அப்பொருளுக்கூடே உருவி செல்லக்கூடும். ஒரு பொருளிற்படும் வெளிச்சத்தில் மிகுதியான பங்கு திரும்பி கண்ணுக்கு வந்தால் அப்பொருள் வெண்மையாய்த் தோற்றும். மெத்த கொஞ்சம் கருமையாய்த் தோற்றும். கொஞ்சமும் வராதிருந்தால் கறுப்பாய்த் தோற்றும். தம்மில் விழும் வெளிச்சத்தைத்தமக் கூடாகச் செல்லவிடும் பொருள்கள் உருவொளிப் பொருள்கள் எனப்படும். அவ்வெளிச்சத் தைத் தமக்குக் கூடாகச் செல்லவிடாத பொருள்கள் **தம் பொருள்கள்** எனப்படும்.

ஒளி, பொருள்களுக்கூடே சென்ற அல்லது சென்று மடிந்த வெளிச்சம் சிலவேளை மாறி முன்போல் விம்பிக்க, வக்கரிக்க அல்லது செல்லக்கூடாமல் இருக்கும். இம்மாறுதல்களுக்கு ஒளி துருவதம் எனப்படும். இம்மாறுதலால் உண்டான வெளிச்சத்தை துருவதித்த ஒளி அல்லது பஞ்சீகரித்த ஒளி என்பர்.

அலைக்கோட்பாட்டின்படி வழமையான வெளிச்சமானது ஆகாயத்தின் அலைகள் செல்லும் நேருக்குக் குறுக்கே அதன் அணுக்கள் நிறு திட்டமாகவும் திகந்தமாகவும் அசைவதால் உண்டாகும். பஞ்சீகரித்த ஒளி அணுக்கள் ஒரே நிலைக்கு அசைவதால் உண்டாகும் பஞ்சீகரண ஒளியைப் பிறப்பிப்பதற்குக் காரணமாகும்.

அணுக்கள் ஒரே நிலைக்கு மாத்திரம் அசையவிட்டு மறு நிலைக்கு அசையாமல் தடுக்கும். ஆதலாற்றான் கிரணத்தின் அயற் பக்கங்கள் வெவ்வேறு தன்மைகளைக் கொள்ளுகின்றன.

ஒளியைப் பஞ்சீகரிப்பதில் மூன்று வகையுண்டு. முதலாவது கிரணம் ஒளியை விம்பிக்கவிடும். பொருளில் விம்பித்து இலம்பத்துக்கு ஐம்பத் தாறு பாகை நாற்பத்தைந்து கலையளவான பதன கோணத்தில் நிற்கையில் பஞ்சீகரிக்கும்.

மினுக்கமுள்ள உலோகமல்லாப் பொருளில் இருந்து விம்பித்தாலும் அது ஒளி துருவதமுறும் என்றாலும் பூரணமாய் பஞ்சீகரிக்கும் பகோணம் அந்தந்தப் பொருளுக்கு வெவ்வேறாகும்.

இரண்டாவது, வெளிச்சம் ஒன்றாக அடுக்கியிருக்கிற மெல்லிதான பதினாறு பதினெட்டு கண்ணாடி தகடுகள் அல்லது அப்பிரகத தகடுகளுக் கூடே சென்றால் பஞ்சீகரிக்கும்.

மூன்ருவது, வெளிச்சம் உருவெளியுள்ள சில உப்புச்சத்து அணுக்களுக் கூடாகவும் அவைகளுள் சிறப்பாக இணைவக்கீரத் தன்மையுள்ள இலவற்றுக் கூடாகவும் பஞ்சீகரிக்கும்.

எவ்வகையாகிலும் துருவதமுற்ற வெளிச்ச கிரணம் பக்கங்களை அடைவது போலத் தோன்றுகின்றது.

சுய கிரணம் திரண்ட கம்பி போன்றது. வெண்மை அல்லது மினுக்கமரனதும், தன்னில் எந்தப்பக்கமாவது மினுக்கமுள்ள ஓர் பொருளில் பட்டால் அப் பொருளில் நின்று விம்பிக்கக்கூடியதுமென்று எண்ணிக்கொண்டால் துருவதமுற்ற கிரணம் சதுர வடிவமான கம்பி போலவென்று சொல்லலாம். இதில் ஒன்றுக்கொன்று எதிரான இரண்டு பக்கங்கள் மனுக்கமும் பிரடையும் விம்பிக்கக்கூடியதுமாய் இருக்கும். மற்ற இரண்டு எதிர்ப் பக்கங்களோ கருமையும் விம்மியாதவைகளுமாய் இருக்கும். யாதொரு பொருளில் எதிர் தன்மையுள்ள பக்கங்கள் அல்லது முனைகளுக்கே துருவதம் என்று சொல்வது தன, இருண துருவதங்கள் எனப்படும். இதைக் கொண்டு ஒன்றுக்கொன்று சரி கோணத்திலிருக்கிற பக்கங்களையுடைய வெளிச்சக் கிரணம் ஒளி துருவதித்த கிரணம் எனப்படும்.

பஞ்சீகரித்த ஒளியைப் பற்றிய விதிகள் அநேக காரியங்களுக்கு உபயோகமாகும்.

மாறுதலடைந்த கண்ணுடிக்கூடாக வாடிக்கையான வெளிச்சம் செல்லாவிட்டால் அம்மாறுதல் தெரியவராது. அதிலும் பஞ்சீகரித்த ஒளியை உருவொளியுள்ள ஓர் பொருளிலிருந்து சரி கோணத்தில் விழுந்து இக் கண்ணுடிக்கூடே செல்லவிட்டு அதற்கூடே பார்த்தால் அதில் நெருக்கப்பட்ட அல்லது மெல்லியதாக்கப்பட்ட பகுதிகளைக் குறிக்கும். அதில் பிரகாசமான நிறங்கள் தோற்றும். இவ்விதமாகவே பஞ்சீகரித்த வெளிச்சத்தைக் கொண்டு உருவொளியுள்ள ஒரு பொருளில் சில பகுதியில் நுண்கள் அடர்த்தியென்றும் சில பகுதியில் அடர்த்தியில்லை யென்றும் கண்டுபிடிக்கலாம். உருவெளியாகவும் எகத்துக்கு ஒரே தன்மையாகவும் தோற்றுகிற அநேக பொருள்களைப் பஞ்சீகரித்த வெளிச்சத்தில் பார்க்கிறபொழுது அவைகளின் நுண் அடுக்கு மிகப்பணிக்கு என்று காண்கிறோம். இந்திரியப் பொருள்களின் தோல் வகையான பதார்த்தங்கள் பஞ்சீகரித்த வெளிச்சத்தில் மெத்த துலக்கமகாவும் நூதனமாகவும் அலங்காரமான வடிவமும் நிறங்களும் காட்டும்.

தாவரங்கள் துலக்கத்தில் குறைவென்றாலும் அவைக்களுக்குள்ளேயும் நேர்த்தியான காட்சிகள் நிறைய உண்டு. அரிசிமா, கிழங்குமா முதலியவைகளிலுள்ள நுண்ணிய மணிகளில் அநேக நூதனம் காணலாம். சிற்சிறு படிமங்கள் (Crystals) கூட பஞ்சீகரித்த ஒளியைத் திறமாய்க் காண்பிக்கக்கூடியவைகள்.

இவவிதமாகவே மாயகாரியங்களினால் படிமங்களிலிருந்து ஏற்பட்ட பொன்னிலிருந்து வெளிச்சம் விம்பிக்கும் அல்லது பஞ்சீகரித்த விதத்தை கொண்டு அப் பொருளில் வேறேது பொருள்கள் கள்ளமாய்ச் சேர்க்கப்

பட்டதோ என்று அறியக்கூடும். மேலும் பஞ்சீகரித்த வெளிச்சம் சாறுகளிலேயும் கூட்டு நீர்களிலேயும் சேர்ந்திருக்கும் அல்லது காணப் படும் சக்கரை படிமங்களின் வகையையும் பிரமாணத்தையும் அறிவதற்குத் துணையாகிறது.

மற்றும் பஞ்சீகரித்த ஒளியின் பாகையைக் காந்த சக்தி மாற்றக் கூடும்.

கிரணங்கள் எழுங்கிளர்ந்தெரி பொங்கிக்
கரணங்கள் விட்டுயிர்தானெழும் போதும்
மரணங்கை வைத்துயிர்மாற்றிடும் போதும்
அரணங்கை கூட்டுவ தஞ்செழுத்தாமே

(திருமந்திரம் 2653)

வெள்ளையானாலும் ஏற்ற கருவியால் செந்நீலம், ஊதா நீலம், வெண்ணீலம், பச்சை, மஞ்சள், செம்மஞ்சள், சிவப்பு என்ற ஏழு நிறக் கிரணங்களாகச் சேர்ந்து வெள்ளையாகத் தோன்றும் வெளிச்சம் இவைகள் சேர்ந்து எரி ஒளியுண்டாகும்.

சூரிய வெளிச்சம் வெள்ளையானாலும் ஏழு நிறங்களாக வக்கரிக்கும். இந் நிறங்கள் ஒன்றேடொன்று ஒன்றன்பின் ஒன்றாய் அடுக்காக வான வில்லில் காணலாம்.

சூரிய வெளிச்சத்தினால் ஏழு நிறங்கள் வக் கிறபோது காணுவதை "நிற அடுக்கு" அடர்த்தி என்றும் கூறுவர். அந்தந்த இனமான செயற்கை வெளிச்சங்களின் வரி நிலை வெவ்வேறே.

நிற அடுக்குகளுக்கு அகலத்திலும் துவக்கத்திலும் வித்தியாசமான வரும் வரிகள் பல நிற அடர்த்திகளின் குறுக்கே ஓடுகிறதைக் காணலாம். இக் கருமையான இவ்வரிகளைக் கச்சங்கள் மாயா காரியத்தால் உண்டாகு மென்பர். இதனால் சூரியனைச் சூழ்ந்திருக்கும் ஆகாயத்தில் சில வாயுக் கள் இருப்பதினாற்றான் அவைகளின் வெளிச்சத்தால் உண்டாகும் கச்சங்கள் வித்தியாசப்படுகின்றன. இதேபோல் அந்தந்த உலோக உப்புக்கள் நிறமற்ற சுவாலையில் எரிவதால் அச் சுவாலையில் உண்டாகும் நிறத்தைப் பிடித்து எரியும் உப்பு இன்ன தென்று சொல்லலாம்.

ஈதன்றி சூரிய வெளிச்சத்தில் நிறத்தைப் பிறப்பிக்கிற பிரபையைத் தவிர காங்கையையும், அக்கினிகமும் இருக்கின்றன. பிரபையைத் தவிர மற்ற இரண்டும் கண்ணுக்குத் தெரியாது.

எந்தப் பொருளும் வெளிச்சம் பட்டால் மாயாகாரிய மாறுதல் அடை யாமற் போகாதென்று விளங்குகிறது. பகற்காலத்தில் வெயிலினால் பொருள்களின் அணு நிலைமையில் உண்டாகும் மாறுதல்கள் இரவில் திருந்தும். பிராணி தாவரம் என்ற எவ்வகைப் பொருளின் சுக நிலைமைக் கும் வெளிச்சம் மாத்திரமல்ல இருளும் தேவையென்று அவசியமாயிற்று.

சூரிய கிரணத்தில் சேர்ந்திருக்கிற பிரபை, காங்கை, அக்கினிகம் இம் மூன்றும் தாவரங்களில் அதற்குரிய நயங்காட்டும். பிரபையின் நயத்தினால் பயிர், பிராணிகள் வளர்ந்து நிறங்கொள்ளும். காங்கையினால் அவைகள் இனப்பெருக்கம் விளையும். அக்கினிகத்தால் வித்துக்கள் முளைக்கும். ஆகவே பூமியில் வாழும் தாவர, பிராணிகளின் வாழ்விற்குப் பிரமாண மான ஊற்றாக இருந்து வருகிறது. எனினும் ஒவ்வொரு அணுக்கள் தோறும் இவைகள் மிக மிகச் சிறு பிரமாணமாக இருப்பதால் பிரம் மாண்ட ஊற்றினால் தூண்டப்பட்டு அறிவுறுத்தப்பட்டு, தானும் விருத்தி யடைந்து எளிதாகி பிறகு செலவிடுகிறது. ஆகவே "இல்லது போகாது உள்ளது வராது" என்ற அடிப்படையைக் கொண்டுள்ளது.

---

# அத்தியாயம் 6.

## உயிர்

அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள் செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந்தேனே.

(திருமந்திரம் 2317)

அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்டு
அறைகின் றனமறை யீறுகள் தாமே.

(திருமந்திரம் 2318)

அறிவறியாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போது
அறிவா யவற்றினுள் தானுயறிவின்
செறிவாகி நின்றவன் சீவனுமாமே.

(திருமந்திரம் 2322.)

தொன்மை மலத்தாலும், பன்மை மருளாலும் ஆருயிர் தன்னைச் செறியும் அறிவு வடிவென்று அறியாதிருந்தது. அவ்வுயிர்கள் மாட்டுப் பேரருள் பூண்டு அவ் வுயிர்களை விளித்து **நீவிர் அறிவே வடிவமாக வுடையீர்** என்று 'அறிவுருத்தருள்வன். தொன்மை சார்பால் அறிவு விளங்காதிருந்தீர். பின் மாயை சார்பால் மருள் கொண்டு தெருளாதிருந் தீர். சிவம் அறிவிக்கயானுகிய **உயிர்** அறிவுவடிவென்று அறிந்தேன். ஆருயிர்களின் அறிவுக்குக் கேடாகிய அழிவும் தோற்றமாகிய ஆக்கமும் இல்லை. சிற்றறிவுள்ள உயிர்களுக்கு முற்றறிவுள்ள சிவமே நிலைத்த சார் பாகும். வேறு சார்பில்லை.

மாயா காரியக் கருவிகளைக் கொண்டு அறியும் அறிவு சுட்டறிவு. அறிந்ததைக் குறித்தலும் அறிந்தேன் என்றலும் சிற்றறிவு. இவ்விரண் டும் புல்லறிவு. இருட் சார்பால் எதும் அறியா நிலைமை அறியாமை. இது பேதமை. எனவே, பேதமையும் புல்லறிவாண்மையும் ஆகிய அறியாமை, அறிவென்னும் இரண்டினையும் கடந்து நீங்கினவை மேலான முற்றறிவு. அதுவே பொறி வழிச் செல்லா நெறி நிற்கும். பொறி வழி நீங்கினவுடன் எங்கும் தானுக விளங்கும். தானான போது நல்லறிவாகிய சிவம் சிவ வுணர்வாய் அவற்றினுள் தான் ஒடுங்கி நிற்பது. ஆதலின் அறிவின் செறிவாகி நிற்கும் அது. அதுவே உயிருக்குயிராய் **சிவனு மாகும்.**

ஆருயிர் கேவல மாமாயை இன்னடந்து
ஆருயிர் மாயை எறிப்ப அறிவுற்றுக
காமிய மாயேய முங்கல வாநிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாகுமே.

(திருமந்திரம் 2190)

சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மால் நீடுபல் தேவர்கள்
நிகழ்நரர் கீட மந்தமு மாகுமே.

(திருமந்திரம் 2191)

புலம்பு நிலையிற் கிடந்த வுயயிர் மாமாயையின் கண் உறையும். அவ்வுயிர், பின் முப்பத்தாறு மெய்களுடனும் கூடும். இம்மெய்களுடன் கூடியதும் "மாயாதனுவிளக்காம்" என்ற முறைப்படி சிறிது அறிவு விளங்கும். அதனால் காமியமாகிய வினைகளும் மாயேயமாகிய கருவிகளும் உயிருடன் பொருந்தித் தொழிற்படும். இந்நிலையில் அவ்வுயிர் அக் கருவிகளுடனிடத்துப் பற்றக் கொள்ளும். இந்நிலையைப் புணர்வு நிலை என்பர்.

கருவிகளுடன் கூடிய புணர்வு நிலையிற் சார்ந்தோர் புணர்வினராவ (சகலர்). இவர்கள் மும்மலப் பிணிப்பினர். ஒப்பில்லாத அயன், மால், பல தேவர்கள் இவ்வுலகில் வாழும் மக்கள் முதலாகப் புழு ஈறாகச் சொல்லப்படும். மும்மலப் பிணியினராவார். புழுவுக்குரிய குணங்கள் நான்கு. அவை அருந்தல், பொருந்தல், அனந்தல், அச்சம் என்பன. இவற்றை உண்டல் உடனுறைதல், உறங்கல், உட்குதல் எனவும் கூறுப.

உயிர்க்குயி ராகிய வுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சக்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருள் மூடமாமே.

(திருமந்திரம் 2170)

சிவம் அனைத்துயிர்களுடனும் கலப்பால் ஒன்றாகியிருக்கிறான். அந்நிலையில் உயிர்க்கு உயிராகிய உருவாகவும் அருவாகவும் விளங்குகிறது. அதாவது, சிவம் உயிர்க்கு உயிராய் நிற்கும் போது அருவன் எனவும் உடலாய் நிற்கும் போது உருவன் எனவும் கூறப்படும். சிவம் பேரறிவு பேராற்றலாகிய சக்தியுடன் கலந்து வெளிப்படும். அவ்வாற்றலால் அதையும் அது திரு உள்ளக் குறிப்பினையும் (உயிரையும்) நயக்கும். அதனால் உலகமும் உலகத்துடன் ஒட்டிய உயிர்களும் ஓவாதியங்கும். இல்லாவிட்டால் எல்லாம் இருள் மூடிக் கிடக்கும்.

எனவே, திரு மூலர் உயிரையே அறிவு என்கிறார். உலகில் ஒவ்வொரு அணுக்கள் தோறும் உயிர் உள்ளன. ஆனால் அவத்தை பேதத்தால் அறிவுற்ற அணு சீவன், (சிற்றறிவு) என்றும் அறிவற்ற அணு (பொருள் அணு, உடல் அணு, சட அணு) என்றும் பகர்கினறார். இவைகளுக்கும் மேலான அணு உயிருக்குயிரான அணு அருவம். அது தான் பேரறிவு, முற்றறிவு, உயிருக்குயிர் என்றார்.

அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற் கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே

(திருமந்திரம் 2542)

உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படருஞ் சிவசக்தி தாமே பரமாம்
உடலை விட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் கரக்குஞ் சிவத்தே.

(திருமந்திரம் 2543)

பளிங்கின் நிழலும் பிற நிழலும் உச்சிக் காலத்துக் கதிர்ச் சாய்வு இன்மையால் புறத்துப் புலனாவதில்லை. ஆனால் கதிரும் உருவும் கலந் தொன்றாய்விடுகின்றது. அதுபோல் உயிரும் பிறவா நிலை எய்தும் பெற்றி வாய்ந்த பொழுது திருவருளில் கலந்துவிடும். இம் திறையினைச் சாயா புருடன் அழிகின்றது போல் என கூறினர். நீரில் தோன்றி நீரில் கழியும் நீர்க்குமிழி போன்ற இவ்வுலகும் அண்டத்தமைந்துள்ள மெய்யாகிய தத்துவங்களின் இனமாய்த் தோன்றுவதால் அவ்வம் மெய்கள் அவ்வம் மெய்களில் அடைந்துவிடும். அடையவே அதனகத்துத் தங்கியிருந்த உயிர் என்றும் புகலிடமாகவுள்ள திருவருளில் கலந்துவிடும். கருப்பூரம் கொளுத்தப்பட்டு எரியுங்கால் பற்றுக்கோடுள்ள பருப் பொருளாகத் தோன்றுகின்றது. எண்ணெயும் திரியும் கலந்த திரு விளக்கில் திரி பற்றுக் கோடாக எண்ணெய் அதன் சார்பாக எரிகின்றது. அதனால் திரியின் எச்சம் தென்படுகின்றது. ஆனால் அவ்வெண்ணெயே தனிச் சார்பாக எரியுமானல் எச்சம் காணப்படாமை போன்று கருப்பூரம் தீபமா கும். அதுபோல் உடம்பும் திருவருளால் நுண் தன்மை எய்தி நுண் மெய்க் கண் அடங்கும். அடங்கவே ஆருயிர் திருவருளில் அடங்கிவிடும். இம் மூவகை ஒப்புகளாலும் திருவருளால் உடல் நுண் மயமாய்ப் பிரிந்து நுண் மெய்க் கண் அடங்குவதும் ஆருயிர், திருவருளில் கலப்பதும் இங்குக் குறிப்பிடப்பட்டன.

உடலும் உயிரும் நீக்கமற ஒன்றியிருந்தன. தேனும் இன்னமுதமும் தேக்கிலைக் கல்லையில் (தொன்னை) ஒழிவற நிற்பது வானும் விழையும் மானுடர் பருகுவதற்கேயாம். அவை பருகப் பட்ட பின் அக் கல்லைகள் மண்ணோடு மாய்ந்து மறைந்து போம். அது போல் உடம்பகத்துள்ள ஆருயிரும் சிவத்தினை அடைந்ததும் அவ்வுடம்பும் நுண் மெய்யுடன் கரைந்து கலக்கும். கலக்கவே அவ்வுயிர்க்குச் சிவமும் சிவ சக்தியாகிய

சிவையும் புகலிட மெய்யாகும். உயிர் எங்குமாய்ப் பரம்பும் இயல்புற்று ஆற்று நீர் அருவி வீழ் மலை தொட்டுப் பெருகு நீர் அலைவரைப்பரம்பி நிற்கும் தன்மை வாய்ந்தது. அணையுயர்த்திச் சிறை செய்யப்படுமானால் அந் நீர் கட்டுப்பட்டு ஒரு வழிப்படுவதைக் காண்கிறோமன்றோ? அது போலவும் உடலிற் கட்டுப்பட்டு ஒரு வழி செல்லும் ஆருயிர், அருளால் கட்டகன்றதும் அத் திருவருள் எங்குமாய்ச் செறிந்து நிற்பது போன்று அவ்வருளில் கலந்த அவ்வுயிரும் எங்குமாய்ச் செறிந்து நிற்கும்.

அறிவறி வென்ற அறிவுமனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே

(திருமந்திரம் 2366)

ஆருயிரை அறிவென்றும் பேருயிரை அறிவிக்கு அறிவென்றும் கூறுவர்.

பசுபல கோடி பிரமன் முதலாய்ப்
..................................
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே

(திருமந்திரம் 2367)

பாசத்தால் கட்டுண்ட உயிரைப் பசு எனக் கூறுவர். பாசத்தால் கூடப்பட்டவுயிர் பசு எனப்படும். அப் பசுக்கள் பிரமன் முதலாகச் சொல்லப்படும் எண்ணில்லாத பல கோடி உயிர்களாகும்.

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிரமாயினால்
ஆவியின் கூறு நூறாயிரத் தொன்றாமே.

(திருமந்திரம் 1974)

திருமூலர் ஆருயிரின் வடிவத்தைக் கூறலுற்றார். பசுவினது மயிர் ஒன்றினை எடுத்து நூறு பங்கு செய்தல் வேண்டும். பின்பு அந்நூறில் ஒன்றினை எடுத்து ஆயிரம் கூறு செய்தல் வேண்டும். அந்நிலையில் ஏற்படும் ஒரு கூற்றினை நூறாயிரம் கூறு செய்தால் எவ்வளவு ஏற்படுமோ அவ்வளவாகும் ஆருயிரின் வடிவம். ஆகவே பசு என்னும் ஆன்மாவின் வடிவம் அணு. ஆன்மா என்னும் அணு, பதியைக் கொண்ட அணு. பதிக்கு உடல் ஆன்மா அணு. ஆகவே பதி பரம அணுவாயிற்று. திருமூலர் உயிரை அணுவென்றே பலவிடங்களில் திருமந்திரத்தில் கூறியிருக்கின்றார்.

இவ்வாறு திருமூலர் கூற்று உயிரைத் தெள்ளெனக் கூறியிருந்தும், இன்றைய நாளில் உயிர் என்ற அருவப் பொருளை வேறு உருவப் பொருளின் அடிப்படையில் தான் வர்ணிக்க வேண்டியிருக்கிறதென்று சில தற்கால அறிவியலறிஞர்கள் கூறுகின்றார்கள். உயிர் என்பது உருவப் பொருளினுள்ள அருவப் பொருள் இயங்குதலென்று சிலர் சொல்லுகின்றார்கள். மேற்கூறிய இலக்கணப்படி எல்லா உருவப் பொருள்களும் உயிர் உள்ளவையாகும். ஏனெனில் உருவப் பொருளாயினும் அவற்றைத் தோற்றுவித்த அருவப் பொருள்களும் உணர்ச்சிகளும் அவற்றில் பொதிந்து கிடக்கின்றன.

மேற்கூறியவரையறை சரியல்ல என்கிறார்கள் சிலர். உயிருள்ள பிராணிகளில் உயிர்ச் சக்தி என்று இருப்பதாக அவர்கள் ஒப்புக்கொள்ளுகின்றார்கள். இந்த உயிர்ச்சக்தியை அறிவது எப்படியென்றால் நகருதல், உணருதல், சலனப்படுதல் ஆகிய செய்கைகளின் மூலம் அதனை உணர வேண்டும். அவ்வாறனால், பொருள் இயக்கத்தின் அடிப்படையில் உயிருக்கு இலக்கணம் கூறவேண்டும் என்கிறார்கள்.

உயிர்ச் சக்தி ஏகின சில மணி நேரங்களுக்குப் பின் உருவப் பொருள் வேறொரு உருவப் பொருளாக மாற்றம் அடைகிறது. இவ்வாறாக மாற்றம் அடைந்த பொருளில் உயிர்ச் சக்தி இல்லை என்று சொல்லுவதா? உயிரற்ற உருவப் பொருளிலிருந்து உயிர் உள்ள பொருளாகத் தோன்றியதா அவற்றிற்கு இப்பொழுது உயிர்ச் சக்தி இல்லை என்று சொல்லலாமா ? பால் கொடுக்கும் பிராணிகள், பறவைகள் இவைகளின் உடல் குளிர்ந்து விட்டால் இறந்து போய் விட்டன என்று சொல்லுகிறோம். ஆனால் பால் கொடுக்காத பிராணிகளும், தவளை, நத்தை போன்ற பிராணிகள் ஆகியவைகளுக்கும் இச்சோதனை பொருந்தாது. அவற்றின் உடல் எப்பொழுதுமே குளிர்ச்சியாகத்தான் இருக்கும். செடிகள் உயிரோடு இருக்கின்றனவா? உயிரோடு இருக்க வேண்டுமானால் அவை வளருகின்றனவா? அல்லது உலர்ந்து போய்விட்டதா? என்று கவனிக்கவேண்டும்.

ஆகவே இச்சோதனைக்கெல்லாம் பொதுவான இலக்கணம் எது? மாறுதல் அல்லது சலனம், சூடு என்று சொல்கிறார்கள். அணுக்களின் ஒழுங்கற்ற சலனமே மாறுதல் என்று கூறுகின்றனர். இவையனைத்தும் வெளித் தோற்றத்தைப் பற்றியது என்று சிலர் மேற்சொன்ன ஆதாரங்களை மறுக்கின்றார்கள்.

வெளித் தோற்றத்தை விட்டு உள்ளமைப்புகளில் ஏற்படும் இராசயன மாறுதலே சலனத்திற்குக் காரணமென்று சிலர் கூறுகின்றனர். இவ்வித இராசாயன நிகழ்ச்சி சதா மாறுதலடைந்து கொண்டே இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட வழியில் பொருள்கள் ஒன்றொடொன்று சேர்ந்து புதுப் பொருளாக உருவெடுப்பது தான் உயிர்களின் அறிகுறி என்கின்றார்கள் உயிர் என்பது முக்கியமான ஒருவகைப்பட்ட இராசாயன மாறுதல் நிகழ்வதுடன் எல்லா உயிர்ப் பொருள்களிலும் ஒரு குறிப்பிட்ட உணர்வும் நோக்கமும் ஏற்படுகின்றன. பலவகையான உயிர்களின் உடலில் காணப்படும் பொருள்கள் வித்தியாசப்படுகின்றன. மரத்தில் எரிக்க வைக்கக்கூடிய பொருள் அதனுள் இருக்கிறது. அதே பொருள் மனிதனது உடலிலிருந்தும் பொருள்கள் வெளிப் பார்வைக்கு மரத்தைப் போல் இல்லை. ஆனால் மரம் எரிகிறது. மனிதனின் உடல் எரியப்படுவ

தில்லை. எனினும் மரத்தில் நிகழும் இராசயன மாறுதலுக்கும் மனிதல் நிகழும் இராசயன மாறுதலுக்கும மிகுதியான ஒற்றுமை இருக்கிறது. ஆகவே உயிரை இன்ன வகையில் குறிப்பிட்டுக் கூறுவது கடினமென்று கருதுகின்றனர்கள். உயிரை இன்னதென்று அறியலாம். ஆனால் அதை விவரிப்பது கடினம்.

ஆதி சக்தி (ஒளி), பராசக்தி (ஒலி), ஞான சக்தி (அறிவு), கிரியாசக்தி (தொழில்), இச்சா சக்தி (அன்பு) போன்ற சக்திகளும், மின்சக்தி, காந்த சக்தி, கதிர் இயக்கச் சக்தியென்னும் சக்திகளும் இவை போன்ற வேறு சக்திகளும் பூதமண்டலத்திலும் எண்ணத் தொலையாத வேறு மண்டலங்களிலும் காணப்படுகின்றன. எல்லா சக்திகளையும் ஒன்றாக இசைத்து கூட்டி அமைப்பதில் ஏற்படுகின்ற சக்தி ஒன்றே உயிர் என்றும் குண்டலினி சக்தி என்றும் பேரறிஞர்கள் கூறியிருக்கிறார்கள. இந்தச் சக்திக்கும் மற்ற எல்லா சக்திகளுக்கும் அமைந்திருக்க ஒரு நடுநிலை உண்டு. அந்த நடுநிலையத்தைப் பரம் என்றனர். அப் பரத்தில் ஆதி சக்தி தங்கி அங்கிருந்து மற்றனைய சக்திகளை ஏவல்புரிந்து ஆட்சி செய்கிறது. ஆதி சக்தி சிவ சக்திக்கு உடல். பரத்தில் சிவ சக்தியும் இணைபிரியா நிலையிலுள்ளது. ஆகவே இச் சக்தி அனாதி. அதனை ஆதி உயிருக்கு உயிரான பொருள் என்றனர். திருமூலர் தம் திருமந்திரத்தில் அணுவில் 40,048,500 நுண்மையிலும் நுண்பொருள்கள் உள என்று கூறியுள்ளார். அதனை

நாலொரு கோடியே நாற்பத்தெண்ணாயிர
மேலுமோ ரைந்நூறு வேறா யடங்கிடும்
பாலவை தொண்ணூ றோடாறுட் படுமவை
கோலிய ஐயைந்து ளாகுங் குறிக்கிலே

(திருமந்திரம் 2138)

என்ற பாடலின் வாயிலாய் அறியலாம்.

அணுவில் 40,048,500 தத்துவங்கள் அல்லது மெய்கள் சிறப்பாகக் காணப்படும். அவை அனைத்தும் தொண்ணூற்றாறென்று கூறப்படும் மெய்களினுள் அடங்கும். அவற்றையும் அடக்கிக் கூறினால் இருபத்தைந்து மெய்களுள் அடங்கும். ஆதி சக்தி நடுவானத்திலிருந்து கொண்டு உயிரையும் மேற்சொன்ன மெய்களையும் ஒரு குறிப்பிட்ட அளவோடு ஒன்றாகக் கூட்டி ஒரு விலமாகப்படைப்பிக்கின்றது. அதாவது சதாசிவம் தோன்றும்.

தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானேயிவை செய்து தான் முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனுமாமே

(திருமந்திரம் 1778)

எங்கும் நிறைந்து எவற்றினும் பிரிப்பின்றித் திகழும் சிவம் உயிரின மாட்டுவைத்த அரும் பெரும் தலையாளியல் தூண்டுவாரும் வேண்டுவாரும் எவரும் இன்றிய அருளே துணையாகக் கொண்டு தன் கருத்தானே படைப்பு முதல் வீடு பேறு ஈருகவுள்ள எல்லாச் செயல்களையும் புரிந்தருள்வன்.

படைப்பாதியாவது பரஞ்சிவஞ் சக்தி
இடைப்பால் உயிர்கட கடைத்திவை தூங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலமப் பாத்தே.

(திருமந்திரம் 2376)

ஆருயிர்கட்கு உடல் கலன் உலகு ஊண் முதலியவற்றைப் படைத்தருள் வேண்டுமென்று தொண்மைக் கண் திருவுள்ளங் கொண்டது முழுமுதற் பெரும் பொருளாம் சிவம் ஆகும். அச்சிவம் வைப்பாற்றலாகி மாயையினின்று இவற்றைப் படைத்து உயிர்கட்கு அளித்துக்காத்தருள் கின்றன. கருவின்றிக் கருத்தாலியற்றுவிக்கும் கடவுட்செயல். ஆகவே ஓர் அணுவிலிருக்கின்ற பரம்பொருள் சிவம் தன் கருத்தளவானே ஏனைய மெய்களைக் கொண்டு ஓர் விலத்தைப் படைப்பிக்கின்றது.

ஆனால் இன்றைய நாளில், ஆதி உயிர் பொருள் செய்து படைத்ததைப் பார்த்து அதைப் போல் இரசாயன மூலம் பொருள்களை எப்படியெல்லாம் ஒன்றாகக் கூட்டி சேர்த்தாலும் பிராணிகளிலிருக்கும் உயிர்ப்பொருளாக ஆவதில்லை. அறிவற்ற பொருள் தானாகவோ பிற அறிவற்ற பொருள் களாலேயோ அறிவுற்ற பொருளாக மாற்ற முடியாது. அறிவற்ற பொருளில் தங்கிச் செயல் புரியும் ஆதி சிவசக்தி அறிவற்ற பொருளை அறிவுறுத்தினால்தான் அறிவுற்ற பொருளாக மாறும் ஆனால, மனிதனுள் இயங்கும் உயிர் பேருயிருடன் ஒன்றைக் கலந்துநின்றகாலத்து அறிவற்ற பொருளை அறிவுறுத்தி அறிவுற்ற பொருளாக்கலாமென்று சித்தர்கள் கூறியிருக்கின்றார்கள்.

பிராணிகள் இறக்கும் பொழுது அவற்றின் உயிர் எங்கே போகிறது? இறந்த பின் உடல் உடலாக இருப்பதில்லை என்பதைக் கண்கூடாகப் பார்க்கின்றோம். உயிர் குடியிருக்கும் வீடாக அமைந்த உடல் பலவித மண் நீர், தீ, வளி, ஆகாயம் என்பவைகளாகப் பிரிந்து விடுகின்றன. அந்த நிலையில் உயிர் மட்டும் தனிமையாக இருக்கமுடியுமா? உயிர் என்பதைச் சிந்திக்கும்போது உயிர் குடியிருக்கும் உடலைப்பற்றியும் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. இப்படி இருக்கும் உயிரை ஆன்மா என்றும் பரமான்மா என்றும் கூறுகின்றார்கள். சிலர் உடம்பு வேறு ஆன்மா வேறு உடல் அழியும் ஆன்மா அழிவற்றது என்றெல்லாம் கூறுகின்றார்கள். உயிர் சரீரத்தை விட்டுப் பிரிந்து மற்றொரு உடலைத் தாங்குகிறதென்று சொல்கிறார்கள். இவையெல்லாம் அஞ்ஞானத் தால் பேசும் வார்த்தைகள். அணுக்கள்தோறும் உயிர் கடந்தும் கலந்தும் அனாதியாக இருக்கின்ற காலத்து அது சரீரத்தை விட்டு எங்கும் செல்வதேயில்லை. உயிருக்கு அனாதியாக ஐந்துவித சலனங்கள் அல்லது அவத்தைகள் உண்டு. அவை (1) விழிப்பு நிலை, (2) கனவு, (3) உறக்கம்,

(4) பேருறக்கம், (5) உயிர்ப்படக்கம் என்பவைகளாகும். உயிர் இவ்வைந்து வித சலனங்களில் மாறி மாறி செயல் புரிந்துகொண்டேயிருக்கும். உயிர் சலனமுற்று இருக்கிற காலத்து விழிப்பு நிலை ஏற்படும். உயிர் உறக்க சலனத்தை அடைந்தால் உடல் பிணமாக மாறிவிடும். உடல் அநேக உடலணுக்களால் ஆனது. அவைகள் அறிவற்றவை, அவை விழிப்பு நிலை சலனத்திலுள்ளன. சலன பேதத்தாலோ தத்துவங்களின் பேதத்தாலோ, காலச்சக்கர ஆணையினலோ உடலணுக்கள் உறக்க நிலை அடைந்ததும் அவைகள் அறிவற்றவைகளாக பிரிகின்றன. அதாவது அவைகள் சட அணுக்களாக மாறுகின்றன. இந்த மாறுதலைத்தான் சாவு என்கிறோம். ஆனல் உயிர் உடலை விட்டுப்பிரிந்து போவதாகச் சொல்வது மயக்கமே ஒழிய வேறு அல்ல.

இன்றைய நாளில் உயிரைப் பற்றி என்ன கருதுகிறார்கள் என்று ஆராய்ந்து உடலில் உள்ள உயிரின இயல்பைக் கவனிப்போம். ஆன்மா இந்த மனித உடலில் இருப்பிடம் எங்கே? மூளையில் இருக்கின்றதா? மூளை சிந்திக்கும் இயந்திரசாலை. ஆகையால் மூளையில் தான் ஆன்மா இருக்கிறதென்று சிலர் கூறுகின்றனர். நம் மனதைக் குறிப்பிட்டுப் பேசும் போது நமது மார்பைக் கையினல் தொட்டுக்காட்டிக் குறிப்பிடு கின்றோம். அளவு கடந்த பயம், இன்பம் அல்லது துன்பம் ஏற்படும் போது நம்முடைய இதயம் அளவுக்கு மிஞ்சியோ குறைவாகவோ படபடக்கத் தொடங்குகின்றது இதனல் சிலர் இதயத்தில் உயிர் இருக்கிறதென்று சொல்லலாமே என்று கூறுகின்றனர்.

ஒருவன் மிகவும் உயரமான இடத்திலிருந்து கீழே விழுந்தால் கழுத்தெலும்பு முறிந்து போகும் போது இந்த இடத்திலே தான் உயிர் போகிறது என்றெண்ணுகிறார்கள். தூக்குத் தண்டனை பெற்றவனுக்கும் மரணம் ஏற்படுவதற்காகக் கழுத்தெலும்பை முறிப்பதன் காரணம் இதுவே ஒரே கணத்தில் நோவு ஒன்றும் தெரியாதபடி ஒருவனை உயிர் இழக்கச் செய்யலாம், அப்படியானல் கழுத்தெலும்பு முறியும் இடத்தில் உயிர் இருப்பதாக எண்ணலாமா?

நடு வயிற்றில் முதுகெலும்புக்கு முன்பாக நரம்பு மண்டலம் ஒன்று இருக்கிறது. நடு வயிற்றில் உதை கொடுப்பதால் இந்த நரம்பு முடிச்சில் பட்டு உடனே மரணம் ஏற்படலாம். அப்படியானல் இந்த நரம்பு மண்டலத்தை உயிர் தங்கியிருக்கிற இடமாக எண்ணலாமா ? ஒரு மனிதனுக்குப் பிராணன் இழுத்துக் கொண்டு இருக்கும்போது சுவாசப் பைகளும் இதயமும் கூடிய மட்டும் வேலை செய்து அவனைக்காப்பாற்ற முயலுகின்றன, இதனல் உயிர் சுவாசப் பையில் தங்கியிருப்பதாகச் சொல்லாலமா?

சில நோய்களில் ஒருவனுக்குக் கை அல்லது கால் மட்டுமே இரத்த ஓட்டம் இல்லாமலும் உணர்ச்சி இல்லாமலும் இருந்துவிடலாம். அந்த அங்கத்தை உயிர் இழந்த அங்கம் என்றே சொல்லவேண்டும், பின்பு அழுகிக் கீழே விழுந்துவிடும். சரியானபடி பரிகாரம் செய்தால் மனிதனுடைய உயிருக்குக் கேடு வராதபடி அவனைக் காப்பாற்றி விடலாம். இதில் உயிரைப் பங்கிடலாமா?

பல்லியின் வால் அறுந்து விட்டால் வால் மட்டும் தனியே சற்றுநேரம் துள்ளிக்கொண்டிருக்கும். உயிரைப் பங்கிட முடியும் என்பதற்கு இதுவும் ஒரு உதாரணமாகும்.

கடலில் வாழும் சில பிராணிகளை இரு துண்டாக வெட்டினால் இரண்டு துண்டுகளும் தனித்தனி உயிர் நிலைகளாக வளர்ந்து இரண்டு பிராணிகள் ஆகும் (உதாரணம் நட்சத்திர மீன்.) நட்சத்திர மீனின் ஒவ்வொரு பாகத்தையும் துண்டித்தால் ஒவ்வொன்றும் வளர்ந்து கொண்டு முழு நட்சத்திர மீனாக மாறிவிடும். அது போல மனிதனுடைய உடல் கோடிக்கணக்கான நுண்ணிய உடல் அணுக்களால் அமைந் திருப்பதாக அறிஞர்கள் கூறியுள்ளனர். தொண்ணூற்றாறு தத்துவங்கள் கொண்ட சீவ அணுக்களால் ஆகியது இவ்வுடம்பு. சீவணுக்களால் மனித உடல் ஆகும் போது தம்முள் கோடிக்கணக்கான உடல் அணுக்களாகி வளர்ந்து தத்தமக்குரிய காரியங்களை மற்ற அணுக்களுடன் ஒத்துழைத்து வாழ்கின்றன. காலம் செல்லச் செல்ல புதிய அணுக்களும் உண்டாகித் தங்கள் இனத்தைப் பெருக்கி உடலை வாழ்விக்கின்றன. இவ்வாறாகப் புதிய அணுக்களையுண்டாக்கி அவைகளுக்கிடங்கொடுத்து மறைகின்றன. இந்தச் செயலைத் தான் ஒவ்வொரு உடல் அணுக்களும் செய்கின்றன.

ஆகவே மனித உடலில் அமைந்திருக்கும் ஒவ்வொரு உடல் அணுக் களின் ஆதி சக்தியின் மூல இடமே நடுமையமாகும். இவ்விடத்திலிருந்து கொண்டு இனப் பெருக்கக் காரியத்தைக் செய்கிறது. நடுமையத்திற்குப் பரம் என்பர். உடலணுக்களின் நடுவானத்தில் உயிர் அமைந்திருக்கிற தென்று சித்தாந்த நூற்கள் பறைசாற்றுகின்றன. இவ்வாறான உடலனுவைச் சதாசிவம் என்று கூறுவர். இதனை திருமூலர் கீழ் வருமாறு கூறுகிறார்.

மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங்கிருந்து உயிருண்ணு மாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத் துள்நின்று
சத்த முதல் ஐந்துந் தானுண்ணு[illegible]

(திருமந்திரம் 2131)

சிலந்தியானது தன் வாயினால் தன்னுடம்பின்கண்றும் நூல் இழைக் கின்றது. அந்நூலால் தனக்கு வேண்டிய உணவுகளை அகப்படுத்தும் வலைகளை அமைத்துக் கொள்ளுகிறது. மேலும் தான் தங்குதற்குரிய கூடும் அமைத்துக் கொள்ளுகிறது. அவ்விடத்தையே மத்திமம் என்றரு ளினர். அது போல் பதியும் பசுக்கள் ஆடுதல் புரியும் இடமாம் உடம்பினை அமைத்தது. அவ்வுடம்பிலிருந்து பசு ஆட்டம் புரியும். பதியும் ஐம்பொறி சேர் உடம்பகத்து அவ்வுயிர் ஐம்புலன்களையும் நுகர்தற்பொருட்டுத் தானும் ஒருங்கியைந்து காட்டிக் காண்கிறது. ஆகவே பதி அவ்வுடம்பகத்து மத்திமத்தில் உயிருக்குயிராகத் தங்கி அருளுகின் றது. தன்னைத் தாங்கும் தகுதியும் அதற்குப் பதியே அளித்தருளுகிறது.

உடல் அணுக்கள் பெருகி வளரும்போது நடுவானம் இரண்டாகப் பிரிபடும், இப்பிரிவு காரியத்தைத் திருமூலர் திருமந்திரத்தில் திருக கூத்து என்று கூறியிருக்கிறார். இதனால் வெளி அங்கமும் திருந்திவிடும் அதற்குப் பின் முந்திய உடல் அணு இரண்டும் சீவ உடல் அணுவாக ஆகி விடும். இதைத்தான் இனப் பெருக்கம் என்பர். இதையெல்லாம் பார்க்கும் பொழுது மனிதன் ஏக சீவப்பிராணியா? அல்லது பல உடல் அணுக்களின் தொகுதியா? உயிரும் உயிரும் ஒன்று சேருமா? ஒரே உயிராக இருக்குமா? என்ற வினாக்கள் எழுவது இயற்கையே.

ஒரு சீவ மூல அணுவும் மற்றொரு சீவ மூல அணுவும் சேர்ந்து ஒரு கரு அணு (பிறப்பணு) வாகத் தோன்றுகின்றது. தோன்றிய கரு அணு ஒரு இமைப்பொழுது காலம் தான் தோன்றியபடி இருக்கும். மறுகணம் அது பிளவுற்று பிரிந்து இரண்டு உடலணுவாக மாறுகின்றது. இவ்வாறான நிகழ்ச்சி அண்டத்திலும் சரி, பிண்டத்திலும் சரி, தாவர இனங்களிலும் பிராணி இனங்களிலும் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. பிறப்பணுவினின்று பிரிந்த இரண்டு உடலணுக்கள் பின்னும் ஒவ்வொன்றும் இரண்டாகப் பிரிகின்றன. தொடர்நிகழ்ச்சியாகப் பிளந்து பிரிந்துகொண்டே சென்று அநேக உடலணுக்களாக "சீவகரு" ஏற்படுகிறது.

அச்சீவ கருவில் மூல அணு உடனுமாகியும் தொக்கியும் விளைந்திரு கிறது. பிராணிகளின் தோற்றத்திற்கும் பிறப்பிற்கும் "சீவ கரு" அடிக்கோலாக விளங்குகிறது. இச்சீவகரு அடிக்கோலிலிருந்து தான் கோடானுகோடி பிராணிகளும், தாவரங்களும் தோன்றுகின்றன. எனவே, பல கோடி உடலணுக்களால் தொகுத்ததே இம் மனித உடல். மனித உடலின் ஒரு பாகத்தில் மூல அணு காலம் வரும் வரையில் உறக்கத திலிருக்கிறது. மூல அணுக்களில் மூன்று வகையுண்டு. அவை (1) விந்து அணு, (2) நாத அணு, (3) அலி அணு என்பனவாம்.

பிளந்து பிரிக்கும் செயல்களையெல்லாம் சீவ அணுவின் நடுமையத் திலிருக்கும்படியான் சிவ சக்தி புரிகின்றது. நடுமையமென்பதை நடுவானம் என்றும் பரம் என்றும் முன்பே கூறப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கதாகும். ஒரு மூல அணுவாகிய விந்து அணுவும், இன்னொரு மூல அணுவாகிய நாத அணுவும் கவர்ச்சி வசத்தால் ஒன்று சேர்ந்து கரு அணு (பிறப்பணு) வாகப் பரிணமிக்கிறது. மேலே சொன்னவாறு கணத்திற்குக் கணம் பிளந்தும் பிரிந்தும் சீவ கரு அணுக்களாகத் திரள்கின்றன. நாளடைவில் உடலணுத் தொகுதிகளாகப் பெருகிப் பல கோடி உடலணுக்களாலான பிராணி உருவம் பெருகின்றன.

உலகில் எவ்விடத்திலும் இப்படிப்பட்ட பிரபாவங்களைப் பார்க்கும்போது மனித உயிர், ஓர் "உயிர் அணு" என்று எப்படி சொல்ல முடியும்? உடல் பிணமானதும் பஞ்ச பூதங்களாகப் பிரிந்து பகுதிகளாகும்போது உயிர் தனியாக நிற்குமா? உடனே பரம பதத்திற்குப் போகும் அல்லது மண்ணுக்கடியில் இருந்துவிட்டு, கடவுள் அழைக்கும் போது எழுந்து அவை முன்னே போய் நிற்கும் என்றெல்லாம் எப்படி கேட்டுக் கொண்டிருப்பது ? விந்தையாகவன்றோ வுளது.

ஆகவே அறிவற்ற அணு (அநிந்திரிய அணு) வில் "பதி" என்ற பரம் பொருள் "பசு" என்ற உயிரின் உடலில் இயங்குகிறது. பதியைக் கொண்ட பசு, பாச உடலில் தங்கி இயங்குகிறது. இம் மூன்றும் அனாதி யாகவே அறிவற்ற அணுவில் உள்ளன. பதியும் பசுவும் சேர்ந்த சேர்க்கையை "அணுக் கரு" என்று கூறுவர். "அண்டக் கரு" வென்றும் சொல்வர். அண்டக் கரு அணுவின் நடுவானமாகிய பரத்தில் கிடக்கிறது அறிவற்ற அணுக்களில் இந்திரிய தத்துவங்கள் உறக்க அவத்தைக்கு உட்பட்டிருக்கின்றமையால் சலனம் இல்லே. பரத்தில் பதியோடு அகலகில் லேன் அகலகில்லேன் என்றிருக்கும் பராசக்தி தனதொருகிரியாசக்தியினல் பசுவை அறிவுறுத்த பசு உறக்க அவத்தையிலிருந்து விடுபட்டு கனவு விழிப்பு நிலே அவத்தைகளுக்கு உந்துகிறது. அவத்தையோடு முக்குணத் தத்துவமும் மாறுபாடாகின்றன. சலனமுண்டாகிறது. பஞ்சேந்திரியங்கள் இயங்க ஆயத்தமாகின்றன. இந்திரியங்கள் இயங்க உடல் தேவை. உடனே மாயை என்னும் பாசம் பசுவின் இயக்கத்தைத் தாங்க உடலெடுக்கிறது. இந்திரிய இயக்கத்தோடு மாயை உடலெடுத்து அணுவை சதாசிவம் என்கின்ருர் திருமூலர். திருமூலர் கூறிய சதாசிவத்தை இன்றைய நாளில் அறிவியலறிஞர்கள் "விலம்" என்றும் "செல்" என்றும் பற்பல மொழிகளில் கூறுவது விளங்கா நிற்கின்றது. ஆகவே, மெய்ஞானிகள் கூறிய சதாசிவத்தையே அறிவியலறிஞர்கள் "விலம்" என்றும் "செல்" என்றும் கூறுகின்றனர்.

ஆகவே, அறிவற்ற அணுவிலுள்ள பதி பசுவை அறிவுறுத்த பசு இயங்குகிறது. பசு இயங்க மாயை என்னும் பாசம் உடனே உடல் அமைக் கிறது. பாச உடலில் அமைந்த பசு இயங்குகின்ற போது சீவ அணு ஏற்பட்டது. சீவ அணு எப்போது தோன்றிற்று என்பதற்குத் திருமூலர் கூறுவதாவது "எவ்வாறு பதி பசு பாசம் அனாதியோ அவ்வாறே சதா சிவமும் அனாதி" என்கிருர். ஆகவே சதாசிவம் அனாதி. அதனுள் பதி என்ற விலசகமும் பசு என்ற விலசமும் பாசம் என்ற விலசப்பையும் அனாதி காலமாக மருவி இருக்கின்றன.

**உயிருக்குப் பருமம், அளவு சலனம்:** உயிர் எந்த உடலைத் தனக்கு உறைவிடமாகக் கொள்கின்றதோ அந்தப் பருமனுக்கு ஏற்பத் தன்னைக் கூட்டவும், குறைக்கவும், விரிக்கவும், சுருக்கவும் வல்லது. இக்கருத்தை விரிக்கு முன் கவனிக்க வேண்டிய குறிப்புகள் இரண்டுள. உயிர்கள் பல. அவை நித்தியப் பொருள்கள், அவற்றின் உண்மை இயல்பு ஞானமே எனினும் உடலோடு கட்டுண்ட நிலேயில் உயிர்கள் யாவும் ஒரே தரத்தன அல்ல புலன் பொறிகளின் தொகைகளுக்குத் தக்க ஓரறிவுடையன தொடங்கி ஆறறிவுடையன வரையுமாகப் பல தரத்தன. இது ஒரு குறிப்பு. உடலெடுத்த உயிர்கள் மறுபடியும் அழிவுமாகும் வரையில் மீண்டும் தோற்றத்துக்குட்படுந் தன்மையன. இது மற்றக் குறிப்பு. எனவே, மிகச் சிறிய அளவினதாகிய ஓர் எறும்பின் உடலுள் புகுந்து உய்த்த சீவன் மிகப் பெரிய அளவினதாகிய யானையின் உடலுள் புக வேண்டின், அவ்வுடல் முழுதுஞ் சென்று செறியத்தக்கதாகத் தன்னே பெரிதாக்கிக்கொள்ள வல்லது. இதே போல யானே உடலிற் குடி யிருந்த சீவன் பின் ஓர் எறும்பின் உடலிற் குடியிருக்க நேரிடின்

அதற்குத் தக்கத் தன் பருமனைச் சுருக்கிக் கொள்ளும். அதாவது தனக்கென வடிவம் எதுவும் இல்லாத உயிர், தான் எந்த உடலை எடுக்கின்றதோ அந்த உடலினது வடிவத்தை எடுத்துக் கொள்ளுகிறது. ஆகவே உலகில் உயிரில்லா இடமே இல்லை என்னும்படி உயிராய் நிறைந்து கிடக்கின்றன.

மற்றும் அணுக்களும் அணுக்களிலுள்ள துணுக்குகள் சதா சலனமுற்றுக்கொண்டே இருக்கும், அதாவது அணுக்களிலுள்ள துணுக்குகள் திருக்கூத்து தாண்டவம் புரிந்துகொண்டே தான் இருக்கின்றன. அவ்வணுக்குகளுள் "பாச அணுக்குகள்" அதிலும் அதனுட் பிரிவான "மாயை" முக்கிமாக இருள் மயமானது. கருமை நிறமுடையது. அணுவின் திருக்கூத்தின் செய்கையாலும் மகிமையாலும் "மாயை" என்றும் அருவத்திணுக்கினுள் "கரி" என்ற அருவ மண் பூதம் அதிவிரைவில் சலன முறுகிறது. அணுக்கள் உற்றும் கண்டும், உணர்த்திட பெய்வகை கூடிப் பிரிவதும், செய்யும், திரள்வதும் செய்யும், வெவ்வேறு ஆகி விரிவதும் செய்யும் இவ்வணுக்களில் செய்கையைத் தான் திருக்கூத்து என்றும் தாண்டவக் கூத்து என்றும் சித்தர்கள் தங்கள் ஞானத்தால் கண்டு களித்தார்கள். அத்திருக்கூத்தினை உலகுக்குத் திறம்பட எடுத்தும் கூறினார்கள். ஆனால், அதனைச் சமய வாயிலாகப்பின் வந்த மதப்பற்றுடையவர்கள் சமயமாகப் போதித்துப் போந்தமையில் இடர்பாடுகள் மிகுந்தன. எனவே, சாதாரணமாக அணுக்களின் உயிர், உயிர்ப் படக்கம். பேருறக்கம் உறக்கம் என்ற அவத்தை அல்லது நிலைகளிலுள்ளது. அதாவது சலனமற்ற நிலையிலுள்ளது என்று கூறவும் வேண்டுமோ சலனமற்ற நிலையிலிருந்து கரி என்னும் மாயேயம் அருவ மண் பூதமாகவும், மாயை அருவ நீர்ப் பூதமாகவும், கன்மம் அருவ தீப்பூதமாகவும், ஆணவம் வளிப் பூதமாகவும், திரோதனம் அருவ வெளி பூதமாகவும் உள்ளன. மாயேயம், மாயை, கன்மம் ஆணவம் திரோதனம் ஆகிய அருவ பூதங்கள் உற்றும், கண்டும் உணர்ந்திட பெய்வகை கூட்டுறவால் திரண்டு ஐவகை அவத்தையோடு கூடிய உயிர், சடப்பொருள் அகத்தே உண்டாகிறது என்று சித்தர்கள் உறுதியிட்டுக் கூறுகிறார்கள். ஆகவே, அனுவினுள் அகத்தே உள்ள உயிரும் அதே அணுவின் புறமாகவுள்ள மாயையும் உருவப் பொருளாகும்போது உயிர் உருவப் பொருளின் அகத்தே அடங்கிச் சடம் புறத்தே தோன்றுகிறது. ஆகையினாலே இக் கொள்கையைக் கொண்டே உயிருக்கு ஐந்து நிலைகள் (அவத்தைகள்) அல்லது சலனங்கள் (மாறுதல்கள்) உண்டு. உயிர்கள் அனந்தம். ஒவ்வொரு அணுவிலும் உயிர் ஐந்து சலனங்களை உடையது. அவை 1. விழிப்பு நிலை, 2. கனவு, 3. உறக்கம், 4. பேருறக்கம், 5. உயிர்ப்படக்கம் என்பனவாம். முக்கியமாக உருவப் பொருள்களிலெல்லாம் உயிர் உயிர்ப்படக்கம், பேருறக்கம், உறக்கம் என்ற நிலைகளிலிருக்கின்றன. அதனாலன்றோ அவைகளுக்குச் சலனமில்லை, உணர்ச்சியில்லை. அவைகள் முழுமையும் உறக்க நிலையை மட்டும் அடைந்து அருவ பூதங்கள் சலனமுற்றால் செடி, கொடி, மரம் வகைகளாகத் தோன்றுகின்றன. மேலும், கனவுநிலையை மட்டும் அடைந்தால் மிருகங்களாகத் தோன்றுகின்றன. விழிப்பு நிலையை அடைந்தால் மனித தோற்றம் எடுக்கின்றன. கனவிற்கும் விழிப்பு நிலையிற்கும் இடையே ஓரறிவு முதல் ஆறறிவு வரையிலுள்ள சலனமுள்ள ஜீவன்கள் தோன்றுகின்றன ஆகவே, உறக்க நிலையிலும் சிறிது கனவு நிலையிலும் சலனம் இருந்தால்

தொட்டால் சிணுங்கி, அழுகண்ணி, தொழுகண்ணி போன்ற செடிகள் தோன்றுகின்றன. உறக்கமும், கனவும் மாறி மாறியுள்ள உயிர் மிருகங்களாக உள்ளன. அதனால் அவைகளுக்கும் ஓரறிவு முதல் ஆறறிவு வரையிலுள்ள பேதங்களால் எறும்பு முதல் மனித உடல் வரையிலுள்ள பேதங்களால் சீவன்கள் காணப்படுகின்றன.

ஆகவே, உயிர் நித்தியமாக எல்லாவற்றிலும் ஊடுருவி நிறைந்து இருந்து தன்னுடைய சலன பேதங்களுக்கு ஏற்ப உருவம் எடுக்கிறது என்று பெறப்படுகிறது. ஆகவே, உயிர் எல்லா அணுக்கள் அகத்தே உள்ளது. புறத்தே உள்ளதல்ல என்று பெறப்படும்.

ஆனால், உயிருக்குச் சலனமும் சலன பேதங்களும் என் தோன்றின? எவ்வாறு தோன்றியது என்ற கேள்வியும் பிறக்கிறது. இக்கேள்விக்குச் சைவ சித்தாந்திகள் "அணுவினுள் உள்ள பதி சலனத்திற்குக் காரணம்" என்கிறார்கள். சித்தர்கள் சடமாகிய தங்கள் உடலைப் பிணமாகக் கிடத்தாமல் அருவமாக (அணுத்தத்துவமாக) ஆக்கிக் கொண்டார்கள். எனவே, உயிரின் தோற்றத்தைப் பற்றி இதுதான் சித்தர் கொள்கை.

இன்றைய நாளில் கரி என்னும் மண் பூதத்தாலும் அபபு என்னும பூதமான நீர் வகையாலும் தேயு என்னும் ஒளி தீ வகையாலும், வாயு என்னும் காற்றின் வகையாலும், ஆகாயம் என்னும் பூதமாகிய வெட்ட வெளியின் வகையாலும் அடங்கி அருவ உருவப் பொருள்களால் இந்த உலகம் உண்டாயிற்று என்பது வெள்ளிடை மலை. ஐம்பூதக் கூட்டுறவால் அருவமான உயிர் சடப்பொருளினூடே அகத்தே அமைந்து சலன முறுகிறது என்றே பெறப்படுகிறது. உயிர் முக்காலும் நித்திய மானது. உயிர் எப்போது தோன்றியது என்ற விவாதத்திற்கு இடமே யில்லை.

மண் என்றால் பூமி. பூமியில் கிடைப்பது கரி. அப்பு என்றால் நீர். நீரை உண்டாக்குவது நீர்வாயு. தேயு என்றால் தீ; ஒளி. ஒளியையும் தீயையும் தருவதற்கு மூலாதாரம் பிராண வாயு. வாயு என்றால் காற்று. காற்றின் பெருப் பகுதி உப்பு வாயு. ஆகாயம் என்பதுவெறும் வெளி. ஆகவே கரி, நீர்வாயு, பிராணவாயு, உப்பு வாயு, ஆகாயம் என்ற பஞ்ச பூத சேர்க்கையினால் உயிர் உண்டாயிற்று என்ற கூற்று நிலவுகிறது. இப் பஞ்ச பூத சேர்க்கையினால் "அமிலம்" என்ற நீர்மையும் நிகழ்மையும் சலனமும் கொண்டதொரு உயிர்ப் பொருள் தோன்றுகிறது என்று நவீன அறிவியலறிஞர்கள் பகருகிறார்கள். உயிர் தோன்றுவதற்கு மேற்கூறிய அடிப்படைப் பொருள் மாத்திரம் இருந்தால் போதாது. அதற்கேற்ற சூழ்நிலை வேண்டும். ஒரு குறிப்பிட்ட வெப்பம் வேண்டும். உயிர் தோன்றினால் அதற்கு வளர்ச்சியுண்டு. வளர்ச்சிக்கு உணவு தேவை. தண்ணீர் தேவை இந்தச் சூழ்நிலை பூமியில் எப்பொழுது ஏற்பட்டதோ அப்போது உயிர் தோன்றிற்று என்று அறிவியலறிஞர்கள் கூறுகிறார்கள். ஆகவே, முன்னர் சித்தர்கள் சொன்ன கொள்கைக்கு ஓரளவு தற்கால அறிவியலறிஞர்கள் கிட்டத்தட்ட அருகில் வெகிறார்கள் என்றே சொல்லவேண்டும்.

உயிர் தோன்றக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டது ஐம்பது கோடி வருடங்களுக்கு முன் என்பது அறிவியலறிஞர்களின் துணிவு. அந்த உயிர் முதன் முதலில் தோன்றியது கடலிலேதான் என்பது ஆராய்ச்சியாளர்கள் கண்ட உண்மை. இதையேதான் நம் நாட்டு தமிழ் அறிஞரும் முதன் முதலில் ஆண்டவன் மச்சாவதாரம் எடுத்தார். அதாவது மீனுருவத்தில் தோன்றினூர். பிறகு கூர்மாவதாரம். ஆமை நீரிலும் நிலத்திலும் வாழும் பிராணி. உயிர் நீரிலும், நிலத்திலுமாகச் சஞ்சரிக்கிறது. அதன் பிறகு வராகவதாரம். பன்றி உருவம். பன்றி நிலத்தில் மாத்திரம் வசிக்கும் பிராணி. பிறகு நரசிம்மாவதாரம். நரன் என்றால் மனிதன். சிம்மம் மிருகத்தைக் குறிக்கின்றது. மனிதனும் மிருகமும் ஒன்று சேர்ந்த உருவம். பிறகு வாமனவதாரம். குள்ள உருவம் படைத்த மனிதன். அதன் பிறகு பரசுராமாவதாரம். வில் வலிமை பெற்ற மனிதன். இராம அவதாரம் எல்லா நற்குணங்களைப் பெற்ற ஆற்றலுடைய மனிதன். பிறகு பலராமாவதாரம். கலப்பையைப் பிடித்து நிலத்தைப் பண்படுத்தி உழவு தொழிலில் வலிமையுற்ற மனிதன். கிருஷ்ணவதாரம். உடல், உள்ளம், அறிவு மூன்றும் பக்குவமடைந்த மனிதத் தோற்றம். இவ்வாறு புராணம் சொல்லுகிறது. கற்பனைகளைக் களைந்துவிட்டு உண்மைப் பொருள்களை மட்டும் ஆராய்ந்தால் இன்றைய அறிவியல் ஆராய்ச்சிக்கு ஒத்துப் பரிணாம தத்துவத்தைப் போதிக்கிறது. மேனாட்டு உயிர் நூல் அறிவியலறிஞர்கள் இந்த ஒற்றுமையைக் கண்டு வியக்கிறார்கள். இவையெல்லாம் நம் சித்தர்கள் முன்னரே கண்ட முடிவுகளாகும்.

பூமி வெகுவாகக் குளிர்ந்ததும் உயிரினங்கள் தோன்ற சூழ்நிலை ஏற்பட்டது. முதலில் உயிரினம் நீரில்தான் உற்பத்தியாயிற்று என்று தற்கால அறிவியலறிஞர்கள் புராதன சித்தர்களும் சந்தேகமின்றி கூறுகின்றனர்.

நீரில் உயிரினங்கள் தோன்ற ஆரம்பித்தவுடன் அவற்றின் எண்ணிக்கை பெருகின. அதற்கேற்ப அவைகளுக்குள் வாழ்க்கைப் போராட்டம் ஏற்பட்டது. அந்த நிலையில் பூமியின் அடிப்பாகத்திலிருந்து அப்போதைக்கப்போது வெளியே பிதுங்கி வந்த பொருள்கள் பூமியின் மேல் படிந்து மண்ணாகிப் பெரிய பெரிய நில பரப்புகளையும் உண்டாக்கிக்கொண்டிருந்தன. நீரில் வாழும் சீவராசிகள் போராடிப் போராடி பல உயிர் நீத்தன. சில வாழ்ந்தன. இன்னும் சில நிலத்தின் மேல் ஏறி தஞ்சம் புகுந்தன. நீரில் இருக்கும்போது சூழ்நிலைகள் வேறு. நிலத்தின் சூழ்நிலைகள்வேறு. இந்தச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அந்த உயிரினங்களின் உடலில் வியக்கத்தக்க மாறுதல்கள் தோன்றின. அவ்வாறு நீரிலிருந்து நிலத்தை அடைந்து பரிணமித்த உயிரினம்தான் ஆமை. சீதோஷ்ண நிலைகளிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், மழை, காற்று முதலிய இயற்கையின் வெறியாட்டங்களிலிருந்து தப்பித்துக் கொள்ளவும் தன்னை போல நீரிலிருந்து நிலத்திற்குள் வந்து தஞ்சம் புகுந்த மற்ற பிராணிகளிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் அந்த ஆமைக்கு உறுதியான மேலோடு உண்டாயிற்று.

காலப்போக்கில் அதன் உடலில் மேலும் சில மாறுதல்கள் பரிணமித்தன. மெதுவாக ஊர்ந்து செல்லும் ஆமைக்கு நான்கு கால்கள் முளைத்தன. பின்னும் மேலோடு போய் முதுகெலும்புடன் கூடிய எலும்புக்கூடு ஏற்பட்டது. அதன் அங்க அவயவங்களைச் சுலபமாக அசைத்துத் துரிதமாக ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குச் செல்வது சாத்தியமாயிற்று. இவ்வாறு பரிணமித்த புது உயிரினமே பன்றி.

பன்றியின் தோற்றத்திற்குப் பிறகு மிருகத்திற்கும் மனிதனுக்குமிடையே நிகழ்ந்த ஒரு பரிணும நிகழ்ச்சியாகக் கொள்ளலாம். இந்த இடைக் காலத்தில் மிருகமும் அல்லாத மனிதனும் அல்லாத ஓர் உருவம் படைத்த பிராணியாக உயிர் தோன்றிற்று. ஆகவே, நரசிம்மாவதாரத்தை மிருகத்திற்கும் மனிதனுக்குமிடையே ஏற்பட்ட பரிணும திருப்பம் என்றுதான் கொள்ள வேண்டும்.

மனித இனம் முதன் முதலில் குள்ள உருவம் படைத்த மனித உருவம். அதைத்தான் (வாமனன்) இலெமூரியா என்ற தேவாங்கு மனிதனிலிருந்து ஆரம்பம் என்ற உண்மை திருவிக்ரமன் வானளாவிய மனிதன். இங்கிருந்து மனிதன் உருவத்தின் உடல், உள்ளம், அறிவு இம்மூன்றும் பெருகி வளர்ச்சியடையக் கூடியன.

இயற்கை சரித்திர நிபுணரான ஹால்டேன் போன்றவர்கள் தசாவாரத்தில் புதைத்து கிடக்கும் பரிணும தத்துவங்களைப் பற்றி வியந்து பேசிய பிறகுதான் நாமும் இதைப் பற்றிக் கொஞ்சம் சிந்திக்கத் தொடங்கியிருக்கிரும்.

உயிர் அல்லது சீவன் என்பது ஊனக் கண்களுக்குப் புலப்படாத ஒரு மகத்தான சக்தி. அந்தச் சக்தி சட மயமான பூமியில் சேர்ந்து ஓர் உருவத்தைப் பெறும் போதுதான் இவ்வுலகில் அந்த உயிரினுடைய ஆற்றல் வெளிப்படுகின்றது. அந்த உயிர்ச்சக்தியே நம் மாமுனிவர்கள் பரமாத்மா சொரூபமாகப் பார்த்தார்கள். அந்த உயிர்ச் சக்தி காலப் போக்குக்கு ஏற்ப அப்போதைக்கப்போது பிரகிருதியான பூமியிலுள்ள பொருள்களுடன் சேர்ந்து தோன்றுகிறது. அப்போது உயிரினங்களின் பரிணும வளர்ச்சி ஆங்காங்கே ஏற்படும் உயிர் வாழ்க்கைத் திருப்பங்களை ஆண்டவனின் அற்புதமான அவதாரங்களாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இப்பிரபஞ்சம் எங்கும் நிறைந்திருக்கும் அந்த சீவ சக்தியை ஆண்டவனுகக் கருதினர்கள் நம் பெரியோர்கள். ஒரே உயிர்ச் சக்தி பற்பல

சூழ்நிலைகளில் பற்பல உருவங்களை எடுத்துக்கொள்ளும் பேருண்மையைக் கண்டறிந்தார்கள். இவ்வாறு பரிணாமத் தத்துவத்தை ஓரளவு புரிந்த நம் பெரியோர்கள் கண்ட உண்மையைக் கீழ்க்கண்ட பதிகத்தில் காணலாம்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்.

(திருவாசகம்—சிவபுராணம்—26-31)

முதல் சீவராசி நீரில் தான் தோன்றியது. அது தான் பாசி. அது ஒரு தாவர வர்க்கம். அதன் பிறகு கடல் பஞ்சு. இவ்வாறுக் சின்னஞ் சிறு புழுக்கள் போல உண்டாகி மேலோடுகளுடன் காணப்பட்டன. அவ்வாறு தோன்றியது முத்துச்சிப்பி. காலக்கிரமத்தில் சிறு செடிகள் உண்டாயிற்று. பலகோடி வருடங்களில் ஏழு வகை உயிரினங்கள் தான்றினவென்று நம் முன்னோர்கள் உறுதியாகக் கூறுகிறார்கள்.

—

## அத்தியாயம் 7

### தோற்றமும் ஒடுக்கமும்

உலகத் தோற்றத்தையும் ஒடுக்கத்தையும் ஆராயுமிடத்து 'உள்ளது போகாது இல்லது வாராது' என்ற அடிப்படைத் தத்துவத்தில் அடங்கியுள்ளதில் காணலாம். இதற்கு அளிக்கப்படும் விடையையொட்டி கொள்கைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை:—

(1) இறை (பதி) ஒன்றுமில்லாததிலிருந்து அதாவது சூன்யத்திலிருந்து உலகு படைக்கப்பட்டது—ஒரு பிரிவு.

(2) இறை தன்னிடத்திலிருந்தே உலகைத் தோற்றுவித்தது—இரண்டாம் பிரிவு.

(3) அணுக்கள் அல்லது மாயை ஆகிய மூலப் பொருள்களிலிருந்து உலகு உற்பத்தியானது—மூன்றாம் பிரிவு:

### (1) மாற்றத்தால் ஆயது இவ்வுலகம்

மாற்றம் என்பது என்ன? மாற்றம் நிகழுகின்றது எண்ணும்போது உண்மையில் என்ன நிகழ்கின்றது என ஊன்றி சிந்திக்கவேண்டும். கண்ணுக்குப் புலனாகாதபோது கூட கணத்துக்குக் கணம் இடையறாது நிகழ்ந்துகொண்டிருக்கும் மாற்றம், பொருளில் சில பகுதிகள் மட்டும் நிகழ்கின்றதா அல்லது பொருள் முழுதுமே மாறுகின்றதா என்பதே அடுத்து ஆராயவேண்டியது.

மாற்றம் பொருளின் சில பகுதிகளில் மட்டும் நிகழ சில பகுதிகள் மாற்றம் அடையாது நிலைத்து நிற்கின்றன எனக் கொள்வது தவறு. மாற்றம் ஒவ்வொரு பொருளிலும் உள்ளும் புறமும் மேலும் கீழும் அணு அணுவாக நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மை. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு கணமும் அதே போன்ற இன்னொன்றாகவோ அல்லது அதனின்று வேறுபட்ட ஒன்றாகவோ மாறியபடியே இருக்கின்றது. மாறுமுன் இருந்த அதே பொருள்தான், மாறிய பின் இருக்கின்றது என நாம் கருதுவது தவறு. மாறுமுன் இருந்ததும் மாறியபின் இருப்பதும் ஒன்றுபோல இருப்பதால் நாம் அவை இரண்டையும் ஒரே பொருள் என எண்ணுகிறோம். உண்மையில் அவை இரண்டும் ஒன்றல்ல. ஒரு கணத்தில் இருக்கும் பொருள் மறுகணத்தில் இருப்பதில்லை எனினும் மாற்றம் நிகழும் வேகத்தில் தொடர்ச்சி அறாத ஒரே பொருளாகவே அவை காணப்படுகின்றன. காலையில் நாம் விட்டு நீங்கும் வீடு வேறு, மாலையில் வந்து புகும் வீடு வேறு. மாற்றம் சிறிய அளவில் நிகழும்போது அது நமக்குப் புலப்படுவதில்லை. மாற்றம் நிகழுகின்றது என்றுகூட நம்மால் உணர முடிவதில்லை. அது பெரிய அளவான பின்தான் நாம் அதனைக் காண்கிறோம் என மேலே கூறினோம். மாறும்போது மாற்றம் நமக்குப் புலனாவதில்லை. அது வேறொன்றாக மாறும் போதுதான் புலனாகிறது.

மாறுதல் என்றால் அழிதல் அல்லது நீங்குதல் என்பதே கருத்து; மாற்றம் என்பது ஒரு பொருள் அழிந்து அதனிடத்தில் இன்னொன்று தோன்றுவது. எனவே, ஒரு பொருள் இன்னொன்றாக மாறிய பின்னும் முதல் இருந்த பொருளே நிலைத்து நிற்கின்றது எனக் கொள்வது தவறு. முன்னிருந்த அதே பொருள்தான் பின்னும் இருக்கிறது எனின், மாற்றம் நிகழவில்லை என்றாகும். மாற்றம் நிகழ்ந்தது எனின் முன் இருந்தன அழிந்து வேறு ஒன்று தோன்றியது என்றாகும். எந்த ஒரு பொருளும் தொடர்ந்து இரு கணம் கூட நிலைப்பதில்லை. தோன்றிய அக்கணமே அது தன் போன்ற இன்னொன்றைத் தோற்றுவித்துவிட்டு மறைந்து விடுகின்றது.

ஒன்று மறைய, அதனிடத்தில் அதே போன்ற இன்னொன்று தோன்றுவதுதான் மாற்றம் எனப்படுவதாயின் ஒன்று தான் மாறி இன்னொன்றாய் நிற்கின்றது எனக் கூறுவது பிழை. மாறிய பொருள் பின்னும் நிலைக்கின்றது என்பது அழிந்த பொருள் அழிந்த பின்னும் இருக்கின்றது என்பது போன்றது.

நாம் அனைவரும் சாதாரணமாக நினைப்பது ஒரே பொருள்தான் காலத்துக்குக்காலம் பெரிதாகவோ சிறிதாகவோ சிறு மாறுதல்களை அடைந்து நிலைத்து நிற்கின்றது என்பதே. ஆனால் மேலே நாம் காட்டியவை மூலம் உண்மை நாம் நினைப்பதற்கு நேர் மாறானது என்பது புலனாகும். ஒரு கணத்துக்கு மேல் நிலைத்து நிற்பது எனப் பேசத்தக்க பொருள் எதுவும் இல்லை. மாற்றம் ஒன்றுதான் உண்மை. அதுதான் தொடர்ச்சியாய் இடையறாது நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒன்று அழிகின்றது. இன்னொன்று தோன்றுகின்றது. ஒரு பொருளும் கணம் கூட நிலைப்பதில்லை. எனவே பொருளும் ஒன்றும் இல்லை மாற்றந் தான் உளது. நிலை பேறு என்பது பொய். மாற்றம் என்பது தான் மெய். நிலைபேறும் மாற்றமும் ஒன்றுக்கொன்று நேர்மாறானவை. இரண்டு உண்மையாய் இருத்தல் முடியாது. நிலைபேறு உண்மையானால் மாற்றம் பொய். மாற்றம் உண்மையானால் நிலைபேறு பொய். காய் கனியான பின் காய்தான் கனியானது. இரண்டும் ஒன்றுதான். காய் இன்னும் உள்ளது. காயான ஒரே பொருள்தான் கனியாகவும் நிலைத்திருக்கின்றது எனில் மாற்றம் நிகழவில்லை. மாற்றம் நிகழ்ந்தது உண்மையில் நிலைபேறு என்பது பொய். மாற்றம் இளைஞனாக இருந்தவன்தான் இன்று முதியவனாக இருக்கிறான். நேற்றிரவு உறங்கச் சென்ற அதே நான் தான் இன்று காலை விழித்து எழுந்தேன் என அனுபவங்களைத் தொடர்பு படுத்தும் ஒரு நிலையான அடிப்படை. அணு உயிர் போன்ற பொருள்கள் எதுவுமில்லை. மாறி மாறி அதிக வேகமாக நிகழ்ந்துச் கொண்டிருக்கும் எண்ணக்கோவை, உணர்ச்சி சேர்க்கை போன்றவைதான் உள்ளவை. இடையீடில்லாத காரணத்தால் அவை ஒரே பொருளாகக் காணப்படுகின்றன. அன்பும் அழியும் பொருளும் அதனிடத்தில் தோன்றும் பொருளும் தம்முள் வேற்றுமை சிறிதும் இன்றி ஒன்று போல காணப்படுவதால் ஒன்று போன்ற இரண்டை ஒன்று எனக் கருதுகிறோம்.

மாற்றம் சதா நிகழ்ந்துகொண்டிருக்கும். இந்த ஓட்டத்தாலும் மாற்றத்தாலும் ஆயதே இப்பிரபஞ்சம். அதன் கண்ணுள்ள சேதன

அசேதனப் பொருள்கள் அனைத்தும் ஓட்டம் நிகழுகின்றது. ஓடுவான் இல்லை. மாற்றம் நிகழுகின்றது. மாறும் பொருள் கிடையாது. செயல் நிகழ்கின்றது. செய்வோன் இலன்.

மாறும் பொருள் இல்லாமல் மாற்றம் மட்டுமே நிகழ்கின்றது என மேலே கூறப்பட்டது. எந்தப் பொருளையெடுத்து ஆராயத் தொடங்கினாலும் குண இயல்புகளின் சேர்க்கையை அல்லது தொகுப்பை விட்டு அதாவது அவ்வியல்புகளையுடைய பொருள் எதுவும் இல்லை என்பதை யுணரலாம். சக்கரம் கடினமுடையது; வட்ட வடிவமுடையது; வெண்ணிற முடையது என்று கூறப்பட்டுள்ளது. இது தவறு. கடினம், வட்டம், வெண்ணிறம் ஆகியவற்றையுடைய சக்கரம் என்ற பொருள் எதுவும் இல்லை என்பது புலனாகும்.

அவ்வியல்புகள் இல்லாமல் சக்கரம் என்று ஒன்று இல்லை. எனவே சக்கரம் என்ற பொருள் அவ்வியல்புகளையுடையது எனக் கூறல் பொருளற்றப் பேச்சாகும். குண இயல்புகளின் தொகுப்பையே உயிரென்றும் உடலென்றும் குறிக்கிறோம். இடையறாது மாற்றமடைந்து கொண்டிருக்கும் குணம், வடிவம் தவிர நிலையான 'உயிர்' என்ற பொருளில்லை என்பது பௌத்தமதக் கொள்கை. இது 'அநாத்ம வாதம்' எனப்படும். இதனாலன்றோ பௌத்தரைக் 'கணபங்கவாதிகள்' எனக்கூறுவர்.

மாற்றம் பொருள் முழுவதையும் பற்றியது மட்டும் அல்ல, அது ஒவ்வொரு கணமும் இடையறாது தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருக்கின்றது அதாவது ஒரு பொருள் உண்டென்றால், அது. ஒரு செயலைச் செய்யவேண்டும். செயல் நிகழ்வது தான் பொருள் இருக்கின்றது என்பதற்கு அறிகுறி, செயல் இல்லையேல் பொருளும் இல்லை. இங்குச் செயலைச் செய்வது என்பது தான காரணமாய் நின்று தன் மூலம் ஒரு காரியத்தை ஆக்குவது. காரியம் ஆகவல்லையானால் அது உடனே முளையை உற்பத்திச் செய்யவேண்டும். அவ்விதை காரணமாய் அதிலிருந்து ஒரு காரியம் உடனே தோன்ற வேண்டும். தோன்ற வில்லையாயின் காரணம் என்ற பொருளாகிய விதையும் இல்லை. முளையைத் தோற்றுவிக்கும் சக்தி விதையில் இருக்கிறது. அச் சக்தி இப்போது மறைந்து கிடக்கிறது. சில நாள் கழித்துத் தான் அது தொழிற் படும் என்பதைப் பௌத்தர் ஒப்புக்கொள்ளார். இதன் பொருட்டே விதை முளையாகிய காரியத்தைத் தோற்றுவித்து விட்டுத் தான் மாய்ந்து விடுகிறது. அவ்விதையும் தன் போன்ற இன்னொன்றைத் தோற்றுவித்துவிட்டு, தான் மாய்ந்து விடுகிறது என்றனர்.

விதை ஒவ்வொரு கணமும் எதாவது ஒரு விதத்தில் தொழிற் பட்டுக் கொண்டிருக்கிறதென்பதை நிலை நாட்டுகிறார்கள்.

இங்ஙனம் ஒரு விதை தன் போன்ற இன்னொன்றைத் தோற்றுவிக்கின்றதெனின், விதை வேறு எதையும் தோற்றுவிக்காமல் ஏன் இன்னொரு விதையைத் தோற்றுவிக்கவேண்டும்? இரு விதைகளுக்கு மிடையிலுள்ள தொடர்பு என்ன? ஒரு சாரார் 'தற்செயலாய் நடக்கின்றது' என்கிறார்கள். இதற்கு முக்கிய காரணம் கடவுளின் ஆணை என்பார்

இன்னொருசாரார். ஆனால் பொருளின் சுபாவம், துணை செய்ய வல்லபுறச் சாதனங்கள் ஆகிய இரண்டுமே காரணம் என பௌத்தர் கொள்வர். ஒரு நிகழ்ச்சியின் தொடக்கம் மட்டுமே அதற்குச் சாதக மான புறக்காரணங்களில் தங்கியுள்ளது. நிகழ்ச்சி தொடங்கி விட்டால் அதற்குச் சாதகமான சூழ்நிலை இருக்கும் வரை அது தொடர்ந்து நிகழ்வது சுபாவத்தைப் பொறுத்தது. திரி, எண்ணெய் ஆகிய துணைச் சாதனங்கள் இன்றித் தீக்கொழுந்து தோன்றாது. ஆனால், அவற்றின் துணை கொண்டு தோன்றியபின் அவற்றுள் ஏதாவது ஒன்று குறையும் வரை இடையறாது தோன்றிய வண்ணமாய் இருப்பது அதன் நியதி.

ஆகவே, ஒரு பொருள் மாறும்போது அதன் பகுதிகள் மட்டுமே மாறுவதில்லை. பொருள் முழுவதுமே மாறி வேறு ஒன்றாகி விடு கின்றது. கண்ணுக்குத் தோன்றாவிடினும் மாற்றம் ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வொரு கணமும் நிகழ்ந்தவண்ணமே இருக்கின்றது. மாற்றம் இருவகை. ஒரு பொருள் தன்னைப் போன்ற இன்னொன்றாக மாறுவது ஒன்று. தன்னின் சற்று வேறாய ஒன்றாக மாறுவது மற்றொன்று. இவற்றுள் முதலாவது வகை மாற்றம் நிகழ்கின்ற தென்றும், மாற முன்னிருந்த பொருளும் மாறிய பின்னுள்ளதும் ஒன்றல்ல என்றும் கூறும் பௌத்தக் கொள்கை இங்கும் குறிப்பிடத் தக்கதாகும்.

### (2) பகுதிகளால் ஆயது உலகம்

புறத்தேயுள்ள பொருள்களை ஆராய்வதில் ஆராய்பவனுக்கும் ஆராயப்படும் பொருள்களுக்கும் தொடர்பு எப்படி ஏற்படுகின்றது என்பதே ஆய்வு. காண்பவனும் அறிபவனுமாகிய ஆன்மா புரியட்டப் பொருள். இவை இரண்டும் ஓரினத்தனவல்ல. ஓரினப் பொருள்கள் தான் தொடர் புபட முடியும். ஏதாவது ஒருவிதத்திலாவது ஒற்றுமையிருந்தால்தான் தொடர்பு ஏற்பட முடியும், முற்றிலும் முரணான இரு பொருள்களுககுத் தொடர்பு ஏற்படுவது எப்படி? புரியட்டப் பொருளாகிய ஆன்மா புறப் பொருள்களில் தூலமாகப் பொருந்துவதில்லை. ஆன்மாவில் ஏற்படும் அறிவுக்குப் பொருளாகப் புறத்தே பொருள்கள் உள்ளனவோ என்பதைத் தானும் அறிய வழி இல்லை. புறத்தே பொருள்கள் இருக்கின்றன என்பது புலனாகும். யாவும் எண்ணமே; எல்லாம் கருத்தே; வெளியிலே உள்ள ஒரு பொருளைக் கண்ணால் நேரே காணப்படுகின்றது அது கையால் தொடத்தக்கதாயிருக்கின்றது; அப்பொருள் உண்மையில் வெளியில் இல்லை. அது கருத்தில் மட்டுமே உள்ளது. ஏனென்றால் கண்ணால் காண்கிறோம்; கையால் தொடுகின்றோம் என்ற உணர்ச்சிகள் கூட கருத்திலேதான் நிகழ்கின்றன. ஒருவர் காணும் இதே பொருளைப் பிறரும் காணுகின்றார்கள். ஒரு பொருள் இருக்கிறதென்பதை மனதின் மூலமே கிடைக்கப் பெறுகின்றது. அவையும் மனக் கருத்திலுள்ளவை எனப் பெறும்.

கருத்துக்களுக்கு அப்பாற் சென்று அவை ஒவ்வொன்றும் குறிக்கும் நிகழ்ச்சிகளும் பொருள்களும் உளவோ இலவோ என ஆராய்ந்து முடிவு செய்வதுகூட கருத்தே; எண்ணமே. உலகில் காணும் எல்லா நிகழ்ச்சி களும் உண்மையில் வெளியே நடந்த போதிலும் அவை யாவும் மன எண்ணத்திலேதான் நிகழ்கின்றதெனப் புலனாகும்.

எண்ணத்தைத் தாண்டி அப்பாற் பாய முடியாது. பாய்ந்து புறப் பொருள்களை நேரே தொட முடியாது. இதோ தொடுகின்றோம்; தொட்டுவிட்டோம் எனக் கருதுவது, உணர்வதுகூட எண்ணமே. எப்படி முயன்றாலும் மனத்திரைக்கும் ஆன்மாவுக்கும் தொடர்பு இருக்க முடியுமேயொழிய புற நிகழ்ச்சிகளுக்கும் புறப் பொருள்களுக்குப் ஆன் மாவுக்கும் தொடர்பு இருக்க முடியவே முடியாது. புற நிகழ்வுகளும் பொருள்களும் பொறிகள் வாயிலாக ஆன்மாவின் மனத்திரையில் வீழ்வதும், அறிவு, உணர்வு அனுபவமாகியவை ஏற்படுவதும் மின் வேகத்தில் நிகழ்கின்றன எனவே, இதற்குள் எத்தகைய மாற்றங்கள் நிகழ்கின்றன என்பதைக்கூட, ஆன்மா நன்கு அறிய இயலாது. எப்போது ஆன்மாவுக்கும் புறவுலகத்துக்கும் நேரான தொடர்பு கிடையாதோ அப்போதே புறவுலகம் ஒன்று உண்மையில் இருக்கின்ற தென்பதும் அங்ஙனம் இருப்பினும் ஆன்மா கருதுவது போலவே இருக்கின்றதென்பதும் சாதிக்கமுடியாதன ஆகின்றன. இந்த வகையில் படிப்படியாகவும் மிக விரிவாகவும் ஆராய்ந்ததன் முடிவாகக் கருத்து மட்டுமே உண்மை என்ற கருத்து வாதம் எனப்படும் புரட்சிகரமான தத்துவம் தோன்றியது

எனவே, கருத்து வாதத்தை ஆதரித்து உலகத் தோற்றத்துக்கு மூலப் பொருள் ஒன்றே. மெய்மை வாதத்தை ஆதரித்து உலகத் தோற்றத்துக்கு மூலப் பொருள் பல என்று கொள்வோர் ஒரு பிரிவினர். ஆகவே, கருத்து வாதத்தின் பயனாக ஒருமை வாதம் எழுந்தது. மெய்ம்மை வாதத்தின் மூலமாகப் பன்மை வாதம் எழுந்தது. தத்துவ ஞான உலகில் இரு பெரும் பிரிவினர் காணப்படுகின்றனர்.

உலகப் பொருள்களைத் தெளிவாக இருபிரிவுகளுள் அடக்கலாம். ஒன்று உயிர்; மற்றது சடப் பொருள். ஒன்று சீவன்; மற்றது அசீவன். ஆனால், இந்தச் சீவன், அசீவன் ஆகிய இரண்டுள் எது நித்தியம்? இரண்டும் நித்தியமா? இரண்டும் அநித்தியமா? ஒன்று மட்டும் நித்தியமா? ஒன்றானால் அந்த ஒன்று எது? சீவனா? அசீவனா? அழிவற்ற நிலையான நித்தியப் பொருள் ஒன்று கிடையாது. சீவன் அநித்தியம்; அசீவன் நித்தியம் என்று உலகாயதோர் கொண்டனர். அசீவன் எனப் படுவது தோற்றம். தோற்றம் அளவேயன்றி அதற்கு நித்தியத்துவம் எதுவும் கிடையாது. நித்தியப் பொருள் சீவன் மட்டுமே என்பதே வேதாந்திகள் கூற்று. சீவன், அறிவுற்றது அசீவன் அறிவற்றது; இரண்டுமே நித்தியமானவை என்பதை சமணர் கொள்கை.

உலகம் உள் பொருள், இல்பொருளல்ல; உலகத் தோற்றத்திற்கு மூலப் பொருள் ஒன்றல்ல; பல. இது தான் சமணர்கள் கண்ட கொள்கைகள். ஆன்மாக்கள் அனந்தம். அவை என்றைக்கோ ஒரு நாள் தோன்றியவை அல்ல. என்றைக்கோ ஒரு நாள் அழிவனவும் அல்ல. அவை சடத் தொடர்பில்லாமல் இருக்கும் போதுதான், அவற்றின் சுய ரூபம் விளங்கும். அந்த நிலையில் அவை முற்றுணர்வும் முடிவிலாற்றலும் உடையவை. சாந்தமும் ஞானமுந்தான் அவற்றின் இயல்பான சொரூபம் அசீவ காரியமாகிய உடலோடு சேர்ந்தமையினாலேயேதான் அவை தம் இயல்பு நீங்கிப் பேரறிவு கெட்டுச் சிற்றறிவுற்று அல்லற்படுகின்றன. உலகோடும் உடலோடுந் தொடர்புற்ற நிலையில் அறிவு மழுங்குகின்றது. உடலின் பொறி, புலன்கள் அனைத்தும் ஆன்மாவின் சுயரூபத்தை அறியு

வொட்டாமல் கட்டுப்படுத்தும் இக் கட்டுகளைக் களைந்தால் ஆன்மா தன் இயல்பாகிய சுய சத்தைக் காட்டும். இம் முற்றுணர்வுக்கு முழு ஞானத்துக்குக் கேவல ஞானமென்று பெயர். அல்லது ஞானம், பேரறிவு என்றும் கூறுவர்.

பிரபஞ்சத்தின் இரு கூறுகளுள் ஒரு கூறாகிய அசீவனே புலன்களுக்கு விடயமாகும். பௌதிகப் பொருள்கள் அனைத்தும், பிரபஞ்சத்தில் பல ஒன்றாவதும், ஒன்று பல ஆவதும் என்ற இரு நிலை நிகழ்ச்சிகள் நடக்கின்றன. பல ஒன்றாகச் சேர்ந்து உண்டாகியப் பொருளைப் புலனால் அறியப்படுகிறது. ஒன்று பல ஆவது புலன்களுக்குத் தெரிவதில்லை. இப் பரந்த உலகம் எதிலிருந்து தோன்றியது? எங்ஙனம் தோன்றியது? என்பதை அறிய வேண்டுமாயின் எதில் போய் முடிவடைகின்றது என்பதை ஆராய வேண்டும். ஏனெனில், முடிகிற இடந்தான் பின் தொடங்குகிற இடமும் ஆகும். ஒடுங்க இடமானதுதான் பின் விரிவதற்கும் ஏதுவாகும். அந்தந்தான் ஆதியுமாகும். இக் கருத்தையொட்டியே சைவ சித்தாந்தமும் கூறுகிறது.

இந்த உலகம் உலகிலுள்ள பொருள்களும் ஒரு பொய்த்தோற்றம் அல்ல. உலகம் உண்மை, உலகிலுள்ள பொருள்களும் உண்மை. எனினும் அவைகள் அழிந்து அழிந்து தோன்றுகிறன. சாதாரண அறிவுடையோர் பொருள்களில் அழிவையும் தோற்றத்தையும் தன் கண்ணுக்குப்புலப்படும் எல்லைவரையுமே தொடர்ந்து கவனிப்பர். அதற்கு மேல் அவர்கள் அவற்றைத் தொடர்ந்ததில்லை. அதற்கு மேலும் தொடர்ந்து ஆராய்ந்தவர்கள் சித்தர்கள்.

பொருளுக்குத் தோற்றம் என்பது என்ன? அழிவு என்பது என்ன! நம் கண்ணுக்குப் புலனாம் ஒவ்வொரு பொருளும் பிளக்கவோ, பிரிக்கவோ, உடைக்கவோ தக்கதாகவே இருக்கிறது.

ஒவ்வொரு பொருளும் பல பகுதிகளால் ஆயது. எனவே பகுதிகள் ஒன்றுசேர்வதே பொருளின் உற்பத்தி. பின்னர் அப்பகுதிகள் தாமாகவோ பிற காரணத்தாலோ பிரிவதே பொருளின் அழிவு. நூல்களின் சேர்க்கையில் ஆடை என்ற ஒன்று தோன்றுகிறது. பின்னர் நூல்களாகப் பிரிந்துவிட்டால் ஆடை என்றபொருள் இலதாகின்றது. ஆடையாகிய பொருளுக்கும் இதே கதிதான். அதன் பகுதியாகிய நூலுக்கும் அந் நூலின் பகுதிகள் சேர்ந்து நூல் தோன்றுகிறது. பகுதிகள் பிரிய நூல் அழிகின்றது. அந் நூலில் பகுதிகளுக்கும் இதே கதிதான். இதிலிருந்து பேருண்மை ஒன்று புலனாகிறது. பன்பகுதிகளையுடையது அது எதுவோ அழிவுடையது. அது நிலையற்றது. இதனையே சைவ சித்தாந்தத்தில் 'உலகம் தோன்றி நின்று அழியும் பகுக்கப்படும் அவயாய பகுப்புமையின்' என வலியுறுத்துகின்றார். பகுதிகளால் பிரிக்கத்தக்கன யாவும் அழியும். எனவே பிரிக்க முடியாத பொருள் எதுவோ, பகுதி இல்லாத பொருள் எதுவோ அதற்கு அழிவு கிடையாது.

பொருளுக்கு அழிவென்பது நிலை மாறுதல். ஒரு பொருள் அழிந்து விட்டதென்றால் அது இன்னொன்றாக மாறி விட்டதென்பதே கருத்து. அதாவது, எவ்வெப்பகுதிகள் சேர்ந்து அப் பொருள் ஆயதோ அவ்வப்பகுதிகளாகப் பிரிந்து விட்டதென்பதே

கருத்து. ஒரு பொருளை இன்னொன்றாக மாற்றலாமேயன்றி ஒன்றுமேயில்லாமல் அழிக்க முடியாது. ஆக்கத்துக்கும் இதே விதி தான். ஒன்றிலிருந்து இன்னொன்றை ஆக்கலாமேயொழிய எதுவுமே யில்லாமல், ஒன்றையும் ஆக்க வியலாது. அழிதல் என்பது நிலை மாறுதல் அல்லது பகுதிகளாகப் பிரிதல் எனக் கூறப்பட்டுள்ளது. எனவே எது பகுதிகளாலாயதோ அது தான் அழியும். இக் கருத்துக்கள் மனத்திலிருத்த வேண்டிய அடிப்படைகள். சேர்க்கைப் பொருள்களை அதாவது பகுதிகளாலாகிய நிலம், நீர் போன்ற வற்றை மேலும் மேலும் அழித்துக் கொண்டு பகுதிகளாகப் பிரித்து கொண்டு போனால் பிரிபட முடியாதனவும் பகுதிகளாலாகாத தனித்த மூலப் பொருள்களை அடையலாம். மேலே பிரிக்க முடியாத இந்த மூல நுண் பொருளைச் சமணர் அணுக்கள் என்பர் இவ் வணுக்களிலிருந்து தான் மிகப் பெரிய இவ்வுலகம் உற்பத்தியாகின்ற தென்பதே சமணரது கொள்கையாகும்.

அணு பகுதிகளால் ஆகாதது. எனவே. அதற்குப் பக்கமென்றோ, மேல். கீழ், நடுவென்றோ பேசுவதற்கெதுவுமில்லை. பகுதிகளில்லை யாகவே வடிவமும் இல்லை. எனினும், அதுவே வடிவங்கள் எல்லாவற்றிற்கும் தோற்றிடம். வடிவம் அற்றதாகையால் அது காட்சிக்குப் புலனாகாது. காட்சிக்குப் புலனாகததை அனுமானத்தால் தெரியும் என்பர் சமணர். அணுவை அழிக்க முடியாது. அழிக்க முடியாது என்றால் பிரிக்க முடியாது. அழிக்க முடியாதெனவே அது என்றும் உள்ளது. என்றும் உள்ளதாகையால் அது நித்தியப் பொருள். அது படைக்கப்பட்டதல்ல. இவ்வணுக்கள் அசீவ உலகின் ஒடுக்கம். இவ்வணுக்களிலிருந்து தான் உலகம் யாவும் தோன்று கின்றது என்பர்.

பகுதியற்ற நிலையை அடைந்தே தீருவோம். பகுதியற்ற அதி நுட்பமான இப்பொருளைச் சைவ சித்தாந்திகள் அணுக்கள் (பசு, பதி, பாசம்) என்பர். பரமாணுக்களைப் பிரித்தல் இயலாது. எனவே, அவை அழியாதவை. அவைகள் இவ்வுலகின் தோற்றத்திற்கு காரரணம். இவ்வுலகை ஆக்கி அழிப்பன அழிந்தன, ஆக்கப்படுவன என்ற உடன் நிகழ்ச்சி கொண்டே மாற்றம் நடந்து கொண்டே இருக்கிறது. இவ்வுலகத் தோற்றத்திற்கு மூலம் கண்ணுக்குப் புலனாகாத பரமா ணுக்களே எனக் கொள்பவர் சைவ சித்தாந்திகள் மட்டுமல்லர்; சமணர், வைசேடிகர், பௌத்தருள் ஒரு சாராரும் அங்ஙனம் கொள்ளுகின்றார்கள்.

### (3) அணுக்களால் ஆயது உலகம்

உலகத் தோற்றத்துக்கு மூல காரணம் அணுக்கள் என்பதில் மட்டுமே மேலே குறிப்பிட்ட இரு பகுதியினருக்கும் ஒற்றுமை உண்டு. அவ்வணுக்களின் இயல்புகளைப் பற்றிய கருத்துக்களில் ஒற்றுமை கிடையாது.

"அணுக்கள் பலவாயினும் அவை யாவும் ஈற்றில் ஒரே இயல் புடையன என்பது சமணர் கொள்கை. ஒரே இயல்புடைய அணுக் களால் இவ்வுலகிலே காணும் பல இயல்புகளையுடைய பொருள்கள்

தோன்றுதல் எங்ஙனம். அணுக்களின் இயல்பு ஒன்றேயாயினும் சேதத் தொகை வேறுபட்டாலும் வித வேறுபாட்டாலும் பொருள்களின் இயல்புகளும் மாறுபடுகின்றன" என்பது சமணர் விடை. நில அணுக்கள் ஓர் இயல்பும், நீர் அணுக்கள் ஓர் இயல்பும், தீ அணுக்கள் இன்னோர் இயல்பும் காற்றணுக்கள் ஓர் இயல்பும், வெளி அணுக்கள் ஓர் இயல்பும் உடையன. ஆகவே, அடிப்படையில் ஐந்து குண அணுக்கள் உண்டு என்பர் சித்தாந்திகளும் வைசேடிகளும், ஒவ்வோர் குணத்திலும் அனந்தம் அணுக்கள் உண்டென்பதும் அவர்கள் கருத்தாகும். ஒவ்வொரு அணுவும் தனக்கென ஒரு தனித் தன்மை என்னும் ஒரு விசேடத்தையுடையது. அந்த விசேடமே அதை அதன் இனத்திலுள்ள ஏனைய அணுக்களிலிருந்து பிரிப்பது என்பர்.

கண்ணுக்குப் புலனாகாத இப் பரமாணுக்கள் இவ்விரண்டாகச் சேர்ந்த இணையிலேதான் அவை நமக்குப் புலனாகும் என்பது வைசேடிகர்கள் கொள்கை. இங்ஙனம் அணுக்கள் இணை அணுவாயும் மூவினை அணுவாயும் சேரத் தொடங்குவதே சிருட்டியின் ஆரம்பம். அணுக்களை இயக்குவது அவ்வணுக்களின் உயிர் (பசுப் பகுதிப்) பகுதி என்பர் சித்தாந்திகள். மற்றும் அணுக்களை ஒன்று சேர்த்து உலகை ஆக்குவோனும் பின் அவற்றைப் பிரிப்பதன் மூலம் உலகை அழிப்போனும் இறைவனே (பதி) எனக் கொண்டனர். சித்தாந்திக்கும், வேதாந்திக்கும், இறைவனுடைய தொழில் அணுக்களை உற்பத்தி செய்தல் அல்ல. அணுக்கள் அனாதியாயுள்ளன. அவற்றைக் கொண்டு உலகை உற்பத்தி செய்தலே பதியினுடைய தொழில் என்பது சித்தாந்திகள் கொள்கை.

அணுவை உலகுக்கு மூல காரணமாகக் கொள்ளும் இந்து மதத்தினர் அனைவரும் சட உலகுக்கு மட்டும் அணுவைக் காரணமாகக் கொள்வதே ஒழிய, உயிர்களுக்கு அவற்றைக் காரணமாகக் கருதுவதில்லை. ஏனென்றால் சட அணுக்கள் போலவே உயிர் அணுக்களும் அநாதியான நித்தியப் பொருள். என்பதே சித்தாந்திகளின் கொள்கை. ஆகையால் அணுக்களிலிருந்தே உயிர் உண்டாகிறது என்பது கிரேக்கர்களின் கொள்கை. ஆனால் அணுக்கள் தோறும் பதி, பசு, பாசம் என்ற துணுக்குகள் அல்லது பரமாணுக்கள் அநாதியாக இருந்து கொண்டே இருக்கின்றன என்பது சித்தாந்திகளின் குறிக்கோள்.

உலோகாயதத்தைச் சார்வாதம் என்றும், பூதாவாதம் என்றும் வழங்குவர். பொருள்களையன்றிப் பண்புகளைத் தனிப்பட்டவையாகப் பூதவாதி ஏற்பதில்லை. அவன் ஏற்கும் மெய்ப்பொருள்கள் நான்கு பூதங்கள். அவை மண், நீர், தீ, காற்று என்பவை. வெளிக் காட்சிக்குப் புலனாகாது. கருதலுக்குப் புலப்படும். கருதலை ஏற்றுக் கொள்ளாத உலகாயதர் வெளியை ஏற்றுக் கொள்வதில்லை. மேலே கூறிய அடிப்படை பூதங்கள் நான்கும் வெவ்வேறு விதத்தில் ஒன்று சேர அச்சேர்க்கையால் எழுந்தனவே இவ்வுடலும் உணவிலுள்ள பல் வேறு பொருளகளும். இச்சேர்க்கை நீக்கப் பொருள்கள் அழிந்து மீண்டும் நான்கு பூதங்களாக மாறும் இவ்வாறு பூதங்கள் தோன்றுவதும் அழிவதும் இவைகளின் சுபாவம் என்கிறான் உலகாயதன்.

உடலில் வேறாய் உயிர் என்று ஒன்றையாம் யாரும் கண்ணாற் கண்டதில்லை. கருதல் வாயிலாகத் தான் உயிர் உண்டு என நாம் அறிகின்றோம். கருதல் அளவை ஏற்காது, கண்ணால் கண்டது மட்டுமே மெய், ஏனைய யாவும் பொய் எனக் கொள்வர். உலகாயதர். எனவே உயிரும் உடலும் ஒன்றே. பூதங்களின் சேர்க்கை உடலாகும் போது அந்தச் சேர்க்கையின் விளைவாக அவ்வுடலுக்கு உணருஞ் சக்தியோ சிந்திக்கும் சக்தியோ ஏற்படுகின்றது என்கிறார்கள். உலகத்தில் காணும் ஆண், பெண் விகற்பங்களுக்கும் மனிதன் மிருகம் என்ற படைப்புக்கும் என்னோவெனின் அவையாவும் பூதங்களின் சுபாவம் எனச் சமாதானம் பகர்வதால் சுபாவவாதம் எனப்படும். ஆகவே சுபாவ வாதம் பூதாவாதம், சாருவாக வாதம் எனினும் ஒக்கும்.

அனைத்தும் காண்டல் (காட்சி) அளவில் மட்டும் கொண்டு கருதலையும் உரையையும் ஒப்புக் கொள்ள மறுப்பதால் ஏற்பட்டது பூதாவாதம். உரையையும் கருதலையும் கொண்ட ஏனையோருக்கு உயிரும், இறைவனும் மெய்யாயின. உலகும் உடலும் பொய்யாயின. காண்டலை மட்டுமே கொண்ட உலகாயதருக்கு உயிரும் இறைவனும் பொய். உலகும் உடலுமே மெய். உலகாயதருக்கோ சடமே மூலப் பொருள். உணர்வு என்பது அந்தச் சடத்தைத் தனக்கு நிலைக்களனாக உடைய சார்புப் பொருள்.

கருதல் அளவைக் கொண்டு உலகத்திற்கு முடிவு எது என்பதை ஆராய்ந்தார்கள். உலகத்தின் முடிவு அணுவ்லடங்கியது என்று கொண்டார்கள். அவ்வணுவையே உயிர் என்று சாதித்தார்கள். உலகத்தின் முடிவே தொடக்கம் என்று சாதித்தார்கள். பூதங்களுக்கு மேல் அப்பாற்பட்டு உயிர் ஒன்று உண்டு என்ற கொள்கையை நிர்ணயம் செய்தததனால் இக்கொள்கையைக் கருத்து வாதம் என்பர்.

இக் கருத்து வாதத்தை எதிர்த்து உலகம், பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவை கருத்து அல்ல; அவைகள் புறத்தே மெய்யாகவே உள்ளன என்று மெய்மை வாதிகள் கொண்டார்கள். இதனை மெய்மை வாதம் எனவும் யதார்த்த வாதம் எனவும் குறிப்பிடுவது உண்டு.

கருத்து வாதத்தின் விளைவாக உயிர் ஒரேயொரு மூலப் பொருளுள் அடங்கும். சகலமும் ஒன்றுள் அடங்கும். அந்த ஒன்றே சகல உலகத் தோற்றத்திற்கும் காரணம் என்று ஒருமை வாதத்திலேயே முடியும்.

உண்மையில் பொருள்கள் பல உள்ளன என கொள்வோருக்குப் பொருள்கள் பல என்ற பன்மை வாதம் ஏற்படுகிறது.

இங்ஙனம் கருத்து வாதத்தை ஆதரித்து உயிர் ஒன்றே என்று கொள்வோர் ஒரு பிரிவினர். மெய்மை வாதத்தை ஆதரித்து உலகத் தோற்றத்திற்கு மூலப் பொருள்கள் பல என்று கொள்வோர் ஒரு பிரிவினர். ஆக இரு பிரிவினர் காணப்படுகின்றனர்.

சமணர்கள் மெய்மை வாதத்தை ஆதரித்தவர்கள். சமணர்கள் கொள்கைப்படி உலகம் தெளிவான இரு பிரிவுகளுள் அடங்கும். ஒன்று உயிர். மற்றது உடல். ஏனைய சடப் பொருள்கள். உயிர் அழியாதது. உடல் அழியக் கூடியது. இரண்டுமே நித்தியமானவை என்பதே சமணர் கொள்கை. ஆகவே மெய்மை வாதிகள் கூறுவது போல உலகம் உள் பொருள். கருத்து வாதிகள் கூறுவது போல அது இல் பொருள் அல்ல. உலகத் தோற்றத்துக்கு மூலப் பொருள் ஒன்றல்ல பல. உலகத்தை ஒன்று உயிர், மற்றது உயிரற்றது என இரு பிரிவாகப் பிரிக்கலாம் என்றார்கள். மற்றும் அணுக்களிலிருந்து உலகம் தோன்றியது. அவ்வணுக்களிலேயே ஒடுக்கமும் என்பர். அதாவது உள்ளது போகாது இல்லது வாராது என்னும் அடிப் படைக் கொள்கையை ஒட்டியது.

"ஆகமம்" என்ற நூற்கள் உயிர்களைப் பற்றி என்ன கூறிற்று என்று இங்கு ஆராய்வோம். உயிர் என்று ஒரு பொருள் உண்டா? அது உடல் அழியும் போது அதனுடன் அழிந்து விடுகின்றதா? உடலை விட்டு பிரிந்து நிற்கும் நிலையில் உயிர் ஒன்றா பலவா? உயிர் உடலோடு சேருவதேன்? பின் அதனை விட்டு பிரிவது என்? இத்தகைய வினாக்களைத் திராவிடர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தங்கள் 'ஆகம" நூற்களில் கூறியிருக்கிறார்கள். ஆனால் ஏகமனதான விடைகளை அடைந்த பாடில்லை என்றே கூற வேண்டும்.

உடல் அழியும் போது அதனோடு அழியாது நிலைத்து நிற்கும் உயிர் என்ற பொருள் ஒன்று உண்டு என்பதைக் கேட்டு எள்ளி நகையாடும் மக்கள் சிலர் இன்றும் நம்மிடையே உள்ளனர். இத் தகையோரும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் இருந்தனர். இவர்கள் கண்ணால் காண்பது மட்டுமே மெய் என வாதிப்போர். உடல் அழிவதைக் காண்கிறோம். ஆனால் அதிலிருந்து பிரிந்து நிற்கும் உயிர் எதையும் காண்கிறோம். எனவே, அத்தகைய ஒரு பொருள் உண்டு என்பதற்குப் பிரத்தியட்சப் பிரமாணம் இல்லை என்பதே இவர்கள் வாதம். அங்ஙனமாயின் இவர்கள் கொள்கைப் படி உயிரற்ற ஒரு பொருள் உயிரை உற்பத்தி செய்கின்றது என்ற விசித்திரமான முடிவுதான் ஏற்படுகின்றது அம் முடிவு தானாக இயங்க வல்லமையற்ற பொருள் தன்னை இயக்கும் சக்தியைத் தானாகவே தன்னிடத்திலிருந்து தோற்றுவிக்கிறது என்பர். இது பொருந்தாது என்று மறுக்கின்றது ஆகமமும், சாங்கியமும் உயிரும் உடலும் ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்ட பொருள்கள். எங்ஙனம் உயிரிலிருந்து உடல் தோன்றாதோ அதே போல் உடலில ருந்தும் உயிர் தோன்றாது என்பர் ஆத்மவாதிகள். உடலிலிருந்து உயிர் தோன்றுகிறது எனக் கருதுவோரே உலகாயதர். அவருக்கு நேர்மாறாக உயிர் தான் மூலப் பொருள் உயிரிலிருந்து தான் உடல் தோன்றுகின்றது எனக் கொள்வோரே வேதாந்திகள். இந்த இரு சாரருக்கும் வேறுபட்டு நிற்போரே ஆகம சமயத்தார்களும் சாங்கியருமாம். சைவசித்தாந்திகளும் பெரும்பாலும் ஆகமத்தைத் தழுவிய காரணத்தினாலே சைவர்கள் கொள்கையும் ஒக்கும். எனவே,

உயிரும் உடலும் வெவ்வேறு பொருள்கள். ஒன்றிலிருந்து மற்றது ஒரு போதும் தோன்றாது. சாங்கியரும் ஒரு காலத்தில் ஆகமவாதி களாக இருந்து வேத உரையை ஏற்றதால் வைதிக சமயத்தில் ஏற்றனர்.

ஆகமம் உயிரைச் சித்துப் பொருள் என்றும், உடலை அசித்துப் பொருள் என்றும் கொண்டது. சாங்கியர் உயிரைப் "புருடன்" என்றும் உடலுக்கு மூலமாகிய சடப் பொருளைப் "பிரகிருதி" என்றும் வழங்குவர். இருவரும் உயிரும், "உடலும் உள்ளது போகாது இல்லது வாராது" என்ற கொள்கைப்படி இரண்டும் தனித் தனியே நித்தியமான மூலப் பொருள்கள் எனக் கொள்கின்றனர்.

உயிரும் உண்மை, புறத்தேயுள்ள பொருள்களும் உண்மை எனக் கொள்வோரே வைசேடிகர். பொருள்கள் அழியும், ஆனால் அவற்றை உற்பத்திச் செய்யும் அணுக்கள் அழியா, அணுக்கள்தான் பொருள் களின் கடைசி ஒடுக்கம். இவைகளே இவ்வுலகின் தோற்ற ஒடுக்கங் களுக்குக் காரணம் என்றனர். இக்கொள்கையை ஆகமவாதிகளும் கூறுகின்றனர். சமணர் கொள்கையும் அதுவே.

அசித்துப் பொருள்கள் அனைத்தும் அணுக்களால் ஆனவை. பொருள்கள் அழியும். ஆனால் அணுக்கள் அழியா. அணுக்களாகப் பிரிவதே அழிவு பொருள்கள் நம் கண்ணுக்குப் புலனாவன. ஆனால் அவற்றை ஆக்கும் அணுக்கள் புலனாகா. இவ்வித மெய்மை உணர்வை ஆகம நூற்கள் கூறுகின்றன. உலகத் தோற்றத்துக்கு காரணம் அணு எனக் கொள்வோர் ஆகமவாதிகள், வைசேடிகர், சமணர், கிரீஸ் தேசத் தத்துவ ஞானிகளாகிய டெமொகிறிற்றஸ் எபிகியுறஸ் என்பவர்கள்.

இங்ஙனம் காரணத்தில் இல்லாது புதிதாக ஒரு காரியம் தோன்றும். அதாவது பகுதிகளாகிய காரணத்தில் இல்லாதது இப்பகுதிகளின் சேர்க்கையாகிய காரியத்தில் தோன்றும். இக் கொள்கையை ஆரம்ப வாதம் அல்லது அசத் காரிய வாதம் என்று குறிப்பிடுவர் காரணத்தில் இல்லாதது காரியத்தில் தோன்றும் என்பது இதன் பொருள். எனவே, **காரணத்திலுள்ளதே காரியத்திலும் தோன்றும் என்பது மற்றவர்கள் கொள்கை.** இதனைச் சத்காரிய வாதம் என்பர். ஆராயுமிடத்து வேதாந்திகளும், சித்தாந்திகளும், ஆகம வாதிகளும் இறைவன் என்ற பேரறிவைத் தங்கள் முடிவுக்கு முடிவாய் சத்காரியத்தின கொள்கைப்படி ஏற்றனர்.

மெய்மை வாதிகள் கூறுவது போல் உலகம் உள் பொருள். கருத்து வாதிகள் கூறுவது போல அது இல் பொருள அல்ல. உலகத் தோற்றத்திற்கு மூலப் பொருள் ஒன்றல்ல, பல. உலகம் இரு பிரிவு: ஒன்று சீவன், மற்றொன்று அசீவன். இவைகதான் சீவனைப் பற்றி வேறு எவரும் வற்காத மிக விசித்திரமான கருதது ஒன்றைத்தான் "ஆகமம்" சாதிக்கிறது நிற்க. ஆகமம் ஆதியில் இறைவனை மனித நிலைக்குத் தாழ்த்த விரும்பவில்லை. ஆனால், மனிதனைக் கேவல ஞான மெய்திய பரிபூரண மனிதனைக கடவுள நிலைககு உயர்த்தி கடவுளாக்கி வழிப்படுத்தியது. 'உள்ளது போகாது இல்லது வாராது" என்னும் அடிப்படைக் கொள்கையை

கூடியது. மூலப் பொருளாகிய அணுக்களால் ஆகியது இவ்வுலகம் என்றது. காலம், சுபாவம், நியதி, கன்மம் ஆகிய தத்துவங் களையும் மேலும் கொண்டது. ''மற்றும் எதைப்பற்றி எதை'' சொல்லினும் அங்ஙனமிருக்கலாம்'' என்னும் பொருள்படும் ''சியாத் வாதத்தைக் கொண்டது ஆகமம். ஆகவே, எப்பொருளைப் பற்றியும் எந்த ஒரு முடிவும் முடிந்த முடிவாகாது என்ற ஏகாந்த வாதத்தை தவிர்த்து அநேகாந்த வாதத்தைக் கைவரப்பட்டது உண்டாம் இல்லை யாம், உண்டு இல்லையாம், சொலலொணாததுமட்ம், உண்டுமாம் சொலலொணாததுமாம், இலலையுமாம் சொலலொணாததுமாம், உண்டுமிலலையுமாம் சொல்லெட்ணாததுமாம் என ஏழு வகையும் அநேகாந்த வாதமாகும்.

இன்றைய மக்களுள் சிலர் தோற்ற ஒடுக்கத்திற்குக் காரண காரிய கர்த்தாவாகிய கடவுள் உண்டா இல்லையோ என்ற வ்வகாரம் நமக்குத் தேவையில்லை எனக் கருதுகின்றனர். வேறு சிலர் கடவுள் இல்லை என்றே முடிவு செய்து விட்டனர். இவர்கள் தங்கள் முடிவை நிருபிக்கப் பல காரணங்களும் காட்டுகிறார்கள். இக்காரணங் களுல் எதையும் இவர்கள் இன்று புதிதாகக் கண்டு பிடித்துவிட வில்லை. இன்றைக்கு ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த சப்த சிந்து தத்துவ ஞானிகள் பலர் கடவுள் இல்லை என்பதை நிரூபிக்க என்ன என்ன நுட்பமான காரணங்களைக் கூற முடியுமோ, அவையனைத்தையும் கூறிவிட்டார்கள். அவருள் ஒரு பிரிவினர் சமணர். மற்றொரு பிரிவினர் மீமாம்சாகர் எனப்படுவோர் இம்மீமாம்சகருக்குள்ளே காலத்தால் முற்பட்டோர் கடவுள் உண்டோ இல்லையோ என்பதைப் பற்றித் தமது கருத்தைக் குறிப்பிடவில்லை. ஆனால் பின் வந்த மீமாம்சகருள் சிலர் கடவுள் இல்லை என வெளிப்படையாகவே வாதிக்கத் தலைப் பட்டனர். மீமாம்சகர் நிரீசுர வாதிகள். கடவுள் இல்லை என வாதிப்பதோடு மட்டும் நிற்பவர் அல்லர். இவர்கள் வேத உபநிடதக்களையும் மதித்தனர். வேதத் திக்குக் கொடுத்த மதிப்பு சாதாரணமானது அல்ல. வேதமே பரம் பொருள். வேதத்தைப் பிரமாணமாக ஏற்றுக்கொண்டு நிரீசுரவாதி களாக இருந்தும் மீமாம்சகரை வைதீக சமுதாயத்தில் சான்றோர்கள் ஏற்றனர். அதே சமணர் வேதத்தைப் புறக்கணித்து நிரீசுரவாதிகளான படியால் அவ்வைதிக சமயத்தில் சேர்த்தனர். இது ஒருபுறமிருக்க சமணர்கள் ஆரியல்லாதவர்களாகிய திராவிட வகுப்பைச் சேர்ந்தவர்கள் எனவே சமணர்களையும் வேதாந்திகளையும் புறச் சமயத்தராகவே கொண்டனர்.

எனினும் பிற்கால மீமாம்சாகர்கள் நிரீசுரத் தன்மை பொருத்தம் அற்றது என்பதை உணர்ந்து மெல்ல மெல்ல கடவுளைத் தமது மதத்துள் நுழைத்தனர் என்கிறார் டாக்டர் இராதாகிருஷ்ணன் மற்றும் புலனாகத ஓரணு, ஈரணு கண்ணுக்குப் புலனாகாது. மூவினை அணுமட்டும் கண்ணுக்குப் புலனாகும். மூவினை அணுக்களைப் பொருளெனப்படும் அல்லது திரவ்யம் எனப்படும். ஆகவே ஓரணு ஈரணுக்களை மீமாம்சாகர் ஏற்பதில்லை. வேதத்தில அத்தகைய அணுக்கள் பேசப்படவில்லை என்பதுதான் காரணம். மீமாம்சகர் வேத வாக்கில் அபார நம்பிக்கையுடையவர்கள். ஆகவே அணுவைப் பற்றி

ஏற்கவில்லை. ஆனால் அணுவைப் பற்றி ஆகமவாதிகள்தான் முதன் முதற் எடுத்துக் காட்டியவர்கள் எனப் புலனாகிறது.

எந்த உயிரும் பிறப்பு எடுத்துத்தான் பின் பிறப்பு அறப்பெறுதல் வேண்டும். உயிர்கள் எண்ணிலாதன. கணக்கற்ற உயிர்களுள்ளன. அவையாவும் மாயையில் ஒடுங்கிக்கிடப்பன. மல வலியால் அறிவின்றி கிடப்பன. உயிர் வருக்கத்துக்கு ஒரு வரையறையான கணக்கு இருந்தால் எல்லா உயிர்களும் முத்தி பெற்ற பிறகு இறைவனுக்கு தொழில் இராது. தொழிலில்லாதபோது இறைவனொருவன் தேவையும் இராது. தேவையின்மை காரணமாக இறைவனுக்கும் முடிவு ஏற்படுமானால் இறைவன் "நித்தியன்" என்று கூறுவதற்கு வழியிராது. இதனால்தான் உயிர்கள் வரம்பில்லாதவையாக உள.

நித்தியமான சித்துப் பொருள்கள் இரண்டாகும். அவை இறைவனும் உயிர்களுமாம். இவை நித்திய சித்துப் பொருளாதலின் எப்போதும் இருந்துகொண்டே இருக்கும், முடிவில்லாத தன்மையும் ஆகும். இவற்றுள் உயிர்கள் குற்றமுடையன. அந்தக் குற்றம் நீங்கப் பெற வேண்டும். குற்றத்துடன் கூடிய உயிர்களுக்கு ஓர் இருப்பிடம் வேண்டும். அந்த இருப்பிடமும் எப்பொழுதும் இருப்பதாக் வேண்டும். இந்த மாதிரியான பொருளையே சடப் பொருளாகிய "மாயை" என்றனர். நித்தியமாய் இருக்கும் மாயையாகிய சடப் பொருள் நித்தியமாயிருக்கும் ஆருயிர்களுக்கு ஆதாரமாயுள்ளதாகும்.

இந்தச் சடப் பொருளாகிய மாயையினைக் காரியப்படுத்தி ஆருயிர்கட்குக் குற்றம் நீங்கும்படிச செய்யும் செயலே கடவுட் பொருளின் தொழிலும் இயல்புமாக உள்ளன. இதனால் இறை. உயிர், உலகம் என்ற முப்பொருள்கள் "இல்லாது வாராது உள்ளது போகாது" என்ற அடிப்படை கொள்கைகளில் எப்போதும் இருப்பது எனப் பெறப்படும்.

இவற்றுள் உயிர்கள் எனப்படும் சீவனங்களின் குற்றம் உடைமையில் வேறுபாடுகள் உள்ளன. இந்த வேறுபாடுகளுக்கு ஏற்ப அவை தங்கியிருக்கும். மாயை எனப்படும் இடத்திலும் வேறுபாடுகள் இருக்கின்றன. ஆதலினால் மாயையானது சுத்த மாயை பிரதேசம் அசுத்த மாயை பிரதேசம் என இரண்டாகிப் பின்பு பிரகிருதி மாயையும் கூட்டிடுதலால் மூன்றாகக் கூறப்படுதல் உண்டு. இந்தப் பிரதேசப் பிரிவினைகேற்ப ஆங்காங்கு தத்தம் தகுதிப் பாடுகட்கேற்ப வாழும் உயிர்களின் பிரிவின் முத்திறப்படும்.

இனி, உயிர்கட்குப் பாசம் எனப்படுவதான குற்றம் மூன்று வகையாக உள்ளது. எல்லா உயிர்களுக்கும் பொதுவாக உள்ள சகசமான குற்றம் ஆணவம் எனப்படும். இந்த மலத்தை நீக்குதற் பொருட்டு உயிர்கள் முயலும் விதங்களால் கன்மம் என்றும் மாயை என்றும் குற்றங்கள் வந்து சேருகின்றன. எனவே, இயல்பாகவே உள்ள மலம் ஒன்றும், வந்து சேரும் மலங்கள் இரண்டும்; ஆக மூன்று மலங்கள் முக்கியமாக பேசப்படும். வந்து சேரும் மலங்களின் அளவானது உயிர்களிடம் இயல்பாகவே உள்ள ஆணவம் எனப்படும்

மலத்தினுடைய இயற்கையான வன்மை மென்மைகளுக்குத் தக்க வாறு இருக்கும். ஆதலால் நாம் பாசப் பிரிவினைப்படிப் பார்த் தாலும் சீவ வர்க்கம் மூன்று வகையில் அமைகின்றதாகும். பொது வாக இறைவனால் கூறப்பட்ட கர்ப்பக் கிரியைச் செய்தி மாயா கருப்பம், மாதா கருப்பம் எனப்படும் இரண்டு சனங்கட்கும் பொருந்து மாறு அமைவுற்றது.

படைப்பும் சங்காரமும் மாறி மாறி வருவதே ஒரு தொடர்பு நிலை நிகழ்ச்சி படைப்புக்குப் பிறகு சங்காரம். சங்காரத்திற்குப் பிறகு படைப்பு. சங்காரத்திற்குப் பிறகு இறைவனுக்கு உயிர்களை மீளவும் படைப்புட்படுத்த வேண்டும் என்கிற கருணை பிறக்கின்றது சங்காரமும் கருணையின் பாற்பட்டதே எனினும் அப்போது உயிர் களுக்குத் தரப்படுவது இளைப்பாறுதல் ஆகும். உயிர்கள் இளைப் பாறும்போதும் இறைவனுக்கு மட்டும் ஒய்வில்லை. சங்காரத்தின் போதும் இறைவன் அத்தொழிற்கான ஒடுக்கஞ் செய்யும்போதும் தாண்டவமாடிக்கொண்டு உள்ளானவன். சங்கார காலத்தே யாவற் றையும் தனக்குள் ஒடுக்கி ஏகனாகி இறைவன் வியாபித்துள்ளான். அப்போது சிவம் மீண்டும் சிருட்டித் தாண்டவத்தைச் செய்யத் திருவுள்ளங் கொள்ளுகின்றானவன். அங்ஙனம் அவன் திருவுள்ளம் பற்றுதலைச் "சங்கற்பம்" என்பர். இந்தச் சங்கற்பத்தால் இறை வனுடைய பரிபூரண கருணா விலாசம் ஏற்படுகின்றது. இந்தக் கருணையை இறைவனுக்கு அப்போது எவரும் உடனிருந்து உண்டாக் குவதிலர். ஏனெனில், அப்போது எவ்வுயிர்களும் வெளிப்பட்டில. எனவே, அண்ட பிண்டங்கள் அனைத்தின் தோற்றத்திற்கு ஆதிகாரண மான இந்தப் பரிபூரணமான கருணையைத் திருவருட் சக்தி அல்லது சிற்சக்தி என்றழைப்பர். அந்த நிலையில் பிரிப்பின்றி நிற்கும் இந்த ஒருமைப்பாவ அதாவது குணியும் குணமுமாய் நிற்கும். இந்த இருமைப்பாவ நிலைக்குப் பரநாதம் எனவும் பரவிந்தம் எனவும் பெயர் வகுக்கப்பட்டது. இந்த நிலைமகள் ஒன்றற்கொன்று எதிர்ப்படுதலால் பிறப்பது மாயை எனப்படும் தத்துவம். இங்குச் சுத்த மாயை எனப்படும் வகையைத்தான் குறிக்கும்.

உயிர்களின் ஆக்கங் கருதி பரநாத, பரவிந்துக்கள் சுத்த மாயையுடன் கலத்தல் செய்யும்போது அபரநாத அபரவிந்துக்கள் ஆகும். இத்தகைய நிலையினை இயல் சிவம் என அழைப்பர். இந்த அவதாரத்தின் பின்னதே சதாசிவம் எனப்படுவது. இதனில் தான் உயிருக்காக வேண்டியுள்ள எண்ணும் முதன்மையும் எண்ணு தற்குரிய ஆற்றலும் ஒருங்கே உள்ளன. எண்ணும் முதன்மை சிவம் இந்த நிலையிலிருப்பது எனப்படும். இவ்விரண்டின் ஒருமை சதா சிவம் எனப்படுகிறது. இதனால் சகலமும் தோன்றுகின்றன. இதனால் தான் சகலமும் ஒடுங்குகின்றன. இந்த அவதாரம் வரையில் உலகத் தோற்றத்திற்கோ, உயிர்களின் வெளிப்பாட்டிற்கோ எவரும் உதவு வாரிலர். இந்த அவதாரம் இல்லையாயின் உயிர்கட்கும் அணுவ தாங்கும் மாயை வெளிப்பாட்டுக்கும் ஆதாரம் இல்லாமற்போம்.

சர்வ சிருட்டி காலத்தே தொடங்கி சர்வ சிங்கார காலத்தே முடிவுறுகிறது. இடையில் ஓய்வே இல்லை. இந்த செயல் சக்தி சிவத்திற்கு எளியதொரு செயலாக உள்ளமை பற்றி திருக்கூத்து எனப்பட்டது. **தாண்டவம்** என்னும் விளையாட்டு என்றும் லீலை என்றும் பகர்வர் அறிஞர். இறைவன் உயிர்கள் நித்தியப் பொருள்கள் ஆதலால் அவற்றைப் படைப்பதில்லை. அவற்றைப் படைக்க வேண்டி யதும் இல்லை. ஆனால் அந்த உயிர்களுக்கும் அவை மலவன்மை நீக்கிப் பேரின்பானுபவம் பெறுதற்குத் தகுதி கொள்ளும்படி மாயை யினின்றும் வெளிப்படவைத்து ஏற்றவாறு அறிவூட்டி ஆட்கொள்ளு கிறது. மாயையில் மல மறைப்புற்றுள்ள உயிர்களை வெளிப்படுத்தி உணர்ச்சி பெறுவதற்கு வேண்டுவன செய்தலையே 'உயிர் ஆக்கி'' எனப்பட்டது.

விஞ்ஞானர் நால்வரு மெய்ப் பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவருமாகும் பதின் மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே

(திருமந்திரம் 476)

உயிர்கள் தம் தம் ஆணவ மலமறைப்பின் வன்மை மென்மை களுக்கு ஏற்பப் பாகுபடுத்தப்பட்டுள்ள என்பதும் அப்பகுப்புகளுள் மல வாசனை மாத்திரம் உடையோர் விஞ்ஞானகலர் எனப்படுவர். என்பதும் இவர்கள் உயிர் வர்கத்திலே உயர்ந்தவராவார் என்பதும் அவர்கட்கு இறைவன் உள் நின்றுணர்த்தி உபகரிக்கிறான் என்பதும் கூறப்பட்டன.

உயிர் வர்க்கமானது மூன்று பிரிவாகப் பகுப்புண்டுள்ளது. அப் பகுப்புகளின்படி உயிர்கள் விஞ்ஞானகலர்–பிரளயகலர்–சகலர் என்று கூறப்படும்.

விஞ்ஞானகலர் எனப்படுவோர் ஒரு மலமுடையவர்கள் ஆவர். இவர்களுக்கு ஆணவமலம் பந்தம் ஒன்றுதான் உண்டு.

இவர்கள் பக்குவர் அபக்குவர் என இரண்டு வகைப்படுவர். பக்குவர்கள் அப்போதே சிவசாயுச்சியம் பெறுவர் ஆவர். அபக்குவர் களாகிய விஞ்ஞானகலர்கள் மூன்று வகைப்படுவர். அவர்கள் உத்தமர் மத்திமர், அதமர் என்பவர்களாவர்.

உத்தமர் எனப்படுவோர் அணுசதாசிவர் முதலியோர் சதாசிவ தத்துவத்திலும் மத்திமர் எனப்படுவோர் அட்ட வித்தியேசுரர் முதலி யோரால் ஈசுவரத் தத்துவத்திலும் அதமர் மூன்றரைக் கோடி தேவர்களாய்ச் சுத்த வித்திய தத்துவத்திலும் வசிப்பவர்கள் ஆவர். இவர்கட்கெல்லாம் எடுத்துள்ள ஒரே பிறவியோடு முத்தி வாய்ப்பதாம். ஆகவே விஞ்ஞானகலர் நால்வர் எனலாம்.

பிரளயாகலர் எனப்படுவோர் இருமலம் உடையவர்கள் ஆவர். இவர்களுக்கு ஆணவம், கன்மம் என்னும் இருமலங்களே உண்டு. அசுத்த மாயா காரியமான கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சூக்குமமான தனுகரணாதிகளை இவர்கள் உடையவர்கள். இவர்களுள்ளும் உத்தமர், மத்திமர் அதமர் என மூவகையினர் உளர்.

சகலர் எனப்படுவோர் மூன்று மலங்களும் உடையவராவர். எனவே இவர்களுடைய ஆணவ மலமானது கன்மமலம், மாயா மலங்களாகிய இரண்டையும் கூட்டிப் போக்கும் இயல்பு வாய்ந்ததாகும். இவர்கள் அசுத்த மாயையின் தூல பரிணாமமாகிய பிரகிருதி மாயையினாலாகிய உடம்பு முதலியனவற்றை கொண்டவர் ஆவர். இவர்கள் பிரகிருதி மாயையில் வசிப்போராவர். தேவர் முதல் எறும்பு ஈராக உள்ள உயிர்களனைத்தும் சகலர் எனப்படும். இவர்களிலும் முன் கூறப்பட்டவாறு உத்தமர் முதலானவர்கள் உளர்.

இந்தவிதமாக விஞ்ஞான கலர் முதலான மூன்று வர்க்கத்தவரும் வகையால் மூவராயினும் விரிவால் பதின்மராவர்.






## அத்தியாயம் 8

### சீவன் (சகல கலர்)

**சீவன்:** உணர்ச்சி செப்பட்டு உலகில் வழ்க்கை என்ற கால சக்கரத்தில் சுழன்று சுழன்று வாழ்வனவைகளையும், ஐந்த அவத்தைகளில் குறைந்தது வழிப்புநிலை, கனவு, உறக்கம் என்றவைகளைக் கொண்டுள்ளதும், பத்து பிராணன்களில் குறைந்தது நான்கு பிராணன்களைக் கொண்டுள்ளதுமாகிய உடலுடன் சேர்ந்த உயிரைச் 'சீவன்', 'சீவாத்மா'. 'ஆன்மா', அறிவு என்று உணரப்படுகிறது.

பிராணன் இரண்டு வகைப்படும். அவை 1. பொருளுரு பிராணன, 2. அருவவுரு பிராணன்.

பொருளுரு பிராணன் பத்து வகைப்படும். அவை 1. மெய், 2. வாய், 3. கண், 4. மூக்கு, 5. செவி, 6. சுவாசம், 7. வாக்கு, 8. மனம், 9. காயம் (செய்கை), 10. ஆயுள்.

அருவவுரு பிராணன் நான்கு வகைப்படும். அவை: 1. அநந்த ஞானம், 2. அநந்த காட்சி, 3. அநந்த ஒழுக்கம் அல்லது குணம், 4. அநந்த வீரியம். இந்நான்கையும் பாவ பிராணன்கள் என்பர்.

உலகத்திலுள்ள பொருள்கள் தத்தம் தகுதிக்கேற்ப மேலே சொன்ன பொருளுரு பிராணன்களைக் கொண்டவைகளாக இருக்கும். பொருளுரு பிராணன்களைக் கடந்து பாவ பிராணன்களை அடைபவர்களைச் சித்தர்கள் என்பர். ஆகையினால் பிராணன்களையும் அவத்தைகளையும் கொண்டுள்ளவையே தான் சீவன், உயிர், ஆன்மா என்று பெறப்படுகின்றன.

எல்லா சீவன்களையும் உலக வழக்கத்தில் மூன்று பெரும் பிரிவாகப் பிரித்துள்ளனர்: 1. அருவம், 2. அருவுருவம், 3. உருவ சீவன்கள்.

1. **அருவ சீவன்.**—அருவ சீவனைச் சிவமென்றோம்; அதனைப் பேரறிவு என்றும் முற்றறிவு என்றும் கொண்டோம். அருவ சீவன்கள் அருவுருவப் பொருளிடமிருந்தும், உருவப் பொருளிடமிருந்தும் அவத்தை பேதங்களால் வீடு பெற்று அவைகளைக் கடந்து நிற்பன. அதனையே கேவல ஞானம் எனப்பட்டது. கேவல ஞானம் பெற்று, எண் குணத்தோடு விளங்கிய அருவப் பொருளைச் 'சித்தர்கள்' எனக் (ஆகம நூற்கள்) கூறுபவர் சிவன் என்பாரும் உளர்.

2. **அருவுரு சீவன்.**—சிற்றறிவு, ஆன்மா, சீவன் என்ற பெயர்களையுடையது. சிற்றறிவாகிய ஆன்மாவின் உடலில் பேரறிவாகிய 'சிவம்' மறை பொருளாக, காரண காரியங்களைப் புரிந்து இயங்குகிறது. இதனைச் 'சம்சாரி சீவன்' என்பர்.

**3. உருவ சீவன்.**—'மாயை' என்ற உருவம் பொருளில் அருவுரு சீவன் தங்கி சத்காரியம் புரிகிறது. ஆனால் 'ஆணவம்' என்ற அபார சக்தி சத்காரியம் புரியாமல் தடுத்து துற்காரியத்தைச் செய்விக்கிறது.

நிற்க; சிலர் எல்லா சீவன்களையும் 1. முக்தாத்மா, 2. சம்சாரி ஆத்மா என்றும் பிரித்துள்ளனர். முக்தாத்மாவை அருவ சீவன் என்றும் "சித்தர் ஆத்மா" என்றும் ஆகமம் அறுதியிட்டுக் கூறுகிறது. சித்தர்களை எண் குணத்தன் என்றும் கூறுவர்.

சம்சாரி ஆத்மாக்களைப் பிரதானமாக இரு பிரிவாகக் கொண்டுள்ளது. 1. பரியாப்தம், 2. அபரியாப்தம் என இரண்டு. பரியாப்தம் என்பது இனப் பெருக்கத்தையுடையது. அபரியாப்தம் இனப் பெருக்கமில்லாதது எனப்படும். ஒவ்வொரு பிரிவிலும் இரு வகை சம்சாரி சீவன்களாகத் தொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே சம்சாரி சீவன்கள் பதினான்கு வகைப்படும்.

அவை கீழ்வருமாறு.—

| | |
|---|---|
| 1. ஓரறிவு அருவுருவ ஆத்மா .. | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது. |
| 2. ஓரறிவு உருவ ஆத்மா | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாது. |
| 3. இரண்டறிவு ஆத்மா | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது |
| 4. மூன்றறிவு ஆத்மா | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது |
| 5. நான்கறிவு ஆத்மா | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது |
| 6. ஐந்தறிவு ஆத்மா | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது |
| 7. ஐந்தறிவும் பகுத்தறிவும் | 1. இனப் பெருக்கமுடையது. |
| | 2. இனப் பெருக்கமில்லாதது |

மற்றும் சம்சாரி சீவன்களைக் கீழ்வருமாறு பிரித்துள்ளனர்:—

சம்சாரி ஆன்மாக்களை 1. இந்திரியாத்மா, 2. அனிந்திரியாத்மா என்றும் பிரிக்கின்றனர். இந்திரியாத்மா இயங்கும் சக்தியுடையது. அனிந்திரியாத்மா இயங்காச் சக்தியுடையது.

**1.** அனிந்திரியாத்மாவைத் தாவரச் சீவன்களென்றும் கூறுவர். இது இடம் விட்டு இடம் பெயரக்கூடியதல்ல. மெய் என்ற உணர்வையும் ஓரறிவையுமுடையது. உறக்க அவத்தையை சிலவுடையன். சில உறக்கம், கனவு அவத்தைகளுக்கு இடையிலுள்ளன, உறக்க அவத்தையை உடைய வைகள் 1. மண்காய்சீவன், 2. நீர்காயசீவன், 3. தீகாயசீவன், 4. வளி காயசீவன் ஆகிய நான்கு பிரிவுகளைப் பெறும். உறக்கம், கனவு அவத்தைகளுக்கு இடையிலுள்ளவைகளுமாகிய புல், பூண்டு, செடி, மரம் வகைகள் தாவர காயசீவன் எனப்படும். ஆகமொத்தம் ஐந்து பெரும் பிரிவலடங்கும்.

(1) **மண்காயசீவன்கள் (உலோகப் பொருள்கள்).**—கற்கள், பொன், வெள்ளி, இரசம், பாடாணங்கள், காரசாரங்கள், உப்புகள் முதல்யன அடங்கும்.

(2) **நீர் காய சீவன்கள்.**—கடல், நதி, ஆறு, ஏரி, கிணறு, ஊற்று, மழை, பனி ஆகிய நீர்கள் அடங்கும்.

(3) **தீகாய சீவன்.**—நெருப்பு, ஒளி மின்னல், விளக்கின் ஒளி முதலியன அடங்கும்.

(4) **வளிகாய சீவன்.**—புயல், காற்று முதலியன.

(5) **தாவர காயசீவன்:.**—பாசி முதல், புல், பூண்டு, செடி, மரம் முதலியவைகள் ஈறாக அடங்கும். இவைகளை மேலும் இரண்டு பிரிவாகப் பிரித்துள்ளனர். அவை (1) பிரத்யேக தாவர காயசீவன்கள் (2) சாதாரண தாவர காயசீவன்கள் என்பனவாகும்.

**பிரத்யேக தாவர காயசீவன்.**—ஓரே உடலில் ஒரு சீவன். இது பருவுடல், புரியட்ட உடல் என இரண்டுண்டு. தாவரங்களில் உதாரண மாக ஒரு செடியின் வேர், பட்டை, இலை, பூ, பழம், வத்து என்பன பிரத்யேக தாவர காயசீவன்களாக அமைந்துள்ளன.

**சாதாரண தாவர காயசீவன்.**—பல சீவன்கள் ஓரே உடலில் இயங்கு கின்றன. உதாரணமாக உருளைக்கிழங்கு, வெள்ளைப்பூண்டு, மஞ்சள், இஞ்சி, நாகதாளி, கற்றாழை, மாங்காய், வெங்காயம், வேலம், முள்ளங்கி போன்றவைகள். இவைகளின் சிறுபாகத்தை வெட்டிப் பிரித் தாலும் தன் இனமாக வளரும். இவைகளில் பருவுடல் என்றும் புரியட்டவுடல் என்றும் இரண்டுள: பருவுடல் அழியும். புரியட்ட உடல் அழியாததாகும்.

**2. இந்திரியாத்மா (சங்கப் பொருள்கள்).**—(அ) இது நிகோத இந்திரியாத்மா (ஆ) திரச இந்திரியாத்மா என இருபெரும் பிரிவைக் கொண்டதாகும்.

(அ) **நிகோத இந்திரியாத்மா.**—இவைகள் உலசெங்கும் பரவி வாழ்கின்றன. உலகின் மல தடத்திலிருந்து ஆகாயம் மட்டும் எங்கும் உள்ளன. அவைகள் ஓரறிவுடையன. சில இனப் பெருக்கமுள்ளன. சில இனப் பெருக்கமில்லாதன. இவைகளின் வாழ்வு ஒரு நாடித்

துடிப்பு நேர காலமேயாகும். மெய்யுணர்வு மட்டுமே உடையன. இவைகள் தாவர காய அநிந்திரியாத்மாவல் சேர்ந்த போதிலும் இடம் விட்டு இடம் பெயரக் கூடியதால் இவைகள் இங்கு சேர்க்கப் பட்டன. ஒரே உடலில் பல சீவன்கள் உடன்கூடிப் பிறந்து இறக்கின்ற படியால் நிகோத இந்திரியாத்மாவாகக் கருதப்படுகின்றன.

(ஆ) **திரச இந்திரிய சீவன்.**—இடம் விட்டு இடம் பெயரக்கூடியது. இன்ப துன்பங்களை நுகரக் கூடியது. ஆபத்து வருவதை ஊர்ந்து தானாகவே அதைத் தவர்க்க ஓடி ஒளியும். ஞானேந்திரியங்களையுடையது. ஆகையினாலே அவைகளை (1) ஏக இந்திரியச் சீவன், (2) துவிந்திரிய சீவன், (3) திரிவந்திரிய சீவன், (4) சதுர்வந்திரிய சீவன், (5) பஞ்சேந்திரிய சீவன் என ஐவகையாகப் பிரித்துள்ளனர்.

(1) **ஏக இந்திரிய சீவன் (ஓரறிவு சீவன்).**—மெய் உணர்வு மட்டு முளது. இடம் விட்டு இடம் பெயரும். வந்தைகள், ஒட்டுண்ணிகள் போன்றவைகள் அடங்கும்.

(2) **துவிந்திரிய சீவன் (ஈரறிவு சீவன்).**—மெய், சுவை என்ற இரண்டு இந்திரியங்களையுடையது. அட்டை, குடற்புழுக்கள், பூநாகம், கிளிஞ்சல் போன்றவைகள்.

(3) **திரிவிந்திரிய சீவன் (மூவறிவு சீவன்கள்).**—சுவை, கந்தம், மய் ஆகிய மூன்று இந்திரியங்களையுடையது. எறும்பு, பேன், மலத் தில் வாழும் புழுக்கள், பூச்சிகள் முதலியன. இவைகளுக்கு நான்கு அல்லது ஆறு அல்லது மேற்கொண்டு கால்கள் உள்ளனவாக இருக் கின்றன.

(4) **சதுர்விந்திரிய சீவன்கள்:**—மெய், சுவை, கந்தம், பார்வை ஆகிய நான்கு இந்திரியங்களையுடையது. தேள், தேனீ, ஈ, நண்டு கொசு ஆகியவைகள். ஆறு அல்லது எட்டு கால்களையுடையன.

(5) **பஞ்சேந்திரியம்.**—மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து இந்திரியங்களையுடையது. இவை நான்கு வகைப்படும். அவை:—(அ) நரகர் (ஆ) மிருகம் (இ) மனிதர் (ஈ) தேவர். (அ) **நரகர்:**—நரக சீவன்களுக்கு உருவமில்லை, இடமில்லை, காலமில்லை, பொறுப்பில்லை. தனக்குத் தானே விரும்புவதுமில்லை. ஒன்றோடொன்று சேருவதுமில்லை.

(ஆ) மிருகம் (திரியாஞ்ச சீவன்).—மிருகத்தன்மையுடையது. இவை மூன்று பிரிவில் அடங்கும். அவை, (1) ஜலயரா, (2) தலயரா (3) கயரா திரியாஞ்ச சீவன்கள். நீரில் வாழும் உயிர்களில் திமிங்க லம், மீன், ஆமை முதலியன அடங்கும். தலயரா சீவன்களில் நான்கு கால்களையுடைய பசு, எருமை, குதிரை, கழுதை, யானை, ஒட்டகம், ஆடு முதலியனவும்; உரபரிசர்ப எனப்படும். (மார்பினால் தவழப்படுவது) மலைப்பாம்பு, பாம்பு, முதலியனவும்; புயபரிசர்ப எனப்படும் (கைகளினால் நடப்பன) எலி, அணில், குரங்கு முதலி யனவும் அடங்கும். கயரா சீவன்களில் பறவைகள் அடங்கும். பறவைகளிலும் உரோமாயகப் பறவை என்றும், சம்மாயப் பறவை என்றும் பிரிவுகள் உள.

## சகலர் (சீவன்)

நால்வகை பிறப்பு:

ஓடுஞ் சகடத்துருளு மொளி கொள
வீடிலொருவன் விசிறும் வளையமும்
ஆடுந் துகளு மெனச் சுழன் றாருயர்
நாடுங் கதியவை நான்குள கண்டாய்.

(சூளாமணி 1922)

உயிர்கள் நாடும் பிறப்பு நான்கு வகைத்தாம். ஓடா நின்ற வண்டியின் உருளைகளையும் ஒளி உண்டாகும்படி சுழற்றி எறியப்படுகின்ற வளைய கையும் காற்றாலே இயங்குகின்ற அணுவையும் போன்று சிறந்த உயிரக சுழற்சியடைந்து வரும்பிச் செல்கின்ற கதிகள் நான்கு உள.

நரகர், விலங்கு, மனிதர் நற் றேவர்
விரவ னவர்தம் விகற்ப முரைப்பிற்
பெருகு முரையென்று பெய்ம்மலர்த்தாரோன்
உருக வொருவா றுறுவ னுரைத்தான்.

(சூளாமணி 1923)

உரைப்பிற் பெருகுமென்று நரகர், விலங்கு, மனிதர், தேவர் என்ற நான்கை உரைத்தான்.

ஏழா நரகங் கிளத்தும் படலங்கள்
எழா யிருபத் திரட்டியோ டொன்பது
போழா மவற்றுள் ளவர்கள் புகலிடம்
பாழா மிலக்கமெண் ப·துடனான்கே.

(சூளாமணி 1924)

நரகலோகங்கள் அதன் பகுதிகள் ஏழாகி விரிந்து, நாற்பத்தொன்பது உட்பிரிவுகளையும் உடையனவாம். அந் நரகங்கள் புகும் புரைகள் எண்பத்து நான்கு நூறாயிரம் என்னும் முடிவையுடையவாம்.

அப்பரி செண்பத்து நான்கு நூறாயிரம்
மெய்பரி செய்தி விரிந்துயிராய் நிற்கும்
பொய்பரி செய்திப் புகலும் மனிதர்கட்
கிப்பரி சேஇருள் மூடி நின்றானே.

(திருமந்திரம் 396)

நால்வகைத் தோற்றது ஏழ்வகைப் பிறப்பினுள் எண்பத்து நான்கு நூறாயிரவேறுபாட்டோடு கூடிய உடம்புகளை உண்டாக்கினான்.

ஆதித்தன் சந்திரன் அங்கி எண் பாலர்கள்
போதித்த வானொலி பொங்கிய நீர் புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே.

(திருமந்திரம் 397)

தூமாயையின் கீழாய் அடங்கிய மூலப் பகுதியின் கண் நின்று முறையாகத் தோன்றியனவே என்று திருமூலர் கூறுகிறார்.

இருளினிருளு மிருளும் புகையும்
அருளி லளறு மணலும் பரலு
மருளின் மணியு[மெனவிப் பெயர
பொருளி னரகங்கள் போதரக் [கொண்ணீ

(சூளாமணி 1925)

பேரிருள், இருள், புகை, சேறு, மணல், பாற்கற்களும், மணியும் என எழு நரகங்கள் உள.

பத்தடம் பத்தொடு மூன்றா மவற்றிடை
ஒத்தவுறையு வலக்க மொர் முப்பது
கொத்தெரி வெம்பவர் கும்பிக் குழியவை
இத்துணை யென்பதொ ரெல்லையிலவே

(சூளாமணி 1927)

பதின்மூன்று புரையும் (அடுக்கும்) முப்பது நூறாயிரம் உறையுளும் எல்லையில்லாத கும்பிக் குழிகளும் உள்ளன. இதனையே பிறரும்.

ஒன்று மூன்றைந்து பேழு மொன்பதும்
  பத்தோடு ஒன்று.
நின்ற மூன்றோடு பத்து நிரயத்தும் புரைகள்
  மேன் மேல்!

எனக் கூறுகின்றனர்.

பேழைப் பிளவும் பிலத்தின் முகங்களுந்
தாழிப் பதலையும் போலுந் தகையன
ஆழப் பரந்த வழுக லளறவை
பீழைப் பதகர் பிறக்குமிடமே.

(சூளாமணி 1928)

பிளவும் முகங்களும் தகையன அழுகலலறு. பீழைப் பதக பிறக்கும் இடம் என்றார்.

குழிபடு கும்பிக் கருவாய் பெருகி
அழுகலுடம் பிவை யந்த நிறைந்தால்
வழுவி யனல்படு பாறைக் கண்ணைகிப்
புழுவி னுருள்வ பெ. ரிவ பொடிவ.

(சூளாமணி 1929)

அக்கும்பிகளிடமில்லாதபடி அவ்வுயிர்கள் நிறைந்து விட்டால், பின்னர் நெருப்புப் பாறைகளின் மேற்றங்கிப் புழுக்களைப் போன்று உருண்டும் பொரிந்தும் பொடிவனவாம்.

புழுவி னுருண்டு பொடிந்தவர் பொங்கி
எழுவர் புகையைந் தெழுந்தபின் மீட்டும்
வழுவலர் வீழ்வர் மறிந்துமவ் வாறே
ஒழுவிலா தேவனை யுள்ளள வெல்லாம்.

(சூளாமணி 1930)

புழுப்போல பாறையின் உருண்டு துகளாயவர் மீளவும் எழா நிற்பன. புகைந்து எழுந்த பின்னர் மீளவும் வழுக்கு வீழா நிற்பன.

பொய்யா வருநஞ்சும் பேரழற் குட்டமுஞ்
செய்யாக் குழிகளுஞ் சீநீர்த் தடங்களு
நையா நரக ரிடமிவை நாறினும்
உய்யா பிறவுயி ரோசனைக் கண்ணே.

(சூளாமணி 1946)

நஞ்சும் அழற் குட்டமும் சீழ்த்தடங்களும் ஆகிய இந் நரகத்தின் நாற்றத்தை ஒரு யோசனைத் தொலைவிடத்தே நின்று நுகரினும் ஏனைய உயிர்கள் இறந்துபடுமாம்.

விலங்கு.

விலங்குடல் சாதி விரிப்பிற் பெருகும்
உலங்கொண்ட தோண்மன்ன வோரறி வாதி
புலங் கொண்ட வைம் பொறியீறாப் புணர்ந்த
நலங் கொண்ட ஞாலத்தி னாடி யுணர்நீ.

(சூளாமணி 1957)

ஐயறிவுடையோர் மானிடருள்ளும் உளர் எனினும் அவரையும் விலங்கெனவே கொளல் வேண்டும்.

**ஒன்றறிவுயிர்:**

நின்று வருந்து நிகோதப் பிறவியுள்
ஒன்றறி வெய்தி யுழக்கு முயிர் பல
அன்றிச் சிறிதுண் டவற்றினு மவ்வழிச்
சென்று பெயர்வ சிலவுள கண்டாய்.

(சூளாமணி 1958)

ஓரறிவுயிரும் அவற்றின் கிளைப் பிறப்பும் அப் பிறப்பினும் சென்று மீளும் பிறவும் ஓரறிவுயிர் என்றே கொளளற் பால என்பதாகும். புல்லும் மரமும் முதலவாய நிலையியற் பொருளாதலின் நின்று வருந்தும் நிகோதப் பிறப்பு என்றார். இதனையே தொல் காப்பியரும் 'ஓரறிவுயிரே பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே' என்று கூறியிருக்கிறார்.

ஓரறி வாகி யழக்கு முயிர்களைப்
பேரறி வாரும் பிறரில்லை யின்னவை
யாரறி வாரழி யுந்திறம் யாதெனில்
கூரறி வில்லவர் கொன்றிடுகின்றார்.

(சூளாமணி 1959)

உயிர்த் தொகை யாறனு ளொன்றோழித் தேனைப்
பெயர்த் தொகை பெற்ற பிறவிக டம்மைப்
பயிர்த்தலு மின்றி யுலகம் பதைப்பச்
செயிர்த்தவர் போலச் செகுத்திடுங் கண்டாய்

(சூளாமணி 1960)

புல் மர முதலிய ஒன்றறி உயிர்களின் விகற்பங்கள் எண்ணல் அவற்றின் பெயர் அறிதலும் இயலாது. நிலையியற் பிறவியாகிய ஓரறி வினங்கள் ஏனைய எல்லா வுயிர்களையும் நடுங்க வைத்துச் செகுத்திடும் என்கிறார்.

ஏனை யொழிந்த வியங்குநற் சாதிகள்
ஆனை முதலா வளிய வலங்குகண்
மானுயர் பற்றி வலிந்து நலிந்திட
ஊனெய் யுருகு முழக்கு மொருபால்

(சூளாமணி 1961)

புல் முதலிய நிலையியற் பிறப்பின் வேறாய் எஞ்சிய இயங்கு இயற் பிறபாகிய நல்ல வகையினவாகிய யானை முதலிய விலங்கு களும் இயங்கியற்பிறவிகளாம்.

மனித வகுப்பு.—

மாக மழை வண்கை மன்னவ மக்களு
மேக கதியின ரநேக விகற்பினர்
சேகர் மிலைச்சர் மனிசாக டிப்பியர்
போக மனித ரெனப் பொருட் பட்டார்.

(சூளாமணி 1972)

மனிதருள்ளும் ஐவகையருளர் என்க.

" நல்லவர் தீயவர் திப்பியர் ஒப்பில் குமானுய ரா
டல்ல வருள்ளூறுத் தாடவர் ஐவருளர்.

(பாடல் 82)

என்று நீலகேசியில் கூறப்பட்டுள்ளது.

அவர்கள் (1) சேகர் (2) மிலைச்சர் (3) மனிகர் (4) திப்பியர் (5) போகமனிதர் என ஐவகையராவர்.

**சேகர்.**

பத்து வகைய பரதவ ரேவதத்
தத்தகு கால வீழிவ் ணகத்தவர்
சித்தந் தெளிவிலர் சீல மடைவிலர்
செத்த வறிவினர் சேகரவரே.

(சூளாமணி 1973)

பரத கண்டம் ஐந்தும் ஐராவத கண்டம் ஐந்தும் என்றும் பத்து வகைப்படும். அவற்றுள் சேகர் என்பவர் பரத கண்டத்துள் வாழும் ஒரு வகை மனிதராவர். சித்தம் தெளிவிலர், சீலமிலாதவர், அறிவின்மையர், ஒழுக்கமில்லாதவர் சேகர் எனப்படுவர்.

**மிலைச்சர்.**

தீவினுள் வாழுங் குமானுடர் தேசத்து
மேவயுறையு மிலைச்சரெனப் பெயர்
ஆவரவருண் மிலைச்சர வரையும்
வீவருந்தாரோய் விலங்கினுள் ளவப்பாம்

(சூளாமணி 1974)

தீவுகளிலே வாழும் குமானுடர் என்பாரும், தேசத்து, மேவியுறையும் மிலைச்சர் என்பாரும் இருவகையினர். அவருள் மிலைச்சர் உருவானே மானுடராயினும் அறிவானே விலங்கென்றே கொள்ளப் படுவர் என்க.

இதனையே

' வாரியுட் தொண்ணூாற்றாறு மற்றைக் கண்டத்தும்
சேருநர் அறத்தைச் சேரார் மிலேச்சராய்ச் செய்யப்பட்டார்"

என்று மேருமந்தரபுராணம் கூறுகின்றது.

மக்கள் வதியு மிரண்டரைத் தீவினுட்
டக்க நிலத்துப் பிறந்தவர் தம்முளு
முக்குலத் தாரொடுங் கூடாமுயற்சியர்
ஒக்கலைப் போல்வார் பலருமுளரே.

(சூளாமணி 1982)

மனிதரும், திப்பியர், போகரும் ஆகிய மூன்று குலத்தவரும் சம்புத்தீவும், தாத கீடண்டத்தீவும், புட்கரத்தீவிலும் வைகுவர்.

இதனையே திருக்குறளில்

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்டதில்.

(குறள் 1071)

என்று கூறப்பட்டுள்ளது.

## அத்தியாயம் 9

---

### வலம்

காயப்பை யொன்று சரக்குப் பலவுள
மாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டு
காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்
மாயப்பை மண்ணா மயங்கிய வாறே.

(திருமந்திரம் 2083)

உடம்பாகிய மெய்ப்பை ஒன்று உண்டு. அதன் கண் ஊன் முதலிய சரக்குகள் பல உள்ளன. இதனை மெய்ப்பை, காயப்பை, மாயப்பை என்று பல பெயர்களால் கூறுவர் மற்றுமோர் பை என்பது உள்ளம் முதலியவற்றைக் கருவியாகக் கொண்டு ஓர்த்துணரும் ஆருயிரும் ஒன்று உண்டு. அவ்வுயிரை உடலாகக் கொண்டு அவ்வுயிருக்கும் தோன்றாத வாறு கள்வன் போல் மறைந்து நின்று இயைந்திருக்கும் பேருயிர் உளது. ஆகவே, உயிர்ப்பை ஒன்று; அதனுள் பேருயிர் பையும் உண்டு. எனவே (1) காயப்பை உருவமாயும்; உயிர்ப்பை அருவுருவாயும்; பேருயிர் அருவமாயும் உள்ளன.

அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்
சுத்த மதாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச உருவ ரசகந்தம்
புத்திமா னாங்காரம் புரியட்ட காயமே.

(திருமந்திரம் 2084)

சிவமும் சக்தியும் அதாவது சதாசிவம் அமைந்த உடம்பு இரு வகைப்படும். ஒன்று அனைத்துயிருக்கும் கருவின்றியே திருவுள்ளத்தால் பிறப்பளித்த "மூலஅணு" இவ்வுடம்புக்குக் காரணமாகும். மாயை புறத் தொழிலுக்கேற்றவாறு அமைத்துக் கொடுக்கும். இதனை உடலணு வென்றும் சிறப்பணுவென்றும் பரு அணு என்றும் சொல்வர். இப்பரு அணு பிறந்து, இறந்து மாறி மாறி வரும். இதுவே தாய் தநதையர் வாயிலாக வருவது. இதனைத் திருவள்ளுவர்—

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(குறள்)

பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(குறள்)

பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தது போன்றது உண்மையே.

(மணிமேகலை)

ஆராயுமிடத்து உடல் அணுக்களின் தொகுதிகளே பிராணிகளின் உடல் எனப்படும்.

சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவன் சத்தியுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்திதான் என்றுஞ் சமைந்துரு வாகுமே

(திருமந்திரம் 1741)

உலகுடல்களாகிய மாயாகாரியப்பொருள்காள் சிவ சத்தியோடு பொருந்த சத்தியின் கிரியையால் எளிதாகத் தோன்றிக் காரியப்படுகின்றன. சத்தி சிவமாகும். சிவம் சத்தியுமாகும். இவ்விரண்டும் பொருளான் ஒன்றே. இயல்பால் இருநிலை. சத்தியும சிவமும் இல்லாமல் எப்பொருளும் தோற்றமுறாது. சத்தியே யாண்டும் எல்லாப் பொருட்கட்கும் தாங்கும் நிலைக்களம். அதனால் சத்தியே உலகமாகச் சமைந்தது என்றார் திருமூலர்.

தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்
இருக்கின்ற தன்மையை யேதும் உணரார்
பிரிக்கின்ற வ்ந்து பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே

(திருமந்திரம் 1751)

சார்ந்திருக்கும்படியான உலகுடல உயிர்கள் அனைத்திற்கும் முழுமுதல் (பதி) பொருள் சிவம். பதி ஒன்றாய், வேறாய், உடனாய் என்றும் நின்றருளும் மெய்ப் புணர்பு நிலை. விந்துவாகிய உயிரையும் இடைநின்று பிரிக்கின்றது. அங்ஙனம் பிரிபபதாகிய மாறுபாட்டினை நீக்கி எல்லாவற்றையும் தன் பெரு நிறைவில் கருக் கொள்வதாகிய அடக்குதலைச் செய்துகொள்ளும் பதியைக் காண் என கிறார் திருமூலர். ஆகவே சிவசத்தி விந்துவையும் நாதத்தையும் ஒன்று சேர்த்துக் கருக்கொள்ளச் செய்கிறது. இது இயற்கை நியதி.

ஆராயுமிடத்து விலம் இருபாதிகளைக் கொண்டது. ஒரு பாதி சிவம். மற்றபாதி சக்தி. வலப்பக்கம் சிவம். இடப் பக்கம் சக்தி. இவ்வாறான என்றுமே பிரியாத நிலையைச் சதாசிவம் (அர்த்தனாரீசுவரர்) என்பர். சதாசிவம் "விலம்" எனப் பெயராயது.

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.

(திருமந்திரம் 1916)

மனிதன் யாக்கையின் வடிவு சிவலிங்கம். மனிதன் வடிவு சிற்றம்பலம். மனிதன் வடிவு அருளோனாகிய சதாசிவம். மானிடன் வடிவு அம்பலவாணன் இயற்றும் அருட்பெருங் கூத்து.

எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே

(திருமந்திரம் 1714)

சதாசிவத்திற்கு நெஞ்சம் அறிவாற்றலாகும். அறிவுப் பெரு வெளியாகிய வனப்பாற்றல் பரை எனப்படும். அது தலையாகும். நடப்பாற்றலாகிய ஆதிசக்தி தலை முடியாகும். அழகிய போர்வை அன்பாற்றல் ஆகும். தொழிலாற்றல் கண்ணாகும் (சிலம்—பராசக்தி; சிகை—ஆதி சக்தி; கவசம்—இச்சா சக்தி; நேத்திரம்—கிரியாசக்தி ஆகும்; இதயம்—ஞான சக்தியாகும்).

தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குத்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாய்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே.

(திருமந்திரம் 1720

சீவ உடல்கள் சிவலிங்கமாகவே நின்றிடும். சிவலிங்கத்து உள்ளும் புறமுமாய் நிறைந்து நிற்கும் சதாசிவமுமாகும். உடம்பே தனி முதற் சிவம். அவ்வுடம்பு உள்ளம், உணர்வு, உணர்வனுளதாம் இன்பம் எல்லாம் சிவமேயாகும். ஆகவே, மானிட உடல் சதாசிவ உருவமான சிவலிங்க உருவமாகும்.

மனிதன் என்பவன் சூழ்நிலைச் சந்தர்ப்பங்களுக்கு எற்றவாறு திறமையான வேலைகளைச் செய்ய முடிந்த பல விலங்களால் அமைந்த ஒரு கூட்டம். முழு சீவன்களை உருவாக்கும் செலங்களைத் தனித்தனியே பார்த்தால் மனிதனுக்கும் ஒரு பொது விலத்திற்கும் அவ்வளவு வித்தியாசம் இல்லைதான் என்று சொல்லலாம். வாழ்க்கையின் மூல அலகான விலத்தின் முக்கியத்துவத்தை உணர அறிவியலறிஞர்களுக்குப் பல ஆண்டுகள் பிடித்தன.

வலங்கள் பலவித உருவங்களாகவும் பருமன்களாகவும் காணப் படுகின்றன. ஆனால் அவைகள் மிக நுண்ணியவைகளாக இருக்கின்றன. ஒரு விலம் நூறு ஆயிரத்தில் ஒரு கூறாக வலங்குகின்றது. (திருமந்திரம் 1/100000 கூறு) அதாவது ஒரு u = (1/1000 Millimetre) சில திசுக்களில், விலங்கள் பக்கவாட்டாக அமைந்திருக்கின்றன. சில வற்றில் பக்கனுக்குப் பங்கம் வில இடைவெளிகளுண்டு அல்லது வில இடைப் பொருள்களுண்டு. அவை ஒவ்வொரு சீவ வலத்தில் காணப் படும் சவ்வு போன்றது. ஒரே சீராய் அமைந்த பொருள் அன்று. அது நிறமற்றது. கண்ணாடி நிறமானது. தளதளவென்று நகரும். புறக் காரணங்களுக்கு வெறிக்கும் அல்லது மீண்செயலைச் செய்யும். சிக்கு முக்கலான கால்சக் சலப்புப் பொருள், கரிநீரகப் பொருள், நிணம், அநிந்திரிய உப்புகள், நீர் முதலியவைகளால் ஆனவை என்று தெரிவிக் கப்பட்டுள்ளது. வதவதமான வலச் சவ்வுகளில் அவ்வகைகளுக்கேற்ற வாறு பற்பல விகிதமாக மேற்கண்ட பொருள்கள் பொருந்தி இருக் கின்றன.

ஒரு வலத்தில் (1) வலப்பை—விலகச் சவ்வு (2) வலப்பைச் சவ்வு மற்றும் வலசம், விலசகம், பரம், அபரம், முப்பூ ஆகிய பல பொருள் களிருக்கின்றன.

வலசம்—வெண் செம்மை சளிச் சவ்வு போன்ற துல்லியமான அறிவுற்ற பொருள் வலத்தை இயக்குவிக்கிறது. அதனை வலசம் என்பர்.

விலசகம்—இது அபரம் எனப்படும். இங்குச் சிக்குமுக்கலாகவும் பின்னியுள்ளதுமான பொருள்கள் உள. இதனுள் அபரம் என்ற பொருள்கள் இருக்கின்றன. தூமாயை அல்லது நுண்மையான நூல் போன்ற பொருளும் சிவசத்துவம் சக்தி சத்துவம் ஆகிய பொருள்கள் உள.

(1) அபரம் : அபரவிந்து, அபரநாதம் என இரண்டு வகைப்படும்.

(2) தூமாயை மிகவும் நுண்மையான நூல் போன்றது. ஊசிப் போன பொருளில் ஏற்படும் நூல் போன்றது. கண நேரத்தில் மறையும் இயல்புடையது.

(3) சிவமும் சக்தியும் அபரத்தில் திருகூத்துத் தாண்டவம் புரிகின்றன.

(4) பரம் : பரத்தில் (நடுவானம்) ஆதிசக்தி நிர்குணியாக விளங்கா நிற்கிறது ஆதிசக்தி (அநாதியான சக்தி) தன் செய்கையால் கிரியா சக்தி, ஞான சக்தி, இச்சா சக்தி, பராசக்தி என்று மாறுகிறது. பரம் சிவ தத்துவமும் சக்தி தத்துவமும் ஒருங்கே சேர்ந்து அமைந்துள்ள பீடமாகும்.

(5) முப்பூ : இனப் பெருக்கத்திற்குக் காரண பூதமானப் பொருள். அநாதியாகவே தொன்று தொட்டு அணுக்கள்தோறும் விலங்கள் தோறும் உள்ள பொருள். இனம் பெருக்கமுறும்போது தான் பெற்ற வில இணங்களுக்கு நேர் சரியாகப் பங்கீடு செய்கிறது.

(6) அயன், அரி, அரன், கலவைப் பொருள்கள் : வளர்சிதை மாற்றங்களுக்கு ஆதாரமான பொருள்கள்.

(7) **பஞ்ச பூதங்கள்.**—மண், நீர், தீ, வளி, வெளி என்பவைகள்.

**இனப் பெருக்கம்.**—ஒவ்வொரு பிராணி இனங்களுள் தத்தமக்கென ஆதி மூல அலகு விலங்கள் இருக்கின்றன. அம் மூல விலம் சரி பாதியாகப் பிளந்து பிரிந்து இனப்பெருக்கமுறுகின்றன. ஒவ்வொன்றாகப் புதிதாக ஏற்பட்ட விலங்கள் வளர்ந்து தம் தொழிலைப் புரிகின்றன. இவைகள் காலக் கிரமத்தில் இனப் பெருக்கமுற்று சில பிரிவது முண்டு. சில அறிவற்ற பொருளாகுவது முண்டு. பெருகி உருவாகின்ற பிராணியோ, அங்கமோ பெருகி வளரும் விலங்களின் எண்ணிக்கையை விட அழியும் விலங்களின் எண்ணிக்கை பன்மடங்கு குறையுமானால் பிராணியோ அங்கமோ வளர்ந்துகொண்டே போகின்றது. வளரும் விலங்களும் சிதைவுறும் விலங்களும் சரிசமமானால் அங்கமோ பிராணியோ சுக நிலையையுடையதாயிருக்கும் சிதைவுறும் விலங்கள் அதிகரித்துக் கொண்டே போகுமானபல் பிராணியோ அங்கமோ தன் தொழிலைச் சரிவர செய்யாமல் அழிவுறும். ஆகையால் பிராணிகள் வாழ உடல் விலங்கள் பிரிந்து பிரிந்து பல்கிகொண்டே செல்வதுமல்லாமல் சிதைவுற்று விலங்களுக்கு ஏற்ப ஈடு செய்துகொண்டே இருத்தல் வேண்டும்.

விலங்கள் இவ்வாறு பிளந்து பிரிந்து இனம் பெருகிச் சிறிது காலத்திற்கெல்லாம் பல கோடி உடல் அணுக்களாகத் தொகுதிகள் ஏற்பட்டுப் பருஉடலாக மாறுகின்றன. இவ்விலங்கள் கூட்டு வாழ்வு பெற்று நமது உடலை ஆக்குகின்ற கண்ணறைகளாக மாறுகின்றன. கண்ணறைகளைத் திசு என்பர். ஒவ்வொரு கண்ணறை விலங்கள் பிரிந்து பல்கும்போது ஒரேமாதிரியாக இருந்துவிடுவதில்லை. ஒரே மாதிரியாக இருந்தால் உடலை ஆக்கமுடியாது. பல்வேறு திசுக்களினால் கூட்டுறவு ஒத்துழைப்பால் உடல் தொழில் புரியும். இந்தக் கண்ணறைகளை அல்லது திசுக்களைச் சித்தர்கள் உடல் தாதுக்கள் என்று குறிப்பிடுகின்றனர்.

இப்படிச் செய்து முடிக்க, திட்டங்கள் வகுத்தது யார்? கண்ணறைகளில் இருக்கும் உடல் அணுவின் நடுவில் இருக்கும் பரம் இத்திட்டங்களுக்குக் காரண காரியங்களாக இருக்கிறது. சிவ சக்தியும் விந்து நாதமும், விந்து நாத பேதங்களும் உடலை ஆக்கத் திட்டங்களை வகுக்கும் ஆற்றலை உடையன. அந்தந்த நிலையில் ஏற்படவேண்டிய வேறுபாடுகளைச் செய்து முடித்ததற்குரிய கட்டளைகளைக் கண்ணறை அணுக்கள் தக்க காலத்தில் தாமே இயங்கிச் செய்துகொள்கின்றன. இது ஒரு விளக்கமுடியாத விந்தையே. இவ்விந்தையைத் திருக்கூத்து என்றனர் சித்தர்.

# பிரிவு இரண்டு

## அத்தியாயம் 10

### தத்துவங்கள்—தொண்ணூற்றாறு

திருமூலர் கண்ட அணுவில் 40,048,500 மெய்கள் அடங்கியிருப்பதை உணர்ந்தோம். எண்ணிலடங்காதன வென்ற மெய்களை நம் போன்றவர்களால் கற்றுணர வாழ்நாள் போதாது. ஏனெனில் தொண்டரடிப்பொடி ஆழ்வார் கீழ்வருமாறு கூறுகிறார்.

> "வேத நூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவரேனும்
> பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
> பேதை பாலகனதாகும் பசி, பிணி, மூப்பு, துன்பம்
> ஆதலால் பிறவி வேண்டேன்....."
>
> (பிரபந்தம்)

மனித வாழ்வில் இன்ப துன்பங்கள் நிறைந்திருப்பதால் மேற் சொன்ன மெய்களை அறிவது கடினம் என்பதாம்.

திருமூலர் கூறிய அணுவின் மெய்களனைத்தும் அறிய சித்தர் களாலாகுமேயன்றி வேறொருவராலும் கணக்கிட்டுக் கற்றுணர இயலாது. இங்கு கூறும் தொண்ணூற்றாறு தத்துவங்கள் அருவுருப் பொருளாகிய அணுவினுள்ளதைக் கண்ணால் நேரிடையாகக் காண முடியாது. எனினும் தொண்ணூற்றாறு தத்துவங்களைக் கொண்ட அண்ட அணு அவத்தை பேதத்தால் அல்லது சலனத்தால் பிண்ட அணுவாக மாறும்போது தொண்ணூற்றாறு தத்துவங்கள் இயங்கும் சக்திகளைப் பெறுகின்றன. பிண்ட அணுக்கள் பிளந்து பிரிந்து பல கோடி அணுக்களாகத் தொகுப்புற்று உடலாகும்போது தொண்ணூற்றாறு தத்துவங்களும் உடனுமாய் உடலில் தொங்கிச் செயலாற்றுகின்றன. இத் தொண்ணூற்றாறு தத்துவங்களின் சேர்க்கை சக்திகளால் உடலில் உயிர்ப்புற்று, உறு பெற்றுப் பெருகி, பெரிதாகி, உடல் பெற்று, உடல் முழுவதும் பரவி வாழ்ந்து தன் இயற்கை கடனை ஆற்றி, தன் இனத்தைப் பெருக்கி, முதுமை அடைந்து அழிந்து பழையபடி தொண்ணூற்றாறு தத்துவங்களாக அறிவற்ற அணுக்களில் உறக்கமடைகின்றதுமான காலச் சக்கரத்தின் வியப்பன நியதியை உடல் தத்துவ நூலில் ஆழ்ந்து அறியவேண்டும்.

தத்துவம் என்பது கருவியாகும். உயிர்கள் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன. அவ்வாறு அனுபவிக்கும் அனுபவங்களுக்குத் துணை செய்யும் கருவிகளே தத்துவங்களாம். விலத்திலும் சரி சீவ உடலிலும் சரி தொண்ணூற்றாறு தத்துவங்கள் மாயா காரியம் புரிகின்றன. அவைகளை யூகி முனி மிகவும் தெளிவாகக் கூறுகிறார். அவற்றைக் காண்போம்.

### ஐம்பூதம்

நிகழ்ந்தசீர்ப் பிரிதிவியும் அப்பு தானும்
நேரான தேயுவொடு வாய்வுமாகும்
அகழ்ந்தஆ காயத்தோ டைந்து பூதம்
அரிதான பிரிதிவி மண்ணுமாகும்.
திகழ்ந்தஅப் புசலமாகும், நெருப்பும் தேயு,
தாக்கான் வாயுவது காற்று மாகும்.
இகழ்ந்தஆ காயமது சத்த மாகும்.
எற்றபிரி திவ்பொன் நிறம தாமே.

**பொருள்.**—பஞ்ச பூதம் என்று சொல்லப்படும் பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பவைகளே மண், நீர், தீ, வளி, வெளி, என்னும் ஐந்து பூதங்களாகும். இவற்றுள் மண் பூதத்தின் நிறம் பொன்னாகும்.

### ஐம்பூத நிறம்

ஆமேதான் அப்புநிறம் படிகமாகும்.
அக்கினியின் நிறந்தானே சிவப்புமாகும்.
காமேதான் வாய்வுநிறங் கறுப்ப தாகும்,
கார்மேகப் புகைநிறமாம் ஆகா யந்தான்.
தேமேதான் வர்ணமுமிப் படியே யாகும்.
சேர்ந்துநின்ற தெய்வத்தின் தலமே கேளாய்
போமேதான் பிரிதிவிக்குத் தேவன் பிரம்மா
பெரியசுவா திட்டமான மிருப்ப தாமே.

**பொருள்.**—நீர் பூதத்தின் நிறம் படிகம்; தீ பூதத்தின் நிறம் சிவப்பு; வளி பூதத்தின் நிறம் கறுப்பு; வெளி பூதத்தின் நிறம் புகை என்பது.

### ஐம்பூதங்கட்குரிய தெய்வங்களும் அவற்றின் இருப்பிடமும்.

இருப்பான வீடதுமூ லாதார மாகும்
இதழாறு பிரிதிவயின் பீசம் நவ்வாம்
மருப்பான மயிர்நரம்பு தசைதோ லெலும்பு
மாசற்ற அப்புவிற்கு வட்ணு தெய்வம்
செருப்பான மணிப்பூரம் வீடுமாகும்
சிறுபிறை ரூபம்போல்பத் திதழ்தான் சுற்றி
அருப்பான அப்பினுக்குப் பீசம் மவ்வாம்
அதன்கூறைத் தான்கேளு முதிரஞ் சீயே

**பொருள்.**—மண் பூதத்தின் தேவன் பிரம்மா, இருப்பிடம் மூலா தாரமாகும், ஆறு இதழ் கொண்ட இதன் பீசம், நவ் என்பதாம். மண் பூதத்தின் கூறுகளாவன; மயிர், நரம்பு; தசை; தோல்; என்பு என்பவைகளாகும், அப்பு பூதத்திற்குத் தேவன் வட்ணு. இருப்பிடம் மணிப்பூரகம், பத்து இதழுடைய சிறுபிறை வடிவமுடை நீர் பூதத் துக்குப் பீசம் "மவ்" வாகும்,

சீயான நீரோடு மூளை மச்சை
தேயுவுக்கு ருத்திரன்தான் தெய்வ மாகும்
மூயான முக்கோணம் மகத்தாம் வீடு
முயற்சியா யீராறா மிதழ்தான் சுற்றில்
தேயான சிவ்வதுவும் தேய்வு பீசம்
சிதையாமலிதழுக்குட் சேர்ந்து நிற்கும்
ஆயான வாகாரந் துஞ்சல் போம்
அவருடைய கூறதுதான் பயமுஞ் சோம்பே.

**பொருள்.**—நீர் பூதத்தின் கூறுகளாவன உதிரம், சீழ், மூளை, மச்சை எல்பவைகளாம். தீபூதத்தின் தெய்வம் உருத்திரன், முக்கோணமென்ற உடற்சக்கரம் இதன் இருப்பிடம். பன்னிரண்டு இதழ்களையுடையது. தேயுவன் பீசம் "சிவ்" வாகும். அகங்காரம் சோம்பல், மைதுனம், பயம், உறக்கம் முதலிய தேகக் கூற்றினை யுடையது.

சோம்பான வாயுவுக்கு மகேசன் தெய்வம்
சோடசமா மிதழோடே வ்சுத்தி வீடு
ஆம்பான வாயுவுக்கு வவ்வு பீசம்
அவருடைய தன் கூறு நடத்தல் நிற்றல்
வாம்பான ஆடலோ டிருத்தல் ஓடல்
வசயான அறுகோணங் குடியிருப்புத்
தோம்பான ஆகாய ஆக்கினைக் குள்ளே
சிதையாம லிரண்டுதழோ டிருக்கும் பாரே

**பொருள்.**—வாயு பூதத்துக்கு மகேசன் தெய்வம். இருப்பிடம் அறுகோணமான விசுத்தியாகும். இதன் பீசம் வவ் வாகும். வாயு பூதக் கூறுகளாவன நடத்தல், நிற்றல், ஆடல், இருத்தல், ஓடல் என்பனவாம். ஆகாய பூதம் ஆக்கினையை இடமாகக் கொண்டு இரண்டு இதழ்களோடிருக்கும்.

இருக்கின்ற ஆக்கினையின் கூறு கேளாய்
ஏற்றகா மக்குரோத லோப மோகம்
மருக்கின்ற மதமுமாற் சரியத் தோடு
வானுக்குச் சதாசிவமே தெய்வ மாகும்
பிருக்கின்ற ஆகாய பீசம் யவ்வாம்
பேரான ஐம்பூதப் பிரிவு மாகும்
தெருக்கின்ற தசநாடிச் செயலை யெல்லாம்
செப்புகிறேன் தெளிவாய் சிறந்து கேளே.

**பொருள்.**—ஆக்கினையை இடமாகக் கொண்ட ஆகாயத்தின் கூறுகளாவன, காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பனவாம். இதற்கு தெய்வம் சதாசிவம், பீசம் "யவ்"வாகும். இவை ஐம்பூதங்களின் பிரிவுகள்.

இனி பத்து நாடிகளின் செயல் கூறப்படுகிறது.

## நாடி பத்து

சிறந்தஇடை பிங்கலையுஞ் சுழிமுனையி னோடு
சிறப்பான காந்தாரி அத்திசி குவையாம்
பிறந்தஅலம் புருடனோடு குகுதன் தானும்
பேரான சங்குனியும் வயிர வன்தான்
திறந்தவிவை பத்துந்தான் தசநாடி யாகும்
திரிமூன்று நாடியினில் ஒடுங்கும் பாரு
மறந்தஇடை பிங்கலையுஞ் சுழிமுனையொடு மூன்றும
வாதத்தில் ஒடுக்கமென வகுக் கலாமே.

**பொருள்.**—இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புருடன், குகு, சங்குனி, அலம்புடை (வயிரவன்) என்பவைகளே பத்து நாடிகள். இவை பத்தும் மூன்று நாடிகளுள் ஒடுங்கிவிடும். அவை வாதம், பித்தம், கபம் என்பவைகள். இடைகலை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்றும் வாத நாடியில் ஒடுங்கும்.

வகுக்கவிதின் குணங்கள் மந்தமொடு குளுத்தி
மலக்கட்டு வாதத்தின் கூறு மாகும்
அகுக்கவே காந்தாரி அத்திசிங் குவையாம்
அலம்புருடனிது நாலும் பித்தத்தின் கூறு
இகுக்கவே இதின் குணங்கள் உட்ணந் தாகம்
உயர்மோக மழலைவாய் வும்மேல் நோக்கும்
நகுக்கவே நாடிபட படத்து துடிக்கும்
நாசமாம் பயமோடு கோப மாமே.

**பொருள்.**—இடைகலை, பிங்கலை, சுழுமுனை; இவை மூன்றும் வாதநாடியில் அடங்கும். மந்தம், அசதி, மலக்கட்டு முதலியன உண்டாதல் இதன் குணங்களாகும். காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புருடன் ஆகிய நான்கும் பித்த நாடியின் கூறுகளாம். வெப்பம், தாகம், மோகம், அழலை, வாயு மேல் நோக்கல், நாடி படபடத்துத் துடித்தல், பயம், கோபம் ஆகியவை இதன் குணங்களாகும்.

பரிசான இடையினொடு பிங்கலையு மொக்கப்
பயின்றதோர் குதத்தினடி மூலம் பற்றிச்
சுரிசான பாகங்கண் மாறி மாறிச்
சுழிமுனையின் தன்னோடு நெட்டிட்டேறும்
திரிசான திருவனைக்கால் போலே மாறிச்
சிரசளவு தான்முட்டித் திரும்ப மீண்டு
விரிவான மூக்குநடுப் புருவ நெற்றி
மீண்டுமே திரும்பி அந்த மூலம் புக்கும்.

**பொருள்.**—இடகலையும் பிங்கலையும் மூலாதாரத்திலிருந்து சுழு முனையின் இடப் பக்கமொன்று வலப்பக்கமொன்றாக ஒருமித்துக் கிளம்பி அணைக்கால் போல மாறி மாறி சிரசுவரை சென்று பின் முன்னோக்கி மூக்கு நடு, புருவம், நெற்றிவரை சென்று மீண்டும் இதுபோலவே கீழிறங்கி மூலாதாரத்தை அடையும்.

புக்குகின்ற காந்தாரி நாபி பற்றிச்
பெருநரம்போ ரேழினுக்கும் ரூப மாகிச்
சிக்குகின்ற தெச தாய மேலே யோடிச்
சிரசளவு நீங்கியே கண்டம் புக்கி
நக்குகின்ற நாவடியில் சிறந்தி ருக்கும்
நலமான அத்திசிங்கு வையிரண்டும்
விக்குகின்ற மூலத்தின் மேலே பற்றி
மேலேறி இரண்டுசெவி தனைத்தொடாமே.

**பொருள்.**—காந்தாரி நாபியிடமாக எழும்பி பெரிய நரம்புகள் ஏழாக உண்டாகி மேலேயோடி சிரசின் அளவு சென்று கண்டத்தில் புகுந்து நாவின் அடியில் அமர்ந்திருக்கும். அத்தி, சிகுவை இரண்டும் மூலத்தின் இடத்தில் தோன்றி மேலே ஏறி இரண்டு செவிகளிலும் அமர்ந்திருக்கும்.

தொட்டேறி நரம்பெல்லாங்கலந்து வீசித்
துறையான நயனமிரண்டிலே நிற்கும்
மட்டேறி அலம்புருடன் வயிர வன்தான்
மாசற்ற அடிமூலந் தன்னைப் பற்றிக்
கட்டேறி யிரண்டுகன் னந்தனிலே நிற்கும்
கனிவான சங்குனியும் குகுதன் தானும்
நட்டேறி நாபித்தா னத்திற் றோன்றி
நலமான குதமளவு நடிப்பர் பாரே.

**பொருள்.**—அவ்விடமிருந்து எல்லா நரம்புகளிலும் பரவி இரண்டு கண்களிலும் நிற்கும். அலம்புருடன் வயிரவன் இரண்டும் அடி மூலத்தைப் பற்றி மேலேறி இரண்டு கன்னத்திலும் அமரும். சங்குனியும் குகுவும் நாபியல் தோன்றி குதத்தின்வரை பற்றி இருக்கும்.

**கரு உற்பத்தி.**

பார்க்கவே சடந்தான் செனிக்கும் வாறு
பகர்சுக்கில சிரோணிதத் தினோடு கூடி
மூர்வேவளப் பையின் முத்துதிர்ந்தாற் போல
முனையறுகு நுனிபனிபோற் சுரோணிதத்திற் சேர்ந்து
தார்க்வே கசுரோ ணிதந்திரண்டு தன் ரூபமாகித்
தமர்வாசல் தனை மூடும் வாயுதானும்
வேர்க்கவே வேலியைப் போல் வளைந்து காக்கும்
விந்துவுடன் பிராணவாயு விளக்கு மாமே.

**பொருள்.**—அறுகின் நுனியில் கொள்ளும் பனி போன்ற சுக்கிலம் சுரோணித்தத்தோடு கலந்து திரண்டு கொள்ளும். இவ்வாறு முட்டையினுள் விந்து நுழைவதால் உண்டான துளையை வாயு மூடி விடும். இதுமட்டுமன்றி இவ்வாயு இவற்றை வளைந்து நின்று காக்கும் உள்ளே கலந்த விந்துடன் பிராணவாயுவும் கலந்திருக்கும்.

விளக்குகின்ற அபானவாயு வெளியில் நிற்கும்
வந்துவுடன் பிராணவாயு உடல் கலக்கும்
களக்குகின்ற உதானனது கருவ ளர்க்கும்
கருவுக்குள் வ்மாதியு மூன்றுங் கலக்கும்
இளக்குகின்ற ஐந்தாம்நாள் கருப்போ லாகும்
ஈரைந்தாம் நாள் தனிலே திரளும் பாரு
முளக்குமூ வைந்தாநாள் முட்டை போலாம்
முதற்றிங்கள் கம்பமாய் முளைபோ லாமே

**பொருள்.**—இப்போது அபானன் வெளியில் நிற்கும் பிராணன் விந்துவுடன் சென்று கருவில் கலக்கும். உதானன் கருவை வளர்க்கும். இவ்வாருக இம் மூன்று வாயுக்களும் இதில் காணப்பட்டு, ஐந்தாம் நாள் கரு சற்று பெரிதாய் காணும். பத்தாம் நாள் மேலும் திரட்சியுற்று பெரியதாகி பதினைந்தாம் நாளில் முட்டைபோல வடிவனையுடையதாகும். ஒரு திங்களானதும் சற்று நீண்டு முனைகளுள்ளதாய் ஆகும்.

ஆமேரெண் டாந்திங்கள் தலைமுதுகு தோன்றும்
அடுத்த மூன்ருந் திங்கள் அரைகை காலாம்
நாமேநா லாந்திங்கள் பதமூக்குண்டாகும்
நவத்தவைந் தாந்திங்கள் செவிநாவு கண்ணாம்
வாமே ஆருந்திங்கள் அகங்களாகும்
மருவியவே ழாந்திங்கள் கண்மயிரென் புநரம்பாம்
தாமேதான் சடமொடுசலம லங்கள்
தயங்கிய எழ்தாதுவொடு மூச் சுண்டாமே

**பொருள்.**—இரண்டாவது திங்களில் தலை, முதுகும், மூன்றாம் திங்களில் இடுப்பு, கை, கால்களும் நாலாவது திங்களில் மூக்கும் ஐந்தாவது திஙகளில் செவி, நாவு கண்ணும் ஆறாம் திங்களில் உள் உறுப்புகளும் எழாவது திங்களில் கண், மயிர், எலும்பு நரம்புகளும் உண்டாகும். இப்போது கருவில் சலமலங்கள் சேரும். எழு தாதுக்களும் முழுமை பெற்று கருவுக்கு மூச்சு உண்டாகும்.

மூச்சுண்டா மெட்டினில் தாயுண்ட சாரம்
முனையான கதிர்போல விரவிப் பாய்ந்து
தோச்சுண்டஅக பாலத்தின வழிய சென்று
சுத்தசலம் பிள்ளைக்குத் தொடர்ச்யாகும்
பேச்சுண்டாமோன் பதிலே அறிவு தோன்றிப்
பிறப்பித்தோன் தனைநினைந்து தவமே செய்து
கூச்சண்டாங் கும்பிட்டே அருள்வா யென்றுங்
கொடியபத்தாந் திங்களரும் பார்வையாமே.

**பொருள்.**—இவ்வாறு எட்டாவது திங்களில் மூச்சு உண்டாகி தாய் உண்ட உணவில் சத்து பிணித்துக் கொண்டிருக்கும். பாலம் போன்ற கொடிய வழியாய் கதிர் போலப் பரவிப் பாய்ந்து காணும். ஒன்பதாம் திங்கள் குழவிக்கு அறிவு சலனமுண்டாகும். இப்போது கரு தன்னைப் படைத்தவனை நினைந்து தவமியற்றுவது போன்று கை கால்களை மடக்கிக்கொண்டிருந்து பத்தாவது திங்களில் பார்வை பெறும்.

பார்வையா மபானன் கீழ்நோக்கி வைக்கும்
பாலகனும் பார்தனிலே பயின்ற பின்பு
ஆர்வையாய் முன்னறிவு அசதியாகி
அழுதுகொண்டு வாத்மத்திற் கருவி பாசம்
மார்வையா மாயாசத் திகிரியா சக்தி
மயக்கத்தில் அறிவிழந்து நல்வினை தீயாம்
கோர்வையாய் விதியும் வந் துற்ப வித்து
கொடி படர்ந்த சுரைபோலச் செம்மி மாச்சே.

**பொருள்.**—பத்தாவது திங்களில் அபான வாயுவின் செயலினால் குழந்தை கீழ் நோக்கி தள்ளப்பட்டு பிறக்கும். இப்போது முன்னால் இருந்த அறிவு நிலைமாறி விழிப்பு நிலையடைந்து அழுது கொண்டும் ஆத்துமத்தில் பாசம்கொண்டும், மாயா சக்தி கிரியா சக்திகட்குப்பட்டு மயக்கமுற்றும் அறிவு நிலைகள் மாறியும், நல்வினை தீவினைகளும், விதியும் வந்து சூழ பச்சைக் குழந்தையாகக் காணப்படும்.

### ஏழுதாது

சென்ம மாஞ்சரீரந்தொண் ணூற்றாறங் குலமாம்
செய்கின்ற அவரவர்கள் கையா லேதான்
தன்னமாம் ரசமிரத்த மாங்கி சமூ மேதை
தசைமச்சை யொடு சுக் கிலந்தாதே ழாகி
உன்னமாம் உருவெண்ணுஞ் சரீரமாகி
உயர்சட்டை ரசஞ் சேர்ந்து ரோக மாகி
வன்னவாம் வாதபித்த சேட்ப மாகி
வருகின்ற சடத்தினது வண்மை கேளே.

**பொருள்.**—பிறந்த குழந்தையின் உடல் அதன் கையின் அளவுப் படி தொண்ணூற்றாறு விரற்கடை உயரமிருக்கும். இவ்வுடல் இரசம், இரத்தம், மாங்கிசம், மேதை, தசை, மச்சை, சுக்கிலம் என்ற ஏழு தாதுக்கள் சேர்ந்து உருவாகும். இதில் வாத, பித்த கபமென்ற மூன்று உயிர்த் தாதுக்கள் காணப்படும்.

### உயிர் தாதுக்களின் காலம்

வண்மையாம் வாதமது முப்ப தாண்டு
மட்டுமே வளருகின்ற காலமாகும்
பெண்மையாம் பித்தமது முப்பத்து மூன்று
பேணியே வளருகின்ற காலமாகும்
திண்மையாம் சேட்பமது முப்பத் தேழு
செயலோடு வளருகின்ற கால மாகும்
உண்மையாய்ச் சடமதனுக் கொரு நூறாண்டு
உகாந்தமாங் கருவிகளி னுறுதி கேளே,

**பொருள்.**—உடம்பினுடைய காலம் நூறு ஆண்டுகள் எனக் கொண்டால் முதல் முப்பது ஆண்டுகள் வாதத்தின் காலம் என்றும் இடை முப்பத்து மூன்று ஆண்டுகள் பித்தத்தின் காலம் என்றும் கடைசி முப்பத்து ஏழு ஆண்டுகள் கபத்தின் காலம் என்றும் வகுக்கப்படும்.

### தொண்ணூற்றாறு தத்துவங்கள்

உறுதியாம் பூதாதி யோரைந் தாகும்
உயர்கின்ற பொறியைந்து புலனைந் தாகும்
கறுதியாங் கன்மவிந் திரிய மைந்தும்
கடிதான ஞானவிந் திரிய மைந்தும்
திறுயாந் தீதாய கரணம் நான்கும்
திறமான அறிவொன்று தசநாடி பத்தும்
மறுதியாம் வாயுவது பத்து மாகும்
மகத்தான விசயமஞ்சு கோச மஞ்சே.

**பொருள்.**—பூதம் ஐந்து, பொறி ஐந்து, புலன் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கரணம் நான்கு, அறிவு ஒன்று, நாடி பத்து, வாயு பத்து, விசயம் ஐந்து, கோசம் ஐந்தாம்.

அஞ்சவே ஆதாரம் ஆறு மாகும்
அரியமண்டல மூன்று மலமூன் றாகும்
தொஞ்சவே தோடமுமூன் றீடணைதான் மூன்று
தோதகமாம் குணமூன்று வினை இரண்டாம்
தஞ்சவேராகமெட் டவத்தையைந்து
தயங்கியதோர் கருவிகள்தான் தொண்ணூற்றாறு
ஓங்கவே ஒவ்வொன்றாய் விரித்துச் சொல்வேன்
உறுதியாம் பூதாதி யுரைக்கக் கேளே.

**பொருள்.**—ஆதாரம் ஆறு மண்டலம் மூன்று, மலம் மூன்றும், தோடம் மூன்று, ஈடணை மூன்று. குணம் மூன்று, வினை இரண்டு, இராகம் எட்டு, அவத்தை ஐந்து. ஆகியவைகளே தொண்ணூற்றாறு தத்துவங்களாகும்.

### பூதம், பொறி புலன் முதலியன

உரைக்கவே பிரிதிவுமப்பு தேய்வும்
உரிமையாம் வாயுவோ டாகாச மாகும்
புரைக்கவே பூதந்தான் அஞ்ச தாச்சு
பொறியைந்தின் விவரமதைப் புகலக் கேளாய்

திரைக்கவே சுரோத்திர்முந் தொக்குசட்சு
சிங்குவை ஆக்ராண மிவையாக ஐந்தும்
துரைக்கவே சுரோத்திர்ந்தான் செவியுமாகும்
தொக்காவ துடம்பென்றே சொல்ல லாமே.

பொருள்—பிரிதிவி, அப்பு, தேயு; வாயு, ஆகாசம் என்ற ஐந்தும் ஐந்து பூதங்களாகும். சுரோத்திரம். தொக்கு* சட்சு, சிங்குவை. ஆக்ராணம் இவை ஐந்தும் ஐந்து பொறிகளாகும். சுரோத்திரம் என்பது செவி, தொக்கு என்பது உடம்பு.

சொல்லவே சட்சதுதான் கண்ணுமாகும்
தூய்தான் சிங்குவைநா ஆக்ராணம் மூக்காம்
புல்லவே புலனைந்தும் புகலக் கேளு
புகழான சத்தமொடு பாசம் ரூபம்
நல்லவே ரசகந்த மாக ஐந்தாம்
நல்மான சத்தமவகேள்வி யாகும்
செல்லவே செவியினிடக் கூற தாகும்
செய்பரிசஞ்சுகதுக்க மறிதல் காணே.

பொருள்—சட்சு என்பது கண். சிங்குவை என்பது நா, ஆக்கி ராணம் என்பது மூக்கு, ஐம்புலன்களாவன் சத்தம். பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகியவைகளாகும். சத்தம் கேள்வி எனப்படும். இது செவியின் கூறு. பரிசம் என்பது சுகதுக்கமறியும் கூறாகும்.

காணவே தேகத்தின் கூற தாகும்
கண்ரூப மாவதுதான் காண்ப தாகும்
நாணவே கண்ணினிடக் கூற தாகும்
ரசமாவ தறுசுவையை அறிதலாகும்.

பூணவே நாக்கினிடக் கூற தாகும்
புகல்கந்தந் துர்க்கந்த நற்கந்த மறிதல்
தோணவே மூக்கினிடக்கூற தாகும்
சுகமான பொறியைந்தின் சூட்சந் தானே

பொருள்.—பரிசம் என்ற புலன் மெய்யின் கூறாகும். கண்ணின் கூறு காட் என்ற புலன் இரசம் என்ற புலனால் அறுசுவையை அறியலாம் இது நாக்கின் கூறு நாற்றத்தை அறியும் கந்தம் என்ற புலன் மூக்கின் கூறாகும்.

**கன்மேந்திரியம்**

தானான கன்மவிந் திரிய மைந்தின்
சார்பதனைச் சாற்றிடவே வாக்கு பாதம்
பானான பாணி பாயுரு உபத்தம்
பகரைந்தின் பிரிவதுதான் வாக்கு வாயாம்
கானான பாதமது காலே யாகும்
கனமான பாணியது கையு மாகும்
ஊனான பாயுருதான பான பாகும்
உபத்தமது லிங்கமென உரைக்கலாமே.

**பொருள்.**—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்பன கண்மேந் திரியங்களாகும். வாக்கு என்பது வாய் 'பாதம் என்பது கால் பாணி என்பது கை பாயுரு என்பது குதம். உபத்தம் என்பது குறி

ஆமென்ற கன்மவிந் திரிய மைந்தின்
அடைவெல்லாஞ் சொன்னதன்பின் அப்பாற் கேளாய்
நாமென்ற கன்மேந்திரி யவ்சய மைந்தை
நவின்றிடவே வசனமோடு கமன மாகும்
தாமென்ற தானமொடு விசர்க்க மானந்தம்
தாக்காக விதைந்து சாற்றி னேனான்
பாமென்ற இதனுடைய விவர மெல்லாம்
பரிவாக ஒவ்வொன்றாய் உறைக்கின்றேனே.

**பொருள்.**—கன் மேந்திரியங்களின் செயல்களாவன வசனம், கமனம் தானம், விசர்க்கம், ஆனந்தம் என்பன.

உரைக்கவே வாக்கதுதான் வசனிப் பாகும்
உறுதியாம் பாதமது நடத்தி வைக்கும்
பரைக்கவே பாணிகையால் வழங்கு விக்கும்
பாயுருதான் மலந்தனையே பிரித்து வைக்கும்
துரைக்கவே உபத்தமது சுக்கில் மூத்திரம்
துரிசாக விடுவிக்கும் சுப்பிரமாகும்
நரைக்கவே கன்மேந்திரி யவிசய மைந்தின்
நலமதனை நவின்றிடவே நன்பா மென்னே.

**பொருள்.**—வாக்கு என்பது வசனிக்கச் செய்யும். பாதம் என்பது நடக்கச் செய்யும். பாணி என்பது கைகளைக் கொண்டு செயல்படும். பாயுரு என்பது மலத்தைப் பிரித்துக் கழியச் செய்யும். உபத்தம் சுக்கிலத்தையும் சிறுநீரையும் விடுவிக்கும்.

**கரணம்**

என்னவே கரணமது நால தாகும்
    ஏற்றமனம் புத்தியாங் காரஞ்சித்தம்
நன்னவே நாலினிட விரிவைக் கேளாய்
    நலத்தமன மாவதொன்றைத் தானினைக்கும்
பொன்னவே புத்திதான தனைவ்சாரிக்கும்
    பேரானவாங் காரங்கொண்டெழுப்பி வைக்கும்
தென்னவே சித்தமதை செய்து முடிப் பிக்கும்
    சிறந்தவந்தக் கரணந்தான் நான்கு மாச்சே.

**பொருள்.**—மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்பவை நான்கும் கரணங்கள் எனப்படும். மனம் ஒன்றை நினைக்கும். புத்தி அதனை ஆராயும். ஆங்காரம் முடிவுசெய்யும். சித்தம் அதைச் செய்து முடிக்கும்.

ஆச்சுதே அறிவொன்றின் விசாரணையைக் கேளாய்
    அனைத்தையுமே பார்த்திருந்தங் கண்டந் தானாய்
கோச்சுதே குருவாய்த் தத்துவங்களாகிக்
    கொடியதீ, வினையாய் நல்வினையுமாகிப்
போச்சுதே பெண்ணாய்ப் பிரபஞ்ச மாகிப்
    புகலரிய நிர்க்குணநின் மலமு மாகித்
தீச்சுதே சிவமாகிச் சிவ மாகிச்
    செழுஞ்சுடரின் கதிரொளியாய்ச் சிறந்த வாரே.

**பொருள்.**—தத்துவங்களுள் அறிவு ஒன்று. இது எல்லாவற்றையும் அறிந்துகொள்ளும் அனைத்துத் தத்துவங்களையும் ஆளும். நல்வினை தீவினைகளைப் பகுத்தறியும். இதுவே பால் பாகுபாட்டையும் குணம், மலம் சேர்க்கையின்மையும் பெற்று சிவமாகவும், சீவனாகவும் பிரபஞ்சமாகவும் உண்டாகும். மேலும் அறிவு கதிரவன் ஒளி போல் சுடருடன் இருக்கவும் கூடும்.

வாறான தத்துவமோர் முப்ப துந்தான்
    மன்னியதோர் ஆத்மதத் துவமே யாகும்
நாறான நாடிபத்தின் விவரங்கேளாய்
    நயந்தஇடை பிங்கலையுஞ் சுழிமுனைகாந்தாரி
ஆறான அத்திசிங்குவையுமலம் புருடன்
    அருங்குகுதன் சங்கினியும் வைரவனீ ரைந்து
முறான விதன்பிரிவை முன்னே சொன்னேன்
    மூர்க்கமாம் வாயுபத்தின் முறைமை பாரே

பூதம் ஐந்து, பொறி ஐந்து, புலன் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து; கன்மேந்திரியம் ஐந்து, கரணம் நான்கு, அறிவு ஒன்று, ஆகிய முப்பதும் ஆத்தும தத்துவங்களாகும்.

இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம் புருடன், குகு, சங்குனி, வைரவண (அலம்புடை) ஆகிய பத்து நாடிகள் முன்னமேயே கூறப்பட்டுள்ளது.

## வாயு பத்து

முறைமையாம் பிராணனோ டபானன் வியானன்
மூர்க்கமா முதானனொடு சமானன் நாகன்
திறமையாங் கூர்மனொடு கிருக ரன்றான்
தேவதத் தனோடு தனஞ்சய னுமாகும்
பிறமையா மிதின்பிரிவு பிராண வாய்வு
பெருமூலா தாரத்தின் கட்டோன் றித்தான்
உறமையா மசபையெறு மந்திரத்தால்
ஓங்கார முதலெழுத்தை யுன்னித் தானே

**பொருள்.**—வாயுக்கள் பத்து, அவை பிராணன், அபானன், வியானன் உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பன. பிராணவாயு மூலாதாரத்தை ஆதாரமாகக் கொண்டு அசபையால் ஓங்காரத்தை நோக்கி எழும்.

## பிராணன்

உன்னியே மேலெழுந்து பன்னிரண்டங் குலந்தான்
உயர்ந்தவெட் டங்குலந்தான் மீள் வாங்கி
நன்னிநா லங்குலந்தான் பாழிற் பாயும்
நலமான குணமெல்லாம் பிராண வாய்வு
பன்னவே நீலவர்ணந் தேவதைதான் சந்திரன்
பலப்பலவாம் பொசிப் பெல்லாஞ் சிரணம தாக்கும்
முன்னநா ழிகைக்குமுன் நூற்றறுபது சுவாசம்
முயர்ந்தாநா ளொன்றுக்கு மூச்சைக்கேளே

**பொருள்.**—அசபையால் வாயுக்கள் பன்னிரங்குலம் மேலுக்கு எழும்பி திரும்பி எட்டங்குலம் மீளும். மிகுந்த நாலு அங்குலமும் பாழில் பாயும். இதனால் பிராண வாயு உடலில் கலக்கும். இவ்வாயுவுக்கு நிறம் நீலம். தேவதை சந்திரன். பிராணவாயுவினால் உண்ட உணவு சீரண மாகும். இவ்வாறு ஒரு நாழிகைக்கு முன்னூற்றறுபது சுவாசம் நடக்கும்.

நாளொன்றுக் கிருபத்தோ ராயிரத் தறுநூறு
    நலமான சுவாசந்தா மெழுந்தி ருக்கும்
கோளொன்றிப் பதினாலாயிரத்து நானூறு
    குவ்த்த மூலாதா ரத்துள் ஒடுங்கும்
பாளொன்றி யேழாயிரத் திருநூறு சுவாசம்
    பாழிலே பாய்ந்திடுமென்றறிகப் பின்னை
எளொன்றியிதனையே உட்சா தித்தால்
    எப்போதும் பாலரா யிருக்கலாமே.

**பொருள்.**—ஒரு நாளில் இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசம் நடக்கும். இதில் பதினாலாயிரத்து நானூறு சுவாசம் மூலாதாரத்தினுள் உள்ளடங்கும். எழாயிரத்து இருநூறு சுவாசம் வெளிப்பட்டு வடும். இவ்வாறு பாழாகும் பிராண வாயுவை உடலினுள் பெற்றால் மூப்படையாமல் இருக்கலாம்.

அபானன்

இருக்கவே அபானத்தின் இயக்கங் கேளாய்
    எற்றசுவா திட்டானத் தினுற்பத்தி யாகும்
மருக்கவே கீழ்நோக்கி மலசலத்தைத் தள்ளும்
    வரகாநி றந்தாறும் பச்சை யாகும்
அருக்கவே ஆசனத்தைச் சுருக்கி வைக்கும்
    அன்னசா ரத்தையெல் லாஞ்சேர வைக்கும்
திருக்கவே தேவதையும் வரத ராசன்
    திறமான வ்யானனிடச் சிறப்பைக் கேளே.

**பொருள்.**—அபான வாயுவானது சுவாதிட்டானத்தில் நின்று கீழ் நோக்கிச் செயல்படும். இது மலத்தையும், நீரையும் கழிக்கும். இவ் வாயுவின் நிறம் பச்சை. மேலும் இது ஆசன வாயைச் சுருக்குதல் அன்னசாரத்தை உறிஞ்சுதல் முதலிய தொழில்களும் செய்யும். இதற்கு தேவதை வரதராசனாம்.

**வியானன்**

சிறப்பான வயானனது தோலிலே நின்று
    திகழெழுபத் தீராயிர நாடியிலுஞ் சென்று
தறுப்பான சரவசரந் தனிலே நின்று
    தானிட்டல் முடக்கல் பரிசங்கள் அறியும்
அறப்பான அன்னசா ரந்தன் னைத்தான்
    அங்கங்கே நிறைப்பித்தாக் கையைரட் சிக்கும்
பறப்பான தநுபால் வர்ண மாகும்
பாரதனிற் றெய்வந்தான் எமன் ஆமே.

**பொருள்.**—வியானன் தோலை இடமாகக் கொண்டு உடலினுள்ள எழுபத்திரண்டாயிரம் நாடியிலும் சென்று உடலின் அசையும் பகுதி களிலும் அசையாத பகுதிகளிலும் பரவி அவற்றை நீட்டல், முடக்கல் செய்து பரிசங்களை அறியும். மேலும் இது அன்னசாரத்தை உடலின் பகுதிகட்குக் கொண்டு சென்று ஊட்டும். இது பால் நிறமாகும். கடவுள் எமன் என்பது.

### உதானன்

எமனாம் உதானனிட எற்றங் கேளாய்
 எழிலான உதரவக் கினியெ முப்பிப்
பூமனாம் அன்னசா ரந்த னைத்தான்
 பொருந்தவே சமிப்பித்து நிறுத்தி வைக்கும்
காமனாய் எடுப்பித்துங் கலக்கி வைக்கும்
 கலக்கியே வுருந்திவைக்கும் வளர்ப்ப மாகும்
வீமனாம் மின்னிட வர்ண மாகும்
 விளங்கியதோ ரக்கினிதான் தெய்வமாமே.

**பொருள்.**—உதானன் வயிற்றின் செரிமனத்தைச் செய்து அன்ன சாரத்தைப் பிரிக்கும். மேலும் இச்சாரத்தை வெளிப்படுத்தலும் கலக்குதலும் செய்யும். இது மின்னல் நிறமுள்ளதாய் அக்கினியைத் தெய்வமாகக் கொண்டிருக்கும்.

### சமானன்

ஆமென்ற சமானனிட வாண்மை கேளாய்
 அடிநாப் பாதாங்கஞ் சமன்கொண் டேகி
வாமென்ற வாயுவினை மிஞ்சொட் டாமல்
 மடக்கியே சமன்சேய்து மருவப் பண்ணும்
தாமென்ற அறுசுவைனயத் தண்ணீ ரன்னம்
 சமன் செய்து சரீரமெலாஞ் சாரப் பண்ணும்
வாமென்ற வர்ணமது புட்ப ராகம்
 மகத்தான தெய்வமா தித்த னாமே.

**பொருள்.**—சமானன் நாபியிடமிருந்து பாதம் முதலிய அங்கங்கள் வரை சமமாகப் பரவி எனைய வாயுக்களைக் கட்டுப்படுத்தும். மேலும் அறுசுவைகளையும், நீரையும் அன்னத்தையும் உடலெங்கும் ஒரே சீராகப் பரவச் செய்யும். இது புட்பராக நிறமுள்ளதாய் சூரியனைக் கடவுளாகக் கொண்டிருக்கும்.

### நாகன்

தெய்வமா நாகனிட சிறப்பைக் கேளாய்
    செயலான சகலகலை யாக்கி வைத்துப்
பெய்வமாய்ப் பாடுவிக்கும் கண்வழிப் பிக்கும்
    பாங்காகச் சிமிழிக்கும் ரோமமசை விக்கும்
பெய்வமாம் பொன்னினிட வர்ண மாகும்
    பெரிதான தெய்வந்தான் ஆனந்த னாகும்
கொய்வமாங் கூர்மனிட குணத்தைக் கேளாய்
    கொடியமனந் தனிநின்று நிமைகொட் டும்மே

**பொருள்.**—சகல கலைகளையும் அறியச் செய்யும் வாயு நாகனாகும். மேலும் பாடும்படி செய்வதும், கண்களை விழிப்பிக்கச் செய்வதும், சிமிட்டுவத்தலும், மயிர்களைச் சிலிர்க்கச் செய்தலும் இதுவே. நாகனின் வர்ணம் பொன் நிறமாகும். இதற்கு அனந்தன் தெய்வமாகும்.

கூர்மன் மனத்தினை இடமாகக் கொண்டு இமைகளைக் கொட்டும் செயல்புரியும்.

### கூர்மன்

நிமைகொட்டுங் கொட்டாவி தானுங் கொள்ளும்
    நேராக வாய்மூடும் பலனுண் டாக்கும்
கமைகொட்டுங் கண்விழிக்கு மூடப் பண்ணும்
    காட்சியெலாங் காண்பிக்கும் விழிநீ ரோடும்
இமைகொட்டும் வண்ணமது வெளுப்ப தாகும்
    மேலான தெய்வந்தான் விட்ணு வாகும்
கமைகொட்டுங் கிருகரன்றன் குணத்தைக் கேளாய்
    கடுநாவு நாசிதனிற் கசிவுண் டாமே.

**பொருள்.**—கூர்மன் இமை கொட்டுதல், கொட்டாவி விடல், வாயை மூடச் செய்தல், கண்ணை விழித்தும் மூடவும் செய்தல். காட்சிகளைக் காணச் செய்தல், கண்ணீர் பாயச் செய்தல் முதலிய செயல்களைச் செய்விக்கும். இதனுடைய நிறம் வெள்ளை. கடவுள் திருமாலாகும்.

### கிருகரன்

கிருகரன் நாவிலும் நாசியிலும் நீர் கசியச் செய்யும்
    கசிவுண்டாங் கடும்பசியின் கன்மஞ் சொல்லும்
        கண்ணியே இருத்தலொடு போதல் ஆகும்
    துசிவுண்டாய்த் தும்மலோடு இருமல் உண்டாம்
        சுயமான வர்ணமது கருப்பு மாகும்

தெசிவுண்டாந் தெய்வமது சிவன்றானாகும்
திரோதனதையின் கூறாற திறமு மாகும்
குசிவுண்டாந் தேவதத்தன் குணத்தைக் கேளாய்
குடிலமாய் சோம்பு முறித் திடுதல் தானே.

**பொருள்.**--கிருகரன் செரிமன நீர்களைச் சுரக்கச் செய்து பசி வேகத்தைக் காட்டும். மேலும் இருத்தல், போதல், தும்மல், இருமல் முதலியவற்றை உண்டாக்கும். இதன் நிறம் கருமை. சிவன் இதன் தெய்வம்.

தேவதத்தன் சோம்பலை முறிக்கும் செயலினையுடையது.

### தேவதத்தன்

முறித்திடுதன் ஒழிக்கும்போ முயற்சி யாகி
முகுளிதமாய்க் கண்ணிணையேயோடியுலா வித்துத்
தரித்திடுதல் சண்டைகொளல் தாக்கல் பேசல்
சண்டாளக் கோபத்தை உண்டு பண்ணல்
குறித்திடுதல் குதகுய்யத் தான தன்றிக்
கூர்ந்ததெய்வந் தேவேந்திரன் படிக வர்ணம்
தறித்திடுதற் றனஞ்சயனைச் சாற்றக் கேளாய்
சாங்கமாய் மூக்கினின் றுந் தடிக்குந் தானே.

**பொருள்.**—தேவதத்தன் சோம்பலை முறித்து முயற்சியுண்டாக்கும். மேலும் கண்களை வெவ்வேறு பக்கங்களில் திருப்புதல், ஒரே இடத்தில் நிறுத்தல் ஆகிய செய்கைகளையும் செய்யும் சண்டையிடல், அடித்தல், உண்மையாய் பேசல், கோபத்தை உண்டு பண்ணல், ஒன்றைத் தீர்மானித்தல் ஆகியவைகளும் இதன் தொழிலேயாகும். இதன் இடம் குதத்துக்கும், குய்யத்துக்கும் இடைப்பட்டது. தெய்வம் தேவேந்திரன்.

தனஞ்சயன் மூக்கினிடமாக இருந்து தடிப்பு உண்டாகும்.

### தனஞ்சயன்

தடித்துமே உடம்பெல்லாம் வீங்கப் பண்ணும்
தந்திரமாய்க் கன்னத்தில் சமுத்திரம் போற்
றடித்துமே சுந்தரமாய்க் கோச மாகித
திரண்டுமே துஞ்சிய காலந் தனிற்றான்
வெடித்துமே வாயுவெல்லாம் போன பின்பு
வளமான தலைவெடிக்கு மூன்றாம் நாளில்
அடித்துமே தலைவெடித்த அப்பாற் போகும்
அதின்வர்ணம் நீலவர்ணம் அறிந்து கொள்ளே.

**பொருள்.**—தனஞ்சயன் உடம்பை வீக்கமுறச் செய்து கன்னத்தில கடல் போல தேங்கிக் காணும். ஒலியைப் பிறப்பிக்கும், உடல் இறந்த போது ஏனைய வாயுக்கள் எல்லாம் உடனே சோர்ந்து விடும். ஆனால் தனஞ்சயன் மூன்று நாள் வரை இருந்து பிணத்தின் தலை வெடித்த பின்பே மறையும். தனஞ்சயனுக்கு நீல நிறம்.

இதற்குத் தெய்வம் தன்வந்திரி ஆகும்.

**ஆசயம்**

அறிந்ததோர் தெய்வ மது தன்வந்திரி யாகும்
ஆகவ்ந்த ஈரைந்து ஆகுமாம் வாயுவு
வெறித்ததோர் வசயமைந்தின் விவரங் கேளாய்
மீறியதோர் அமர்வாசய பகிர்வாசய மாகும்
தறிந்ததோர் சலவாசய மலவாசயத் தோடு
தாக்கான சுக்கிலமாம் வாசயமா மைந்தும்
எறிந்ததோர் அமர்வாசயம் அன்னம் தண்ணீர்
இருக்குமிடம் என்றுதான் இயம்பி டீரே.

**பொருள்.**—வ்சயம் என்று சொல்லப்படும் ஆசயம் ஐந்தாரும் அவை அமர்வாசயம், பகிர்வாசயம், சலவாசயம், மலவாசயம், சுக்கில வாசயம் என்பன. அமர்வாசயம் என்பது உணவும் நீரும் தங்கும் இடமான இரைப்பையாகும்.

இயம்பிடவே பகிர்வாசயம் அதுதான் வ்ளம்பில்
இயன்ற அன்னந்தண்ணீர் தானேக வாய்ந்து
புயம்பிடவே பிறியுமல வாசயம் புகலில்
புசித்ததெல்லா மலமாகிப் போக்கிவைககு மிடமாம்
தயம்பிடவே சலவாசயஞ் சாப்பிட்ட நீர்தான்
தாஙகியே இருக்குமிடஞ் சலப்பை யாகும்
சுயம்பிடவே சுக்கிலமாம் ஆசயஞ் சொல்லில்
சுகமான சுக்கிலப்பை என்று சொல்லே.

**பொருள்.**—பகிர்வாசயம் உண்ட உணவினையும் நீரினையும் செரிப்பிக்கும் இடமான சிறுகுடலாகும். கழிவுப் பொருட்கள் மலமாகக் கழிக்குமிடம் மலவாசயமாகும். கழிவு நீரினை வெளியேற்றுவது சலவாசயம். இது சலப்பையைக் கொண்டது. சுக்கில சுரோணிதங்களை அடக்கி இருப்பது சுக்கில வாசயமாகும்.

**கோசம்**

சொல்லான விசயமைந்தின் தொகுப்புச் சொன்னேன்
சூட்சமாங் கோசமைந்தின் சுருக்கு கேளாய்
அல்லான அன்னமய கோசத் தோடும்
அரிதான பிராணமய கோச மாகும்

மல்லான மனோமயமாம் விஞ்ஞான மயமாம்
மகத்தான ஆனந்த மயமும் ஐந்து
மெல்லான இதின்விரிவு விளம்பக் கேளாய்
மெய்வாய்கண் மூக்கோடு செவியு மாமே.

**பொருள்.**—கோசங்கள் ஐந்தாவன அன்னமயக் கோசம், பிராணமயக் கோசம், மனோமயக் கோசம், விஞ்ஞானமயக் கோசம் ஆனந்தமயக் கோசம் என்பன. இக்கோசங்களின் விரிவு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளிலிருந்து உண்டாகின்றன.

ஆமென்ற ஐம்பொறியின் பிரிவன் கூறால்
அன்னமய கோசத்தில் அப்புவந் தணைந்தால்
ஊமென்ற வூணுண்டாம் பிராணமய கோசம்
உத்தியிதிற் தேயுவந்தால்புத்தி யுண்டாம்
மாமென்ற மனோமயமாம் கோசமாகும்
வாயுவதில் வந்தடைந்தால் விகார முண்டாம்
நாமென்ற ஞானமய கோசமென்ன பேராம்
நலத்தவா தம் வந்தால் சுகமுண்டாமே.

**பொருள்.**—ஐம்பொறிகளின் கூறுகளால், அன்னமயக் கோசத்தில் அப்பு சேர்ந்து தசை உண்டாகும். இதனால் பிராணமயக் கோசமும், உண்டாகும். இதில் தேயு சேர்ந்தால் புத்தி உண்டாகி மனோமயக் கோசமாகும். இதில் வாயு சேர்ந்து ஞானமயக் கோசம் உண்டாகும். இதில் வாதம் கலந்ததும் சுகம் உண்டாகும். இதனால் ஆனந்த மயக் கோசம் உண்டாகும்.

## ஆதாரம்

வந்தாலா னந்தமய கோச மாகும்
மகத்தான கோசமைந்தில் எடுத்த உட லதுதான்
குந்தான கோசமைந்தின் குணத்தைச் சொன்னேன்
குறிப்பான ஆதாரம் ஆறும் கேளாய்
முந்தான மூலாதா ரஞ்சுவாதிட் டானம்
முதிர்ந்தமணிப் பூரகமும் னாகதமும் விசுத்தி
அந்தாலாக் கினையுமா மான தாகும்
அடுக்கான ஆதாரத் தன்மை கேளே.

**பொருள்.**—கோசங்கள் ஐந்தும் கூடி உண்டாவதால் உடல் எற்படுகிறது. இவ்வுடலில் ஆறு ஆதாரங்கள் உண்டு. அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை என்பன. இவை அடுக்காக ஒன்றன்மேலொன்றாக இருக்கும்.

கேளேமூ லாதாரங் குதங்குய்யத் துக்கும்
கொடியாக நடுவிருக்கும் பானத்தின் மேல்
வேலே வீ ணாதண்டின் கீழாயி ருக்கும்
மிக்க நடுவே ஒரங் குலப்பிர மாணம்
மூலேமுக் கோணநாலி தழ்க்கமல மாகி
முனிந்தாநா வ்தழ்தனில் நா லட்சர முடைத்தாய்
வாளேமுக் கோண நடுமந்திரம் ஓங்காரம்
வல்லபையாஞ் சத்தி வலப் பக்கமாமே.

பொருள்:—மூலாதாரம் குதத்துக்கும் குய்யத்துக்கும் இடையில் கொடியாக இருக்கும். இது உடலின் நடுக் கோட்டில் முள்ளந் தண்டுக் கொடியின் கீழ் நுனியில் அமைந்துள்ளது. இது முக்கோண வடிவமுடையதாய் நாலிதழ் கமல அமைப்பு இதனுள் காணும். நாலு இதழ்களிலும் நாலு அட்சரம் இருக்கும். நடுவில் ஓங்காரம் நிற்கும். ஓங்காரத்தின் வலது பக்கம் வல்லபை என்ற சக்தி காணும்.

பக்கமா மந்திரமும் ஓங்கார மாகும்
பகரான தெய்வம் விக்கினே சுரன்றான்
வக்கமா மூலத்தில் வங்கொன்று நிறுத்தி
வாசியை நீ மறவாமன் மாட்டி யூதி
ஒக்கமா மூலத்தின் கீழடியிற் றானும்
ஓங்காரக் கம்பமதி லடியிற் கட்டி
இக்கமா இருவரையும் தெரிசித் தக்கால்
இகபரமும் வெளியாகி யேற லாமே.

பொருள்:—ஓங்கார மந்திரத்தின் தெய்வம் விக்கினேசுவரன். இம் மூலாதாரத்தில் வாசியை நிறுத்தி விக்கினேசுவரனையும் வல்லபையையும் கண்டால் குண்டலினி சக்தி எழுந்து இதனால் அனைத்தும் அறிந்து சிறக்கலாம்.

## "சுவாதிட்டானம்"

ஏறவே பளிச்சென்று மூலத் தீதான்
இதற்றுமேலி ரண்டாமங் குலத்தின் மேலே
கூறவே நூல்வட்ட, மாறி தழ்த்தான்
குறித்தசுவா திட்டமான மின்னொலித்தான்
ஆறவே யாராமட் சரமுடைத்தாய்
அதற்குள்ளே பிரிதிவுதான் குடி யிருப்பாம்
வேறவேவே தந்தானி ருக்கோ டெல்லாம்
விளங்கியதோ ரட்சரமு நகார மாமே,

**பொருள்:**—அவ்வாறு அறிவு வொளிக்குக் காரணம் மூலத் தீ யாகும், இம் மூலாதாரத்திற்கு இரண்டங் குலத்திற்கு மேல் நாற்சதுர வட்டமாக ஆறிதழோடு உள்ள இடமே சுவாதிட்டானமாகும். இது ஆறாவது அட்சர முடைத்தாயுள்ளது (அதாவது அகரமுதலாவது நகாராமாகும்) இதற் குள்ளே பிரிதிவு என்ற மண் கூற்றுப் பொருள் குடியிருப்பாம். இதற்கு இருக்குவேதமுதல் நான்கு வேதங்களும் பகரும் எழுத்து நகாரமாகும்.

நகாரமா மெழுத்ததுவும் பிரம னாகும்
 வவ்வான பீசமது பிரிதிவுக் காகும்
உகாரமா மந்திரத்தை யுன்னிக் கொண்டு
 உயர்வாய்வைக் கும்பிக்கில் அறிவு தோன்றும்
சிகாரமா முப்புரிநூற் சிரசு நாலும்
 சிறந்த சரஸ் வதியுமங்கே தெளிவாய் காணும்
பகாரமாய்த்தெரிசித்துப் பழக்கம் பண்ணப்
 பாருலக மயக்க மெல்லாம் பண்ப தாமே.

**பொருள்:**—நகார வெழுத்தின் அதிதேவதையானது பிரம்மாவாகும. அதன் பீசாட்சரம் 'வவ்' வாகும். பூதப்பிரிவு பிரிதிவாகும். இதற்குமூல மந்திரமான "உ" காரத்தை உன்னி கும்பித்தால் பேரறிவின் ஒலி தோன்றும். இதற்குத் தலை என்று நான்கு நரம்புகள் உண்டு. அதன் பக்கத்தே வெண் நரம்பு ஒன்றுண்டு. அதில் கும்பத்தின் சக்தியால் அறிவு தோன்றி சகல கலைகளும் தோன்றுவதால் அதுவே சரஸ்வதி என்று சொல்லுவர், பெரியோர். இதைப் பழக்கத்தில் செய்து வர உலக மாயையாகிய மயக்கம் ஒழியும்.

## "மணிப்பூரகம்"

பண்பதா மாறங் குலத்தின் மேலே
 பதிந்தபிறை போலமணிப் பூரகந்தான்
தொன்மையாஞ் சுற்றிலும் பத்திதழ தாகிச்
 சுயம்பான லட்சரமும் பத்துந் தானாய்
அன்மையா மப்புதனுக் கிடம தாகி
 அதற்குள்ளே தெய்வந்தான் விஷ்ணுவாகித்
தன்மையாம் பக்கத்திற் சத்திலட் சுமியாம்
 தயங்காத வட்சரந்தான் மகாரமாமே.

**பொருள்:**—முன் சொல்லிய சுவாதிட்டானத்திற்கு ஆறு அங்குலத்திற்கு மேல் பிறைபோல் இருப்பது மணிப்பூரகமாகும். இதற்கு, சுற்றி பத்து இதழ் கமலம் போலுண்டு. இது பூதப்பிரிவில் அப்பினிடமாகிறது. இதன் தெய்வம் விஷ்ணுவாகும். இதன் பக்கத்தில் சக்தியாக இலக்குமி தேவியமர்ந்திருப்பாள். இதன் அட்சரம் 'ம' காரமாகும்.

மகாரமா மட்சரந்தான் விஷ்ணு வாகும்
மகத்தான மவ்வதுவு மப்பு பீசம்
விகாரமாம் வேதமது வேயசுர் வாகும்
மெய்நிறைந்த கவத்வமணி பஞ்சாயுதம
நிகாரமாம் லட்சுமித்தான் பாகமாகி
நேர்மையாம் வாசியைத்தான் மங்கென்ன நிறுத்தி
உகாரமாயூ தினா னுலக வாழ்க்கை
ஒருநொடியில் வெளியாகு மூணிப்பாரே

**பொருள்:**—மகாரமான வட்சரமே விஷ்ணுவாகின்றார். இதன் பீசாட்சரம் 'மவ்' என்பதாகும். அப்பின் பூதப்பிரிவாக, யசுர்வேதத்தின் உட்பொருளாகிய உடலெங்கும் துளபமணி நிறையப் பெற்று வலப்பக்கத்தே இலக்குமிதேவியை வசங்கொண்ட திருமாலை இடகலையில் இரேசித்து மங்கென்று கும்பித்துப் பூரித்தால் ஒரு நொடியில் அவரருள் சித்திக்கும் என்பதாம்.

## "அனாகதம்"

ஊணியிதன் மேலிரு நாலங்குலந்தான்
உத்தம மாமனாகதத்சின் வீடு மாகும்
தோணிய திரிகோணம் பனிரண்டாமிதழ் தான்
சுற்றிலுமே பனிரண்டட்சரமுடைத்தாய்
சேணியே தேயுவுக்கங்கிருப்பு மாகிச
சிகாரமாமெழுத்தாகிச் சிறப்புமாகிப்
பூணியே பூதபீசம் 'சிவ்' வுமாகிப்
புகழான ருத்திரனும் புரிந்தார்பாரே.

**பொருள்:**—மணிப்பூரகத்திற்குமேல் எட்டங்குலத்திலுள்ள இதயத் தானத்திற்கு அனாகதவீடு என்று பெயர். அது முக்கோண வட்டமாக பன்னிரண்டு இதழ்களோடு சுற்றிலும் பன்னிரண்டு அட்சரமுடையதாகவும் பூதம்பிரிவில் தேயுவாகிய அக்கினியினிருப்பிடமாகி, சிகார எழுத்தைச் சிறப்பாகக் கொண்டு அதன் பீசாட்சரம் 'சிவ்' வாகி அதே தேவதை ருத்திரனாகும் என்பதாம்.

## "விசுத்தி"

புரிந்திருந்தார் சிகாரத்தில் ருத்திரன் ருத்திரியும்
புகழாகவாசிவைத்துச்சிங் கென்று
கரித்திருந்த காயமுமோவா லையாகும்
கனிசாம வேதத்தின் கருத்துந் தோன்றும்
பரிந்திருந்தவிதற்கு மேல் பனிரெண்டங்குலந்தான்
பார்வையாய்மேலேறி வசுத்தி வீடு
அறிந்திருந்தவறு கோண சோடசமாமிதழ்தான்
அதிலேதானீரெட்டட்சுரமுமாமே.

**பொருள்:**—அந்த அனாகதமாகிய சிகாரவீட்டில் ருத்திரனோடு ருத்திரியும் அமர்ந்திருப்பார்கள். இங்கு வாசியைச் சிங்கென்று பிடிக்க பாலவயதாகும். அப்போது சாமவேதத்தின் உட்பொருள் தோன்றும். இதற்கு மேல் பன்னிரண்டங்குலத்திலிருப்பதே விசுத்தி வீடாகும். இது அறுகோணமாக, பதினாறு இதழ்களுடைய கமலம் போல் தோன்றும். இதற்கு பதினாறு அட்சரங்களுண்டு.

ஆமெனவேவ காரந்தானறு கோணநடுவே
அமர்ந்திருந்தார் மகேசுவரன் மகேசுவரியுமாக
வேமென வேயத்ர்வண வேதத் தோடொக்க
மிக்கானவாயுவது மிதழுக்குள்ளே
போமெனவே பீசந்தான் யவ்வுமாகும்
புகழாகக்கும்பகஞ் செய்து திவூதி
வாமெனவே வங்கெனவு மிரு திப்பார்க்க
வயசெல்லாயொரு நாளாய் மனதிற்காணே.

**பொருள்:**—அந்த அறுகோண வீட்டின் நடுவே வகார வெழுத்துண்டு அங்கு மகேசுவரனும் மகேசுவரியும் இருக்குமிடமென அதர்வன வேதத்தில் கூறுகின்றது. பூதப்பிரிவில் வாயுவாகிய வெளியின் கூறு. இதன் பீசாட்சரம் 'யவ்' வாகும். இதற்கு வங்கென்று வாசியைக்கும். பித்துவரில் (நரை திரை மாறும்) வயது கணக்கில்லை என்பதாகும்.

"ஆக்கினை"

காணவி தல்மேலீரெட்டங்குலந்தால்
கண்மாருதம்புருவ மளவாயாகி
ஊனவேயிரண்டிதழாயோங்கி நிற்கும்
உற்றுநின்ற வட்சரமு மிரண்டுமாகும்
ஆனவே நடுவுக்குள் யகாரம் நிற்கும்
ஆக்கினைபின் வீடாகுமாகாச மிருப்பு
பூணவே பூதபீசம் யவ்வுமாகும்
புகழான மாணிக்கப் பிரவையவ்வே.

**பொருள்:**—முன்வசுத்தி வீட்டிற்குமேல் பதினாலங்குலத்தில் புருவ மையத்தில் இரண்டிதழோடு அதில் இரண்டட்சரங்களோடு இருக்கும். இதன் நடுவல் யகார வெழுத்து நிற்கும். இதற்கு ஆக்கினை வீடென்று பெயராகும். பூதப்பிரிவில் ஆகாயத்தின் கூறாகும். பீசாட்சரம் 'யவ' வாகும். இது மாணிக்கத்தைப் போல் மேல் எட்டப் பிறை ஒளியாக இருக்கும்.

யவ்வுக்குட சதாசிவமுஞ் சத்தி நின்றும்.
யங்கென்று கும்பித்தால னேகசித்தியாகும்
மவ்வு பரமானந்த மருவி நின்று
மகிழ்ச்சியாங் கருவகளினிட மதாகி
அவ்வுடலைம் புலன்றனையுமறியப்பண்ணி
அறிவோடு நினைதளின்மயக்கங் காட்டி
உவ்வுமுள்ளபடி நடத்திக்காண்பன கேட்பனவாய்
உகந்து குருவெழுந்தருளி வியார்த்திப்பாரே.

**பொருள்:—** 'யவ்' வென்ற பீசாசட்சரமுடைய ஆக்கினை வீட்டில் அதி தேவதையாகச சதாசிவமும் சக்தியுமிருப்பார். அதில் வாசியை யங்கென்று கும்பித்தால் அநேக சித்திகளையடையலாம். அங்குள்ள அறிவு ஒளியைக் கண்டு பேரானந்த வசமாய் கருவிகரணாதிகளின் மகிழ்ச்சியுற்று ஐயம்புலன்களின் உண்மை உணர்ந்தறிந்து பேறறிவோடு மோன நிலையிலமர்ந்து எங்கும் உள்ள எல்லாம் வல்ல இறைவனே குருவாக நின்று அருள் பாலிப்பார் என்பதாம்

## "மண்டலங்கள் மூன்று"

பார்க்கவே யதாரமாறுமாச்சே
பரிந்திட்ட தத்துவங்கள் முப்பத்தாறும்
சேர்க்கவே சிவதத்துவமாகுங் கண்டீர்
சிறந்திருந்த மண்டலங்கள் மூன்றுங்கேளாய்
ஆர்க்கவேயக்கினிமண்டலத்தினோடு
ஆதித்த மண்டலஞ் சந்திரமண்டலந்தான்
தோர்க்கவேயிதன் ஆட்சி சொல்லக் கேளாய்
கருதியா மூலமென்ற துடர்ச்சிதானே.

**பொருள்:—** இதுவரை ஆறாதாரங்களும் முப்பத்தாறு தத்துவங்களும் சொன்னோம். அவையனைத்தும் சிவதத்துவங்களாகும். இனி சிறப்பாகிய மூன்று மண்டலங்களையும் காணபோம். அவை (1) அக்கினி மண்டலம், (2) சூரிய மண்டலம், (3) சந்திர மண்டலமாகும். இவை வாசியைச் சார்ந்திருப்பினும் மூலத்தைத் தொடர்பாக கொண்டன.

துடர்ச்சியாஞ் சுவாதிட்டானத்தின் கீழே
சுகமாக நடுமையமணி மண்டலந்தான்
முடர்ச்சியாம் முச்சுடராய் மூல மட்டும் பரவி
முரவிந்த சுவாதிட்டான மட்டு நிற்கும்
மடர்ச்சியா மணிப்பூராமனாக தத்தினடுவே
வளையம் போற் சூரிய மணடலந்தானிற்கும்
படர்ச்சியா மணிப்பூரமனாகதத்திற்
படர்ந்தேறுஞ் சூரிய மண்டலந்தான் பாரே.

**பொருள்:**—தொடர்ந்து சுவாதிட்டாணத்திற்குக் கீழே மூலாதாரத் திற்கு மேலேயுள்ள நடுபாகத்தில் முச்சுடரோடு கூடிய மணி போன்ற மண்டலமாக மூலாதாரத்திற்குப் பரவி அங்கிருந்து மேலே சுவாதிட்டான மட்டும் நிற்கும். அடுத்து, சூரியமண்டலமானது மணிப்பூரகத்தின் நடுவில் வளையம் போன்று சுற்றிப் பிரகாசித்து அனாகதம் வரை படர்ந்து ஏறி நிற்கும்.

பாரென்றுற் சும்மாதான் பார்க்கப் போமோ
பரந்தோடும் வாசியைநீ மாட்டிப் பாரு
வேறென்றுல் விசுத்திமே லாக்கினையின் கீழே
வளங்கியெழுஞ் சந்திரமண் டலந்தான் பாரு
நூறென் றுற்றுவாத சந்தத்தின் மட்டும்
சுடரொளி யாய்ப் பிரகாசமாகி நிற்கும்
மூறென்றுன் மண்டலங்கள் மூன்று மாச்சு
மூர்க்கமா மலமூன்றின் முடிவு கேளே.

**பொருள்:**—இதை ஊனக்கண் கொண்டுக் காணமுடியாது அதற்கு வாசி வழியே அறிவுக்குப் புலப்படும் விசுத்தி வீட்டிற்கு மேல் ஆக்கினை வீட்டிற்குக் கீழாகச் சந்திரன் மண்டலம் பிரகாசிக்கும். இதை நன்கறிந்து வாசப்பழக்கத்தில் செய்ய துவாத சாந்தமென்னும் மோன நிலையின் சுடரொளியைக் காணலாம். இவை மண்டலங்கள் மூன்றின் தத்துவமாயிற்று இனி மும்மலங்களின் முடிவைக் காண போம்.

மும்மலங்கள்

மூடிவான வாணமுமா மாயை காம்யம்
முயற்சியாயிதின் பிரிவான் முடியுமாறு
திடியான் செம்புனிற்றான் களிம்பு போலும்
சிறுநெல்லினுமி போலு மாத்துமாவை
மூடிவான மேலெழ வொட்டாமற் காத்து
முடிவெடித்து தனதென்றே காத்திருக்கும்
மடிவான மாய்கையதாணவத்தைக் கொண்டோ
வருவதுதான் தெரியாமல் மடிக்குந்தானே.

**பொருள்:**—ஆணவம், மாயை, காமியம் என்ற மும்மலங்களும் மனிதனின் மனத்தில் பற்றி அவனின் ஆன்மாவை, செம்பினில் களிம்பு போலும் நெல்லில் உமிபோல் மூடி மறைத்து தனக்கே உரிமையாக்கி ஆன்ம ஒளியைக் காணவும் அதன் பொருட்டு சாகாத கலையைப் பயிலவும் முடியாமல் காத்து நின்று மாய்கையானது ஆண வத்தைக் கொண்டே உடலை அழியச் செய்கின்றது.

தோடங்கள் மூன்று

மடிக்கின்ற காமியங் கண்டத்துக்கெல்லாம்
மகிழ்ந்திடுதன் மாயை முற்றுவந்து நிற்றல்
துடிக்கின்ற பலமூன்றின் செயலுமாச்சு
தோட மூன்றுவண்வாஞ் சுழுவுகளாய்
நடிக்கின்ற வாத, பித்த சேட்ப மூன்று
நலமா வதின்பிரிவு நாட்டக் கேளாய்
வடிக்கின்ற வாதமது வாயுநிலை கலங்கி
மத்தியமாமக் கினியுமார்க்கமாமே.

பொருள்:—மனிதன் அழிவுக்குக் காரணம் மாயை—பெண்ணினத தினமேல் காமமுற்று வந்தை வீழ்த்தி மனிதனின் உடலை உட னிருந்தே அழிப்பதே மலங்கள் மூன்றின் செயலாகும். இனி தோடங் கள் மூன்றாவது:—வாத, பித்த, சிலேத்துமமென்ற முத்தோடங்கள் ஆகும். அதில் வாதமானது வாயு (காற்று) நிலையாகும். அது குறையும்போது அக்கினியென்ற நடுவான பித்தநிலையாகும்.

ஈடணை மூன்று

மார்க்கமாம் பித்தந்தா னக்கினியி மூலையை
மசக்கிவைத்து மாய்கையுடன் வருத்தி வைக்கும்
தூக்கந்தான் சேட்பமது சலமிகுதி யாகித்
துவாரங்க டோறு மிடைவிடாம னிற்கும்
மூர்க்கந்தான் றேடமிது மூன்று மாச்சு
மூண்டதோர் ரீடணைகள் மூன்றைக் கேளு
நோர்க்கந் தானர்த்த யீடணையி னோடு
லோகயீடணை காமயீ டணைமூன் றுச்சே.

பொருள்:—பித்தமானது அக்கினியைத் தூண்டி - மாய்கையாகிய காம இச்சையிலிருத்தி வைக்கும் சிலேத்மமானது தூக்கத்தைக் கொடுப்ப தோடு நீர் அதிகமாகி ஒன்பது துவாரங்களிலும் இடைவிடாமலிருக்கும் இவ்வாறு மூன்று விதத்தோடங்களாயிற்று. அடுத்து ஏடணை என்ற மூன்றை நோக்க, அர்த்த ரீடணை, லோக யீப்ணை காமயீடணை என்ற மூன்றாம்.

ஆச்சென்ற மூன்றையுந் தானறியக் கேளாய்
அதிகமா அர்த்த யீடணை குணந்தான்
வேச்சென்ற வர்த்தமதின் மேலாசைப்படுதல்
விளங்கிய தோர்லோக யீடணையதனைக் கேளாய்
காச்சென்ற காணியட னுறவுந் தேடிக்
காரியங்க ளதின்மே லாசை யாகும்
ஆச்சென்ற காமயீடணை காமியத்தைத் தேடி
யாசையது படுதலீ டணை மூன்றாமே.

**பொருள்:**—இம்மூன்று ஈடணைகளையும் பார்க்குமிடத்தில் அர்த்த யீடணை என்ற புத்திர பாசபந்தத்தையும் உலக யீடணை என்ற மண், பொன், பொருளையும் காமயீடணை (தாரேடணை என்றும் சொல்லுவர்) பெண்களின் மேலிச்சை கொண்டதுவாக மூன்று ஈடணைகளாகும்.

### குணம் மூன்று

மூன்றான பின்புதான் குணந்தான் மூன்று
மொழியவே ராசத தாமத சாத்வீகம்
வேன்றான விதின் விரிவு விளம்பக் கேளாய்
வெகுளிபல பேசாதிருத்தல் வேண்டுவது கொடுத்தல்
தான்றான் தன்னைச்சார்ந் தாரைக் காத்தல்
தகைமையுட னுயிர்களைத்தம் முயிர்போ லெண்ணல்
பான்றான பகைவரைவென் றிடுதல் நீங்கல்
பலகலைக ளறிதல்பயில் பண்பு மாமே

**பொருள்:**—முக்குணங்களாவன: இராசதம், தாமதம், சாத்வீகம் என மூன்றுமாம் அதில் இராசத குணமாவது வெகுளியாகப் பேசாமல் வாய்மை என்றதோடு பலருக்கும் வேண்டுவது கொடுத்தலும் தன்னைச் சேர்ந்தவர்களைக்காத்து இரட்சித்தலும், எல்லா உயிர்களையும் தன்னுயிர் போலெண்ணி அன்பு காட்டுதலும், பகைவரைவென்று தண்டித்தலும் பல கலைகளையும் அறிந்து கொள்ளும் ஆற்றலுடையதாம்.

உண்டுலகினுக் கங்கோருறு தியென்ன வாழ்தல்
உண்மையாய் நலந்தெரிதல் புகழ் பூண்டல்
தண்டுதாடான் மையொடு மேம்பா டான
சாற்றியதோர் குணமெல்லாம் ராசயத்துக் காகும்
மிண்டுதாம தகுணமுமேதோ வென்னில்
மிகுதியாம் வஞ்சனையே செய்த லாகும்
பண்டுவழி பாடொழிதல் லாதுபோ ராடல்
வணக்கமில்லா வெகுளியே விளம்ப லாமே

**பொருள்:**—உலகில் உறுதியாக வாழ்தல் என்பது உண்மை அன்போடு நன்மையானவற்றையே செய்து மேன்மையாகிய அழியாத புகழோடு வாழ்வதேயாகும். இத்தகைய குணமே இராசத குணமாகும் பிறரைப் பருத்தல், வஞ்சனை எண்ணங்கொண்டு பிறர்க்குத்தீங்கிழைத்தல், தெய்வ வழிபாடு செய்யாது அப்படி வழிபடுவோரையும் தடுத்துப் போராடல், வணக்கமில்லாது ஆணவங்கொண்டலைதல் முதலிய தாமத குணமாகும்.

விளம்பவே செய்தநன்றி மறுத்தல் விந்தை
மிகப்பேசல் சிதைந்துமுரை மிடுக்கப் பேசல்
முளம்பவே முன்னுரைத்தல் பழியைக் கூறல்
முகத்துடனே பேசல்பகை யுடனே வாழ்தல்
புளம்பவே பொய்கொலைகள் களவு காமம்
பொல்லாங்கு யாவையுமே புகன்று பேசல்
களம்பவே காமத்தின் குரோத மிக்கக்
கடிந்திடுந் தாமதகுணத்தின் காட்சி யாமே

**பொருள் :**—செய்நன்றி மறத்தல், பொய்யைமிகவே பேசுதல் எதறகும் தானே முன்பு பேசுதல், பிறர் மீது வீண்பழி கூறல் கடு கடுத்த முகத்துடன் பேசுதல், அனைவரையும் பகைத்துக்கொண்டு வாழ்தல் பொய், கொலை, திருட்டு முதலியவைகளைத் துணிந்து செய்தல், சண்ட பெண்களைக் காமுறுதல், அதனால் வீண் பழிபாவங்களைப் பேசல், செய் தல் முதலியவை தாமத குணத்தின் செயல்களாகும்.

காட்சியாஞ் சாத்திகந்தா னேதோ வென்னில்
கமழ்கடிவு காந்தகமும் வாய்மைதயை யொடுக்கம்
தாட்சியாந்தண் ணளிவுக்குந் திடுநற் சீலந்
தயவானே குணமன்புபெரு மைபுகழ் பூண்டல்
மாட்சியா மறையினிறை மண்மயக்கல் பூண்டல்
வறிஞோரை வாழ்வித்தல் நல்லோர்க்கீதல்
நாட்சியா பிறைவனடி பிணைப்ப ணித்தல்
நல்லோர்க்குப் பொருளீதலறந் தேடல் கானே.

**பொருள் :**—சாத்வீசகுணம் எனபது மிகுந்த சாந்தமும் வாய்மையும் தன்னடக்கமும், குளிர்ந்த பார்வையும், நற்குணங்களும், தயையும் அன்பும், பெருமைபடத்தக்க புகழுடைதலும், அனைவரும் வாழவேண்டும் என்ற பண்பும், நல்லோர்கட்குப் பொருள் கொடுத்தலும், இறைவனை எப்பொழுதும் பணிதலாகும்.

அறந்தேடல் உறவின்முறை சுற்றத் தாரை
அகதிபர தேசியருக் கன்ன மீதல்
திறந்தேடல் தெய்வமறை யோரைக் காணல்
தேவதைகட் குபசாரச் சிந்தை செய்தல்
புறந்தேடல் புண்ணியங்கள் தேட லின்பப்
பூசுரருக் காகுதிகள் பலி கொடுத்தல்
அறந்தேடல் சாத்வீகத்தின் குணமீ தென்று
சாற்றினேனும் குணமூன்றின் றன்மை தானே.

**பொருள் :**—தர்மந்தேடல், உறவினர்கள், அகதிகள், துறவிகள் முதலிய வர்களுக்குப் பசியாற்றுவித்தல், தெய்வ வழிபாடுடையோரைத் தரிசித்தல் தெய்வங்களை மறவாது அதற்குப் பூசனை செய்தல், புண்ணியம் என்ற வைகளைத் தேடும், சிந்தையுடைத்தல், யாகம் முதலியவைகட்குஆகுதிகள் காடுத்தல் இவைகளெல்லாம் சாத்வீகக் குணத்தின் செயல்களாகும்.

**வினை இரண்டு**

தன்மையாய் வினையதனைச் சாற்றக் கேளாய்
சார்ந்ததோர் நல்வினைதீ வினையி ரண்டாம்
பன்மையாம் வினையிரண்டின் பயனே தென்னில்
பரவியநல் வினையதுதான் புண்ணிய மாகும்
திண்மையாந் தீவினைதான் பாவ மாகும்
சேர்ந்தவினை யிரண்டாலே நரக சுவர்க்கம்
புண்ணியஞ்செய் தவர்க்குநல் சுவர்க்க மாகும்
பொல்லாத பாவிகட்கு நரக மாமே.

**பொருள் :**—வினை என்பது இரண்டு. அஃது நல்வினை, தீவினை என் பதாகும். நல்வினை என்பது புண்ணியமாகும். தீவினை என்பது பாவ மாகும். அந்த நல்வினையான புண்ணியஞ்செய்தவருக்குச் சுவர்க்கமும் தீவினையாகிய பாவம் செய்தவர்கட்கு நரகமுமே கிட்டும் என்பதாகும்.

**இராகம் எட்டு**

ஆமேதா— ராகமெட்டை யறையக் கேளாய்
அதிகாமக் குரோதமொடு லோப மோகம்
வாமேதரன் மதமாச்சரிய மிடும்பை வேகம்
வகையாக இதன்குணத்தை வழுத்தக் கேளாய்
காமேதான் காமமென லாசை யாகும்
கடிதான குரோதமெனப் பிணைக்க தாகும்
போமேதான் லோபமெனல் பிடிப்ப தாகும்
பேர்பெரிய மோகமெனல் பிரிய மாமே.

**பொருள்.** இராகம் என்பது எட்டு வகையாம். அவையாவன.— காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, மேகம் என்பவைகளாகும். இவைகளின் செயல்கள்.—காமம்,—ஆசைப் படுதல். குரோதம்-கோபித்தல், லோபம்-கஞ்சத் தன்மையாக ஈயா திருத்தல், மோகம்—எதன் மீதும் பிரியம் வைத்தலாம்.

**அவத்தை ஐந்து**

பிரியமாம தமதுதான் கெருவ மாகும
பெரிதான மாச்சரிய மிடும்பாங் காரம்
உரியமாமி டும்பையுதாச சனைக ளாகும்
உறவேக மாவதுதான் கரே மாகும்

நரியமாயி ராகத்தின் நன்மை சொன்னேன்
நாசமாம வத்தையைந்தின் நாட்டங் கேளாய்
அரியமாஞ்சிற் றவத்தையா மிதனின் போக்கு
ஆக்கிரசாக் கிரமுஞ்சொற் பனமு மாமே.

**பொருள்.**—மதம்-கர்வத் தன்மையுடையது, மாற்சரியம்-அகங்காரம் (ஆணவம்) ஆகும். இடும்பை-உதாசீனம். வேகம்-கடூரம் என்பதாகும்.

சொற்பனஞ்சு ழுத்திதுரியந் துரியா தீதம்
சொல்லுமிவை தானவத்தை யைந்தாய் சொல்வர்
நிற்பனமாஞ் சாக்கிரந்தான் நெற்றி நேரே
நிறைந்திருக்குங் கருவியிட நியம மாகக்
கற்பனமாஞ் சொற்பனமுங் கண்டந் தாணங்
கடந்திருக்குங் கருவியுடன் காயத் தோட
இற்பனமாஞ் சுழுத்திதா னிதயத் துள்ளே
இயங்கிநிற்குங் கருவியுட னியம்பி டாயே.

**பொருள் .**—சொற்பனத்துடன், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்து வகையாகும். இதில் சாக்கிரம் என்பது நெற்றிக்கு நேரே நிறைந்திருக்கும். சொறபனம் என்பது கண்டத்தானத்திலிருந்தி உடல் பூராவும் பரவுகின்றது. சுழுத்தியானது இதயத்தினுள்ளே இருந்து நடத்துகின்றது.

இயம்பிடவே துரியநாபிக் கமலந் தன்னில்
எற்றமாங்க ருவியுட னி ணங்கி நிற்கும்
முயங்குதுரி யாதீத மூலா தார
மூர்க்கமாங்க ருவியுடன மர்ந்தி ருக்குங்
கயம்பிடவே கருவிகடான் றொண்ணூற் றாறும்
காரியமாய் தேகத்தைக் காத்து நிற்கும்
வியங்கியிந்த முப்பதுதத் துவமாந் தானே
வேதமாம் வித்தியாதத் துவமா மென்னே

**பொருள் .**—துரியமானது நாபி என்ற உந்தியில் இருந்து நடத்துகின்றது. துரியாதீதமானது மூலாதாரத்திலிருந்து நடத்துகின்ற கருவியாகும். இவ்விதமாக முப்பது வித்தியா தத்துவமாக விளங்குகின்றது.

## அத்தியாயம்—11

### தொன்னூற்றாறு தத்துவங்களின் தொழில்

தத்துவமாங் கருவிகடான் றொண்ணூற்றாறும்
சடத்திலெங்கு மூடாடித் தகமையாகும்
உத்துவமா யுடலதனி லுண்மை கேளாய்
உதிரவங்க னெனும் புவியி லுற்பவித்து
அத்துவமா மப் போதுள் ளிதழாய் மலர்ந்து
அத்தி முகத் துக்கருவட் டாகவுருத் தரித்து
தத்துவமா மவ்வுருவாய் அவ்டயத்தின் கண
தாக்கான அவ்வென்னு மட்சாந்தானமே.

தொண்ணூற்றாறு தத்துவங்களில் முக்கியமாக ஐம்பூதங்கள் உற்றும், கண்டும், உணர்த்திடப்பெய்வகை கூடிப் பிரிவதும் செய்யும் திரள்வதும், வெவ்வேறு ஆகி வரிவதும் செய்யும். இவ்வாறான மாயா காரியங்களால் எழு உடல் தாதுக்கள் பிறக்கின்றன. அவை கீழ்வருமாறு.—

| பூதம். | | | முக்கிய அம்சம். | தாதுக்கள். |
|---|---|---|---|---|
| 1. மண் | .. | .. | மண் | என்பு |
| | | | நீர் | மாமிசம் (தசை பேசி) |
| | | | தீ | தோல் |
| | | | வளி | நரம்பு |
| | | | விண் | மயிர் |
| 2. நீர் | .. | .. | நீர் | இரசம் |
| | | | மண் | உமிழ் நீர் |
| | | | தீ | வியர்வை, சிறுநீர் |
| | | | வளி | இரத்தம் |
| | | | விண் | சுக்கிலம் |
| 3. தீ | .. | .. | தீ | தூக்கம் |
| | | | மண் | பசி |
| | | | நீர் | தாகம் |
| | | | வளி | ஆலசியம் |
| | | | விண் | சேர்க்கை |

| | | | |
|---|---|---|---|
| 4. | வளி .. .. | வளி | ஓடல் |
| | | மண் | கொழுப்பு, படுத்தல் |
| | | நீர் | நடத்தல் |
| | | தீ | உட்காருதல் |
| | | விண் | தாண்டல் |
| 5. | விண் .. .. | விண் | மோகம் |
| | | மண் | மூளை, இராகம் |
| | | நீர் | வெறுப்பு (துவேசம்) |
| | | தீ | படம் |
| | | வளி | நாணம் |

இவ்விதமாக தூல பஞ்ச பூதங்கள் பஞ்சீகரணம் செய்து எழு உடல் தாதுக்கள் பிறக்கின்றன. இதனைத் திருமூலர் திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார்.

இரதம் உதிரம் இறைச்சி தோல் மேதை
மருவிய வத்தி வாழும் பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி
உருவம லானுடல் ஒன்றெனலாமே.

(திருமந்திரம் 2086)

இவ்வுடல் எழுவகை முதற் பதார்த்தங்களால் ஆக்கப்பட்டது. அவை முறையே இரதம் (சாரம், இரசம்); உதிரம் (குருதி, இரத்தம், செந்நீர்); இறைச்சி (தசை, மாமிசம்); மேதை (மூளை); அத்தி (என்பு); சுக்கிலம் (வெண்ணீர்) ஆகின்றன.

இரத முதலான எழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரியதுளி விந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்காயத்திலே.

(திருமந்திரம் 1897).

இரதமாகிய சாரம் முதலாகச் சொல்லப்படும் எழ் உடற்கட்டுகளால் ஆக்கப்பட்டது இவ்வுடல். இவற்றுள் சாரம், செந்நீர், வெண்ணீர் ஆகிய மூன்றும் ஓர் நாளில் புற்பனிபோல் திரளும். இத்திரட்சியே விந்து வெனப்படும். இவ்விந்து எழ்மூன்றாகிய இருபத்தொரு நாட்கள் வரை உடலில் வளரும்.

அருந்திய வன்ன மவை மூன்று கூறாம்
பொருந்து முடன் மனம் போமல மென்னத்
திருந்து முடன் மனமாங்கூறு சேர்ந்திட்டு
இருந்தன முன்னாள் இரதம தாகுமே.

(திருமந்திரம் 1896).

ஆருயிர்கள் அருந்திய சோறு மூன்று கூறு படும். ஒன்று பருவுடலை வளர்க்கும். மற்றொன்று நுண்ணுடலிற் காணப்படும். மனதை வளர்க்கும், இன்னொன்று சக்கையாய் மலமாய் கழியும். ஆக மூன்று கூறுகள்.

யூகி முனி (யூகி வைத்தியசிந்தாமணி 800) உடல் தாதுக்களைக் கீழ் வருமாறு கூறுகிறார்.—

சென்ம மார்ச ரீரந் தொண்ணூ ற்றுறங்கு லமாம்
செய்கின்ற வரவர்கள் கையாலேதான்
தன்னமாம ரசமிரத்தமா ங்கிசமு மேதை
தசை மச்சையொடு சுக்லந்தா தேழாகி
உண்மா முரு வெண்ணுஞ்ச ரீரமாகி
உயிர் சட்டை ரசஞ் சேர்ந்து ரோமமாகி
வன்னவாம் வாதபித்த சேட்பமாகி
வருகின்ற சட்டத்தினிட வண்மை கேளே

உடல் தாதுக்களைப் பற்றி பட்டிணத்தார் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.—

எலும்பொடு நரம்பு கொண்டு இடையில் பிணித்துத்
கொழுந்தசை வேய்ந்தும் ஒழுக்குவிழங் குடிலைச்
செழும் பெழ உதிரச் சிறு புழுக்குரம்பையை
மலஉடல் குடத்தைப் புல உடல் புட்டிலை

(பட்டிணத்தார் கோயிற்றிரு அகவல்).

## பிரிவு மூன்று

## அத்தியாயம் 12

### உடல் தாதுக்கள்

மனித உடல் இரண்டு மூல விலங்கள் ஒன்று கூடி பல்வேறு உடலணுக்களாகத் திரண்டு உண்டானதை ஆராயுங்கால் வியப்பைத் தான் அளிக்கிறது. சீவ அணுக்கள் அல்லது விலங்களை அருவுரு விளக்கத்தில் சதாசிவம் என்று உணர்த்தப்பட்டது. கருவுற்பத்தியில், பிண்டக் கருவிலங்கள் இரட்டையாகப் பல்வேறு விலங்களாகப் பெருகி, சீவ அமைப்பை அடையப்பெறுகின்றன. இவ்வாறு பிரிந்த விலங்கள் கூட்டு வாழ்வு பெற்று உயிர்க் கருமங்களை நடத்துகின்றன. பெருகிய விலங்கள் பல கண்ணறை விலங்களாக அமைகின்றன. இக்கண்ணறையணுக்கள் பிரிந்து பல்கும்போது ஒரே மாதிரியாக இருந்து விடுவதில்லை. ஒரே மாதிரியாக இருந்தால் நமது உடலை ஆக்க முடியாது. கருவளரும் நிலைகளின் ஒவ்வொன்றிலும் தொண்ணூற்றாறு தத்துவங்கள் அமைந்திருப்பதால் அத்தத்துவங்கள் புடை பெயர்ந்து ஒவ்வொரு விதமாகப் பல்குகின்றன. ஆகவே தொண்ணூற்றாறு தத்துவங்களுக்கு ஏற்றவாறு கண்ணறைகள் அமைந்துவிடுகின்றன. பஞ்ச பூதம், ஞானேந்திரியம், கன்மேந்திரியம் மனம் போன்ற தத்துவங்கள் உறுப்புகளாக அமைகின்றன.

இவ்வாறே வாதம், பித்தம், கபம் என்ற தத்துவங்கள் நரம்பு மண்டலங்களாக உருவெடுக்கின்றன. இங்ஙனமே, பல உறுப்புகளை ஆக்குகின்றன. கண்ணறை அணுக்கள் வளரும்போது சிறப்புக் குணங்களைக் கொண்டு மாறுபாடுகளையடைகின்றன. கண்ணறை அணுக்கள் பல உறுப்புகளைத் தாமே ஆக்கிக்கொண்டு மனித உருவத்தைச் செய்து முடிக்கின்றன. இவ்வகைத்தான கண்ணறைகளைத் "தாது" என்றும் "உடல் தாது" என்றும் சித்தர்கள் கூறியுள்ளனர்.

இவ்வாறு இத்திட்டங்களைச் செய்து முடிப்பது கண்ணறைகளின் விலசக நடுவானத்திலிருக்கும் பரவிந்தும் பரநாதமுமாம். பரவிந்துவில் சிவமும் பரநாதத்தில் சக்தியும் தங்கள் சங்கற்பத்தாலே உடலின் ஆக்க திட்டங்களை வகுக்கும் ஆற்றலுடையவைகள். அந்தந்த நிலைக்கேற்ப, வேண்டிய வேறுபாடுகளைச் செய்து முடித்தற்குரிய ஏற்பாடுகளைக் கண்ணறையணுக்கள் தக்க காலத்தில் ஆதிசக்தி, பராசக்தி, கிரியாச் சக்தி, ஞானச் சக்தி, இச்சா சக்தி என்பவைகளால் தாமே இயங்கிச் செய்து கொள்கின்றன. இதை, கண்கூடாக யாராலும் விளக்க முடியாத விந்தையைச் சித்தர்கள் விளக்கியுள்ளனர். இவ்விளக்கம் நுட்பமாகப் பாடல்களிலுள்ளதைப் புரியாவண்ணம் சித்தர் நூற்களில் கிடைக்கின்றன. அதனை விஞ்ஞான ரீதியில் விளக்கலுற்றால் யாவராலும் உய்த்துணர முடியும்.

சில உறுப்புக்கள் விலத்தளங்களால் ஆக்கப் பெற்றவை. தோல் ஒரு பரந்த தளம். இதில் ஒன்றன் மேல் ஒன்று போன்று வரிசைகளாகக் கண்ணறையணுக்கள் குவிக்கப் பெற்றுள்ளன. அடித்தளத்தில் உருண்டை உருப் பெற்றும், மேலே போகப்போகத் தகடு போன்ற உருப் பெற்றும், பிறகு ஈரம் நீங்கிய துகர்களாகச் சருமத்தின் மீதிருந்து அகற்றப்படுகின்றன. இம் மாதிரியாகவே உறுப்புகளைத் தக்க நிலையில் இருத்திக் காப்பதெல்லாம் இவ்வகையணுக்களே யாம். இவ்வகையணுக்களை இணைப்புத்திசு என்பர்.

## இரசம்

இரசம் எழு உடற் கட்டுகளில் ஒன்றாகியதாதுவாகும். இதனை இரதம், சாறு சாரம் என்ற பெயர்களால் வழங்குவாருமுளர். ஓரறிவு முதற்கொண்டு ஆறறிவு ஈராக உள்ள சகலவித சீவராசிகள் தங்கள் உயிரைச் செயல்படுத்தும் பொருட்டு அவையவைகளுக்குத் தகுந்தாற்போல் உணவாதிகளை உண்ணுகின்றன. உண்ட உணவுகள் ஒருவித நீர்மயமாக மாற்றப்படுகின்றன. இதனை அன்னரசம் என்பர். இரைக் குடலில் இரசாயினிகளாலும் மாசயனிகளாலும் உறிஞ்சப்பட்ட அன்னரசம் குருதியில் கலக்கின்றன. குருதியில் கலந்த அன்னரசம் திசுக்களைப் போடணம் செய்விக்கிறது. இவ்வாறு அன்னரசம் குருதியில் கலந்தவுடன் உடல் ரசமாக மாறுகிறது.

அன்றியும் 'உடல் ரசம்' மூவகைப்படும். (1) அநாதியாக, கருவின் மூலாவரக விலங்களிலேயே பொருத்தியிருக்கிறதைக் கருவிலரசம் அல்லது அநாதிவிலரசம் என்றும் (2) உடல் விலங்கள் தோறும் உள்ள இரசத்தை விலரசம் என்றும் (3) கண்ணறை அணுக்களாகிய இணைப்புத் திசுக்களின் இடைவெளியில் தேங்கி ஊர்ந்து செல்லுகின்றதைத் 'திசூசம்' என்றும் மூவகையாகக் கூறுவர். மேலும் குருதியில் கலந்த அன்னரசம் திசுக்களுக்குச் சேர்ப்பித்துத் தசிரங்களினின்று கசிந்து சென்று திசுக்களைப் போடணிக்கிறது. இக்கசிவை வசாநீர் என்பர். மேற் சொன்ன நான்கும் உடல் ரசத்தைக் குறிப்பவைகளாகும்.

## வபாநீர்

திசு ரசத்திலிருந்து உறிஞ்சப்பட்டு முதன்மையாகச் சிறப்புற்று விளங்குவது வபா நீராகும். வபாநீர் மசாயனிகளின் மூலமாகச் சுழற்சி அடையும். இத்திரவத்தையும் உடல் ரசம் என்பர். இது தனித்த இடைவெளிகளில் தொகுதி தொகுதியாகத் தேங்கிக் காணப்படும். இதன் இடைவெளிகள் வியூபாவாக விலங்களால் சூழப்பட்டுள்ளன. இங்கிருந்து மாசயனிகள் ஆரம்பமாகின்றன. இவைகள் ஒன்றோடொன்று பின்னி பெரிய மாசயனி குழல்களாகின்றன. மாசயனியின் வழிகளில் வபாகழலைகள் ஆங்காங்கே கிடக்கின்றன. வபாநீர் வபாகழலைகளை அடைந்து வெண் விலங்களோடு சேர்கிறது. வபாகழலைகளில் வபா வெண் விலங்கள் உற்பத்தியாகின்றன. கழலைகளில் திடப் பொருள் களையும் வந்தைகளையும் நிறுத்தி அழிக்கப்படுகின்றன.

வபாநீரை ஆராய்ந்தால் இது கிட்டத்தட்ட குருதிவசா நீரைப் போலிருக்கிறது. உப்புகள், காலகப்பொருள்கள், காலகல்லாப் பொருள்கள் ஆகியவைகள் யாவும் குருதிவசா நீரிலுள்ளதைப் போலிருக்கின்றன. எனினும் பண்டமாற்று எற்படும் காலங்களில் வபா நீரில் கலந்துள்ள பொருள்களுக்கும் குருதிவசா நீரிலுள்ள பொருள் களுக்கும் வித்தியாசம் காணப்படுகின்றன. வபா நீரில் காலகப் பொருள்கள் குறைவு. ஏனென்றால் வபாநீர் திசுவிலங்களுள்ளபடியாலும் மெதுவாக ஊர்ந்து பாய்வதனாலும் இவ்வித வித்தியாசங்கள் ஏற்படுகின்றன.

## குருதி (இரத்தம்)

குருதி உடலில் உள்ள எந்தப் பகுதிக்கும் செல்கின்றது. அது செல்லா இடம் உடலில் இல்லை. ஆகவே குருதி வாழும் அங்க சீவிகளில் காணப்படும் ஒருவகை நீர் கண்ணறைத் தாதுவாகும். இதனைத் தற்காலத்தில் நீர்த்திசு என்கிறார்கள். அதைப் போல் வேறெந்த திசுவும் மக்களது கற்பனையைக் கவர்ந்தது இல்லை. மதக் கொள்கை களிலும், சடங்குகளிலும் மனித உறவுகளிலும் வைத்திய முறைகளிலும் அதற்கு ஓர் முக்கிய பங்கு உண்டு.

மனிதனது உயிரைக் குருதி நிர்ணயிக்கிறது என்று பல நூற்றாண்டு களாக மக்கள் நம்பி வந்தார்கள். பல நாடுகளில் பிரமாணங்களையும் ஒப்பந்தங்களையும் உறுதிப்படுத்த குருதியைத் தாரை வார்த்துக்கொடுப்பது வழக்கமாய் இருந்தது. குருதியைச் சக்தி வாய்ந்த மருந்து என்று கருதப்பட்டவற்றுள் சேர்த்து வந்தார்கள். இவ்வுண்மை மனிதனது ஆராய்ச்சியை எவ்வளவு தூரம் முன் காலத்திலேயே தூண்டியுள்ளது என்பதைக் காட்டுகிறது.

உடலின் உயிர் செயல்களில் சிவப்பு நிறம் வாய்ந்த த்திரவத்திசு முக்கிய பங்கு பெறுகிறது. குருதி உடலை விட்டு அகன்றால் உயிரும் அதனோடு போய் விடும் என்பதை மக்கள் அறிந்திருந்தனர். உயிருக்குக் குருதியே ஆதாரம் என்பதை அறியாதார் இல்லை. இந்த உயர்வே மனிதன் குருதியைப் பயபக்தியுடன் வணங்கியதற்குக் காரணமாகும். இதனாலேயே மனிதர்கள் அதற்கு இயற்கையை மீறிய சக்திகள் உண்டென்று கொண்டனர். ஆகவே உயிர் விலங்கிணங்களின் வாழ்க்கைக்குக் குருதி முக்கியமானதாகும்.

உடலில் நிகழும் எல்லா மாறுதல்களையும் பிரதிபலித்துக் காட்டும் கண்ணாடிபோல் குருதி விளங்குகிறது. மற்ற திசுக்களில் ஏற்படும் எல்லா மாறுதல்களிலும் உயிர் செயல்களில் ஏற்படும் சீரழிவுகளிலும் குருதி முக்கிய பங்கு பெறுகிறது.

குருதியில் நிகழும் சிக்கலான பல நிகழ்ச்சி முறைகளைப் பற்றிய பல உண்மைகளை உள்ளொளி மூலம் பேரறிஞர்கள் அறிந்து கூறியுள் ளனர். குருதி மிகவும் சிக்கலான அமைப்புடைய ஒரு கூட்டுப் பொருள். காலகப் பொருள்களில் முக்கியமாக வெண்தவளமும் (விந்து என்னும் ஒளிப் பொருளும்) செந்தவளமும் (நாதம் என்னும் ஒலிப் பொருளும்) பிரக்குருதி மாயை என்னும் கரிப் பொருளும் தீயாகிய பிராண வாயுவும் நீரும் சேர்ந்து சிக்கலான பொருள்களிலாகிய திசு ஆகும். பல்வேறு கோடிக்கணக்கான உயிரணுக்கள் அதில் உள்ளன. இதனை,

"மேவிய புன்மயிர்த் தொகையோ, அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ, தோலிடைப்
புகலிட்டுப் பொதிந்த புண்ணோ, புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ, கூறு செய்து
இடையிடை நிற்கும் எலும்போ, எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ, வழுவழுத்து
உள்ளிடை யொழுகும் வழும்போ, மெல்ல நின்று
ஊறும் புழுவின் ஒழுங்கோ, நீரிடை
வைத்த மலத்தின் குப்பையோ, வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ, உடம்பிற்குள்
பிரியா தொறுக்கும் பிணியோ, தெரியாது
இன்னது யான் என்று அறியேன் என்னை

—பட்டினத்தார்

(திருவிடைமருதூர் மும்மணிக் கோவை–13).

என்ற பாடலால் நன்கறியலாம். இவ்வுயிர் அணுக்களும் மேற்சொன்ன உயிர்ச்சத்துப் பொருள்களும் இல்லாமல் குருதி தனக்குத் தானே சக்தி அளித்துக் கொண்டு வளர்ச்சி அடைந்து ஆற்றல் பெறமுடியாது.

படிப்படியாக, குருதியின் தன்மைகள் தற்கால அறிவியலறிஞர்களால் கண்டு பிடிக்கப்பட்டன. அவை மனிதனது ஆரோக்கியத்தைப் பாதுகாக்க நடைபெறும் போராட்டத்தில் ஆயுதங்களாகப் பயன்படுகின்றன.

பண்டைக் காலத்திலிருந்தே ஒரு உடலில் இருந்து மற்றொரு உடலுக்குக் குருதி செலுத்தும் முறை கையாண்டதாகத் தெரிகிறது. அக்காலத்தில் தன் சுயப்பரம்பரை இனத்திலேயே பிறந்த சீவன் களுக்குள் குருதியை உட்செலுத்தினார்கள். ஆனால் தற்காலத்தில் குருதியைப் பாகுபாடு செய்தும், இனத்தைப் பாகுபாடு செய்தும் எத்தன்மையானது இன்னவர்களுக்குப் பொருந்தும் என்றும் கண்ட பிறகு குருதியைப் புகுத்துகிறார்கள். ஓரளவு சீவனைப் பாதிக்கா விட்டாலும் மனித இனங்களின் குண பேதம் ஏற்பட ஏதுவாகிறது.

குருதி கசிந்து வெளிப்பட்ட சிறிது நேரத்திற்குப் பிறகு பார்த்தால் இரு பகுதிகளாகப் பிரிகின்றதைக் காண்கின்றோம். மேல் பகுதி வெளுத்த நிறமுடையதாகவும், தெளிவானதாகவும் கீழ்ப்பகுதி கருப்பானதாகவும், அடர்த்தியாகவும் இருக்கின்றது. திடப் பொருள்கள் அடியில் தங்கி விடுகின்றன. திரவப் பகுதி மஞ்சள் நிறம். அதில் நாத சத்தாகிய கூட்டு அமைப்பில் கந்தகம் நிறைந்திருக்கின்றமையால் மஞ்சள் நிறம் தோன்றுகிறது. திடப் பொருளாகக் கட்டுப்படுத்தி வைத்திருந்தது வெண்மையான விந்து சத்துப் பொருள். குருதி உடலில் உள்ளபோது ஒளியாக விந்துப் பொருளும் ஒலியாக நாதப் பொருளும் பிரகாசத்தையும் ஓட்டத்தையும் கொடுத்துக் கொண்டிருக்கின்றது. குருதி வெளிப்பட்டதும் ஒளியும் ஒலியும் மங்கவே பிரகாசமும் ஓட்டமும் நின்று

விடுகிறது. கரிப் பொருள் எப்போதும் நிலையில்லாப் பொருள் ஆகையால் குருதியில் உள்ள சிக்கலான கலப்புப்பொருளில் இருந்து பிரிந்து விடுகிறது. ஆகையினாலேயே இம்மாற்றம் ஏற்படுகின்றது என்பர்.

குருதியில் செந்நிற உயிரணுக்கள், வெண்ணிற உயிரணுக்கள் காணப்படுகின்றன. செந்நிற உயிரணுக்கள் அடுக்கடுக்காய் உருண்டு போவதை ஒழுங்காகப் புழு ஊர்ந்து செல்வது போல என்று பட்டினத் தார் கூறியுள்ளார். அன்றியும் வெண்ணிறக் குருதிக் குழலின் உள்ளும் புறம்புமாக ஊறும். இதனையும் புழுக்கள் என்றனர். இவ் வுயிர் அணுக்களன்றி, குருதித் தாது உயிரணுவையும் கூறியுள்ளனர். இவைகள் பஞ்சு போன்ற திரவத் திசுவில் மிதந்து தொழில் புரிகின்றன. ஆகவே குருதித் தாதுவில் செந்நிற உயிரணுக்கள், வெண்ணிறப்புழு அணுக்கள், குருதித் தாது அணுக்கள், அன்ன ரசம், உடல் தாது ரசம், உடல் உயிர்ச் சத்துக்கள், உப்புகள் போன்றவைகள் இருக்கின்றன.

### மாமிசத் தாது

மாமிசம் என்பவை அநேக மெதுவான சிவப்பு நிறமுள்ள சிறு தசையிழைகள் திரண்டு உடம்பில் இருக்கும் பேசிகளாம். இது மாமிசம், பேசி, தசை, சதை என்ற பல பெயர்களால் வழங்கப்படும். சில பேசி களிலுள்ள இழைகள் நேராகச் செல்லும். வேறு சில பேசிகளில் இழைகள் பனை ஓலைகளில் மட்டையைப் பற்றிக் கூடிச் சேருவது போல வண்ணசையில் கூடிப் பொருந்தும். இன்னும் சில பேசிகளின் இழை கள் தென்னம் ஓலை அல்லது இறகினைப் போல சாய்வாகச் சென்று வண்ணசையிற் பொருந்தும். பேசியின் அந்தங்களிலே அதன் இழைகள் தசையிலும் கடினமும் உரமும் உள்ள ஒரு வெள்ளைப் பொருளில் ஒன்றுகின்றன.

ஒரு பேசியைப் பற்றிப் பேசும் போது அதன் தலைப்புகளில் ஒன்றை எழுவாய் என்றும் மற்றதைப் பற்றுவாய் என்றும் சொல்லப்படும். உடலின் சில இடங்களில் எலும்புகளின் மேல் ஒரே அடுக்குப் பேசிகளிலும் மற்றும் சில இடங்களில் பேசிமேல் பேசியாய் ஐந்து ஆறு அடுக்குகள் வரை உண்டு.

**பேசிகள்.**—(1) அநிச்சாப்பேசி, (2) இச்சாப் பேசி, (3) இதயப்பேசி என மூன்று வகைப்படும்.

### இச்சாப்பேசி

இவைகளின் தசை இழைகளின் ஒவ்வொன்றிலும் பேசி விலசம், பேசி விலசங்கள் உண்டு. இவைகள் பேசி உறையினால் ஆகிய போர்வைக் குள் உள்ளன. தசை இழைகளினுள் பேசிவரிகள் காணப்படுகின்றன. பேசிவரிகளுக்கு அடுத்தடுத்து ஒன்றை விட்டு ஒன்றாக வெள்ளை வரிகளும் கறுப்பு வரிகளும் காணப்படும். இவைகள் பேசிகளின் இயக்கங்களுக்கு ஆதாரமாய் இருக்கின்றன. முக்கியமாகப் பேசிகள் சுருங்கும் போதும் நீளும் போதும் பேசிவரிகள் சுருங்கியும் நீண்டும் கொடுக்கும் அபூர்வ சக்தி வாய்ந்துள்ளது. இதனால் சீவராசிகள் தொழில் புரிகின்றன.

வாசிக்கும் போதும், கையில் உண்டாகும் அற்ப இயக்கங்களும், கனத்த சுமை தாங்கும் கை தசையும் இவை போன்ற இயக்கங்கள் எல்லாம் பேசிகளின் இழைகள் சுருங்கி இழுப்பதினால் உண்டாகின்றன.

நடத்தல், பிடித்தல், கொடுத்தல், வாங்கல் முதலிய கன்மேந்திரியச் செய்கைகளை இச்சாப் பேசிகள் நடப்பிக்கும். ஆட்களுடைய சித்தத்துக்கு அமைந்தனவாயிருக்கின்றன. எனவே இவைகளை இச்சாப் பேசி என்பர்.

பேசிகள் நீண்டு தளர்ச்சியாய் இருந்த போதிலும் சுருங்கிய போது அதிகமாகப் பருத்து, தடித்து, ஊதிக் காணும். இவ்வாறு இவை சற்று நேரம் மட்டும் சுருங்கி, விம்மி, பிரயாசத்தைத் தாங்கி நிற்கும். பின்பு இளைத்து, நடுங்கி இளகி நீளும். பேசிகள் எல்லாம் இளகி ஓய்ந்து கொள்ளும்படி கைகால் முதலிய உறுப்புகளின் சோர்வு நிலையை உறக்கத்தில் ஏற்படுத்துகிறது. பேசிகள் மாறிமாறிச் சுருங்குவதும் நீளுவதுமாகத் தொழிற்படுவதால்தான் சீவராசிகள் தொழில் புரிகின்றன. பேசிகள் இல்லையானால் தொழிலில்லை. பேசிகளுக்கு இவ்வகை அபூர்வமான சக்தியிருப்பதால் உடல் தொழில் புரிய முடிகிறது.

## அநிச்சாப் பேசிகள்

அநிச்சாப் பேசிகள் சாதாரணமாக மெதுவான பேசி, வரிகளிலில்லாத பேசி, சாதாப் பேசி என்று வழங்கப்படுகின்றன. அநிச்சாப் பேசிகள் உடலுறுப்புகளில் கிடக்கினறன. முக்கியமாகக் கருப்பை, நாடிகள், இரைப்பை, குடல், சலப்பை முதலியவைகளில் காணப்படுகின்றன. இவைகளில் காணப்படும் பேசி இழைகள் கொஞ்சமெனினும் சித்தத்திற்கு அமையாதவைகள். எப்படியெனில் இதயம், இரைப்பை முதலியவற்றின் செயலை நிறுத்த விரும்பினாலும் முடியாது. ஆகையினாலே அநிச்சாப் பேசி இழைகளைப் பெரும்பாலும் பேசியிழைகளாக அல்லது நரம்பு இழைகளாவென்று ஐயங்கொள்ள இடமளிக்கிறது. ஏனென்றால், பேசி இழைகளில் கிடக்கும் நரம்பு விலங்குகளும், நரம்பு இழைகளும், நரம்பு மண்டலங்களும் அமைப்பில் பேதம் தெரியாமல் ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கின்றன. அதனால் பேசியின் தொழிலா அல்லது நரம்பின் தொழிலாவென்று புரிந்து கொள்ள முடியவல்லை. எனவே, அநிச்சாப் பேசிகள் சித்தத்திற்குக் கட்டுப்படுவதில்லை.

அநிச்சாப் பேசி இழைகள் அளவில் சிறியன. உள்ளுறை மிக மெல்லியது. இப்பேசியின் விலங்கள் ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கின்றன. இப்பேசிகளை இரண்டு வித நரம்புப் பகுதிகள் இயக்குகின்றன. ஒன்று தூண்டுவிக்கும் பகுதி; மற்றொன்று உள்ளடக்க பகுதியாகும். தூண்டுவிக்கும் பகுதி பேசியை சுருங்கச் செய்கிறது. உள்ளடக்கும் பகுதி சுருக்கத்தை அடக்குகிறது; அல்லது நிறுத்துகிறது.

இவ்விரண்டு பகுதியும் சகவேதனி நரம்பு மண்டலத்தை அனுசரித்துள்ளது. முடிவில், கோர்த்தக சேரு மண்டலத்தின் ஆட்சிக்கு உட்பட்டுள்ளது. அநிச்சாப் பேசிகள் இச்சாப் பேசிகளை விட தனிமையாகத் தொழில் புரிகின்றன. ஒரே தரமான தொடர் அலை செயல்களைப் புரியும். தூண்டுதலுக்கு ஒரு குறிப்பிட்ட வேளையில்

ஒரே தரமான தொடர் அலையாகச்சுருங்கும். நீளும். குடலிலுள்ள பேசிகள் ஒழுங்காகவும், உடனுக்குடனும், அடுத்தடுத்தும், வன்மை யாகவும், அலை அலையாகச் சுருங்கும், நீளும். இதுதான் இச்சாப் பேசிக்கும் அநிச்சா பேசிகளுக்கும் உள்ள பெருத்த வித்தியாசமாகும். இரசாயனப் பொருள்களுக்கும் காங்கை, அம்பரச் சக்தி போன்ற தூண்டுதலுக்கும் மிகவும் நுட்பமாகப் பாதிக்கப்படுகிறது.

**இதயப் பேசி**

இதயம் முழுமையும் இதயப் பேசி என்ற சிறப்பான பேசி இழைகளால் உண்டாக்கப்பட்டது. இச்சாப் பேசி இதழ் களும் அநிச்சாப் பேசி இதழ்களும் கலந்து காணப்படுகின்றன. பேசி இழைகளில் பேசி வரிகள் காணப்படுகின்றன.

ஆனால் அமைப்பில் அநிச்சாப் பேசிகளின் குணங்களைப் பெற்று உள்ளன. இதயப் பேசி இழைகள் ஒன்றோடொன்று பின்னிக் கிடக் கின்றன. இதயப் பேசி இழைகள் நெசவு இழைகளைப் போல் பின்னியும் இழைந்துமிருப்பதால் தூண்டுதலுக்கு ஒரே தரமாகச் சுருங்கிக் குவிகின்றன. அன்றியும் ஒரு இதயப் பேசி, தொழில் புரியவில்லையென்றால் மற்ற எல்லா இதயப் பேசி இழைகளும் தொழில் புரிய சாத்தியமில்லை. ஒன்று சுருங்க ஆரம்பித்தால் எல்லாம் சுருங்கும். **"எல்லாம் அல்லது ஒன்றுமில்லை"** என்ற கொள்கையைக் கொண்டது.

**பேசிகளின் தொழில்கள்.**—இச்சாப் பேசிகளுக்குத் தன்னைத்தானே செயல்படுத்திக் கொள்ளும் தன்மை கிடையாது. பிறவற்றால் நடத்தப் படுகின்றன. அவைகள் (1) நரம்பு மண்டலம் (சித்தம்), (2) இரசாயன மாறுதல்கள், (3) காங்கை, (4) அம்பரச் சக்தி முதலியன.

(1) **நரம்பு மண்டலம்.**—பேசிவிலசங்களினிடத்துக்குக் கன்மேந் திரிய நரம்புக் கூந்தல்கள் முடிவடைகின்றன. கன்மேந்திரிய நரம் புகள் சித்தத்தினால் தூண்டப்பட்டபோது பேசிகள் சுருங்க ஆரம் பிக்கின்றன. இவ்வாறு சித்தத் தூண்டுதல்கள் குவிந்து கொண்டே யிருந்தால் பேசிகள் தொழில் புரிந்துகொண்டிருக்கும். பேசிகள் தொழில் புரியும்போது சரிவர உடனுக்குடன் தசிரங்கள் குருதியைப் போடணம் தக்க அளவில் செய்துகொண்டிருந்தால் இளகி ஓயா மலிருக்கும். குருதிப் போடணம் சரிவர தக்க அளவில் கிடைக்கா விட்டால் தூண்டுதல் இருந்தும் ஓய்ந்து விடும்.

(2) **காங்கை.**—அக, புறக் காங்கைகளுக்கும் தூண்டுவிக்கப் படுகின்றன. அக காங்கையானது உடல் அக்னியைக் குறிக்கும். புறக் காங்கை, சுற்றுப்புறக் காங்கையைக் குறிக்கும். இவ்விரு காங்கை களில் பேசியைத் தாக்கப்பட்டு தூண்டுவிக்கப்படுகின்றன.

(3) **இரசாயன மாறுதல்கள்.**—தொழில் புரியுங்கால் பேசிகள் சுருங்கும்போது பிராண வாயுவை உபயோகித்துக் கொண்டு கரிய மிலங்களை வெளிப்படுத்துகின்றன. பிராணவாயுவை உபயோகித்து கரியமிலத்தை வெளியிடும்போது தகனம் நடக்கிறது. தகனத்தினால் சிதைவுக்கு ஈடு செய்யப்பட்டு வளர்ச்சியை அடைகிறது. இது சீவ ராசிகளில் அன்றாடம் நடக்கும் இயற்கை நியதி ஆகும்.

(4) **அம்பரச் சத்தி:**—பிரபஞ்சத்தில் திருண இருண துருவங்களின் மாயா காரியங்களே அம்பரச் சத்தியாம். அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் என்பதினால் நரம்பு விலங்களிலும் தன இருண துருவ காரியங்கள் நடைபெறுகின்றன. எனவே உடலிலும் அம்பரச் சக்தி இயங்குகிறது. அம்பரச் சக்தி உடலில் தன்னுள் தகித்துக் கொள்ளும் அளவில் இருக்கிறது. தக்க அளவில் அம்பரச் சத்தியைப் பேசியினூடே செலுத்தினால் பேசிகள் உடனே சுருங்குகின்றன.

## என்புத் தாது

எலும்புகள் உறுதியும், வைரமும், மங்கலான வெண்ணிறமும் உள்ளவைகள். இவைகள் தமக்கு வைரமும் உறுதியும் கொடுக்கிற சுண்ணாம்பும் அதோடு என்பு அணுக்களின் உயிர்ச் சத்துக்களும் உடையன. அன்னாசிப் பழத்தைக் குறுக்காய் அரிந்து பார்த்தால் எவ்வாறு காணுமோ அவ்வாறே என்பின் வைரபாகக் குறுக்கு வெட்டுத் தோற்றமும் காணும். நடுவில் ஒரு வட்ட வடிவமான கால்வாயும் அதைச் சுற்றி என்பு அணுக்கள் அடுத்தடுத்து வட்டமாக இடைவெளி விட்டும் அமைந்திருக்கும். கால்வாயின் மூலமாக இரச இரத்தங்கள் வந்து என்புத் தாதுவைப் போடணம் செய்கின்றன. என்புகள் இளமையில் மெதுவான முருந்தாயிருந்தாலும் வளரும் போது படிப்படியாக இவற்றில் சுண்ணச் சத்து கதிக்கிறதனால் வைரங் கொள்ளுகின்றன. எலும்புகளை உறுதியான ஒரு சவ்வு மூடும். என்புகள் நடுவயது வரைக்கும் வளர்ச்சியடையும். முதிர் வயதில் மிக அதிக சுண்ணச் சத்து எலும்பில் காணப்படும். இதனால் இவை எளிதில் தெறிக்கத் தக்கவையாகின்றன. எலும்புகளின் சில பாகங்களில் இரண்டு அல்லது மேற்பட்ட எலும்புகள் கூடிச் சேர்ந்த வரம்பு காணப்படும். இவ்வரம்பின தோற்றத்தை கொண்டு எலும்பை வைத்து அவ்வெலும்பிருந்த உடலின் வயதை நிர்ணயிக்கலாம்.

**முருந்து.**—என்பு இளமையில் முருந்தாக இருந்து மாறியதே. முருந்து வெண்மையும், அழுத்தமும், உரப்பும், இசிவும், சற்று உரு ஒளியும் உள்ளதும், அசையத்தக்கதும், இரத்தம் பரப்பாதவையுமாம். முருந்துகளில் நாடி நரம்புகள் அமையப் பெற்றிராது.

என்புகளின் சந்தியின் முகப்புகளில் முருந்து காணப்படும். முருந்தின் இசிவுத் தன்மையினால் தாக்கத்தைக் குறைத்து எலும்புகள் இலகுவாய் அசைகின்றன.

## கொழுப்புத் தாது

உடலின் சிறு சிறு ஆலம் வித்துக்களைப் போல இசிவான மஞ்சள் உருண்டை வடிவானது கொழுப்புத் தாது எனப்படும். ஆராயுமிடத்து உடல் தாதுக்கு வேண்டிய குறிகள் இதில் காணக்கிடைக்கா விட்டாலும் இதனைக் கொழுப்புத் தாது என்றே கூறப்பட்டுள்ளது. இத்தாது ஒவ்வொரு உடலணுக்கள் தோறும் அவைகளின் மத்திமத்தை சுற்றி நிறைய அமைந்திருக்கின்றன. அன்றியும் உடலின் மெய்

அல்லது தோலின் கீழ் இத்தாது அடர்த்தியாகப் படர்ந்து காணப் படும். உடற்றாதுக்களுக்கு உணவுகள் சரிவர ஊட்டப்படாத காலத்துக் கொழுப்புச் சேமிப்பு உணவாகப் பயன்படுகிறது. உடற் சூட்டையும், வெளிச் சூட்டையும் தக்க நிலையில் வைக்கிறது. பொருத்துகள், கண்கள் போன்ற முக்கியமான உறுப்புக்களைத் தாக்கம், அதிர்வு போன்றவைகளிலிருந்து காக்கிறது.

## மூளைத் தாது (நரம்புத் தாது).

மூளைத் தாது சாதாரணமாக எலும்புக் கூடுகளில் அமைக்கப் பட்டு அதிலிருந்து வேர்களைப் போல நரம்புகள் வெளி வருவதைக் காணலாம். இத்தாதுவில் உயர்ந்த செய்கைகளையுடைய உயர்குல விலங்கள் உண்டு. இவ்விலங்களில் அடிக்கடி சலன பேதங்கள் ஏற்படும். இவை சலன பேதங்கட்கு உட்படும் தன்மை அதிகம் உடையவை. மூளை அணுக்களில் உள்ளும் புறமும் சலனமுண்டு. இச்சலனம் வெளி எழுற்சிகட்குத் தக்கவாறு ஏற்படும். இவ்வாறாக வெளி எழுச்சிகளை வாங்கி, தாக்கல் செய்யும் சக்தி இத்தாதுக்குடையது. இவ்வாறு தாக்கல் செய்யப்பட்ட எழுச்சியை ஏனைய தேவையான அங்கங்கட்குத் தூண்டுவித்துச் செயல் படுத்துகிறது. நரம்புச் சலனங் களைக் கன்மேந்திரியம் என்றும் ஞானேந்திரியம் என்றும் பிரிப்பர். ஞானேந்திரியம் உணர்த்துவிக்கும், கன்மேந்திரியம் ஆட்சித் தொழில் புரியும். நரம்புத் தாது அறிவு இயங்குவதற்கு முக்கியமானதும் சிறப்பானதுமான ஒரு பதார்த்தம். அறிவு அல்லது உயிர் (பிராணன்) இவ்விந்திரியங்களின் மூலமாக உலக விவகாரங்களில் உடலுறுப்பு களைத் தொழிற் படுத்துகிறது. ஆகவே, மூளையானது புத்தி, மனம் சித்தம், ஆங்காரம் என்னும் அந்தக் காரணங்களின் இருப்பிடமாம். உடம்பிலுள்ள உறுப்புக்களின் தொழிற்களெல்லாம் ஒன்றைப் பற்றி ஒன்றாயும், ஒன்றன்பின் ஒன்றாயும் அவற்றிற்குரியமுறை தவறாமல் நடைபெற்று வருகின்றன. ஆகையினால் அத்தொழில்களை நடப் பிக்கும் உறுப்புக்கள் ஒன்றிலே ஒன்று இடையிலே இருக்கவேண்டிய அவசியமாகிறது. இப்படி அவைகளை இணைக்கும் பொருளே நரம்பு மண்டலமாம்.

## விந்துத் தாது

ஆண்களுக்கு விந்துத் தாதுவும் பெண்களுக்கு நாதத் தாதுவும் அமைந்திருக்கின்றன. இவைகள் தனக்கென சிறப்பான குணங்களையும் சக்திகளையும் கொண்டு காணப்படுகின்றன. (இவைகளைப் பற்றி தனிமையாக உள்ளிடைச் சுரப்பிக் கோளங்களைப் பற்றிக் கூறும் பகுதியில் காணலாம்).

இரத முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரியதுளி விந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே

(திருமந்திரம் 1897)

இரதமாகிய சாரம் முதலாகச் சொல்லப்படும் ஏழ் முதற் பொருள்களால் ஆக்கப்பட்டதிவ்வுடல். இவ்வேழு உடற் கட்டுகளுள் சாரம், செந்நீர், வெண்ணீர் ஆகிய மூன்றும் ஓர் நாள் ஒரு புற்பனி போல் திரளும், இத்திரட்சியே விந்து வெனப்படும். இவ்விந்து ஏழ் மூன்றாகிய இருபத்தொரு நாட்கள் வரை வளரும்.

காயத்திலே மூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோடழியுமே

(திருமந்திரம் 1898)

அதன்பின் மூன்றாம் நாள்தோறும் பரந்து கலந்து முன் உடல் விந்துவாக விருந்த அது மன விந்துவாக மாறும். அதனை கலையாகிய அறிவு விந்துவாக அமைத்து நீங்காது நின்றோர்க்கு அவ் விந்துவும் நீங்கா. பற்றாமையின் உலக மயக்கில் ஈடுபடுவோர்க்கு அவ்விந்து மனத்துடன் அழியும். இதனையே கனவிற்கழிதல் என்பர்.

அழிகின்ற விந்து அளவையறியார்
கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரார்
அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை யறிந்தொழியாரே.

(திருமந்திரம் 1899)

என்பது துளிச் செந்நீர் ஒரு வெண்ணீரின் ஒரு துளியாகும். இத்தகைய எண்பது வெண்ணீர்த் துளியே ஒரு முழுத்துளி விந்துவாகும். எனவே ஆறாயிரத்து நானூறு துளிச் செந்நீர் துளிக் கொண்டது விந்துவாகும்.

வித்தினிலன்றி முளையில்லை அம்முளை
வித்தினிலன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மையாகும் அரனெறி காணுமே.

(திருமந்திரம் 1895)

வித்தும் முளையும் இருபொருளாக உடன் தோன்றுவன அல்ல வித்தை நிலைக்களமாகக் கொண்டு முளை உள்ளடங்கி இருக்கும்.

## அத்தியாயம் 13

### கோசங்கள்.

அருந்திய வன்னமவை மூன்று கூறாம்
பொருந்துமுடன் மனம் போமல மென்னத
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்டு
இருந்தன முன்னாள் இரதம தாகுமே.

(திருமந்திரம் 1896.)

ஆருயிர்கள் அருந்திய சோறு மூன்று கூறுபடும். ஒன்று பருவுடலை வளர்க்கும் பகுதியாகும். மறறொன்று நுண்ணுடலிற காணப்படும் மனத்தை வளர்க்கும் பகுதியாகும். பிறிதொன்று சக்கையாய் மலமாய்க் கழியும் பகுதியாகும். ஆருயிர்கள் கடடுள்ளடங்கிப் போக்குவரவு புரிதற்கு நலைக்களம் உடல், அதனை ஐவகையாகக் கூறுப. அவை வருமாறு, பருவுடம்பு, வலியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என்பன. இவற்றை அன்னமயக் கோசம், பிராணமயக் கோசம், மனோமயக் கோசம், விஞ்ஞானமயக் கோசம், ஆனந்தமயக் கோசம் எனவும் கூறுப:

(1) **அன்னமயக் கோசம்.**—உண்ட உணவை சீரணிக்கச் செய்து அன்ன ரசம் வேறு சக்கை வேறாகப் பிரித்து உடற்கட்டுகளைப் போடணித்து வளர்க்கின்ற பாகத்திற்கு அன்னமயக் கோசம் எனப்படும்.

(2) **பிராணமயக் கோசம்.**—வெளியிலுள்ள பிராண வாயுவை உள்ளிழுத்து அதனை உடல் முற்றும் பரப்பி அங்கிருந்து உண்டாகும் கரியமிலவாயுவை வெளிப்படுத்துவது பிராணமயக் கோசம் எனப்படும்.

(3) **மனோமயக் கோசம்.**—மனம் அல்லது நெஞ்சானது இதயத்தை இருப்பிடமாகக் கொண்டது. இதயம் குருதியை இரத்தாசயத்தின் மூலமாகப் பரப்பிச் சுழற்சியுறச் செய்கிறது. ஆகவே, மனம் இதயத்தையும் இரத்தாசயத்தையும் ஆட்சி செய்கிறது. மனதினால் இதயம், இரத்தாசயம் ஆட்சி செய்யப்படுகிறது. இவைகளை மனோமயக் கோசமென்பர்.

(4) **விஞ்ஞானமயக் கோசம் (அறிவுடம்பு).**—அறிவு மூளையை இருப்பிடமாகக் கொண்டு கண்மேந்திரியம் ஞானேந்திரியங்களினால் மற்ற கோசங்களை ஆட்சி புரிகிறது.

(5) **ஆனந்தமயக் கோசம்,**—அறிவானது பேரறிஞர்கள் கூறிய பயிற்சியால் உடலையும் உயிரையும் சதா இன்பமயமாக்கும் அந்நிலையை ஆனந்தமயக் கோசம் என்பர்.

## மனோமயக் கோசம்

மனோமயக் கோசம் குருதி, மாசயனி தசிரங்களால் ஆனவை. குருதி தசிரங்களுக்கு (1) நடுநாயகமாயுள்ள இதயம், (2) இதயத்தினின்று கிளைத்துப் புறப்படும் நாடிகள், (3) தந்துகிகள், (4) இதயத்தை நோக்கி இணைக்கும் நாளங்கள் எனப்படும். அவைகள் மனோமயக் கோசக் கருவிகளாகும்.

(1) **இதயம்.**—குருதியை உறிஞ்சி வெளித் தள்ளும் சக்தியுடையது. (2) நாடிகள்:—செந்நிறக் குருதியை இதயத்தினின்று கொண்டு செல்லும் குருதிக் குழல்கள் 'நாடி' எனப்படும். இவைகள் ஆரம்பத்தில் பருமனாகவும், வெகுதூரம் செல்லச் செல்ல கிளைகள் விட்டு சிறுத்து, இறுதியில் திசுக்களில் தந்துகிகளாக மாறுகின்றன. இவைகள் இதயத்திலிருந்து செந்நிறக் குருதியை உடலிலுள்ள மற்ற திசுக்களுக்குக் கொண்டு செல்கின்றன. (3) தந்துகிகள்:—சின்னஞ்சிறு நாடிகள் திசுக்களில் தொடர்ந்து சின்னஞ்சிறு நாளங்களாகின்ற பாகமே தந்துகிகளெனப்படும். தந்துகிகளின் சுவர்களால் குருதி திசுகளுக்கு வழங்குகிறது. அங்குப் பண்ட மாற்றம் உண்டாகிறது. திசுக்களிலிருந்து கழிவுப் பொருள்கள் தந்துகளின் சுவரூடே உள் வருகின்றன. எனவே, குருதிக்கும் திசுக்களுக்கும் பண்டமாற்று ஏற்படுகிறது. (4) நாளங்கள்:—தந்துகிகளை தொடர்ந்து சின்னஞ்சிறு நாளங்களாகின்றன. இவைகள் ஒன்றோடொன்று இணைந்து பின்னிச் சிறு நாளமாகி அநேக சிறு நாளங்கள் கூடி நாளமாகின்றன. தந்துகிகளிலிருந்து குருதி, நாளங்களுக்குப் பாய்கிறது.

**மாசயனி தசிரங்கள்.**—திசுக்களிலிருந்து மாயணிகளாகப் புறப்பட்டு ஒன்றோடொன்று சேர்ந்தும் இணைந்தும் மாசயனி தசிரங்களாகின்றன. பெரிய மாசயனி தசிரங்களாகிக் கடைசியில் கழுத்து நாளத்தில் சேருகின்றன.

## தந்துகிகள்

தந்துகிகள் திசுக்களில் அபரிமிதமாகக் கிளைத்துக் தூக்கணாங் குருவிக் கூட்டைப்போல் ஒன்றோடொன்று இணைந்து பின்னிக் கிடக்கின்றன. பின்னலான தந்துக் கூடுகள் ஒவ்வொரு திசுக்களிலும் வெவ்வேறு தோற்றமாகவும் உருவமாகவும் காட்சி அளிக்கின்றன. வளர்சிதை மாற்றம் நடக்கின்ற திட்டத்திற்குத் தகுந்தாற்போல் பருமனும் உருவமும் அடர்த்தியாக இருக்கும். மிகவும் நெருக்கமாகவும் நுணுக்கமாகவும் உள்ள பின்னல் தந்துகிக் கூடுகள், புப்புசம், ஈரல் பிருக்கம், கோளங்கள், சளிச் சவ்வு ஆகியவைகளில் காணப்படுகின்றன. இம்மாதிரியான கூடுகள் இச்சாப் பேசிகளிலும் மூளையின் நரைபதார்த்தத்திலும் காணப்படுகின்றன. பெரிய வலத்தியான கூடுகள் அனிச்சாப் பேசியிலும், விருதி, நரம்பு, வசாச்சவ்வுகளிலும் காணப்படுகின்றன. தந்துகிகளின் அந்தம் நாடியைப் பற்றியிருக்குங்கால் நாடித் தந்துகி என்றும் நாளத்தைப் பற்றியபோது நாளத் தந்துகி என்றும் அழைக்கப்பெறும். தொழிலைக் கொண்டு இவ்விருபாகுபாடேயன்றி வில அமைப்பிலல்ல.

சின்னஞ்சிறு நாடியிலிருந்து நாடித் தந்துகிகள் கிளைக்கின்றன. கிளைத்த நாடித் தந்துகிகள் நாளத் தந்துகிகளோடு இணைகின்றன. இணைந்த நாளத் தந்துகி சின்னஞ்சிறு நாளமாகிறது. சின்னஞ்சிறு நாடி சிறு நாடிகளிலிருந்து பிரியுமிடத்துச் சுருங்கி விரியும்படியான வசையுள்ளது. நாடிக் குழல்கள் அனிச்சாப் பேசிகளால் ஆக்கப்பட்டன. எனவே, சின்னஞ்சிறு நாடிகளும் நாடித் தந்துகிகளும் தொழிலில் மாறுபட்டவைகள். சுருங்கி விரியும் விசையுள்ளபடியால் சின்னஞ்சிறு நாடிகளில் சதா குருதி பாய்ந்தவண்ணமாகியிருக்கும். நாடித் தந்துகி களில் குருதி விட்டுவிட்டுப் பாயும்.

தந்துகிளின் சுவர் செதிலாவரக விலங்களால் அமைக்கப்பட்டது. இவ்விலங்கள், இவ்விலப்படை அடிதளச் சவ்வினை ஒட்டியுள்ளது. இவை களுக்கு வெளியேயுள்ள படையில் தந்துகி விலங்களாலும் தசை நார்களாலும் அங்குமிங்கும் பரவலாக உள்ளன.

சிற்சில இடங்களில் தந்துகிச் சுவர்களின் அமைப்பில் நுண்துவா ரங்கள் உள்ளன. இம்மாதிரியான தந்துகிகள் அதிக உள்வட்டங்களைக் கொண்டவைகளுமுள்ளன. முக்கியமாக ஈரல், உள்ளிடைச் சுரப்பி கோளங்கள், பிருக்கம் போன்றவைகளில் காணப்படுகின்றன.

## நாடி

நாடியின் குழல் சுவர் மூன்று உறைப் படைகளால் ஆக்கப்பட்டது. (1) **உள்ளுறைப் படை.**—வெங்காயத் தோல்போல் மூன்று மெல்லிய சவ்வுகளையுடையன. அவை (1) உள்ளுறைச் சவ்வு:—இது செவிலாவரக விலங்களால் ஆக்கப்பட்டது. இது தந்துகிச் சுவரின் உள்ளுறையோடு இணைந்து தொடரும், (2) மத்திமப் படைச் சவ்வு:—இது மெல்லியச் சவவு போன்ற திசுவாலானது, (3) வெளி உள்ளுறை:—இது இசிவுப் பேசி நார்களலானது.

(2) **மத்திம உறைப்படை.**—இது அனிச்சாப் பேசி விலங்களாலும் இசிவுத் திசுக்களாலும் ஆனவை.

(3) **வெளி உறைப்படை.**—பெரும்பாலும் இணைப்புத் திசுக்களால் ஆனது.

இதயத்திலிருந்து கிளம்பும் நாடிகளின் பருமத்திற்குத் தகுந்தாற் போல் உறைப்படைகளின் கனமும் காணப்படும். இவ்விகற்பத்தைக் கொண்டு நாடிகள் வகுக்கப்பட்டுள்ளன.

(1) பெரிய இசிவுள்ள நாடி.

(2) நடுத்தரப் பேசி நாடி.

(3) சிறு நாடி.

### நாளம்

நாளங்கள் நாடியை விட பெரியன. ஆனால் அவைகளின் சுவர் நாடியை விட திண்மையானது. ஏனென்றால், நாளச் சுவரில் பேசிகளும் இசிவுத் தன்மையும் இல்லாமையே. இவைகளுக்கு மூன்று உறைப் படைகளுள்ளன. எனினும் நாடி உறைப் படைகளைவிட விகற்பமுள்ளது நாளச் சுவர்கள் தொள தொளப்புற்றும் இலகுவாயுமுள்ளது. அதனால் குருதியில்லாதபோது சுவர்கள் ஒன்றோடொன்று அணைந்து ஒட்டியிருக்கும். இவைகளையும் சிறு நாளம், மத்திம நாளம், பெரிய நாளம் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். நாளங்களில் முக்கியமாகக் கவனிக்கத்தக்கது என்னவெனில் சிற்சில நாளங்களினுள் இடை இடையே பிறைக் கபாடங்கள் அமைந்துள்ளன. இதனாலன்றோ கருங்குருதி இயத்திற்கு ஒரே முகமாக ஏந்திச் செல்ல ஏதுவாகிறது. மேலும் காலிலிருந்து புறப்படும் நாளங்களில் கபாடங்கள் அமைந்துள்ளமையால் குருதி மேலே ஏறி இதயத்தை அடைகிறது.

### தசிரங்களின் நரம்பு, மாசயனி தசிரங்கள்

**நரம்புகள்.**—தசிரக் குழல்களின் சுவர்கள் நிறைந்த நரம்புகளைப் பெறுகின்றன. நரம்புகள் சகவேதனி நரம்பு மண்டலத்திலிருந்து வருகின்றன. இவைகளைத் தசிரக்கன் மேந்திரிய நரம்புகளென்பர். இவைகள் தசிரக் குழல்களின் சுவர்களை ஆட்சி செலுத்துகின்றன. குழல்களின் உறைப் படைகளில் சிக்கு முக்கலான நரம்புச் சாலங்களை அமைத்து இயக்குகிறது. இது கசேருக்கொடியினின்று உணர்வு நரம்புகளையும் பெறுகிறது.

**நாடி.**—நாடிகளும் நாளங்களும் தனியாகக் குருதியைத் தசிர நாடிகள் மூலம் பெறுகின்றன.

**மாசயனி.**—பெரிய நாடிகளும் நாளங்களும் வெபா நீரை மாசயனிகளின் மூலமாகப் பெறுகின்றன.

**இதயம்.**—இதயமானது தாமரை மொட்டைப் போன்ற குழலுறுப் பாகும். இது உடலிலுள்ள குருதியை உறிஞ்சி வெளித் தள்ளும் சிறப்பான தசிர உறுப்பாகும். இதனுடைய சுவர் மூன்று படைகளைக் கொண்டது. அவையாவன:—

(1) உள்படை

(2) நடுப்படை

(3) வெளிப்படை

**உள்படை.**—மெல்லிய பிரகாசமான சவ்வு ஆகும். இது சடர சிரவ அறைகளுக்கு உட்புறம் அமைந்தது. கவனிககுமிடத்து, சிரவத்தில் திடமாகவும் சடரத்தில் மென்மையாகவும் உள்ளது. நாடி, நாளத் துவாரங்களிடங்களின் சந்திப்பில் இது தசிரங்களின் உள்ளுறைப்படையோடு தொடருகிறது.

**நடுப்படை.**—இப்படையானது தனி சிறப்பான பேசிகளாலானது. இதனை இதயப் பேசிகளென்பர். இதன் பருமன் சிற்சில இடங்களில் திண்மையாகவும் சில இடங்களில் கடினமாகவும் காணப்படும். சிரசத்தில் திண்மையாகவும் இடது சடரத்தில் கனமாகவும் காணப்படுகிறது.

**வெளிப்படை.**—இது சௌசாச்சவ்வினாலானது. இது பரிரீகப்பைக்கு உள்ளுறையாகும்.

**தசிரங்கள்.**—இதயத்திற்குச் சீவாதாரம் குருதியே, இரண்டு சிறப்பான நாடிகளால் குருதி இதயத்திற்குப் பாய்கிறது.

**மாசயனி.**—அபரிமிதமான வபாநீர் குருதிக்கு மாசயனியூடே செல்லு கிறது.

**நரம்புகள்.**—இதயமானது உரோதர நரம்பிலிருந்தும் சகவேதனி நரம்பு மண்டலத்திலிருந்தும் நரம்புகள் கிடைக்கின்றன, இவைகளின் கிளை நரம்புகள் பெரிய நரம்புச்சாலம் இதயத்தின் அடியில் அமைக்கப் பெற்றுள்ளது. உரோதர நரம்பும் சகவேதனி நரம்புக் கிளைகளும் ஒன்றோடொன்று மாறுபட்ட தொழிலைப் புரிகின்றன.

**மாசயனித் தசிரங்கள்.**—உடலிலுள்ள நீரும் வைரமுமான பதார்த் தங்களில் பழுது பட்டு உடம்புக்கு சுகவீனத்தை உண்டுபண்ணும் பொருள்களை அனு அணுவாக வாங்கி விசர்க்கம் வழியாய்க் கழியும்படி நாளங்களுட் செலுத்தவதை மாசயனித் தசிரங்களென்பர். இவ்விதமாக உடலிலுள்ள கஞ்சல்களை வெளியே கழியும்படி வாங்குவது குழல்கள் வழியாய் நடக்கின்றன. உடலிலே பழுதுபட்டுக் கஞ்சலான பகுதிகளைக் கழியும்படி அணு அணுவாக வாங்கும் குழல்கள் மாசயனிகள் எனப் படும். மாசயனிக் குழல்கள் கிளம்பும் இடத்தில் அவைகளைக் காணக் கூடாத அளவாக நுண்ணியவைகளாயிருக்கின்றன. அவைகள் போகப் போக ஒன்றோடொன்று கூடவர வரப் பருத்துக் கடைசியிலே நாளங் களுடனே பொருந்துகின்றன.

இந்தக் குழல்கள் சிறு மணிக்கோவையைப்போல் நெடுகத் திரட்சி திரட்சியாகத் தோன்றுகின்றன. அவைகளுள் அநேகக் கபாடங்கள் இருப்பதினால்தான் இப்படித் தோன்றுகின்றன. நாடி நாளங் களென்னும் குழல்கள் போல இக்குழல்களுக்கும் மூன்று கவசங்கள் உண்டு.

கழுத்து, கமுக்கட்டு முதலிய உடலின் பகுதிகளிலே இந்தக் குழல்கள் வபாக்கிரந்திகளுக்கு ஊடாகப்போகின்றன. இக் கிரந்திகள் வீங்கிப்புடைத்துத் திரளுகின்றன. அப்படியிருக்கும் சமயங்களில் நெறி கட்டியிருப்பதாகச் சொல்லுவார்கள். மாசயனிகள் உடலிலுள்ள பதார் தகங்கள் நீராயிருந்தாலும் சரி, வைரமாயிருந்தாலும்சரி அவைகளிலுள்ள அணுக்களின் உயிர் நீங்கின காலத்தில் அவைகளை உறிஞ்சிக் கொண்டு போவதுமன்றி அவைகளின் வாயிலே உடலுக்குரியனவாயிராத அன்னிய பதார்த்தங்கள் அகப்பட்டாலும் அவைகளையும் வாங்கிக்கொண்டு போகின்றன.

## இதயம்

இருதயத்தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணாதிகலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கனுங் கூத்துகந் தானே

(திருமந்திரம் 2715.)

இப்பிரபஞ்ச முழுவதும் எல்லா இடங்களிலும் இறை, இடையராதியற்றும் திருக் கூத்தை உடலில் இதயத்தில் உகந்தருளினன் அத்திருக்கூத்தின் திருவாணைத் தொடர்பால் நெஞ்சத்தின் கண்ணெழுந்த உயிர்ப்பு, கைகால் முதலிய பொறிகளைக் கலந்து இயக்குவதாயிற்று.

திருமூலர் பாடல்களில் இதயத்தைப் பற்றிய பல குறிப்புகள் காணப் படுகின்றன. அவை இதய அமைப்பையும், அதன் தொழிலையும் நன்கு தெளிவுறுத்துகின்றன. இதயம் உள்ளே தமர்களை உடைத் திருத்தலின் நம் முன்னோர்கள் இதனைத் தமரகம் என்றும் பெயரிட்டுக் குறித்தனர். குருதியை உடலில் பற்பல பகுதிகட்கும் பரப்பும் மிகச் சிறந்த செயலையுடையதாக, உடலுக்குப் பற்பல வகையில் துணை செய்ய இதயம் காரணமாகிறது. உடலின் உள்ளுறுப்புகளில் தமரகமே மிகச் சிறப்புப் பெற்ற உறுப்பாம்.

இனி, திருமூலர் திருமந்திரத்தில் இதயத்தைப்பற்றிக் கூறும் சில பாடல்களைப் பார்ப்போம்.

''ஒருங்கிய பூவுமோர் எட்டிதழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையினூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே.

(திருமந்திரம் 2488)

நெஞ்சத் தாமரையானது சேர்ந்து காணப்படும் எட்டிதழ்த் தாமரை என்று இயம்பப்படும். பெருமைமிக்கதாகிய மாயாபுரி என்னும் இவ்வுடம் பகத்து முதுகந் தண்டாகிய கழுமுனை நாடி மிக நுண்ணியதாய் அமைந்துள்ளது. அத்தண்டினூடே அடங்கிய அறிவுப் பேரொளியின் அருளால் ஆய்ந்து எழுங்கள். அதுவே இதயத்துள் அகதவத்தால் அடங்கிய பிராணனை நடப்பிக்கும் பொருளாகும்,

மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர்கின்றனன் சோதி வரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர்கின்றதோர் பண்டங்கனாவன்றே

(திருமந்திரம் 2489.)

நெஞ்சத் தாமரையின் விரிவினைப் பகுக்குங்கால் மூன்றாக பகுக்கப்படும். அவை முறையே இதழ், கொட்டை, கொட்டை நடு என்பன. இம்மூன்றிலும் விட்டு நீங்காது தொன்மை உருவாக விளங்கும் மனனும் ஆவி நிறைந்து நிற்கும். அதனைச் சோதி விரிசுடர் என்பர். இதனையே வீரட்டம் எனவும் கூறப்படும். எட்டிதழ் தாமரையாகிய இதன கண் கொட்டையும், நடுவும் அகம் உள்ளன வாகும். எட்டிதழ் தாமரையின் கண் விட்டு விட்டு ஒளி வீசுவதை போல் தோன்றி விளங்கும்.

''ஆறே யருவ் யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவ்முலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் வழுப்பொருள் தானன்றே''

(திருமந்திரம் 2490)

உடலின் அகத்தே அமுதப் பெருக்காகிய சிற்றாறுகள் உண்டு. அவ்வாறு அருளால் போய் நிறையும் நெஞ்சக்குளமும் ஒன்றுண்டு. அங்குத் திகழ்வது அளவிடப் படாத பதி நிலையாகும். அதன் இயல்பும் நனி மிகு நுண்மையாகும். அங்கு ஆற்றல் ஒரு கூறாக கொண்டு சிறப்பாக வீற்றிருக்கும்.

''திகையெட்டும் தேரெட்டுந் தேவதையெட்டும்
வகையெட்டு மாய் நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்கு மற்றாங்கே நிறைந்து
முகையெட்டும் உள்நின்றுதிக்கின்ற வாறே''

(திருமந்திரம் 2491)

இந்தச் சுழுமுனை சக்தியானது எட்டு திசைகள் வாயிலாக ஆண்டு அருள் ஆணையால் காவல்புரிகின்றது. இதற்கு வாகனம் எட்டு, அவைகள் பூதங்கள் ஐந்தும், ஞாயிறு, திங்கள், உயிர் மூன்றுடாக எண்மர். அன்றியும் அறிவற் பொறி ஐந்து, செய்தற் பொறி ஐந்து, மனம் ஒன்று, புத்தியாகிய இருப்பு ஒன்று ஆக பன்னிரெண்டு புடைபெயராது அசைவற்று நின்ற விடத்து அங்கே சிவம் நிறைந்து தோன்றும். ஆகையினால், இதயத்தில் உயிர் அல்லது பிராணன் தன் நான்கு அந்தக் கரணங்களோடு விட்டு விட்டு அலர்ந்துகொண்டு செயல்படுகிறது.

''ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென்றது கடந்தொன்பதில்
ஊழிபராபரம் ஓங்கிய பத்தினில்
தாழ்வது வான தனித்தன்மை தானன்றே''

(திருமந்திரம் 2492.)

எட்டிதழ் தாமரையுள் கிழக்கு முதல் வடக்கு ஈறாக உள்ள எழு இதழ் ஆருயிர் வகை எழின் நிலைக்களன்களாகும். அதாவது கிழக்கு முதல் வடக்கு எழு இடமும் சிவத்தின் சகலம் (நிலை) எட்டாவது வடகிழக்கு, பரத்திற்கு இடம், ஒன்பதாவது இதழ் சதாசிவத்திற்கு இடம். பத்தாவது இதழ் ஆருயிரும் பேருயிரும் வேற்றப் புணர்ந்து நிற்கும் நிலைக்களனாகும்.

இதனையே தற்கால அறிவியலறிஞர்கள் கீழ்வருமாறு கூறுகிறார்கள். இதயத்தசைகள் வேலை செய்துகொண்டிருக்கும்போது ஏற்படும் மின்சக்தியைப் பரிசிலனை செய்தால் கிளர்ந்தெழும். திசுக்கள் எல்லாவற்றிலும் மின்சக்தி எனப்பட்டுள்ளது. முக்கியமாக நரம்பு திசுக்களிலும் இதயத் திகளிலும் சிறப்பாகக் காணப்படும். அது இதயத்தின் பல்வேறு பகுதிகளின் வேலையை மிகத் துல்லியமாகக் காட்டிவிடும். தூண்டப்படும் இதயத் தசைகள் எதிர் மின்சாரம் கொண்டவை. ஓய்வு நிலையில் உள்ள இதயத்தசைகள் நேர் மின்சாரம் உடையவை. உழைக்கும் தசைகளுக்கும் ஓய்வு நிலையில் உள்ள தசைகளுக்கும் மின்நிலை வேறுபாடு இருப்பதால் மின்னோட்டம் ஏற்படுகிறது. அம்மின்னோட்டத்தை இயங்குமின்னோட்டம் என்பர்.

தூண்டுதல் நிகழ்ச்சி எல்லாப் பகுதிகளுக்கும் பரவுகிறது. இதனால் தமரகத்தின் பல பாகங்களும் மாறி மாறி நேர் அல்லது எதிர்மின்சாரம் தாங்கிய பகுதிகளாக ஆகின்றன. இதயத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ள மின்நிலை வேறுபாடுகள் ஒழுங்காக மாறுகின்றன. இதனால் மின் ஓட்டத்தின் திசையும் மாறுகின்றது. அப்படி உண்டாகும் மின்னோட்டம் இதயத்திலிருந்து அருகேயுள்ள திசுக்களுக்கெல்லாம் பரவுகின்றது. கம்பிகளின்மூலம் மின்சாரம் செல்வதைப்போன்று பல பகுதிகட்கும் மின்சாரம் சென்று இறுதியில் தோலையடைகிறது. தோலின் பல பகுதிகளிலும் வேறுபட்ட மின் அழுத்தத்தை ஏற்படுத்துகின்றது. வேறுபட்ட மின் அழுத்தத்தைக் கொண்ட பல தோற் பகுதிகளை ஒன்று சேர்த்ததால் மின்சாரம் பாய்வதைக் காணலாம்.

## இதயம்

இதயத்திற்கு, இருதயம், இரீகம், இரத்தாசயம், தமரகம் என்று பல பெயர்களுண்டு. இதயம் பரீரிகச் சவ்வால் சுற்றப்பட்டு, சுவாசப்பைகளுக்கு இடையில் கிடைக்கிற சங்கு அல்லது தாமரை மொட்டு வடிவமுள்ள அறைகளுள்ள தசையாலான உறுப்பாகும்.

தமரகம் நெஞ்சசுறையுள் சரிவாய்க் கிடைக்கும். இதனுடைய அடி மேலும் பின்னுமாக வலப்பக்கத்தை நோக்கும். நுனி அல்லது முனை கீழும் முன்னுமாக இடப்பக்கத்து ஐந்தாம் ஆறாம் விலா முருந்துகளின் இடைவெளியை நோக்கும் தசையான இடைச்சுவரால் வல இடபாதிகளாகப் பிரிபடும். இவை ஒவ்வொன்றும் மேல் கீழ் அறைகளாகப் பிரிபடும். இதயத்தின் மேலறை சிரவம் என்றும் கீழறை சடரம் என்றும் பெயர்பெறும்.

இதயத்தின் வலப்பக்கம் காரிரத்தத்திற்குரிய பகுதி, உடல் முழுவதினு முள்ள காரிரத்தம் குகா நாளங்கள் வட்ட தாரணி என்பவை களின் வழியாக வலது சிரவத்துக்கு வந்து வலது சடரத்தை அடையும் வலச் சடரத்தை அடைந்த குருதி புப்புசநாடி வழியாய் சுவாசாசயத்திற்குச் செல்லும் அங்கு புப்புச மடங்களும் சென்று சுத்தமான செங்குருதி யாக, புப்புச நாளங்கள் வழியாக இதயத்தின் இடது சிரவத்துள் சேர்ந்து இடது சடரத்துக்குள் விழும். இடது சடரத்துக்குள் புகுந்த குருதிகண்டறைக்குச் சென்று அதன் பல கிளைகள் வழியாய் உடல் முழுவதும் பரவும். இதையே வளர்ந்தவர்களின் குருதி சுற்றோட்டம் எனகிறாம்.

## இதயத்தின் வியூகனம்

இதயப்பேசி இழைகளும் நசைச்சவ்வாலான சில வளையங்களுஞ் சேர்வதாலுண்டாகும். நசை வளையங்கள் சிரவ சடர வாயில்களையும் கண்டறைப்புப்புச நாடிகளின் வாயில்களையும் சூழ்ந்திருக்கின்றன. சிரவ சடர வாயில்களிலுள்ள வளையங்கள் சிரவங்களினதும் சடரங் களினதும் பேசி இழைகளும் துவிகபாடங்களும், திரிகபாடங்களும், பிடிப்பதற்குப் பொறுப்பாகும். இவ்விரண்டு வளையங்களுள் இடது வளையம், கண்டறை வாயிலின் வளையத்தோடு தொடுத்திருக்கும் கண்டறைத் துவாரத்தையும், புப்புசநாடித் துவாரங்களையும் சூழ்ந் திருக்கின்ற வளையங்கள் இக்குழல்களுக்கும் பிறைக்கப்பாடங்களுக்கும் பிடிப்பிடமாகும். இவ்வளையங்களின் கீழோரத் சடரங்களின் பேசி இழைகள் பற்றும், மேலோரம் மூன்று குடாக்களயிருக்கும். இவை களில் நடுகளில் நடுக்கவும் சரிவாப் பிடித்திருக்கும். நிரிகச சவ்வு இவைகளிற் பற்றி மடிவதாற் பிறைக்கபாடங்கள் உண்டாகும்.

இதயத்தின் பேசி சுவர்களிற் மிகுதியான பங்கு அதிகம் சிக்காகப் பின்னப்பட்டுக்கிற கருஞ்சிவப்பான இழைக்கச்சுகளாகும். இவ்விழைகள் சித்தத்திற்கு அமையாதவைகளனாலும் குறுக்கு வரிசளையுடைய வைகள். இதயத்தின் பேசியிழைகள், சிரவ இழைகள் சடர இழைகள் என இரண்டு வகுப்பாகும். இவை வெளி உள் என இரட்டைகளாயிருக்கின்றன. வெளிப்படை வல, இட அறைகள் இரண்டிற் கும் பொதுவானதாயும், உட்படை அந்தந்த அறைகளில் வெவ்வேறா னதாயும் இருக்கும் இவ்விழைகளுள் சில இழைகள் நேரானவைகள் சில சங்குப்புரிபோலாவது, வளையம் போலாவது, தடம் போலாவது வளைந்தவை கள்.

மேல், கீழ் குகா நாளத்துவாரங்கள் சேருமிடத்தில் குகாசிரவப் கச்சு என்னும் நரம்புக் கிரந்தியுள்ளது. சிரவ இடைச் சுவரின் அடிக் பாகத்தில் சிரவச் சடரக்கச்சு உள்ளது. இவ்விரண்டும் மிக நுட்பமான இழைகளால் இணைக்கப்பட்டிருக்கின்றன. சிரவச் சடரக் கச்சிலிருந்து இழைகள் சடர இடைச் சுவரினூடே இழைகள் செல்லுகின்றன. இவ்விழைகள் வல, இட சடர அறை உள்ளுறைப்பேசிப்படைகளில் உட்பக்கமாக தசையலான நீண்ட சிறுத்திரணைகளாகக் கிடைக் கின்றன. இவைகள் மூன்றுவகையாகக்காணும். முதல் வகுப்பான

வைகள் புருவங்களாகச் சடரத்தின் சுவரோடு ஒட்டிகொண்டிருக்கும் இரண்டாம் வகுப்பானவைகள் வில் நாண்கள்போல் இரண்டு தலைப்புச் சுவரில் பிடித்திருக்கும், மூன்றாம் வகுப்பிற் சேர்ந்தவைகள் முளை போல் ஒரு அந்தம் சுவரிலும் மறு அந்தம் நசைரச்சுகளிலும் பிடித் திருக்கும். இவைகளுக்குச் சூசக யூபகம் என்று பெயர்.

## குருதியின் பொது குணங்கள்

**குருதியின் தொழிலும் குணமும்**—குருதி திரவ திசுவினாலானது குருதி நாடிநாளங்களில் நிறைந்து சீவ சத்துக்களை அதனூடாக எடுத்துச்சென்று எல்லா உறுப்புக்களுக்கும் போடணம் செய்கிறது. குருதிச் சுழற்சியினால் இடைவிடாமல் பிராணவாயுவைத் திசுக்களுக்கு உட்செலுத்தப்பட்டுகிறது. கரியமில வாயுவையும் வளர்சிதை கழிவு களையும் விசர்க்க உறுப்புகளின் மூலமாக வெளிபடுத்திக்கொண்டிருக் கிறது. சீவ சத்துக்களைத் திசுகளுக்கு எடுத்துச் செல்வதும் கரியமில வாயுவை வெளிப்படுத்துவதுடன் குருதிச் சுழற்சியின் வேலை முடிந்து விடவில்லை.

குருதி, உடல் தாது ரசம், திசு ரசம் ஆகியவைகள் உடலின் உடற்கட்டு உள் சூழ்நிலைகளாகும். உடலின் சுகவாழ்விற்கு உடல் உள் உறுப்புகளின் போதுமான காரியங்களைச் செய்வதற்குத் தரமான குண முள்ள குருதிச் சுழற்சி தேவை. அவ்வாறான குருதிச் சுழற்சி நல்ல தொரு விசையினால் நடத்தப்படுகிறது.

சில உயர் குலத் திசுவிலங்களும் கோர்த்தக சேரு நரம்பு மண்டல விலங்களும் குருதி குண பேதங்களுக்குத் தக்கவாறு உடனுக்குடன் மாறு தல்கள் அடைகின்றன. அடுத்ததாக குருதி உடலைக் காப்பாற்றுகிறது. குருதி வெண் விலங்கள் வந்தைகளையும் நச்சுப் பாசிகளையும் அழிக் கின்றன. அவைகளைத் தங்களே சீரணித்து மற்றவைகளைக் கழிவுகளாக வெளிப்படுத்துகின்றன. குருதி வசாநீர் காலகப் பொருள்களைக் (நீதுருசப் பொருள்களைக்) கொண்டுளள்ன. இவைகள் வந்தைகளோடு கட்டுண்டு சிதைக்கப்பட்டு நஞ்சில்லாமல் மாற்றப்படுகின்றன.

எல்லாவிதமான உறுப்புக்களும் குருதியின் மூலமாகத்தான் சுகரண காரியங்கள் புரிகின்றன அநேக உயர்ந்த சுகரண காரியங்களினால் ஏற்பட்ட சத்துக்கள் சுரப்பிக்கோளங்களிலிருந்து உள்ளீடைச் சுரப்பியாக ஏற்பட்டு குருதியில் கலக்கின்றன. கலந்த சத்துக்கள் குருதிச் சுழற்சியால் எல்லா பாகங்களுக்கும் கொண்டுபோகப்படுகிறது. இவ்வாறான காரியங்கள் கோர்த்த கசேரு நரம்புப்பகுதி விசையினால் நிகழ்கின்றது.

சாதாரணமாக, விலங்குகளில் குருதி, உயிர் விலங்களைக் கொண்டுள் ளது. குருதியைக் கொஞ்சம் தனியிடத்துச் சற்று விட்டுப் பார்த்தால் சட்டியான குருதி இரண்டு பாகமாகத் தெரியும். அடிபாகம் செவ்விலங் களைக் கொண்டு தேங்கி அமுந்திக் கிடக்கும். மேல பாகம் வெண் விலங் களைக் கொண்டுள்ளது. அதற்கு மேலும் தெளிந்த நீர்ப்பாகம். நீர்ப் பாகத்தைக் குருதி வசாநீர் என்பர். மனிதருக்கு வெண் செவ்விலங்கள் 42 முதல் 45 விழுக்காடு வரையிருக்கும். குருதி வசாநீர் 58 முதல் 65 விழுக்காடு வரையிருக்கும்.

**மனிதனின் குருதி அளவு.**—மனித எடையின் எழு விழுக்காடு எடை, குருதி அளவாகும். ஐந்து முதல் ஒன்பது விழுக்காடு வரை திரவங்களை உட் செலுத்தினால் தாற்காலிகமாகக் குருதி அளவு அதிகரிக்கும். குருதிப் பெருக்கில் திரவம் நட்டமடைவதால் குருதி அளவு குறையும். இவ்வித குருதி அளவு மாறுதல்கள் சிறுது நேரம்தான் பொருட்படுத்தற்குத் தேவையில்லை.

குருதியில் நீர்மை அதிகப்பட்டால், குருதியிலிருந்து நீர் திசுக்களுக்குச் செல்லுகிறது. பிறகு பிருக்கத்தின் மூலமாகக் கழிக்கப்படுகிறது. முன் சொன்னதற்கு நேர் மாறாக, குருதியில் நீர்மைக் குறைந்தால் திசுக்களிலிருந்து நீர்மைக் குருதிக்குச் செல்கிறது. குருதிப் பெருக்கத்தில் குருதி வசாநீர் அளவு துரிதமாக ஈடு செய்யப்பட்டாலும் செவ்விலங்களை வரைவில் ஈடு செய்ய முடிவதில்லை.

குருதியின் நீர்மைக் குறைந்தால் குருதி அழுத்தமும் குறைகிறது. இம்மாறுதல் செவ்விலக் குறைவுமாறுதலைவிட மிகவும் அபாயகரமானது சிறிய அளவு குருதிப் பெருக்கத்தில் பெரிய மடங்கு காலகப் பொருள்கள் நட்டமடைந்தாலும் அவ்வளவு பாதகமில்லை. பெரிய அளவு குருதிப் பெருக்கு மிகவும் அபாயகரமானது. மெல்ல மெல்ல செவ்வலங்கள் குறைந்துகொண்டே வந்தால் உயிருக்கு உடனே அழிவில்லை. தீவிர குருதிப் பெருக்கு உயிருக்கு உடனே ஆபத்துண்டாகும்.

ஆகையால் துரித குருதிப் பெருக்கமான பிறகு குருதியை ஈடு செய்ய குருதியையோ, குருதிவசா நீரையோ, குருதிக்கு ஈடான நீரையோ உட் செலுத்த உயிருக்கு அபாயமில்லை. இதனால் குருதி போதிய அளவு ஏற்படுகிறது. குருதி அழுத்தம் உண்டாகிறது. மூளை, இதயம் போன்ற உறுப்புக்களுக்குக் குருதி பரவுகிறது.

**குருதிப்பதம்.**—குருதியின் பதம் செவ்விலங்களின் எண்ணிக்கையைப் பொருந்தியது, சாதாரணமாக நீரின்பதம் 1, குருதி தண்ணீரின் பதத்தை விட ஐந்து பங்கு உயர்ந்தது. குருதியின் பதம் உயர்ந்தால் செவ்விலத்தின் எண்ணிக்கை உயர்ந்தது என்ற அனுமானம். ஆகவே செவ்விலத்தின் எண்ணிக்கை உயர்ந்ததானால் குருதியின் பதமும் உயரும் சில நோய்களினுல், தீப்புண்ணிலும் குருதிப்பதம் எட்டுவரையில் செல்கிறது. வெளுப்பு நோயில் செவ்விலங்கள் குறைவதால் குருதிப் பதம் நான்காகும்.

**குருதிச் சார அழுத்த ஓட்டம்.**—நீர்கள் ஒன்றோடொன்று கலக்குந் தன்மையுடையவைகள். இத்தன்மைக்குச் சார அழுத்தம் என்று பெயர். ஒன்றோடொன்று கலக்கக் கூடியவைகளாகியசாராயங்கள் தண்ணீர் போன்ற நீர்களைக் கண்ணாடி பாத்திரத்திற்குள்ளே சவ்வு முதலிய ஏதேனுமொன்றால் பிரித்து வைத்தால் அவை அவ்விடைச் சுவரின் கண்ணறைகளுக்கூடாகச் சென்று ஒன்றோடொன்று கலக்கும். இப்படி கலக்கும் நீர்கள் சமமாய் கலவாமல் இடைச் சுவருக்கு ஒரு பக்கத்தில் நீர் கதிக்கும். மற்றதில் குறையும். கதித்தப் பக்கத்துச் செல்லுய். ஒட்டம் நிசாரம் என்றும் குறைந்த பக்கத்துக்குச் செல்லும் ஒட்டம் 'அவசாரம்' என்றும் சொல்வார். இவ்வாறே கரைந்த நீர்களும் மேற் சொன்ன கோட்பாட்டைக் கடைப்பிடிக்கின்றன.

குருதியும் நீர்த்திசுவே. அநேக காரசாரங்கள் கரைந்திருப்பதால் குருதியும் கரைந்த நீர்த்தாதுவேயாகும். ஆகவே குருதியும் உடலில் இயங்குகின்ற காலையில் சார அழுத்த ஒட்டக்கொள்கையைக் கடைபிடிக்கிறது.

கடலில் பிராணிகளில் குருதிச்சார அழுத்தம் ஒரே தரமாகவும் சீராகவும் அமையவில்லை. கடல் நீரின் தன்மைக்குத் தக்கவாறு குருதிச் சார அழுத்தம் மாறிக்கொண்டேயிருக்கும். கடக்கரையோரங்கலில் கிடக்கும் ஆறுகளில் வாழும் சிறு பிராணிகள் அருகாமையின் கடல் நீரின் கலப்பால் குருதிச்சார அழுத்தம் பாதிக்கப்பட்டாலும் பேதங்களைப் பொறுத்துக் கொண்டு சமாளிக்கின்றன. எத்தகைய கெடுதல்கள் ஏற்படுவதும் இல்லை.

பகுத்தறிவுடைய பிராணிகளில் குருதிச் சார அழுத்த மாறுதல்கள் மிகவும் பொருட்படுத்துவதற்கு இடமில்லை. பெருமளவில் நீரும் சாரமும் குருதியில் கலந்தாலும் குருதி அழுத்தம் பாதிக்கப்படுவதில்லை. குருதிக் குழல்களின் குருதிச் சார அழுத்த மாறுதலுக்கேற்ப சிறப்பான நுட்ப உணர்வுகளை அல்லது வசங்களை அமையப்பெற்றுள்ளதால் உடனுக்குடன் சார அழுத்தத்தைச் சரிப்படுத்திக்கொள்கிறது. ஆகவே குருதிச்சார அழுத்த வசங்கள் நீரைக் திசுக்களிலிருந்து குருதிக்கும் குருதியிலிருந்து திசுக்களுக்கும் மாறிமாறி ஓட்டம் நிகழ்வுகளைக்கிரியை புரிய உதவுகிறது. அன்றியும் குருதியிலிருந்து நீரையும் சாரங்களையும் அமரி நீராக வெளிப்படுத்தவும் உதவுகிறது. ஆராயுமிடத்து தோல் தாது, நீர் சாரம் போன்றவைகளைச் சமன்படுத்தித் தரமாக இயங்கப் பெரும் பங்கெடுத்து, உழைக்கிறது. குருதியில் நீர் மிகுந்தால், நீர் தோலிலுள்ள திசுக்களுக்குச் செல்கிறது. குருதியில் சாரம் அளவு அதிகரித்தால் தோல் திசுவிலிருந்து நீர் குருதிக்கு ஓடுகிறது. குருதியில் சார அழுத்தம் ஒரே தரமான நிலையிலிருக்கிறது. பிராணிகளில் சார அழுத்தம் ஒரே நிலையில் இருப்பதால் அநேக அனுகூலங்கள் உண்டு. திசுக்களின் சார அழுத்தம் குருதிச் சார அழுத்தத்தைப் பொருந்தியிருக்கும். சிற்சில சமயங்களில் ஏறத்தாழ்வும் இருக்கும். இதனால் பாதகம் ஒன்றுமில்லை. திசுக்களின் சார அழுத்தம் விகற்பப்பட்டால் உடலின் சிறப்பான உறுப்புக்களின் திசுக்கள் (முக்கியமாகக் கோர்த்தக நரம்புவிலங்கள்) ஆற்றலை இழந்து தீவிரமாக அழிவுற ஏதுவாகும். ஒரே தரமான சார அழுத்தம் இருந்தால்தான் செவ்விலங்கள் தக்க முறையில் செயல்படும். ஏனென்றால் செவ்விலத்தின் சார அழுத்தமும் குருதியின் சார அழுத்தமும் ஒரே தரமானது. செவ்வலத்தின சார அழுத்தம் அதிகமானால் அதன் சுவர் உப்பும், குறைந்தால் சுருங்கும். சம நிலையானால் வாடிக்கையாக இருக்கும். குருதியின் சார அழுத்தம் குறைவுற்றால் செவ்விலத்தினுள் நீர் அதிகம் சேர்ந்து உப்பும். அளவுக்கு மிஞ்சி நீர் அதிகம் சேர்ந்தால் செவ்விலம் பெருத்து உப்பி வெடிக்குள் வெடித்தவுடன் செவ்விலத்தின் உட்பொருள்கள் குருதியில் கலக்க நேரிடும். செவ்விலம் அழிந்துவிடும். இதனைச் செவ்விலச் சிதைவு என்பர். ஆகையினாலே குருதி வசா நீரைவிட அதிக சார அழுத்தமுடையவைகளில் செவ்விலம் சுருங்குகிறது. குறைவான சார அழுத்த

முடையவைகளில் செவ்விலம் உப்பி வெடித்துச் செவ்விலச் சிதைவு ஏற்படுகிறது. சம சார அழுத்தமுள்ளவைகளில் செவ்விலம் பாதிக்கப் படுவதில்லை. என்வே, நீர்மையை உடலினுள் பகுத்துங்கால் சம சார அழுத்தமுடையவைகளாக உட் செலுத்த வேண்டும். அப்போதுதான் செவ்விலம் ஒருவத மாறுதல் அடைவதில்லை. 0·9 விழுக்காடு கொண்ட சோடத சார நீர்மை மனிதனின் சம சார அழுத்தமுடையதாகக் கருதப் படுகிறது.

**குருதிவசாநீர்.**—குருதி வசா நீரில் துருவதமுற்ற உலோகப் பொருள்கள் நிறைந்திருக்கின்றனவென்று மதிப்பிட்டிருக்கின்றனர். நூறறுக்கு 0·75 விழுக்காடு துருவதமுற்ற உலோகப் பொருள்களிருக் கின்றன. குருதியில் யவ்வாச்சரம் சோற்றுப்பு அல்லது சோடத சாரம் சுண்ணம் சிந்துப்பு. போன்றதன் இருண துருவதப் பொருள்களும், தீவாயு கரியமில் நீர். பாசுவநீர், பாசுவதநீர், கந்தகக் கலவை நீர் போன்ற தன துருவதமுள்ள பொருள்களும் அடங்கிக் கிடக்கின்றன.

**குருதிவசா நீரின் துருவதமுற்ற பொருள்களின் அளவு.**

| இருண அணுக்கள். | அடக்கம். | | தன அணுக்கள். | அடக்கம். | |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| சோடதம் | 300–330 | 130–144 | தீவளி | 360–390 | 100–110 |
| யவ்வம் | 16–20 | 4–5 | கரியமில நீர். | .. | 20–24 |
| சுண்ணம் | 8–12 | 4–6 | பாசுவதநீர் பாசுவதோ நீர். | 3–5 | $1–1\frac{1}{2}$ |
| சைந்தவம் | 2 ஏறக்குறைய | 1 | கந்தகமில் நீர். | 2–3 | 1–2 |
| மொத்தம் | .. 140–155 | | மொத்தம் | .. | 125–135 |

குருதியில் கிடைக்கின்ற தன, இருண துருவங்களுள்ள பொருள்களின் மொத்த அளவையும் துருவமற்ற பொருள்களின் மொத்த அளவையும் கணிக்கில் துருவமுற்ற அனுத்திரணைப் பொருள்களின் குருதியின் தோய்வையே முதன்மை அளவாகக் கொண்டு நிதானிக்கப்படுகிறது. சர்க்கரை அடக்கமும் வளர்சிதைவினால் இடையில் தோன்றி காலகப் பொருள்களையும் அனுத்திரனை எடையாகப்பாவித்துக் கணக்கிட்டால் முன்சொன்னவைகளின் அளவுக்கு மேல் அதிகம் இல்லையெனலாம். காலகப்பொருள்களின் அனுதிரணை எடையில் அதிகமாக இருந்தும் குருதி வசாநீரின் எடையில் அதிக அளவு அடக்கமான போதிலும் அனுத் திரணை எடையின் எண்ணிக்கையில் குறைந்த பட்சமாக இருக்கிறது.

குருதியில் உள்ள துருவமுற்ற பொருள்களின் மொத்த தொகையைப் பொருந்தி குருதி வசா நீரின் சார அழுத்தம் அமைந்திருக்கும். முக்கிய மாக, மிகதுருவமுற்ற சோற்றுப்பு குருதியில் மற்ற துருவதமுற்றபொருள் களைவிட பெரும்பான்மையாக மாறுதலையடைந்து கொண்டேயிருக் கும். இதனால் குருதிவசாநீர் துருவதச் செயல்களில் அடிக்கடி மாறிக் கொண்டேயிருக்கும்.

உலோகப் பொருள் குருதிவசா நீரில் இருக்கும் தொகையைவிட வித்தியாசப்பட்டு திசுக்களில் அதிகப்பட்டோ குறைந்தோ காணப்பட்டால் திசுக்களில் தொழில்கள் கோளாறு அடைகின்றன அல்லது திசுக்கள் இறக்கின்றன. அழிகின்றன. ஆகையினாலே குருதி வசா நீரைக் போன்று அடக்கமான வேறு கலவை நீர்களைத் திசுக்களினூடோ அல்லது குருதி நாளங்களினூடோ செலுத்தினால் திசுக்கள் வாழ்கின்றன. இம் மாதிரியான கலவை நீர்கள் தயாரித்துள்ளனர்.

**குருதிவசாநீரின் நீர்வளித் தோய்வு.**—குருதியில் இன்னொரு முக்கிய மான நிகழ்ச்சி சிலாக்யமானது குருதியில் நீர்வளித் தோய்ந்து கிடக் கிறது. அந்நீர்வளி நீரில் தோய்வுற்று குருதி வசா நீரில் உள்ளது. இவ் வதமாக, தோய்ந்து கிடக்கும் நீர்வளி அவ்வப்போது மாறுதல் அடைந்து கொண்டே இருக்கின்ற நிகழ்ச்சியை அறிவது மிகவும் முக்கியமான பகுதி யாகும்.

நீர்வளி, நீரின் பகுதி ஆகியவைகளின் தோய்வு குருதியில் ஒரே தரமான நிறைவு நிலையிலிருந்தால் குருதி, சிறிது உவர்ப்பு ருசியை யுடையது. இந்த ருசி மாறுதல் நீர்வளியின் தோய்வைப் பொருந்தி யுள்ளது. குருதி வசா நீரின் நீர்வளித் தோய்வு 7·36 விழுக்காடாக சாதாரணமாக இருக்கும்.

சில சமயங்களில் தேக உழைப்புக் காலங்களில் அல்லது நோய்களில். குருதியில் பேசி அமிலம் நிறைய கலக்கிறது. நீர்வளித் தோய்வு மாறுதல் தரமாக நடக்காததினால் குருதியில் அமிலம் அதிகரிக்கிறது. அவ்வமயம் அதனை அமில நிறைவுக் குருதி என்பர், கரியமில்வாயு அதிகமாக வெளித்தள்ளப்பட்டால் குருதி வசா நீரின் மீண் செயலில் மாறுதல் அடைகிறது. அதாவது குருதி, சருச்சித் தன்மை அடைகிறது. இதனைச் சருச்சி நிறைவுக் குருதி என்பர்.

## சமநிலை திட்டம்

சுகண நிலைகளில், குருதிவசா நீரின் நீரிவளித் தோய்வு மாறுதல்கள் பாராமுகமானது. அவ்வளவாக, கவனத்தை ஈர்ப்பதில்லை எனலாம். ஏனென்றால் பெலனற்ற அமிலங்களும் அவைகளின் உப்புகளும் தீவிர சத்தியுடைய தாரகங்களும் வரவு செலவுத்திட்டத்தில் பங்கு கொள்கின்றன். இவைகளின் மீன் செயலாலும், பிணங்குத லாலும், பிரிவதாலும், ஏற்படும் வ்கற்பத்தை அமிலதாரங்களின் தாரதன்மியம் சீர்படுத்துகிறது.

மேற்சொன்ன வரவு செலவு திட்டங்களில் (1) கரியமில காரங்கள் வரவு செலவு சமநிலைத்திட்டம், (2) பாசுவத வரவு செலவு சமநிலைத் திட்டம், (3), காலக வரவு செலவுத் சமநிலைத் திட்டம் ஆகியவைகள் முக்கியமாக அடங்குகின்றன.

(1) **கரியமில காரங்கள் வரவு செலவு திட்டம்.**—கரியமிலம், சோடதத்துவிக ரம், யவ்வாச்சாரம் ஆகியவைகள் பிணங்குதல், பிரிதலினால் ஏற்படும் வரவு செலவு சமநிலைத் திட்டத்தைக் காரங்களின் வரவு செலவு சமநிலைத் திட்டம் எனப்பட்டது. கார திட்டத்தில் கரியமிலத்திலிருந்து கரியமில வாயு குருதியினின்று விரைவில் வெளியேறுகிறது. அதுவே குருதியில் விரைவில் தோய்வுறுகிறது. இக் காரணங்களினால் காரங்களின் திட்டம் சிறப்பான குணங்களையுடையது. ஏனென்றால், ஒரு பக்கம் கரியமில வாயு குருதியிலிருந்து புப்புசம் பிருக்கம், (தோல் போன்றவைகளின் மூலம் வெளித்தள்ளப்படுகின்றது. மற்றொரு பக்கம் புப்புசத்தின் இயக்க நிகழ்ச்சிகளால் குருதியில் கரியமில வாயு தோய்வுறுகிறது. காரங்கள் நிறுத்தப்படுகின்றன. காரங்கள் திட்டம் மற்ற பொருள்களின் திட்டங்களோடு மீண் செயல் புரிகின்றன. திசுக்களில் நடக்கும் குருதி வசா நீர் மீண் செயலால் துவி காரங்கள் சதா உடனகயிருந்து சேமிப்பைப் புரிகிறது. வேண்டிய காலத்தில் சேமிப்பிலிருந்து வெளியிட்டு உதவி புரிகிறது. ஆகவே திசுக்களில் ஏற்படும் அமிலங்கள் உப்புகளாக மாற்றப்படுகின்றன. காரங்களைச் சருச்சிச் சேமிப்பு என்பர்.

சிற்சில சமயங்களில் முக்கியமாக, தீவிர தேக உழைப்புக் காலங்களில் பேசிகள் மும்முரமாகத் தொழில் புரிகின்றன. அவ்வமயம் அவைகளிலிருந்து பெருவாரியாகக் குருதியில் பேசி அமிலம் சலக்கப்படுகிறது. இக்காலங்களில் நீர்வளித் தோய்வு சமநிலை மாறி குறைகிறது. இம்மாறுதல்களால் குருதி அமிலத்துவம் அடைகிறது. குருதி புளிப்படைகிறது. அமிலத்துவம் சில நோய்களிலும் உண்டாகிறது. இதனை அமில நிறைவு குருதி என்பர். நீர்வளித் தோய்வு குறைந்து அமிலமாக மறினால் உயிருக்கு அபாயம். அதிகமாகவும் விரைவாகவும் சுவாசிக்கின்ற காலத்தில் கரியமிலவாயு அதிகமாக வெளித் தள்ளப்படுகிறது. குருதி வசா நீரின் மீண் செயலும் மாறுதல் அடைகிறது. அதாவது குருதி சருச்சி தன்மை அடைகிறது. இதனைச் சருச்சி நிறைவு குருதி என்பர். குருதி அதிக உவர்ப்புத் தன்மை அடைகிறது.

### குருதி உறைதல் (குருதிக் கட்டுதல்)

காலக (நீதுரச)ப் பொருள்களின் ஒரு பிரிவான இழை மஞ்சள் தவளக் காலகப் பொருள் உடலை விட்டு வெளி வந்தவுடன் குருதியை உறைய வைக்கிறது. இழை மஞ்சள் தவளம் சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் தன் பிரத்தியேக குணத்தால் கரையாப் பொருளாக மாறுகிறது. இயற்கையிலேயே இக்கரையாப் பொருளாக மாறும் குணத்தைத் தந்திராவிட்டால் பிராணிகள் நிம்மதியாக வாழ முடியாது. சிறு காயம் ஏற்பட்டாலும் சிறு நாடிகள் அறுப்பட்டாலும்

இழை மஞ்சள் தவளம் குருதியை உறைய வைத்துக் கட்டியாக்கி வெளியே மேலும் குருதியைச் செலவிடாமல் தடுத்துக் காக்கிறது. இவ்வாறு குருதி உறைந்துவிடும் என்று அறிவியலறிஞர்களால் கூறப் பட்டாலும் அதற்கு மூல காரணம் என்னவென்று இன்னும் சரியாகத் தெளிய வைக்கவில்லை. குருதியை உறைய வைக்கும் சக்தியைக் குருதியிலிருக்கும் 'புளிதசநெதி' என்ற பொருளுக்கு ஊக்குவிக்கும் வல்லமையுள்ளது என்று கூறப்பட்டுள்ளது. இவ்வகையானவைகளைச் சித்தர்கள் 'முப்பூ' என்று பொதுப்படையாகப் பகர்ந்தனர். ஆகவே குருதியை உறைய வைக்காமல் பாதுகாக்கப்படும் முப்பூவைக் 'குருதி முப்பூ" எனலாம். இம் முப்பூக்கள் அபரியாப்த ஓரறிவு அருவுருப் பொருளாகும். இது தன் சுய நிலையிலிருக்கும் போது குருதி உறைவதில்லை ஆனால் குருதியிலுள்ள புளிதசவிலத்தில் தோன்றும் புளிதச நொதி ஊக்கவி குருதி முப்பூவைப் புளிதச நொதியாக ஆக்குகிறது. இந்நொதியைப் பரியாப்த ஓரறிவு அருவுருப் பொருள் என்பர். புளிதச நொதி குருதியிலுள்ள இழை மஞ்சள் தவளத்தை இழைபுளிதச கட்டியாக மாற்றுகிறது. இழை புளிதசக் கட்டி கடின மானதும் கரையாததுமாகும். குருதி வெளிவந்ததும் நெர்திப்பிக்கப் பட்டு உறையும் தன்மையைக் "குருதி உறைதல்" என்று கூறுவர். இதனைக் குருதிக் கட்டு அல்லது குருதிக் கட்டி என்றும் கூறுவர். மேலும் இந்நொதிப்பு நடக்க சுண்ண இம்மிகளும் அவசியம் தேவைப்படுகின்றன. ஆகவே குருதி உறைவதற்கு (1) குருதி முப்பூ, (2) இழை மஞ்சள் தவளம், (3) புளிதசவிலம், செவ்விலம், வெண் விலம், (4) சுண்ண இம்மி ஆகியவைகள் உடனிருந்து தொழில் புரிகின்றன. சிலருக்குக் குருதி கட்டுவதில்லை அல்லது உறைவதில்லை என்பதைக் காண்கிறோம். ஏனென்றால் அவர்களின் குருதியில் "குருதி முப்பூ" அளவல் குறைவுற்றோ அல்லது சக்தியில்லாமலோ, இருக்கும் என்று அனுமானிக்கப்படுகிறது.

ஆராயுமிடத்து 'குருதி முப்பூ' குருதி உறைதலுக்கு முதற் காரணமாயும் புளிதசவிலம் நிமித்தம் காரணமாயும் மற்ற சுண்ணம் போன்றவைகள் துணைக் காரணமாயும் இருக்கின்றன. குருதி கட்டாமல் இருப்பதற்கு ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. குருதி உறை தலுக்கான துணைக் காரணங்களை அகற்றும்படியான பொருளைச் கண்டனர். எவ்வாறெனறால், அட்டை குருதியை உறிஞ்சும் போது குருதி கட்டுவதில்லை. அட்டை கடித்த பாகத்திலும் குருதி கட் டாமல் வெளிப்படுகிறது. ஆகவே அட்டையின் தலையிலுள்ள சத்துவைச் சோதனைக்குள்ளாக்கினர். எனவே அட்டை சத்து குருதி யைக் கட்டியாக்குவதில்லை. கல்லீரலின் சத்துக்களும் குருதி உறை தலைத் தடுக்கின்றன என்று ஆராயப்பட்டுள்ளது. ஆகவே, திசுக் களிலிருந்தும் முப்பூக்கள் தோன்றுகின்றன. அவை திசு முப்பூக்க ளெனப்படும். திசுமுப்பூக்களில் ஒரு வகையானது தான் புளிதச நொதி ஊக்குவியாகும். பின் சொன்னது திசுக்கள் புளிதசவிலம், செவ்விலம், வெண்விலம் ஆகியவைகள் காயமுற்ற போதும் சிதை வுற்ற போதும் தோன்றுகின்றன. குருதி நாடிகளின் குழல் உள் படைச் சுவர் வழுவழுப்பாகவும் மினுமினுப்பாகவுமிருக்கிறது. நாடி

உள்படைச் சுவர் நோயாலோ காயத்தாலோ மாறுபட்டால் திசு முப்பூக்கள் தோன்றி குருதி முப்பூவைப் புளிதச நொதியாக மாற்றுகிறது. அதனால் குருதி உறைகிறது. இவ்வாறு கார் குருதி நாளங்களில் குருதி உறைந்து புளிதசக் கட்டி ஏற்பட்டு மரணத்தைச் சம்பவிக்கும்;

**குருதியின் காலகப் பொருள்கள் புரோத அல்லது நீதுருசப் பொருள்கள்.**

குருதி வசா நீரில் ஏழு முதல் எட்டு விழுக்காடு வரையில் காலகப் பொருட்கள் அடங்கிக் கிடக்கின்றன. குருதி ஏராளமான காலக இம்மிகள அடங்கிய திசுவாகத் தோன்றுகிறது. அவைகள் இரண்டு பிரிவில் அடங்கும். ஒவ்வொன்றும் தம்முள் குணங்களில் வேறுபடுகின்றன. அவைகள்:—

(1) வெண் தவளங்கள்.

(2) செந்தவளங்கள்.

குருதி வசா நீரின் காலக இம்மிகள் அமிலத்துவம், தாரகத்துவம் என்று இரண்டு குணங்களை ஒருங்கே பொருந்தியிருக்கின்றன. இக் குணச் சிறப்பினால் குருதியில் ஏனைய அமிலங்களும் தாரகங்களும் வந்து கலந்த காலத்து காலக இம்மிகள் காரசார சம நிலையை ஏற்படுத்துகின்றன.

ஆகவே குருதியின் கார சக்தி காலக இம்மிகளின் மொத்தத் தொகுப்பைப் பொருந்தி இருக்கிறது. காலக கார சக்தி நீரைக் குருதியிலிருந்து திசுவுக்கும், திசுவிலிருந்து குருதிக்கும் செல்ல காரணப் பொருளாக இருக்கிறது.

இன்னாள் வரையில் குருதி வசா நீரின் காலகப் பொருள்கள் புரோத வளர்சிதை மாற்றங்களில் நேர்முகமாகப் பங்கு கொள்கின்றன வென்று கருதப்பட்டன. ஆனால் இயற்கையிலேயே குருதி புரோதங்கள் அதிவிரைவில் மற்ற திசுக்களைவிட புதுப்பிக்கப்படுகின்றன. எவ்வளவுக்கெவ்வளவு உட்கொள்ளப்படுகிறதோ அவ்வளவுக்குமேல் தீவிரமாகக் குருதியிலேயே உண்டாக்கப்படுகின்றன. ஆகையினாலே, புரோத சம நிலைத் திட்டத்திற்குக் குருதி வசாநீரை உட்செலுத்தினால் போதுமானது. இதனாலன்றோ சில நோய்களுக்கு உணவு உட்கொள்ள முடியாத காலங்களில் குருதி வசாநீர் உட்செலுத்தப்படுகிறது. எனவே குருதி வசா நீரின் காலகப் பொருள்கள் மிக அளவில் குறைந்த காலத்து குருதி வசா நீரை உட்செலுத்தி ஈடு செய்யலாம்.

தற்காலம், அறுவை பரிகாரத்தில் இழந்த குருதிக்கு ஈடு செய்ய குருதி வசா நீர் காலகப் பொருள்களை உட்செலுத்தி ஈடு செய்கிறார்கள்.

குருதி வசா நீர் புரோதங்கள் முக்கியமாகத் திசுக்கள் தாபிதமுற்ற காலங்களிலும் சஞ்சார நோய் காலங்களிலும் உடலைக் காப்பாற்றுகின்றன.

சஞ்சார நோய்களில் நஞ்சுப் பாசிகள் திசுக்களினூடே நுழைந்த பொழுது குருதி வசா நீரில் அவ்வவ் நஞ்சுப் பாசிகளுக்கேற்ப எதிரது காக்கும் புரோதப் பொருள்கள் உற்பத்திச் செய்யப்படுகின்றன. இந்த இயற்கை நியதியைக் கொண்டு தற்கால உயிரியல் அறிவியலறிஞர்கள் மனிதனுக்கு எதிரது காத்தல் சக்தி அமைந்திருக்கிறதா? அல்லது நஞ்சுகள் உட்சென்ற காலத்து எதிர்த்துக் காத்தற்கு வேண்டிய தற்காப்புச் சக்தி ஏற்படுகிறதா அல்லது குறைந்திருக்கிறதா? என்பதைக் கணிக்கிருர்கள். ஆகவே, உடலில் அன்னிய புரோதப் பொருள்கள் சீரணப் பாதையில் செல்லாமல் வேறு வழியாகத் திசுக்களுக்கு நேரிடையாகச் சென்றால் குருதி வசா நீரில் புதியதொரு காலக எதிர்த்துக் காக்கும் பொருள்கள் உடனே உண்டாகின்றன. சில சமயங்களில் உடலில் உட்சென்ற நஞ்சுப் பாசிகள் கழித்த நஞ்சுப் பொருள்களை முறித்து நன்மையை உண்டாக்குகின்றன. இவ்வாறு உண்டாக்கும் எதிர்த்து காத்தல் பொருளைத் தற்காப்பு எதிரது நஞ்சுப் பொருள் என்பர்.

எதிரது காக்கும் காலகப் பொருள் சில சமயம் நஞ்சுகளையோ நஞ்சுப் பாகங்களையோ நெருங்கிக் குவித்து உறைந்துவிட செய்யும். அவைகளை (நெருங்கிக் குவிக்கும்) எதிரது குவிக்கும் காலகப் பொருள்கள் என்பர். சிலவேளை நஞ்சுகளைக் கரைத்து அழித்துவிடும். அவைகளைக் கரைக்கும் எதிரது காலகப் பொருள்கள் என்பர். சில சமயம் கண்டலும் கரைசலுமாக்கிவிடும். அவைகளை அதகமணம் எதிரது காலகப் பொருள் என்பர். குருதியில் தற்காப்புக்காக எதிரது காக்கும் காலகப் பொருள் தோன்றினாலும் நரம்பு மண்டலத்தின் விசைதான் அவைகளைத் தோற்றுவித்ததற்குக் காரணம் என்று கருதப்படுகிறது.

## குருதி விலங்கள்

**செவ்விலங்கள்.—** சின்னஞ்சிறு பிராணிகளாகிய செவ்விலங்களின் மத்திமத்தில் விலசகத்தை (மீன், பாம்பு, பறைவகள்) பெற்றிருக்கின்றன. சாதாரணமாக, சுக தேகிகளில் மனித இனத்திற்கும் பெரிய விலங்கினங்களுக்கும் செவ்விலத்திற்கு விலசகம் இல்லை.

செவ்விலங்கள் வட்ட வடிவமுள்ளவை. மத்தியில் மெல்லியதாகவும் இருபுறமும் குவிந்தும் ஓரத்தில் தடித்தும் இருக்கும். இவை ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு அடுக்கடுக்காக இருக்கும். ஒவ்வொரு செவ்விலங்களும் வெவ்வேறு பிராணிகளில் வித்தியாசப்படுகின்றன. மனித செவ்விலங்கள் மெதுவாகவும், இசிவுள்ளதாகவும் உள்ளன. இது ஒரு நெசவுத் தாதுவை மெல்லிய சவ்வினால் போர்க்கப்பட்ட விலமாகும். நெசவுப் பதார்த்தத்தில் "அயசெந்தவளம்" என்ற இம்மிகள் அடங்கியுள்ளன. இதில் அய சத்தும் செந்தவளம் என்ற புரோதப் பொருளும் சேர்ந்திருக்கின்றன. ஒரு கன மி.மீ. குருதியில் 5,000,000 செவ்விலங்கள் இருக்கின்றன எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இவைகள் ஈரல், பிளிகை, வியூபாவரகத்திசு, கொழுப்பு (என்பு மூளை) ஆகியவைகளிலிருந்து உற்பத்தியாகின்றன. உற்பத்தியாகின்ற காலத்தில் செவ்விலத்தில் விலசகம் உண்டு. குருதியில் கலக்குமுன் விலசகத்தை இழந்துவிடுகிறது.

ஆகையினால் அவைகளின் உயிர் உறக்கத்திலாழ்ந்துவிடுகிறது. அதனுடைய வாழ்க்கை சிறிது காலம்தான். தனக்கென்ற சுய தொழில் கிடையாது. அவைகள் அழிந்தபொழுதும் பழுதுபார்க்க முடியாது. அவைகளுக்கு இனப் பெருக்கமில்லை. அவைகள் ஈரல் வியூபாவரகத்திசு பிள்ளை போன்றவைகளில் மடிகின்றன.

**செவ்விலம் எண்ணிக்கை.**—செவ்விலம் ஆண்களுக்கு 5,000,000 பெண்களுக்கும் 4,500,000 இருக்கின்றன. இவ் வெண்ணிக்கையினால் செவ்விலங்கள் பெரியதொரு பரப்பை ஏற்படுத்துகின்றன. இந்தப் பரந்த இடத்தில் பிராணவாயும் கரியமில வாயும் சரம்புரிகின்றன.

செவ்விலங்களின் எண்ணிக்கை வெவ்வேறு சுகர்ணகிரிகை நிலைகளுக் குத் தக்கவாறு மாறும். சில உறுப்புகள் (பிளீகை, கல்லீரல், தோல்) "குறுதித் தொட்டி"களாக விளங்கா நிற்கின்றன. செவ்விலங்களை நிறுத்தி, சேமித்து வைப்பதும் தக்க காலத்தில் குருதியில் திரும்ப அனுப்புவதுமான செயலை நரம்பு மண்டலங்கள் செயல்புரிகின்றன. பேசிகள் அதிக தீவிரமாக தொழிற்பட்ட பிறகு பார்த்தால் குருதியில் செவ்விலங்கள் மிகுந்து காணப்படும். செவ்விலங்களின் எண்ணிக்கை அளவின் ஏற்றத் தாழ்வு அவைகளின் உற்பத்தியாகும். வேகத்தைப் பொருந்தியும் அவைகள் மடியும் தார தன்மைகளைப் பொருந்தியும் இருக்கும். செவ்விலங்கள் என்பு மூளையில் உற்பத்தியாகின்றன. குருதியில் செவ்விலம் அதிக தீவிரமாகத் தேவைப்பட்டால் அதிக விரைவில் என்பு மூளை செவ்வி லங்களை உற்பத்தி செய்யும். இவ்வாறு அதிவிரைவில் உற்பத்தியாகிவரும் செவ்விலங்களின் விலகங்கள் காணப்படும். விலசகமுள்ள செவ்விலங்கள காணப்பட்டால் குருதியில் செவ்விலங்களின் எண்ணிக்கை பாதிக்கப்பட்டி ருக்கிறது என்று கருதவேண்டும். செவ்விலங்கள் குறைந்த நிலைக்குச் செவ்விலம் குறைவால் ஏற்பட்ட வெளுட்டு (பாண்டு) நோய் எனப்படும் கய நோயிலும், புற்று நோய்களிலும் வெளுட்பு நோய் ஏற்படும். எண்ணிக்கையில் அதிகமானால் செவ்வில் அதிகரிப்பு எனப்படும்.

## குருதித் தொகுப்புகள்.

சக மனிதனது குருதியை மற்றொரு மனிதனது குருதியோடு கலந்த காலத்து, கலவையின் செவ்விலங்கள் நெருங்கிக் குவியச் செய்கிறது. ஒரு மனிதனுடைய குருதியிலுள்ள செவ்விலங்கள் பிறிதொரு பிராணிகளின் குருதியிலுள்ள செவ்விலங்களைத் தன் குருதியில் பரவ விடுவதில்லை. இச் செயலை, "குருதிட் பொருத்த மின்மை" என்பர்.

சில சோதனைகளில் செவ்விலங்கள் குருதியில் தடையின்றி பரவின. அவை உறையவில்லை. செவ்விலங்கள் பரவுவதைக் குருதி வசாநீர் தடை செய்யவில்லை. இச்சோதனையில் இருவேறு மனிதர்களது குருதி பொருத்தமானதாக இருக்கிறது. இதற்கு, குருதிப் பொருத்தம் என்று பெயர்.

இச்சோதனையைக் கொண்டு, குருதித் தொகுப்பை நான்கு வகையாகப் பிரித்துள்ளனர்.

**முதல் வகை:**—ஒரே வகையைச் சேர்ந்த குருதி வெவ்வேறு மனிதர்களிடமிருந்து எடுக்கப்பட்டாலும் பொருத்தமானவையாக இருக்கும். ஒரே வகையைச் சேர்ந்த ஒரு மனிதனுடைய குருதியை ஒன்றோடொன்று கலந்தால் அவற்றில் செவ்விலங்கள் உறையவில்லை. முதல் வகையைச் சேர்ந்த குருதியில் செவ்விலங்கள் மற்றும் இருவகையினரின் குருதியில் உறைவதில்லை. ஆகவே, முதல் வகை குருதி உடையவர் "யாருக்கும் அளிப்போர்" எனப்படும்.

**இரண்டாம் வகை.**—இரண்டாவது வகை குருதி உடையவர் முதல் வகை குருதியையோ தன் வகை குருதியையோ பெறலாம்.

**மூன்றாம் வகை.**—மூன்றாம் வகை குருதியை உடையவர் முதலாம் வகை குருதியையோ தன் வகை குருதியையோ பெறலாம். இம்முறைகளின்றி வேறு முறைகளில் குருதி கலந்தால் செவ்விலங்கள் உறைந்துவிடும்.

நான்காவது வகை குருதி வசா நீர் எந்த வகை குருதியின் செவ்விலங்களையும் உறைய வைப்பதில்லை.

நானகாவது வகை குருதி உடையவர்கள் எந்த வகை குருதியையும் உட்பெறலாம். அவர்களுக்குச் "சகல குருதி பெறுவோர்" என்று பெயர்.

| பெறுவோர். (1) | முதல் வகை. (2) | இரண்டாம் வகை (எ). (3) | மூன்றாம் வகை (பி). (4) | நான்காம் வகை (எ, பி). (5) |
|---|---|---|---|---|
| முதல் வகையினர் (எபி) | .. | † | † | .. |
| இரண்டாம் வகையினர் (பி) | .. | .. | † | .. |
| மூன்றும் வகையினர் (எ) | .. | † | .. | .. |
| நான்காம் வகையினர் (0) | .. | .. | .. | .. |

குருதி செலுத்தலால செவ்விலங்கள் நெருங்கிக் குவிதலால் அழிகின்றன. நெருங்கிக் குவிந்த பின் உட்செலுத்தப்பட்ட பொருத்தமற்ற குருதியில் உள்ள செவ்விலங்கள் கரையத் தொடங்குகின்றன. நெருங்கிக் குவிந்த செவ்விலங்களில் உருண்டைகள் குருதிக குழாய்களை அடைக்கின்றன. கரைந்த செவ்விலங்கள் குருதியில் நச்சுவைத் தோற்றுவிக்கின்றன. அதனால் வாந்தி, மயக்கம், காய்ச்சல் முதலியன உண்டாகின்றன. இவற்றிற்குக் குருதி பெற்றதின் குழப்பங்கள் என்று பெயர். இக் குழப்பங்களால் மரணம் ஏற்படும்.

செவ்வணு உறைதலின் வேகம் செவ்வணுக்கள் உறைதலின் கால் அளவில் வித்தியாசம ஏற்படுகிறது. சுக மனிதனின செவ்வணுக்கள் ஒரு மணிக்கு 4 முதல் 10 மி. மீ.இல் உறைகின்றன.

**செவ்விலம் வண்டல் வேகம்**—குருதி உறைதலைத் தடை செய்யும் பொருள்கள் குருதியில் சேர்ந்தால் செவ்விலங்கள் கண்டலும் கடைச்சலு மாகக் குருதிச்சா நீரினின்று பிரிக்கப்படுகின்றன. இவ்வாறாகக் குருதி விலங்கள் வண்டலாகின்ற வேகத்தைக் கவனித்து சில நோய்களைக் கணிக்க உதவுகிறது. செவ்விலம் வண்டல் வேகம் மாதர் சூல் கொண்ட காலங்களிலும், கயநோய், தாபிதங்களிலும் அதிகரிக்கிறது. வண்டல் வேகத்தில் வித்தியாசங்கள் ஏன் ஏற்படுவதென்றால் செவ்விலங்கள் ஒரே தரவேகத்தில் நெருங்கிக் குவியச் செய்கிறதில்லை. ஆரம்பத்தில் செவ்விலங்கள் கட்டுண்டு உருளையான திரளைகளாகின்றன. சற்று நேரம் கழித்து வரைவில் கண்டலும் கரைச்சலுமாகின்றன. ஆகவே நெருங்கிக் குவிதலின் வேகம் குருதிவசா நீரின் இருணதுருவப்புரோதப் பொருள்களின வித்தியாசங்களுக்கு ஏற்ப வித்தியாசப்படுகின்றன.

### அயசெந்தவளம்

செவ்விலங்களுக்குள் பெரும்பான்மையாக உள்ளடங்கிய எடையுள்ள பொருள் 'அயசெந்தவளம்' என்னும் குருதி நிறப்புள்ளிகள் அல்லது இம்மிகள் இருக்கின்றன. இதில் செந்தவளம் ஓர் வகையான ஒளிமய மான காலகப் பொருளாகும். அயம் என்னும் சத்து மற்றொன்று. அயசெந்தவளம் நீரில் சுலபமாகக் கரையும். இது வெகு சீக்கிரத்தில் வாயுக்களில் சிறப்பாகப் பிராணவாயுடன் கலக்கும். அவ்வாறு கலந்த அயசெந்தவளத்தைப் "பிராண அயசெந்தவளம்" என்பர். இவ்விதம் நடந்த மீண்செயலை மறுபடியும் முன்னிருநத நிலைக்கு மாற்றத் தக்கது. எனவே அயசெந்தவளம் பிராணவாயுவைச் சுமந்து செல்லு வதற்குக் கருவியாகிறது.

**வெண்விலங்கள்.**—குருதியில் செவ்விலங்களை விட வெண்விலங்கள் மிகவும் குறைவே. ஒரு கன மி. மீ. குருதியில் 5,000 முதல் 8,000 வெண்விலங்கள் உள்ளன.

வெண்விலங்கள் பிளிகத்திலும் என்பு மச்சையிலும் உற்பத்தியா கின்றன. இவைகள் அதிகநாள் உயிர் வாழ்வதில்லை. சில நாட்களுக்குள் அழிந்துவிடுகின்றன. தற்காலிகமாக அவைகளின் எண்ணிக்கை குருதியில் அதிகப்பட்டால் அதிவெண் விலங்கள் எனப்படும். சாப்பிட்ட பிறகும், தேக உழைப்பிற்குப் பிறகும். தீவிரத் தாபிதங்களுக்குப் பிறகும் அதிவெண்விலங்கள் உடலில் தோன்றும். எண்ணிக்கையில் அதிகப்படுத்துவது கோர்த்தகசேரு பகுதி நரம்பு மண்டலத்தின் ஆதிக் கத்தில் அடங்கியது. சில நோய்களில் எண்ணிக்கையில் தீவிரமாக அதிகரித்தே காணும். அதனைத் தவிர வெண்வில் நோய் என்பர். சில நோய்களில் உதாரணமாக, குடற்மாசயனி சுரத்தில் வெண்வில் எண்ணிக்கை குறைந்து காணும் அதனைக் குறைவெண்விலம் என்பர்.

வெண்விலங்களின் மொத்த எண்ணிக்கை குறைந்தோ அதிகரித்தோ காணுவதோடல்லாமல் வெண்விலங்களின் வகைகளிலும் அநேகவித நோய்களில் எண்ணிக்கையில் விகற்பப்படுகின்றன. இவ்விகற்ப எண்ணிக்கை யினால் நோய்களைப் பொதுவாக நிதானிப்பதற்கு ஏதுவாகிறது.

**வகை.**—(1) டன்மை விலசக வெண்விலம் (2) ஏக விலசக வெண்விலம் (3) நாகப்பட விலசக வெண்விலம் (4) வபா வெண்விலம் (5) பூத வெண்விலம்.

**வெண்விலங்களின் தொழில்.**—வெண்விலங்கள் தங்களுக்குள் பல நொதிகளைப் பெற்றுள்ளன. இந்நொதிகள் திசுக்களிலும் குருதியிலும், வந்தைகளும் அன்னியப் பொருள்களும் நுழைந்த பொழுது ஏற்பட்ட நஞ்சவின்று காப்பாற்றுகின்றன. நொதிகள் நுழைந்த அன்னியப் பொருள்களைப் பின்னப்படுத்துகின்றன. திசுக்கள் தாபிதமடைந்து அழியும்போது அவைகளை வெண்விலங்கள் விழுங்கிச் சீரணித்து விடுகின்றன.

செவ்விலங்களைப் போலல்லாமல் இவைகள் தானாகவே ஊர்ந்து செல்லும் குணம் வாய்ந்தன. தந்துகிகளின் சுவரண்டை ஒட்டிக் கொண்டு மெல்ல மெல்ல சுவரின் ஆவரகவிலங்களின் இடைவெளி யினும் புகுந்து வெளிப்படுகின்றன. எவ்விதமேனும் வந்தைகளோ நச்சுப் பாசிகளோ திசுக்களில் சென்றடைந்ததும் வெண்விலங்கள் தசிரங்களிலிருந்து உடனே வெளிப்பட்டு அவ்விடத்திற்குக் கூட்டமாக ஓடி வருகின்றன. சிறிய அளவிலிருந்தால் அவைகளை விழுங்கி, சீரணித்து விடுகின்றன. பெருமளவிலிருந்தால் வெண்விலங்களின் நொதிகளால் பின்னப்படுத்தி நச்சுத் தன்மையை அழிக்கின்றன. இவ்வாறே எல்லாவித அன்னிய நுழைவுப் பொருள்களைத் தன்னுள் சிறைப்படுத்தி இறையாக்கிச் சீரணித்து அழிக்கின்றன. வந்தைகளையும் நஞ்சிப் பாசிகளையும் சீரணித்து அழிக்கப்படுவதால் உடலில் ஏற்படும் சஞ்சார நோய்களைத் தவிர்க்கப்படுகின்றன. இவைகளன்றியும் பிளிகை விலங்கள், ஈரல்விலங்கள். விரூபாவரகவில திசுக்கள் வெண்விலங்களின் குணங்களைப் பெற்றுள்ளன. நஞ்சுப் பொருட்கள் பெருமளவில் நுழைந்தால வெண்விலங்கள் அவைகளைச் சூழ்ந்து கொண்டு தம் நொதிகளால் அழிக்க முயலுகின்றன. நஞ்சுப் பொருளை அழிக் கின்றபோது அக்கம் பக்கமுள்ள திசுக்களும் பாதிக்கப்படுகின்றன. இவ்வித மீண்செயலினால் சீழ் ஏற்பட்டு 'கட்டி' உண்டாகிறது.

வெண்விலங்கள் காயம் ஏற்பட்ட இடத்திற்கு விரைந்து செல்கின்றன. ஏனென்றால் அழிவுற்ற திசுக்களின்று தனது துருவதமுற்ற இரசா யனப் பொருள் கழிவுறுகின்றபடியால் அவைகள் வெண்விலங்களைத் தனது துருவ இயக்கத்தால் தன்னிடம் ஈர்க்கின்றன. இதனை இரசாயன ஈர்ப்புச் சக்தி என்பர்.

## குருதிச் சுற்றோட்டம்

இதயம், பரீரிகச் சவ்வால் சுற்றப்பட்டு, சுவாசப் பைகளுக்கு இடையில் கிடக்கிற சங்கு அல்லது தாமரை மொட்டு வடிவமுள்ள அறைகளுள்ள சதையாலான உறுப்பாகும். இதயம் சதையாலான இடைச் சுவரால் நால் இடபாதிகளாகப் பிரிபடும். இவை ஒவ்வொன்றும் மேற், கீழ் அறைகளாகப் பிரிபடும் இதயத்தின் மேலறை சிரவம் என்றும் கீழறை சடரம் என்றும் பெயர் பெறும்.

இதயத்தின் வலப்பக்கம் காரி ரத்தத்துக்குரிய பகுதியாகும் இடப்பக்கம் செவ்வரத்தத்துக்குரிய பகுதியாகும். உடல் முழுவதிலுமுள்ள காரிரத்தம் குகா நாளங்கள், வேட்டநாரணி என்பவைகளின் வழியாக வலது சிரவத்துக்கு வந்து வலது சடரத்தை அடையும். வலச் சடரத்தை அடைந்த குருதி புபபுசநாடி வழியாய் சுவாசாசயத்திற்குச் செல்லும். அங்குப் புப்புச மடங்கலும் சென்று சுத்தமான செங்குருதியாகப் புப்புச நாளங்கள் வழியாக இதயத்தின் இடது சிரவத்துள் சேர்ந்து இடது சடரத்துக்குள் விழும். இடது சடரத்துள் புகுந்த குருதி கண்டறைக்குச் சென்று அதன் பல கிளைகள் வழியாக உடல் முழுவதும் பரவும். இதையே வளர்ந்தவர்களின் குருதிச் சுற்றோட்டம் எனப்படுகிறது.

**நாடி.**—இதயத்திலிருந்து குருதியை வெளியே எடுத்துச் செல்லப்படும் குழல்களுக்கு நாடி எனப்படும். இந்நாடிகள் ஆரம்பத்தில் பருத்தும் கனத்தும் இருக்கும். ஆங்காங்கே இடை இடையில் கிளைகள் விட்டு இதயத்துக்கு வெகுதூரத்தில் சிறுத்து, தந்துகிகளாக மாறுகின்றன.

**தந்துகிகள்.**—செங்குருதிப்பகுதி நாடிகளையும் காரிரத்தப் பகுதி நாளங்களையும் இடையில் நின்று இணைந்திருக்கின்ற சின்னஞ்சிறு குழல்கள் தந்துகிகள் எனப்படும். தந்துகிகளின் சுவருக்கும் திசுக்களுக்கும் இடையே குருதிப் பொருள் பண்டமாற்று நடக்கிறது. வளிப்பண்டமாற்று புப்புசத்தில் நடக்கிறது.

**நாளம்.**—உடலிலிருந்தும் உறுப்புகளிலிருந்தும் குருதியைத் திரும்ப இதயத்தை நோக்கிக் கொண்டு வருகிற குழல்கள் "நாளம்" எனப்படும். இவைகள் ஆரம்பத்தில் சின்னஞ்சிறிய நாளங்களாகக் காணும். இதயத்தை நோக்கி வர வர நேக உப கிளைகள் சேரும்போது நாளம் பருத்துக் காணும். கடைசியில் வலது சிரவத்தில் விழும்.

**தசிரங்கள்.**—நாடிகள் முடிவடைந்து தந்துகிகளாகின்ற பாகமும் தந்துகிகளிலிருந்து சின்னஞ்சிறு நாளங்களாகின்ற பாகமும் தசிரங்கள் எனப்படும். குருதி சுற்றோட்டத்தால் கீழ்க்காணும் பயன்கள் ஏற்படுகின்றன, அவை:—

(1) குருதியிலுள்ள பொருள்களுக்கும் திசுக்களிலுள்ள பொருள்களுக்கும் பண்டமாற்றல்.

(2) குருதியிலுள்ள பொருள்களுக்கும் வெளியில் அக்கம்பக்கங்களிலுள்ள பொருள்களுக்கும் பண்டமாற்றல்.

(3) பண்டமாற்றலில் ஏற்படும் பொருள்களை ஒரு உறுப்பினின்று மற்றொன்றுக்கு எடுத்துச் சேர்ப்பித்தல்.

(4) எல்லா சீவராசிகளில் பிராணவாயுவை வெளியிலிருந்து உடலுக்குள்ளிருக்கும் எல்லா திசுக்களுக்கும் சுமந்து சென்று சேர்ப்பிக்கிறது.

(5) சிறுகுடலிலிருந்து உண்டு செரிமானமான சீவாதாரப் பொருள்களைத் திசுக்களுக்கு நேரிடையாகச் சேர்ப்பித்தல்.

(6) திசுக்களில் வளர்சிதை மாற்றங்களினால் உண்டான மலினங்களையும் விசர்க்கம் செய்தல்.

(7) ஒரு உறுப்பில் தோன்றிய சீவ சத்துக்களை மற்ற தேவைப்படும் உறுப்புகளுக்குச் சேர்ப்பித்தல்.

(8) உடல் காங்கையைச் சம நிலைத்திட்டத்தில் வைத்தல்.

(9) சில சிறப்பான உறுப்புகளுக்குக் குருதிச் சுற்றோட்டமில்லை என்றால் அவைகளின் தொழில்கள் நின்று அடங்கிவிடும். (முக்கியமான உறுப்புகளாகிய மூளை, இதயம், ஈரல், பிருக்கம் ஆகியவைகள்).

(10) குருதிச் சுற்றோட்டத்திற்குத் தடங்கலேற்பட்டு எந்தப் பாகத்திற்குப் போதுமான குருதி சேரவில்லையோ அந்தப் பாகத்தின் திசுக்கள் வன்மை குன்றி நசைந்து அழுகி இறக்கின்றன.

## இதயச் சுருங்கி விரி கிரியை.

இடைவிடாமல் சதாகாலம் குருதியை இரத்தாசயங்களின் மூலமாகப் பாய்ந்து கொண்டிருக்கச் செய்வது இதயத்தின் சுருங்கி விரி கிரியையாகும். ஒவ்வொரு இதயச் சுருங்கலுக்கும் இடது சடரத்திலிருந்து கண்டறைக்கும் வலது சடரத்திலிருந்து புப்புச நாடிக்கும் குருதி தள்ளப்படுகிறது. சடரங்கள் விரியும்போது நான்கு புப்புச நாளங்களிலிருந்து இடது சிரவத்துக்கும் மேல் கீழ் குகா நாளங்களிலிருந்து வலது சிரவத்திற்கும் குருதி விழுகிறது. ஒரு இதயச் சுருங்கலும் அதனை அடுத்த விரிவுக்குமுன்டான காலத்தை "இதயச் சுழற்சி" என்பர். இதயப் பேசிகளின் சுருங்கல் செய்கையை 'இதயச் சுருங்கல்' என்றும் அவைகளின் விரிவை "இதய விரிவு" என்றும் கூறுவர்.

ஒவ்வொரு இதயச் சுழற்சியானது சிரவச் சுருங்கலில் ஆரம்பிக்கிறது. அதனை உடனே அடுத்து சிரவ விரிவுத் தொடர்கிறது. சிரவத்தின் சுருங்கல் முடிந்தவுடனே சடரச் சுருங்கல் ஆரம்பமாகிறது. சடரத்தின் சுருங்கலை அடுத்து அவைகளின் விரிவு தொடர்ந்தாற்போல் நிகழ்கிறது. சடரத்தின் விரிவும் சிரவத்தின் விரிவும் ஒரே தொடர்பாகும்.

**இதயக் கபாடங்கள்** :– இதயத்தில் கபாடங்களிருப்பதால் குருதி ஒரே முகமாகப் பாய்கிறது. அதாவது சிரவத்திலிருந்து சடரத்திற்கும் சடரத்திலிருந்து நாடிகளுக்கும் பாய்கிறது. சிரவ சடரக் கபாடங்கள் சிரவ அறைகளுக்கும் சடர அறைகளுக்குமிடையிலுள்ளன. இடப் பக்கம் திரி கபாடங்களும் வலப் பக்கத்தில் துவிகபாடங்களுமாகின்றன.

இதய விரிவிலும் சிரவச் சுருங்களிலும் சிரவ சடரக் கபாடங்களின் இதழ்கள் கீழ் நோக்கியிருக்கின்றன. ஆனால் இதயச்சுவர்களைத்தொடுவதில்லை. இக் காலத்தில் நாளங்களிலிருந்து குருதிச் சிரவத்தின் மூலமாக சடரத்திற்கு பாய்கிறது.

சடரச்சுருங்கலின் ஆரம்பத்தில் சடரப் பேசிகள் வலுத்து இறுகி, சடர அறையிலுள்ள குருதியை அழுத்துகிறது. இவ் வழுத்தத்தினால் சிரவ சடரக் கபாடங்கள் மூடப்படுகின்றன. இவ்வாறு மூடப்படாவிட்டால் சடரச் சுருங்கலில் குருதி, திரும்ப சிரவத்திற்குச் செல்ல எதுவாகும். மூடப்

படுவதால், குருதி மறுபடியும் சிரவங்களுக்குச் செல்லாது. சடரத்தில் குருதி அழுத்தம் அதிகரிக்கக் குருதி, பிறைக் கபாடங்களைத் திறக்கச் செய்கிறது.

**பிறைக் கபாடங்கள்.**—குருதி சடர அறைகளை விட்டு இடப்பக்கம் கண்டறைக்கு நுழைகின்ற இடத்திலும் வலப்பக்கம் புப்புச நாடிக்கு நுழைகின்ற இடத்திலும் பிறைக் கபாடங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. இக் கபாடங்கள் மும்மூன்றாக சோபிகளைப்போல் அமர்ந்துள்ளன. அவைகளின் வாய்ப்புறங்கள் கண்டறையையும் புப்புச நாடியையும் நோக்கி நிற்கின்றன. கபாட அறைகளுள் குருதி நிரம்பி இருக்கும். கண்டறையிலும் புப்புச நாடியிலும் குருதி அழுத்தமானது சடர அறை குருதி அழுத்தத்தைவிட அதிகமானால் பிறைக் கபாடங்களை அழுத்தி மூடச் செய்கிறது. எனவே, இதய விரிவில் பிறைக் கபாடங்கள் மூடப் பட்டிருக்கின்றன. சடரச் சுருங்கலில் திறக்கப்படுகின்றன. அப்போது சடாரத்திலிருந்து குருதி தள்ளப்படுகிறது.

## இதய சுழற்சி.

**சிரவச் சுருங்கல்.**—இதயச் சுழற்சி நிகழ்ச்சியில் சிரவச் சுருங்கல் ஆரம்பமாகிறது. சிரவ அறையின் அழுத்தம் அதிகரிக்கிறது. சிரவ அறைக்கும் நாளங்களின் வாசல்களுக்கும் இடையில் கபாடங்கள் யாதுமில்லை. ஆனால் நாளவாயிலை வட்டப் பேசிகள் சூழ்ந்திருக்கின்றபடியால் சிரவச் சுருங்கலில் இவைகள் சுருங்குகின்றன. எனவே, குருதி சிரவத்திலிருந்து திரும்ப நாளங்களுக்குப் போவதற்கு வழியில்லை. சிரவச் சுருங்கலைத் தொடர்ந்து சிரவ விரிவு உண்டாகிறது. சிரவ விரிவு சிரவச் சுருங்கல் மறு சுழற்சியில் ஆரம்பிக்கும் வரையில் நீடிக்கிறது.

**சடரச் சுருங்கல்.**—சிரவச் சுருங்கல் முடிந்தவுடனே தொடர்ந்து சடரச் சுருங்கல் ஆரம்பமாகிறது. இரண்டு சடரமும் ஒரே காலத்தில் சுருங்கி விரிகின்றன. ஆகவே இரண்டிலும் ஒரே தரமான நிகழ்ச்சிகள் ஏற்படுகின்றன. அவைகள்—

(1) விறைப்புக் காலம், (2) வெளித் தள்ளும் காலம், (3) மீட்சிக் காலம் என்பனவாம்.

**(1) விறைப்புக் காலம்.**—சடரப் பேசிகள் சுருங்க, சடர அறையிலுள்ள குருதி அழுத்தம் அதிகரிக்கிறது. இக் குருதி அழுத்தம் சடரக் குருதி அழுத்தத்தை விட மிகுகிறது. ஆகையால் சிரவச் சடரக் கபாடங்கள் சடரச் சுருங்கலின் ஆரம்பத்திலேயே மூடப்படுகின்றன. பிறைக்கபாடங்கள் சற்று, பின்னே திறக்கப்படுகின்றன. கண்டறையின் குருதி அழுத்தத்தை விட சடரக் குருதி அழுத்தம் மிகுசிறவரையில் திறக்கப்படாது. ஆகையால் விறைப்புக் காலத்தில் இவ்விரண்டு கபாடங்கள் மூடப்பட்டிருக்கின்றன. எனவே சடர அறை மூடின அறையாக விளங்கும். மூடப்பட்டிருக்கும் அறையின் குருதியைச் சுருக்க முடியாததாகையாலும் சடரப் பேசிகளும் சிறியதாகி சுருங்க முடியாததாகையாலும் சடரப்பேசிகள் சுருங்கி இறுகுவதை "விறைப்பு" என்று கூறப்பட்டுள்ளது. இதனை விறைப்புக் காலம் (0.05 விநாடி) என்பர்.

(2) **வெளித்தள்ளும் காலம்**.—கண்டறையின் அழுத்தத்தை விட சடர அறை அழுத்தம் அதிகாத்தவுடனே பிறைக் கபாடங்கள் திறக்கின்றன. குருதி சடர அறையினின்று கண்டறைக்குள் தள்ளப்படுகிறது. இதனை வெளித் தள்ளும் காலம் (0.25) விநாடி என்பர்.

சடர அறையில் குருதி அழுத்தம் 130-150 மி.மீ. உயர்ந்ததும் குருதி இடது சடரத்திலிருந்து கண்டறைக்கும் வலது சடரத்திலிருந்து புப்புச நாடிகளுக்கும் வெளித்தள்ளப்படும்.

(3) **மீட்சிக் காலம்**.—கண்டறைக் கபாடம் திறந்து 0.25—0.3 விநாடி களுக்குப் பிறகு சடா அறை சுருங்கல் குறைகிறது. சடா அறைபேசிகளும் பலவீனமடைகிறது. சடர விரிவு கால ஆரம்பத்திலேயே கண்டறைக் கபாடம் மூடுகிறது. ஏனென்றால் கண்டறையின் குருதி அழுத்தத்தை விட சடர அறை குருதி அழுத்தம் குறைகிறது. 0.08 விநாடிக்குக் கண்டறைக் கபாடமும் சிரவச் சடரக் கபாடமும் மூடப்பட்டிருக்கின்றன. இந்த இடைவேளையில் மீட்சிக்குச் சரியான காலமாகிறது. இக் காலத்தில் கண்டறையின் குருதி அழுத்தமும் சடர அறை குருதி அழுத்தமும் சிரவ அறை குருதி அழுத்தத்தைவிட குறைகின்றன. எனவே, சிரவச் சடரக் கபாடம் திறக்கப்படுகிறது. இதய விரிவு மறுசிரவச் சுருங்கல் ஆரம்பமாகும் வரைக்கும் நடக்கிறது.

## இதய வொலிகள்

ஒவ்வொரு இதயச் சுழற்சியில் தனித்தனியாக இரண்டு ஒலிகள் கேட்கப்படுகின்றன. நிசாமனத்தால் கூர்ந்து கவனித்தால் இதய வொலிகள் ஒவ்வொரு இதயச் சுழற்சிக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன என்பதை அறிவிக்கின்றன.

முதலில் மென்மையானதும் நீண்டதுமான ஒலி கேட்கப்படும் அதனை முதல் இதயவொலி என்பர். சிறு நேர இடைவேளைக்குப் பிறகு உரத்ததும் குறுகியதுமான ஒலி கேட்கப்படும். இதனை இரண்டாவது இதயவொலி என்பர். பிறகு நீண்ட இடைவேளையுண்டு. இவ்வாறுகத் திரும்பத் திரும்ப ஒலிகள் கேட்கப்படும்.

**ஒலிகள் உண்டாக காரணங்கள்**.—முதல் ஒலி சடரச் சுருங்கலின் ஆரம்பத்தில் உண்டாகி விறைப்புக் காலம், வெளித்தள்ளும் காலம் ஆகிய இரண்டு நிகழ்ச்சி முழுவதிலும் சுமார் 0.12 விநாடி நீடிக்கிறது. ஆகவே இதனைச் சுருங்கல் ஒலி என்பர்.

**இரண்டாம் ஒலி**.—பிறைக் கபாடம் மூடுகின்ற தருணத்தில் உண்டாகி இதய விரிவு காலம் வரைக்கும் நீடிக்கும். இது விரிவு வொலி எனப் படும்.

முதல் ஒலியானது சிரவச்சுருங்கல், சிரவச் சடரக் கபாடங்கல் மூடுதல்; சடர அறை பேசிகளின் இறுதி விரைத்தல், சடர அறை குருதி அழுத் தம் ஆகியவைகளால் உண்டாகக் காரணமாகின்ற எனக் கருதப் படுகிறது.

இரண்டாம் ஒலியானது பிறைக் கபாடங்கள் மூடலினால் உண்டாகின்றது எனக் கருதப்படுகிறது.

**ஒலிகள் கேட்கப்படும் இடம்.**—முதல் இதயவொலிகள் சிரவச் சடரக் கபாடங்கள் பொருத்தியுள்ள இடங்களில் கேட்கப்படும். இரண்டாம் ஒலி பிறைக் கபாடம் பொருத்தியுள்ள இடங்களில் கேட்கப்படும். ஆரம்பிக்கும் இடத்திலிருந்து ஒரே சீராக நெஞ்சறையின் உறுப்புக்களும் திசுக்களும் ஒலியைப் பரவ விடுவதில்லை.

**இதயத் துடிப்பு.**—சடரச் சுருங்கல் காலத்தில் இதயம் நெஞ்சறையில் தன் நிலையை விட்டு மாறுதலடைகிறது. அதன் அடி தளருகிறது குருதி நாளநாடிகள் நீளுகின்றன. இதயம் தடித்தும் கனத்தும் விரைப்புறுகிறது. விரிவு காலத்தில் இதய நுனி ஒருவித மாறுதலடைவ தில்லை. ஆனால் இதயம் முழுவதுமே இடமிருந்து வலமாகத் திருகி இடது சுடரம் நெஞ்சறையை அணைந்து நிற்கிறது. இவ்வாறு நெஞ்சறையை அணைவதே இதயத் துடிப்பாக ஐந்தும் இடது இடைப்புழு வெளியில் நடு செத்துருகோட்டின் கிட்டமானத்திற்கு அமர்த்தலினல் உணரலாம்.

இதயம் துடிக்கும் வேகத்தையும் ஒழுங்கையும் பல வழிகளில் ஆராயலாம். அதாவது இதயச் சுருங்கல்கள் ஒன்றையொன்று தொடர்ந்து ஒழுங்காக நடைபெறுகின்றனவா இல்லையா என்று காணலாம். இதயச் சுருங்களின் எண்ணிக்கையை இதயத்தின்மீது கை வைத்து அதை உணருவதன் மூலமாகவும், மார்பைச் சோதனை செய்வதன் மூலமாகவும் கணக்கிடலாம். பொதுவாக மருத்துவர்கள் ஒரு நோயாளியின் நாடித் துடிப்பைக் கவனித்து அதன் மூலம் நாடித் துடிப்பின் வேகம், தசிரங் களில் எவ்வளவு குருதி பாய்கிறது, மற்றும் அதன் சுவர்களின் விரைப்பு ஆகியவற்றைக் காண்கிறார்கள்.,

விரைத்துத் துடித்தல், ஒழுங்கற்ற முறையில் இதயத் துடிப்பு ஏற்படுதல், அதைத் தொடர்ந்து நீண்ட பொழுது ஓய்வு, இவைதான் அடிக்கடி இதயத்தில் ஏற்படும் கோளாறுகள். அந்த நோயாளிகளுக்கு வழக்கத்திற்கு மாறாக இதயம் மார்பில் அழுத்துவது போன்ற உணர்வு தோன்றும். அதைத் தொடர்ந்து இதயம் நின்று விடுட்டதைப் போன்ற உணர்ச்சியும் தோன்றும். இது சாதாரணமாகக் காணப்படும் ஒரு இதய நோயாகும்.

இதயத் தசைகள் வேலை செய்து கொண்டிருக்கும் போது ஏற்படும் மின் நிகழ்ச்சியைப் பரிசீலித்தால் (கிளர்ந்தெழும் திசுக்கள் எல்லாவற் றிலும்) மின்சக்தி உண்டு. உதாரணமாக நரம்புத்திசு இதயப் பேசி அது இதயத்தின் பல்வேறு பகுதிகளின் வேலையை மிகத் துல்லியமாக காட்டிவிடும். தூண்டப்படும் இதயத்தின் தசைகள் எதிர் மின்சாரம் கொண்டவை. ஓய்வு நிலையில் உள்ள இதயத் தசைகள் நேர் மின்சாரம் கொண்டவை. உழைக்கும் தசைகளுக்கும் ஓய்வு நிலையில் உள்ள தசைகளுக்கும் மின்னிலை வேறுபாடு இருப்பதால் மின் ஓட்டம் ஏற்படு கிறது. அம்மின் ஓட்டத்தை "இயங்குமின் ஓட்டம்" எனலாம். தூண்டுதல் நிகழ்ச்சி எல்லாப் பகுதிகளுக்கும் பரவுகிறது. இதனால் இதயத்தின் பல பாகங்களும் மாறிமாறி நேர் அல்லது எதிர் மின்சாரம் தாங்கிய பகுதிகளாக ஆகின்றன. இதயத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ள மின்னிலை வேறுபாடுகள் ஒழுங்காக மாறுகின்றன. இதனால் மின்னோட் டத்தின் திசையும் மாறுகிறது.

அப்படி உண்டாகும் மின் ஓட்டம் இதயத்திலிருந்து அருகே உள்ள திசுக்களுக்கெல்லாம் பரவுகிறது. கம்பிகளின் மூலம் மின்சாரம் செல்வதைப் போன்று பல பகுதிகளுக்கும் மின்சாரம் சென்று இறுதியில் தோலை அடைகிறது. தோலின் பல பகுதிகளிலும் வேறுபட்ட மின் அழுத்தத்தை ஏற்படுத்துகிறது. வேறுபட்ட மின் அழுத்தத்தை கொண்ட பல பகுதி தோலையும் கட்டுகளினாலோ உலோகக் கம்பிகள் கொண்டோ ஒன்று சேர்த்தால் கம்பிகளில் மின்சாரம் பாய்வதை ஒரு தனிக் கருவியின் மூலம் காணலாம். இதயம் வேலை செய்வதையும் ஒரு துடிப்பிற்கும் மற்றொரு துடிப்பிற்குமுள்ள இடைவெளி எவ்வளவு ஒழுங்கான முறையில் ஏற்படுகிறது; அதில் உண்டாகும் மின் நிகழ்ச்சியும் இதய ஒலியும் எப்படிப் பிணைந்துள்ளன என்பதையும் அது காட்டுகிறது. மின்சார கார்டியோ கிராப் சோதனை மூலம் மிகத் தெளிவாகவும் துல்லியமாகவும் இதயத்தின் துடிப்பை அளக்க முடிகிறது. அக் கருவியின் மூலம் கிடைக்கும் வரை படத்தின் உதவியால் இதயத் தசையின் நிலையையும் அறிந்து கொள்ளலாம். அதோடு இதயம் இருக்குமிடம், அது எவ்வளவு சாய்ந்துள்ளது என்பதையும் தெரிந்து கொள்ளலாம்.

## தனித்து இயக்கும் இதயம்.

உயிர் உள்ளனவற்றின் வாழ்க்கையையும் அதன் பலதரப்பட்ட செய்கைகளையும் நடவடிக்கைகளையும் ஆராய்தல் மனித வாழ்க்கைக்கு மிகவும் அவசியமாகிறது. அதிலும் இதயத்தின் நடவடிக்கைகளைப் பற்றி ஆராய்தல்—உயிரியல் துறையிலே மிக மிக அற்புதமான முக்கியமான அத்தியாவசியமான ஆராய்ச்சியாகும். ஏனெனில் அது உடலின் மிக சக்தி வாய்ந்த இயங்கும் உறுப்பாகும். தாயின் கருப்பையிலேயே அதன் வேலை ஆரம்பமாகிவிடுகிறது. இரவு பகல் இடைவிடாது வாழ்நாள் முழுவதும் இயங்கிக் கொண்டேயிருக்கிறது.

தாயின் கருப்பையிலே இதயத் துடிப்பின் ஓசையை உணரும்போது பிற்கால மனிதன் ஒருவனின் வாழ்வு ஆரம்பாகிவிட்டது என்று கருதப்படுகிறது. இதயத்தின் துடிப்பு நின்றுவிட்டால், நாடித் துடிப்பு ஏற்படவில்லையென்றால் வாழ்க்கை முடிந்துவிட்டது என்று பொருள் ஆனால் அறிவியல் ஆராய்ச்சிகள் முன்னேறிக்கொண்டிருக்கின்றன. அதன் பலனாக இப்போது நின்றுவிட்ட இதயத்தை மறுபடியும் செயலாற்றுவது அது உடலினின்றும் பிரிக்கப்பட்ட பின்பும் இயங்குவதும் அதிசயமான தன்மையை ஓரளவிற்குப் பொருத்துள்ளது.

சத்துள்ள திரவப் பொருளைத் தொடர்ச்சியாகக் கொடுத்துக்கொண்டிருக்கும் ஒரு கருவியுடன் தனிப்படுத்தப்பட்ட இதயத்தை இணைத்து விட்டால் அது தொடர்ந்து வேலை செய்துகொண்டேயிருக்கும். உடலினின்றும் தனிப்படுத்தப்பட்ட பின்பும் ஏன் இதயம் தொடர்ந்து துடிக்கிறது. எந்தச் சக்தி அதைச் சுருங்குமாறு செய்கிறது? எந்தத் தூண்டுதலின் பேரில் அதன் பகுதிகள் சுருங்கியும் விரிவுற்றும் ஒரு குறிப்பிட்ட விதிக்குக் கட்டுப்பட்டு இயங்குகிறது? என்ற ஆய்வு ஏற்படுகிறது.

இதயத்தின் சுவர்கள் மூன்று உரைகளாலானவை. இதய அறைகளின் உட்பரப்பு மிக மெல்லிய சளிச் சவ்வினாலானது. இதயத்தின் வெளிப் புறத்தில் மூடியிருக்கும் உறைச் சுருக்குகளைக் கொண்டது. இது பரீரிகச் சவ்வு எனப்படும். கனத்த மத்திய பாகம் தான் இதயத் தசையாலானது.

இணைப்புத் திசுவினாலான சுவர்களால் இதயம் நான்கு அறை களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேற்புறத்தில் ஒன்றுக்கொன்று அருகில் உள்ளன. ஆனால், தொடர்பற்ற இரு சிரவ அறைகளும் கீழ்ப் புறத்தில் அதேபோன்று இரு சடர அறைகளும் இருக்கின்றன. சடரங்களின் சுவர்களைவிட சிரவ அறைகள் உறுதியானவை. சடரங்கள் இரண்டிற்கும் சிரவங்களைப் போல் எவ்விதத் தொடர்புமில்லை. ஒவ்வொரு சிரவமும் அதன் கீழுள்ள சடரத்தின் ஒரு திறப்பின் வழியாக இணைகிறது. அந்தத் திறப்பில் சடரத்தை நோக்கி மட்டும் திறக்கும் கபாடம் ஒன்றுள்ளது. நீண்ட நாண் போன்ற இழைகள் இந்தக் கபாடத்தை ஒருபுறம் மட்டுமே திறக்குமாறு செய்கின்றன.

கண்டறை, புப்புச நாடிகளுடன் இதயத்தை இணைக்கும் திறப் புககள் சடர அறைகளிக காணப்படுகின்றன. இந்த நாடிகள் சடரங் களுடன் இணையுமிடத்தில் உள்ள திறப்புக்கனில் கபாடங்கள் உண்டு. இந்தக் கபாடங்கள் இதய அறைகளிலிருந்து நாடிகளுள் குருதி பாய்வதை அனுமதிக்குமே தவிர எதிர்த்திசையில் பாயவிடா.

ஒரு குறிப்பிட்ட திசையில் மட்டுமே நான்கு அறைகள் கொண்ட இதயம், குருதி பாயுமாறு ஒரு 'பம்ப்' போல வேலை செய்கிறது. ஒரு திசையில் மட்டுமே குருதி செல்வது ஆங்காங்கு அமைந்துள்ள கபாடங்களின் மூலம் சாத்தியமாகிறது, ஒருதனிப்படுத்தப்பட்ட இதயத்தில் குருதிக்குப் பதிலாகச் சத்துப் பொருள்களும் பிராண வாயுவும் நிறைந்த ஒரு பிரத்தியேக திரவம் சுழலுகிறது. இதயத் துடிப்பு ஒழுங்காக ஒரு குறிப்பிட்ட வேகத்தில் நடைபெறுகிறது. அதன் தனித்தனி அறைகளும் இவ்வித ஒழுங்கிலேயே எப்போதும் சுருங்கிக்கொண்டிருக்கின்றன.

தனிப்படுத்தப்பட்ட அந்த இதயத்தின் வேலையைச் சற்று நேரம் கவனித்தால் கீழ்க்கண்ட கேள்விகள் எழும்.—

இதயத்தின் சிக்கலான இந்த வேலை காலத்தில் சிறிதுகூட முரண்பாடின்றி ஒன்றன்பின் ஒன்றாக நடைபெறும். இந்த வேலையை முதலில் சிரவங்களின் சுருக்கம், பின்னர் சடரங்களின் சுருக்கம்— அதன் பின் ஒரு வினாடிக்கும் குறைந்த காலம் சிறிது ஓய்வு— மறுபடியும் மேலறைகளின் சுருக்கம்—இதே போன்று தொடர்ந்து நடைபெறும். இந்த வேலையை இயக்கும் அந்த இயக்கி எங்கே மறைந்திருக்கிறது. தனிப்படுத்தப்பட்ட ஒரு இதயத்தின் வேலை பல மணி நேரங்களுக்கு மிக ஒழுங்காக ஏன் நடந்துகொண்டிருக்கிறது. உயிருள்ள ஒரு உடலில் அமைந்துள்ள இதயம் உடல் முழுவதிலும் இருக்கும். நாடி நாளங்களுடனும், நரம்புகளுடனும் இணைக்கப் பட்டிருக்கும் இந்த இதயம்—பற்பல ஆண்டுகளாக இடைவிடாமல் இதே இயக்கத்தை ஒழுங்காக நடத்துவது எதனால்.

இதயத்தின் வேலையை 'இயக்கும் சக்தி" உடலில் வேறு எந்தத் தசைக்கும் இல்லாத ஒரு அமைப்பு இதயத்தின் தசையில் காணப்படுகிறது. வலது சிரைத்திற்குக் குருதியைக் கொண்டு வந்து சேர்க்கும் குகா நாளங்கள் இணையுமிடத்தில் உள்ள வாசட விலங்கள் தனிப்பட்ட தன்மைகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. இதனைக் 'குகா சிரவக் கணு" என்பர். இந்த கணுதான் இதயம் ஒழுங்காகத் துடிப்பதையும் துடிப்பின் வேகத்தையும் சட்டுப்படுத்துகிறது. இந்த கணுவிலிருந்து இதயத்தசை முழுவதற்கும் தூண்டுதல் உணர்வு அலை அலையாக அனுப்பப்படுகிறது.

பல பிராணிகளிலும் மனித உடலிலும் வாழ்வின் பல பகுதிகளிலும் அந்தக் கணு சில சமயங்களில் கூடுதலாகவும் சில சமயங்களில் மந்தமாகவும் கிளர்ச்சியடைகின்றது. அவ்வாறு அது கிளர்ச்சியடைவது உடலின் உறுப்புகளுக்குத் தேவையான குருதியையும் மற்றும் பல திசுக்களையும் பொறுத்தது. இதயத் துடிப்பின் சராசரி வேகம் எத்தனையோ கோடி ஆண்டுகளாக ஒவ்வொரு பிராணியின் சூழ் நிலைக்குத் தக்கபடி மாறிமாறி வந்துள்ளது.

மற்ற கணுக்களைப் போன்றே குகாசிரவக் கணுவும் பிராணியின் உடலிலிருந்து இதயம் பிரிக்கப்பட்ட பின்பும் அங்கேயே இருப்பதால் சில மணி நேரத்திற்கு இதயச் சுருக்கத்தை எற்படுத்துவதற்கான, தூண்டுதலை அனுப்பிக்கொண்டே இருக்கும்.

இந்தக் குகாசிரவக் கணுவிலிருந்து புறப்படும் தூண்டுதலினால் இதயத்தின் சிரவங்கள் சுருங்குகின்றன. இதற்கு சுமார் 3/20 வினாடிகள் ஆகும். சிரவத்திலிருந்து கிளர்ச்சி சிரவச் சடரங்கணுவிற்குச் செலுத்தப்படுகிறது. இங்கிருந்து அக்கிளர்ச்சி அலை இரண்டு சடரக்களைப் பிரிக்கும் இடைச் சவ்வு வழியாகச் செல்கிறது. இங்கிருந்து வல இடக் கிளைகளாகப் பிரிகின்றன. இக்கிளைகளிலிருந்து 'பாலத்தின்" மூலமாகச் சடரப் பேசிகளுக்குச் செல்லுகிறது. அங்குச் சடரப் பேசியை இயக்குகிறது.

இச்சாத் தசைகளுக்குப் பலவகைப்பட்ட தூண்டுதலுக்குத் தக்கபடி அது தூண்டப்படும். அவ்வாறு அது தூண்டுதலை எற்று, எற்ற இடத்திலிருந்து தசை நார்களின் வழியே அத்தசை முழுவதற்கும் தூண்டுதல்களைச் செலுத்தி அதற்கேற்றவாறு தசைகளைச் சுருங்க வைக்கும். இதயத் தசைக்கும் இந்தத் தன்மை முழுவதுமுண்டு. ஆனால் பிற தசைகளுக்கும் இதயத்தசைக்கும் உள்ள வேறுபாடு என்னவென்றால் எற்படும் கிளர்ச்சியானது சில குறிப்பிட்ட கணுக்கள் அவற்றின் கிளை முடிச்சுகளின் வழியாக ஒரு விசேடப் பாதையில் செலுத்தப்படுவதாகும்.

குகாசிரவக்கணுவில், குறிப்பிட்ட நேரங்களுக்கு ஒரு முறை தானாகவே தூண்டுதல் எற்படுவது இதயத் தசைக்கு மட்டுமே உள்ள விசேடமான ஒரு தன்மையாகும் எனவேதான், சில சூழ்நிலைகளில் தனிப்படுத்தப்பட்ட ஒரு இதயம் நீண்ட நேரம் வரை இயங்கிக்கொண்டே யிருக்கிறது.

உடலின் பல பகுதிகளுடனும் குருதிக் குழல்களினாலும் நரம்புகளினாலும், திரவத் திசுவினாலும் இணைக்கப்பட்டுள்ள ஒரு இதயம் மேற்சொன்ன இயக்கும் தன்மையைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அத்துடன் இதய இதயக்கத்தின் வேகம், சக்தி, ஒழுங்கு இவற்றை நரம்பு மண்டலமும் கட்டுபடுத்துகிறது.

## இதயத் தடை

சில சமயங்களில் இதயத்தின் கிளர்ச்சி அலைபாதைகள் பாதிக்கப் படலாம். அவ்வமயம் இதயம் ஒழுங்கற்று இயங்குவது காணப் படுகிறது. சிரவம் ஒழுங்கான முறையில் சுருங்குவதல்லை. ஒழுங்கற்ற முறையில் சுருங்கி விரிகின்றன. சடரங்கள் ஒழுங்கற்ற முறையில் சுருங்குகின்றன. சிரவத்திலிருந்து சடரத்திற்கு உணர்வு செல்லும் நரம்பு முடிச்சுகளில் (கணு) ஒரு வெடிப்பு ஏற்பட்டு விடுவதால் அது மேலறைகளும் கீழறைகளும் ஒன்றுபட்டு வேலை செய்வதைத் தடுக்கிறது. இதனால் மேலறைகள் அறுபதிலிருந்து எழுபது முறை ஒரு நிமிடத்தில் சுருங்கினால் கீழறைகள் முப்பதிலிருந்து முப்பத்தைந்து முறைகள் சுருங்குகின்றன. இவனை இதயத்தடை என்பர்.

## இதய உதரலும் நடுக்கமும்

இதயப் பேசி நார்கள் சிரவத்திலும் சரி, சடரத்திலும் சரி ஒரே சீராக எல்லாம் ஒரே காலத்தில் சுருங்கும். இதயக் குகரண நிலையில் இதயம் மாறுதல் அடைந்து தரை நார்கள் தனித்தேனும் சில தொகுதியாகவேனும் சுருங்கும். அக்காலத்தில் எல்லா பேசுகளும் ஒரே சீராக சுருங்காததினால் இதய உதரலும் இதய நடுக்கமும் ஏற்படுகின்றன.

இவ்வித இதயக் கோளாறுகளை அநேக இதய நோய்களில் காணலாம். இதய உதரலும் நடுக்கமும் உயிருக்கு ஆபத்தில்லையெனினும் மற்ற இதய நோய்கள் உயிருக்குக் கெடுதலை ஊக்குவிக்கும்.

## இதய இயக்கத்தின்மீது நரம்பு மண்டல ஆட்சி

எப்பொழுது பல உறுப்புகளுக்கு அதிகக் குருதி தேவைப்படுகிறதோ அப்பொழுது மத்திய நரம்பு மண்டலத்திற்குச் செய்தி அனுப்பப்படுகிறது, உடனே அங்கிருந்து இதயத்திற்கும் அதனுடன் இணைந்த குருதிக் குழல்களுக்கும் தகுந்த உத்தரவுகள் அனுப்பப்படுகின்றன. அதன்படி உறுப்புக்கெல்லாம் தேவைக் கேற்றபடி குறைவாகவோ அல்லது அதிகமாகவோ குருதி செல்கின்றது.

சாதாரணமாகவே, இரத்தாசயச் சீரமைப்பு சிக்குமுக்கலான வேகக் கிரியையாகும். வெளித் தூண்டலுக்கும் உடலிலே நிகழும் தூண்டலுக்கும் தகுந்தாற்போல் இரத்தாசயங்கள் மாறுபாடு கொள்கின்றன. இதயமும் தொடர்ந்து மாறி மாறி தூண்டுதலுக்கேற்ப கிரியை புரிகின்றது.

இதயம் சகவேதனிப்பகுதி, பரிசகவேதனி தனிப்பகுதி என்ற இருதரப்பு நரம்புகளினால் இணைக்கப்பட்டிருக்கிறது. சகவேதி நரம்பு

களில் ஏற்படும் தூண்டுதல் இதய இயக்கத்தைத் துரிதப்படுத்துகிறது. அந்தத் தூண்டுதல் உணர்வு இதயத் தசைகளின் வெகு வேகமாகவும் பரவுகிறது. எல்லா குருதி நாடிகளும் சுருக்கமடைகின்றன. அதனால் நாடிகளில் குருதி அழுத்தம் அதிகரிக்கிறது.

பரிசக வேதனிப்பகுதியாகிய உதர நரம்புத் தூண்டப்படுவதால் இதயக் கணுக்கள் மந்தமடைகின்றன. இதயத் துடிப்பும் மெதுவாகிறது. தூண்டுதல் மிக மெதுவாகத்தான் செலுத்தப்படுகிறது. உதர நரம்பில் அதிக அளவிற்குத் தூண்டுதல் ஏற்படுமானால், அக் கிளர்ச்சி மேற் சொன்ன கணுவிற்குச் சொல்லாமலே இருந்து விடலாம். அதன் காரணமாகச் சிரைத்திற்கும் சடரத்திற்கும் உள்ள தொடர்பு அறுந்து விடுகிறது. இதனை இதய அடைப்பு (மாரடைப்பு) என்பர்.

சாதாரண நிலைமைகளின்கீழ், அதாவது இதயம் சுகாரணரீதியாக இயங்கிக்கொண்டிருக்கும் பொழுது உதா நரம்பு இதய ஓய்வுக்குக் காரணமாக உள்ளது. இந் நரம்பை ஓரளவிற்கு இதய ஓய்வைக் கட்டுப்படுத்தும் ஓய்வு நரம்பு என்று அழைக்கலாம்.

சகவேதனிப்பகுதி நரம்புகளும் உதர நரம்பும் இதயத்தின் மீதும்; பிற குருதி நாடிகளின் மீதும், சதாதனது ஆட்சியைத் செலுத்திக் கொண்டிருக்கின்றன. அவை இதயத்தின் துடிப்பின் வேகத்தையும் சக்தியையும் கட்டுப்படுத்துகின்றன. அவை குருதி நாடிகளின் கன அளவையும் கட்டுப்படுத்துகின்றன.

உடலின் உள்ளிருந்தோ அல்லது பிராணியின் உடலுக்கு வெளிப் புறத்திலிருந்தோ ஏற்படும் தூண்டுதல்களின் காரணமாக இதயமும் குருதி நாடிகளும் பல அசசானிச் செயல்களைச் செய்கின்றன. உதாரணமாகச் சூடு, இதயம் சுருங்குதலைத் துரிதப்படுத்தி நாடிகளை விரிவடையச் செய்கிறது. அதே சமயத்தில் குளிர்ச்சி, இதயத்தை மெதுவாக இயங்குமாறும் தோலிற்குச் சமீபமாக உள்ள நாடிகளைச் சுருக்கி, தோல் வெளிறிப் போகுமாறும் செய்கிறது. கடினமான வேலை செய்யும் போது இதயம் வேகமாகத் துடிக்கிறது. ஓய் வெடுக்கும்போது மெதுவாகவும் பலக்குறைவாகவும் துடிக்கிறது. திடீரென்று வயிற்றில் அடி விழுந்தால் இதயம் துடிக்காமல் நின்றுவிடலாம்.

பேச்சினாலோ அல்லது மிகுந்த பயம் மகிழ்ச்சி போன்ற உணர்ச்சி களினாலோ மூளையின் வெண் பதார்த்த வெளிப் பரப்பில் தூண்டுதல் உண்டானால் இரத்தாசய நரம்பு மண்டலங்கள் பாதிக் கின்றன. அதன் காரணமாக, இதயம் ஒரு சமயத்தில் மெதுவாகவும். மற்றொரு சமயத்தில் துரிதமாகவும் துடிக்கிறது. இதனால் நாடிகள் சுருங்குகின்றன அல்லது விரிவடைகின்றன. அதற்குத் தகுந்தாற் போல் முகம் சிவக்கவோ அல்லது வெளிறவோ செய்யும்.

இச்செயல் நடைபெற உடலில் உள்ள உள்ளிடைச் சுரப்பிக் கோளங்கள் சுரக்கும். முப்பூச் சத்துகளும் காரணமாக உள்ளன. ஆனால் உள்ளிடைச் சுரப்பிக் கோளங்கள் மீது சகவேதனி நரம்பு மண்டலம் ஆட்சி புரிகிறது. ஆனால் அவை சுரக்கும் முப்பூச்

சத்துக்கள் இந்த நரம்புகளின் மீது ஆதிக்கம் செலுத்துகின்றன. பிரகோபரி முப்பூச்சத்து, சகவேதனி நரம்பைப் போல வேலை செய்கிறது. அதாவது இதயத்தைத் துரிதமாகச் சுருங்க வைப்பதுடன் இதய நாடிகளைத் தவிர மற்ற நாடிகளைச சுருங்குமாறு செய்கிறது.

மேலே கூறியவற்றிலிருந்து குருதியோட்ட மண்டலத்திற்கும் நரம்பு மண்டலம், பல இரசாயனப் பொருள்கள் ஆகியவற்றிற்கும், உள்ள பல முக உறவுகள் என்ன என்பதும் இதயத்தின் மீதும் குருதியோட்ட மண்டலத்தின் மீதும் நரம்புகள் எவ்வளவு சக்தி வாய்ந்த ஆதிக்கத்தைச் செலுத்துகின்றனவென்பதும் புலனாகும்.

## நாடி

**நாடி.**—இன்றைய நாளில் மனித உடலில் இயங்கும் குருதி நாடித் துடிப்பை "நாடி" என்று கூறுகிறார்கள். ஆனால் சித்தர்கள் கூறிய நாடி இலக்கணம் முன்சொன்ன கூற்றிற்கு முரண்பட்டுள்ளது. சித்தர்கள் அறுதியிட்டு மொழிந்ததெல்லாம் ஒருங்கு திரட்டி ஆராய்வது சிறந்ததாகும்.

உயிரினங்களுக்கெல்லம் அறிகுறியாக அவைகளின் சலனம் இன்றியமையாததாய் இருக்கிறது. உயிரினங்களுக்குச் சலனம் இல்லையேல் உடலில் உயிர் உறங்கிக் கிடக்கிறது என்பது விளக்கம். உடலிலிருக்கும் படியான உயிருக்குச் சாக்கிரதை, கனவு என்ற அவத்தைகள் ஒடுங்கி உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டது என்பது பொருள். உடலில் உயிர் மூன்று அவத்தைகளாகிய சாக்கிரதை, கனவு, உறக்கம் என்பவைகளோடு இயங்கும் வரையில் உயிருககுச் சலனமுண்டென்று தெரியக் கிடக்கிறது. உடலில் உயிர் உறக்க அவத்தை அடைந்துவிட்டால் உடலினின்று உயிரேகிவிட்டது என்கிறார்கள். ஆனால் உண்மையில் சாதாரண உயிர்களுக்கு உயிர் உடலிலேயே உறங்கிப்போகிறபடியால் சலனமில்லை அவ்வமயம் அதனைப் பிணம் என்கிறோம்.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் உயிர் உண்டு. அப்பொருள்களிலுள்ள உயிருக்குச் சலனமில்லாமல் உறக்கத்திலிக்கிறதே ஒழிய உயிரற்ற பொருளாகா. ஆனால் இடைக் காலத்தில் மெய்கண்டான் அறிவு இல்லாமையால் உயிருள்ள பொருள், உயிரற்ற பொருள் என்று பிரித்துள்ளனர். உண்மையில் உயிரற்ற பொருள் என்று சொல்லும் படியான பொருள்களுக்கும் உயிர் உண்டு. ஆனால் சலனமில்லாமல் உறக்கத்திலிருக்கிறது என்பதுதான் வெள்ளிடைமலை.

பண்டைய காலத்தில் தமிழகத்துச் சித்தர்கள் தம் உடலிலிருக்கும் படியான உயிர் உறக்க அவத்தை அடையவிடாமல் உயிரை, துரியம், துரியாதீதம் என்ற அவத்தைகளுக்கு மேலும் உட்படுத்தி உடலை உயிர் மயமாக்கிச் சிவத்தை அடையச் செய்தார்கள். அந்நிலையில் தான் உருவப் பொருளாகிய சடம் உயிராக மாறுகிறது.

ஆகவே, உயிரினங்களின் உடலில் உயிர், சாக்கிரதை, கனவ, உறக்கம் என்ற அவத்தைகளோடு இயங்குகிறதா அல்லது உறக்கத்தில் ஆழ்ந்து விட்டதா என்று நாடிப் பார்ப்பதுதான் "நாடி" எனப்பட்டது. சுருங்கக்கூறின் உயிரின் அல்லது ஆன்மா (ஜீவாத்மா)-வின்

சலனத்தைத்தான் நாடி எனப்பட்டது. ஆன்மாவின் சலனத்தைப் பிரதானமாகக் குருதி நாடிகளின் துடிப்பின் மூலமாகக் காண்கிறாம், குருதி நாடியின் துடிப்பைக் காணமுடியாத காலத்து, கண் இமைகளைத் திறந்து கண் மணைரைத் தொட்டால் இமை உடனே மூடிக்கொள் வதாலும் கண்மலர் அசைவதாலும் உடலில் உயிரின் சலனம் இருக்கிறது என்றறிகிறோம். சில சமயம் உடலில் மேல் தோலைக் கிள்ளுவதால் உடலின் உறுப்புகள் அசைந்தால் உயிருக்குச் சலன மிருக்கிறது என்றறிகிறோம். இவ்வாறாக எத்தனையோ சோதனைகளி லிருக்கின்றன.

இவ்வாறு சலனத்தோடு இயங்கும் உயிருக்குத் தொண்ணூற்றாறு தத்துவங்கள் அல்லது கருவிகளுள்ளன. முக்கியமாக வாதம், பித்தம், கபம் என்ற உயிர்த்தாதுக்கள் உயிருக்குச் சலனத்தைக் குறிப்பிட்ட முறையில் சுகதேகிகளிடம் இயங்கச் செய்கிறது. உடல் நோயுற்ற காலத்தில் இவ்வாத, பித்த கபங்கள் முறை தவறி இயங்குவதைக் கொண்டு ஆத்மாவுக்குச் சாக்கிரதை, கனவு அவத்தைகளை விட்டு ஓடுங்க ஆரம்பிக்கும் நிலைதான் "நோய்" எனப்படும். ஆகவே, ஆன்மா என்ன நிலையில் சுகதேகிக்கும் நோயாளிகளுக்கும் இருக் கிறது என்பதை ஆராய்வதுதான "நாடி" என்று விரிவாகக் கூறப் பட்டது. இதனையே சித்தர்கள்.

நாடியென்றால் நாடியல்ல நரம்பில் தானே
நலமாகத் துடிக்கின்ற துடிதானல்ல
நாடியென்றால் வாத பித்த, சிலேற்பனமுமல்ல
நாடி எழுபத் தீராயிரந் தானல்ல
நாடி யென்றால் அண்டபகிரண்ட மெல்லாம்
நாடி எழுவதைத் தோற்றத்துள்ளாய் நின்ற
நாடியது ஆராய்ந்த பார்த்தாரானால்
நாடியுறும் பொருள் தெரிந்து நாடுவரே.

என்று கூறியிருக்கிறார்கள்.

பாரே நாடி அறிந்துணர்ந்து பரமன் செயலும்பிணி முறையும்
நீரே ஓடும் சலமலமும் நிறமுங் குணமும் முகக்குறியும்
காரே யிளங்குழல் மடவீர்! காலதேச வயதிளமை
நேரே யறியு முகநாடி நெரியும் தெளிவும் சொல்வாமே.

என்று மற்றொரு சித்தர் கூறியுள்ளார்.

நாடியை உடலில் எந்தெந்தப் பாகங்களில் காணமுடியும் என்பதனை,

தாது (மூன்று)கள் தனித்தகுதிச் சந்தோடு
ஓதுறு காமியம் உர்தி நெடு மார்பு
சாது நெடுமூக்கு கண்டங் கரம் புருவம்
போதுறும் உச்சி புகழ் பத்தும் பார்த்திடே,

என்று திருமூலர் கூறியுள்ளார்.

1. குதிச்சந்து, 2. காமியம், 3. உந்தி, 4. மார்பு, 5. காது,
6. மூக்கு, 7. கண்டம், 8. கரம், 9. புருவம், 10. உச்சி.

என்ற பத்து இடங்களில் பார்த்திடலாம். எனினும் கரமே எளிதி லறியத்தக்கலானும் பெரும்பான்மையும் கரமே நாடிக்குரிய இடமாகக் கொள்ளப்பட்டு வருகிறது.

**நாடியின் இயக்கம்—**

உற்றுற்றுப் பார்க்க வோர் நரம்பே யோடும்
பந்தித்த மூவரும் பாய்கின்ற வேகத்தால்
மத்தித்த தாளம் போல் வழங்கும் நரம்பிதே.

எவ்வாறு வீணையின் ஒலியை எழுப்பும் கம்பியில் ஒரே காலத்தில் எழு சுரங்கள் தொனிக்குமோ அவ்வாறே குருதி நாடிகளின் மூல மாக மூன்று உயிர்த்தாதுக்களின் இயக்கம் புலப்படும் என்று கூறப் பட்டுள்ளது.

**நாடியின் கால அளவு—**

வழங்கிய வாதம் மாத்திரை யொன்றாகில்
தழங்கிய பித்தம் தன்னிலவரைவாசி
அழுங்கும் கபந்தா னடங்கியே காலோடில்
பிழங்கிய சீவற்கு பிச கொன்றுமில்லையே

என்று திருமூலர் கூறுகிறார்.

வாத நாடிக்கு மாத்திரை ஒரு மாத்திரை அளவு என்றால் பித்த நாடிக்கு அரை மாத்திரை, கப நாடிக்குக் கால் மாத்திரை எனப் படும்.

**கரத்தில் நாடியை அறிதல்—**

''செய்கின்ற நாடி பெரு விரலின் மேலாய்
திருந்திழை மூன்றங்குலத்தி னடுவாதத்
தைகின்ற கோதுமை யரிசி போலச்
சர்வம் வியாபித்திருக்கு மதுதான் கூறி
கையடியுங் காலடியும் நாடிநிற்குங்
கன்னியருக் கிடப்புறமாங் கணவர்க்கங்கே
மைகின்ற வலப்புறமாம் வாதநாடி
வந்து முன்னே நடக்குமப்பால் வகை சொல்வேனே''

(வைத்திய சாரம்)

இயம்பிடவே அங்குட்ட விரலுக்கப்பால்
எத்தமாய் நோக்கிடை விட்டப்பால் பார்க்கில்
முயம்பிடவே மூவிரலால் நாடிதொட்டு
மும்மூர்த்தி நாடியின் முழக்கம்பாரு.

(பூகி முனிநாடி)

கரத்தில் நாடியைப் பார்க்குங்கால் ஆண்களுக்கு வலது கரமும் பெண்களுக்கு இடது கரமும் பார்க்க வேண்டுமென்று முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். மருத்துவன் தன் மூவிரலால் நாடியைப் பார்க்கும் போது மூன்று உயிர்த் தாதுவின் சலனம் அல்லது முழக்கம் தெரியும் என்று கூறினார்கள்.

**கபத்தில் மூவிரலால் பார்ப்பது—**

நோயுற்றோன் உள்ளங்கைப் பெருவிரலின் மணிக்கட்டோடு சேர்ந்த ஆரை என்புத் துவக்கத்துக்குமேல் அவ்வென்பின் பக்கமாகவே 2:5 செ. மீட்டர் (ஒரு அங்குலம்) கரத்தைத் தொட்டுப் பார்க்க, குருதி நாடிப் புலப்படும். அங்கு உயிர்த் தாதுக்களின் சலனம் தெரியும்.

**மருத்துவன் மூவிரலால் நாடியைப் பார்க்கும் விதம்—**

கீழான பெருவிரல் கீழ் காச்சினியாம் விரலிற்
கிளர்த்தெழும்பும் வாதத்தின் நாடி தானும்
பாழான் மத்திமத்தின் விரல்தான் பித்தம்
மகத்தான அனாமி விரல் சேத்துமமாகும்.

(யூகி முனி)

மருத்துவனின் காச்சினி விரல் (சுட்டு விரல், ஆள்காட்டி விரல், தர்சினி விரல்) நடுவிரல், ஆழி விரல் என்ற மூன்று விரல்களால் நாடியைப் பார்க்க வேண்டும்.

**பெருவிரலுக்கு மேல் மூவிரல்களில் முதன்மையாக நாடியை உணரும் விதம்—**

இந்த முக்கியமான கட்டத்தில் நாடி நூற்களில் தெரியக்கிடக்கிறது என்னவென்றால் தர்சினி விரல், முதல் விரல் என்றறியப்படுகிறது. அதே சமயத்தில் கிளர்ந்தெழும்பும் வாதநாடி தர்சினி விரலில் தென்படுகிறது என்று கூறுவது உயிரின் இயற்கை சலனத்திற்கு முரண்பட்டு காண்கிறது. ஏனென்றால் வாதம் கிளர்ந்தெழும்புவது எல்லாம் ஆறு ஆதாரங்களிலிருந்துதான் என்று தெரியவருகிறது. நாடி நூற்களில் சித்தர்கள் தர்சினி விரல் வாத நாடியைக் குறிக்கிறதென்றார்களே யானால் நோயுற்றோரின் வலது கரத்தில் நாடி பார்க்கும்போது மருத்துவன் தன் வலது கரத்தை நோயுற்றோனின் கைக்கு அகமாகக் கீழ்ச் சென்று புறமாக ஆரை என்பின் சார்பாக மூவிரலால் வீணையை வாசிப்பதுபோல் நாடி பார்க்கும்போது பெருவிரலுக்கு மேல் முதன்மையாகத் தென்படுவது ஆழி விரல். அவ்வாறு பார்க்கையில் தர்சினி விரல் கிளர்ந்தெழும்பும் வாத நாடியை உணரும்; நடுவிரல் பித்தநாடியை உணரும்; ஆழி விரல் கப நாடியை உணரும். இங்குக் கூறியுள்ள கருதது நாடி நூற்களுக்கு முரண்பட்டிருக்கிறது. ஆனால் அறிவியல் ரீதியில் மிகவும் பொருத்தமாக அமைந்திருக்கிறது. சித்தர்களும் அவ்வாறேதான் கூறியிருந்திருப்பார் என்பது திண்ணம். ஆனால் நூற் தொகுத்தவாகள் சித்தர்கள் கருத்தைப் புரியாமல் இவர்கள் அனுபவத்தில் கையாண்ட முறையைக் கூறினார்களா என்று ஆராய இடமிருக்கிறது. இதனால் அன்றோ ஒவ்வொரு நாடியின் நடையைக் குறிப்பிடும் போது ஒவ்வொரு சித்தர்களின் நாடி நூற்களில் வெவ்வேறு விதமாகக் காட்சியளிக்கின்றன.

**நாடிகளின் நடை.**—இங்கே குறிப்பிட்டுள்ள படத்தில் நவீன முறைக் கருவியால் குருதி நாடியின் துடிப்பைக் குறியாக வரையப்பட்டிருக்கிறது. இக்குறிப்பினைக் கொண்டு நாடியை ஆராய்வோம்.

நாடிகளின் நடை



வாத, பித்த, கப நாடிகளின் சலனக் குறிப்பேடுகள்







வாத, பித்த, கப நாடிகளின் சலனக் குறிப்பேடுகள்—

வ $வ_1$, $வ_2$—வாத நாடி சலனம்—ஒரு மாத்திரை

பி $பி^1$ க—பித்த நாடி சலனம்—அரை மாத்திரை

க க1 வ—கப நாடி சலனம்—கால் மாத்திரை

வ $வ^1$ $வ^2$ என்ற கோடு வாத நாடியின் சலனத்தைக் காட்டுகிறது.

இவ்வாதயெழுச்சிகை இதயக்கமலத்தின் குவித்தலாகிய ஆக்கத் தொழிலை உணர்த்திற்று.

பி பி1 க என்ற கோடு வாதத்தை அடுத்து நடக்கும் பித்த நாடியின் சலனம். குவிந்த இதயக் கமலத்தை முன்னிருந்த நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்தல் செய்கையைப் புரிந்து விரியச் செய்கிறது. குவிதலிலிருந்து விரித்தல் தொழிலாகிய காத்தல் தொழிலைச் செயலாற்றுகிறது. பித்த நாடி விரித்தல் தொழிலைச் செய்யாவிடில் இதயம் குவிந்தவாறே யிருக்கும்.

க க1 வ—என்ற கோடு பித்தத்தை அடுத்த, கபச் சலனத்தைக் காட்டுகிறது. இதயக் குவிதலிலும் விரிதலிலும் ஏற்பட்ட அதிர்ச்சியை மறைத்து ஓய்வுச் செய்கை புரிந்து பாதுகாக்கிறுது. நோயுற்றபோது அழித்தல் செய்கையைச செய்கிறது.

எனவே வாதநாடி வாத எழுச்சியைத் தோற்றுவித்து உயர எழும்பிக் கீழே தாவுவது போன்ற நடையினையுடைய பிராணிகளின் நடையை ஒத்திட்டே கூறியுள்ளனர். ஆகவே தவளை, பாம்பு நடையை வாத நாடிக்கு ஒத்திட்டிருக்கின்றனர்.

பித்த நாடி வாத நாடியின் எழுச்சிச் சலனத்திலிருந்து மீட்சியடைவதால் ஊறுவது போன்ற நடையையுடைய பிராணிகளின் நடையை ஒத்திட்டனர். கபநாடி வாத எழுச்சியையும் பித்த மீட்சியையும் மறைத்து ஓய்வு கொடுப்பதாலும் அசைந்து அசைந்து சலனமுறுவதாலும் அசைந்து நடக்கின்ற பறவையின் நடைக்கு ஒப்பிட்டனர். மேற்சொன்னவைகள் அனுபவத்திலும் அறிவியல் ரீதியிலும் பொருத்தமுள்ளதாக இருக்கிறது.

மூன்று நாடிகளும் நடக்கும் காலம்—

காலையில் வாதநாடி கடிகையிற் பத்தாகும்
பாலையாம் பித்தநாடி பகருச்சி பத்தாகும்
மாலையாம் சேத்மநாடி மதிப்புடன் பத்தாகும்
வாலையாம் மனோன்மணிக்கு வகுத்துமே தொகுத்ததாமே.

காலை ஆறு மணி முதல் பத்து மணி வரையில் வாதத்திற்கு அரசு காலமாதலால் வாதமிகுதியையும் காலை பத்து மணி முதல் பகல் இரண்டு மணி வரையில் பித்த அரசு காலமாகையால் பித்த மிகுதியையும் பகல் இரண்டு மணியிலிருந்து மாலை ஆறு மணி வரையில் கபத்திற்கு அரசு காலமாதலால் கப மிகுதியையும் குறிக்கும். அத்தன்மையாகவே இரவில் முதல் பத்து கடிகைவாதமும் அதற்குப்பின் பத்து கடிகை பித்தமும், அதற்குப்பின் சூரியோதயம் வரையில் கபமும் நடக்கும்.

எந்தெந்த மாதங்களில் எந்தெந்த காலங்களில் நாடியைத் தெளிவாகக் காணலாம் என்பதைப் பின்வரும் பாடலால் நன்கு உணரலாம்.

சித்திரை வைகாசிக்குஞ் செழுங்கதிருதயந்தனில் பார்க்க
அத்தமாம் ஆனி ஆடியைப்பசி கார்த்திகைக்கும்
மத்தியானத்திற் பார்க்க மார்கழி தை மாசிக்கும்
வத்தகக் கதிரோன் மேற்கே வீழ்கும் வேலையிற்றான்பாரே

தாணது பங்குனிக்குந் தனது நல்லவணிக்கும்
வானமாம் புரட்டாசிக்கும் வர்த்தாராத்திரியிற் பார்க்க
தேனே மூன்று நாடி தெளியவே காணுமென்று
காணமா முனிவர் சொன்ன காரிகை வேத நூலே.

மூன்று நாடிகளின் நடையைத் தெளிவாகக் காணலாம் என்று கூறப் பட்டிருக்கிறது. ஆனால் நடைமுறையில் எந்த வகையில் பயன்படும் என்று சொல்ல விவாதத்திற்கு இடமுண்டு.

**குருநாடி—**

பாராப்பா குருநாடி யைந்துக்கு நடுவாம்
பாரி நிற்கும் வரலாறு தன்னைக் கேளு
சீரப்பா பித்தத்தின் முன்னே நிற்குந்
தசநாடி பத்துக்குந் திறமாய் நிற்கும்
ஏரப்பா வாதமென்று சொல்வார் மூடர்
இருத்தியங்கே பார்ப்பளவில் வேறாய் நிற்குந்
தாரப்பா கெண்டகுரு நாடி நேர்மை
தனையறி வகை யுனக்குச் சாற்றுவேனே.
சாற்றுவேன் பெருவிரலிற் பூதநாடி
சங்கையில்லா ஆள்காட்டி வாதமென்க
ஏற்றமுள்ள நடுவிரல்தான் பித்தமாகும்
இசைந்த தொரு பவுத்திரமே யையமாகுந்
தோற்றுகின்ற சிறுவிரல் தான் பூதநாடி
சுற்று முள்ள குருநாடி ஐந்துட் சேர்ந்து
மற்றுமே குருநாடி யைந்துட் சேர்ந்து
வளர்ந்து நிற்கும் பேர் பெரிய வுண்மை தானே.

(பரிபூரண நாடி)

சிலர் வாதநாடியையே குருநாடி என்பர். சிலர் எல்லா நாடிகள் தோறும் ஊடுருவிப் பாய்ந்து அவைகளுக்கு இயக்கத் தன்மையைக் கொடுப்பதைக் குருநாடி என்கிறார்கள். ஆகையால் கரத்தில் நாடி, பகைகையில் மூன்று உயிர்த்தாது நாடிகளுள் பிரத்தியேகமாக ஒரு தனி நாடி உணரப்படும் என்று சித்தர்கள் பகர்ந்தார்கள். இதனை எல்லாராலும் உணர்ந்து அறிவது. மிகவும் பயிற்சியுற்றவர்களுக்கே புலப் படும். இந்நாடி எல்லா நாடிகளுக்கும் உயிருக்குயிராய் இருந்து மற்ற நாடிகளை இயக்கும் தொழில் பற்றி இதனை, குருநாடி எனபர். எனவே தொழில் பற்றியே நாடிகளை வகுத்தபோதிலும் குருநாடி எல்லர நாடி களின் இயக்கத்திற்கும் காரண நாடியாகவுள்ளபடியாலும், காரியத் தையும் செய்கிறபடியாலும் இதனை உன்னதமாகவும், சிறப்பாகவும் போற்றினார்கள். மற்றும் இந்நாடி குற்றமடைவதுமில்லை. இதற்கு'

குணமும் இல்லை. ஆனால் ஐந்து நிலையாகிய விழிப்பு நிலை, கனவு, உறக்கம், துரியம் துரியாதீதம் என்பவைகளைக் கொண்டது. மற்ற நாடிகள் குற்றமடைந்த காலத்து அக்குற்றங்களுக்கேற்ப இந்நாடியின் நிலை மாறும். வாத பித்த நாடிகளில் தொழிற்கேற்ப முக்கியமாக விழிப்பு நிலை, கனவு, உறக்கம் என்ற தொழில்களால் குருநாடியின் நிலைகள் அவ்வப்போது மாறிக்கொண்டே இருக்கும்.

குருநாடிகளுக்கு உறக்க நிலை முழுமையும் ஏற்பட்டு விட்டால் உடலுக்குச் சலனம் இல்லை. இந்நிலையைத்தான் பிணம் என்றும் உயிர் உடலை விட்டு ஏகிவிட்டது என்றும் கூறுகின்றார்கள். ஆனால் உயிர் வெளியேகி விடவில்லை. உடல் அணுக்கள் தோறும் உறக்க நிலையை அடைந்து விட்டது என்பது வெள்ளிடைமலை. உடல் அணுக்கள் தோறும் உயிர் உறக்கமடைந்த நிலையில் குரு நாடி இயங்கவில்லை என்பது உண்மை விளக்கம். இந்நிலையில்தான் உடலைப் பிணம் என்று சித்தர்கள் கருதினர்.

ஆகவே குருநாடியை மருத்துவன் சாதாரணப் பயிற்சியினால் உணர வல்லமாட்டாது யோகவல்லமையில்தான் குருநாடியை அறிய முடியும். உணர முடியும்.

**பூதநாடி—**

போகுமப்பா வாதமென்ற நாடி யொன்றாய்
புகழாக தனித்து நின்றால் பூதநாடி
ஆகுமப்பா அரணைவால் போல் துடித்துக்காணும

(இரத்தினச் சுருக்கம்)

சாற்றுவேன் பெருவிரலிற் பூதநாடி
தோற்றுகின்ற சிறுவிரல் தான் பூதநாடி

(பரிபூரண நாடி

ஆராயுமிடத்து வாத, பித்த, கபநாடிகளுக்கு முன்னும் பின்னுமாக உணரப்படும் நாடிகளுக்குப் பூதநாடி எனப்பட்டிருக்கிறது. அவ்வாறாக உணரப்பெற்றால் பூதநாடி பெருவிரலிலேனும் சிறு விரலிலேனும் அல்லது இரண்டு விரல்களிலும் உணரப்படுபவைகளைப் பூதநாடி அறியப் படும் எனப்படுகிறது.

இவ்வாறாக மூன்று உயிர்த்தாது நாடிகளும் பிரத்தியேகமாகப் பூத நாடியும் நடக்கின்றவனுக்குச் சுகச் சன்னி மார்க்கமாகும். அவன் சாகான். காயசித்தி அடைவான். ஆகவே யோக வல்லுனர்கள் காய சித்தி அடைந்ததென்று அறிகுறியைப் புகட்ட பூதநாடி புலப்படும்.

பூதநாடி நடக்குங்கால் காயசித்தன் சமாதி நிலையை அடைவான். பூதநாடி நடக்கின்ற காலத்தில் சித்தர்கள் சமாதி நிலைக்கு ஏற்ற சமயமென்று பேருறக்க நிலையைச் சாதிக்க முயல்வார்கள்.

**நோய்களை அறியும் நாடி—**

காணவே இரவியிலே வாத மோடில்
கனமான சுளியிருமலிரைப்புண்டாமே
நாணவே செவ்வாயில் வாதமோடில்
நன்மையுள்ள சுரமதுதான் அணுகுஞ்சொன்னோந்
தோணவே சனிதனிலே வாத மோடில்
துணிந்ததொரு சீதளமுஞ் சன்னியெய்தும்
வேணவே வியாழத்தில் வாத மோடில்
விலாவோடு தேகமெல்லாம் வலியுண்டாமே
உண்டான திங்களிலே பித்தமீறில்
உத்தமனே சலதோடமுடனே காணும்
பாண்டான புதனிலே பித்தமோடில்
பாரமுட னீரேற்றந் தலைக்குத்துண்டாம்
அண்டான வெள்ளியிலே பித்தமோடில்
தன்மையுறுந் தாபசுரந் தலைநோக்காடே

(பரிபூரண நாடி)

இன்ன நாளில் இன்ன நாடி மீறில் இன்னின்ன நோய்கள் வருமென்று திண்ணமாய் கூறியிருக்கிறார்கள். ஞாயிறு, செவ்வாய், சனி, வியாழன் என்ற நாட்களில் வாதநாடிக்கு ஆட்சி நாள்.

ஆகவே வாத நாடி தன் ஆட்சி நாட்களான ஞாயிறு தினத்தில் குற்றமேற்பட்டு நடக்குமேயாகில் இருமல், கப நோய்கள் தோன்றுமென்றும்; செவ்வாயில் சுரம்தான் அணுகும் என்றும்; சனிக்கிழமையில் கப நோய்களும் (சீதள நோய்கள்) சன்னி நோய்களும், வியாழக்கிழமையில் உடலில் குடைச்சல் வலி முதலிய நோய்களும் காணும் என்றனர்.

பித்தநாடி திங்கள் தினத்தில் குற்றமுற்றால் சல தோடம், மூக்கடைப்பு என்றும் புதன்கிழமையன்று தலைபாரம், தலைநோய், தலைக்குத்தல், ஆகியவைகளும் வெள்ளியில் தாபசுரங்கள் காணும் என்றனர்.

சிலர் வியாழக்கிழமையன்று வாத நாடியும் பித்த நாடியும் சமமாக ஆட்சிபுரிகின்றனவென்று கொண்டு வாத நோயும், கப நோயும் கலந்து வரும் என்றனர்.

**வாத நாடி—**

வாதமெனும் நாடியது தோன்றிற் சீதம்
 மந்தமொடு வயிற் பொருமற் றிரட்சை வாய்வு
சீத முறுங் கிராணிம கோதரம்நீ ராமை
 திரள் வாய்வு சூலை கடுத்து இடுப்பு ளைச்சல்
நீத முறுங் கிருமி குன்ம மண்டவாதம்
 நிலையு நீர்க் கிரிச்சனமாம் தந்து மேகம்
பேதமுறு முதரபிணி மூல ரோகம்
 பேச வெகு பிணிகளுக்கும் பொருள தாகும்

**காணும் நோய்கள்—**

மந்தாக்னி எற்பட்டு வயிறு பொருமல், உட்டிண வாய்வு; சீதம் கலந்த கிரணிா பேதி; மகோதரம் (பெரு வயிறு); நீராமை பெரு வயிறு; சூலை; இடுப்பு வாதம்; கிருமி நோய்; குன்மம்; அண்ட வாதம்; தந்து மேகம்; வயிற்றில் வருத்தம்; மூல ரோகம் ஆகிய வைகள் தனித்தேனும் கலந்தேனும் காணும்.

**வ த பித்த நாடி, குற்றமுற்றால் கீழ்க்கண்ட நோய்கள் உண்டாகும்.—**

பொருளான வாதத்திற் பித்தஞ் சேர்ந்தாற்
 பொருந்திவருங் குணங்களுடண வாய்வு சக்தி
செறியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
 சிவப்புமலம் பிடித்தலுறுந்தாது நட்டங்
கருவான தேகமதிலுளைச்சற் சோம்பல்
 கை கால்க டரிப்புநாக் கசக்கு மன்னம்
பரிவாக வூண குறைதலு ருசிகேடாதற்
 பலநோயும் வருத்தி விக்கும் பாங்கு தானே

செறியாமை; புளித்தேப்பம்: வயிறு பொருமல்; சிவந்த சிறு நீர் இழிதல்; மலச்சிக்கல்; தாது நட்டம்; உடலில் வலி; குடைசல், சோம்பல்; கைகால்களில் அரிப்பு; நாக்குக் கசப்பு; அன்னம் ஏற்காமை ருசி கேடாதல்; ஊண் குறைதல் என பல நோய்கள் காணும்.

**வாத, சேத்தும நாடி குற்றமுற்றால்—**

பாங்கான வாதத்திற் சேத்துமநாடி
 பரிசித்தாற் றிமிர்மேவு முளைச்சலாகுந்
தீங்கான யிருமலுடன் சன்னி தோடஞ்
 சேர்ந்தவிடம் வெடிசூலை யிருத்துரோகம்

வாங்காத யீளையுமந் தாரகாசம்
வலியுடனே புற வீச்சுகள் வீச்சு வீக்கம்
ஆங்காணுஞ் சுரமுடனே சுவாசகாசம்
உண்டாகும் வெகு நோய்கு முறுதிதானே.

திமிர் காணும்; தேகம் உளைச்சல்; இருமல்; சன்னி; சூலை நோய்; இதய நோய்; ஈளை; மந்தாரகாசம்; புற வீச்சுகள் வலி; வீச்சு வீக்கம்; சுரமுடன் சுவாசகாசம் என்ற நோய்கள் தோன்றும்.

**பித்தநாடி, குற்றமுற்றால்—**

உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உட்ணவாய் வத்திசுர மதிசாரங்கள்
மறதியுடன் கிறுகிறுப்புப் பைத்திய ரோகம்
வளர் சோகை யழலெரிவு காந்தல் கைப்பு
இருதயத்திற் கலக்கமது மறப்பு தாகம்
எழுங்கனவு பேயணையு மயக்க மூர்ச்சை
சிறிது பெரும்பாடு ரத்தப் பிரமேகங்கள்
சேர்ந்து வெகு பிணி பலவுஞ் சிறக்குந்தானே

வெப்பு நோய்; உட்ண வாயு; அத்தி சுரம்; அதிசாரம்; மறதி; கிறுகிறுப்புடன் பைத்திய நோய்; சோகை; அழல்; எரிவு; காந்தல்; நாகைப்பு; இதய நோய்; தாகம்; மயக்கம்; மூர்ச்சை; பெரும்பாடு; இரத்தப் பிரமேகங்கள் என்ற பல பிணிகள் தோன்றும்.

**பித்த வாதநாடி, குற்றமுற்றால்—**

சிறப்பான பித்தத்தில் வாதநாடி
சேரிலுறுந் தாது நட்ட முதரபீடை
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை
உற்ற சுரங் கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்
அறைப்பான வோங்காரப் புறநீர்க்கோவை
ஆயாசங் கிறுக்கோடு மயக்க மூர்ச்சை
முறைக்காய்வு விடவீக்கம் மூலவாய்வு
முரடான நோய் பலவு முடுகும் பண்பே.

தாது நட்டம்; உதரநோய்; செரியாமை; குன்மம்; சூலை; சுரம்; கிராணி; வயிற்றிரைச்சல்; மந்தம்; ஆயாசம்; மயக்கம்; மூர்ச்சை; முறைக்காய்ச்சல்; விட வீக்கம்; மூல வாய்வு; நீர்க் கோவை முதலியன காணும்.

**பித்த சேத்தும நாடி, குற்றமுற்றால்—**

பண்பான பித்தத்திற் சேத்துமங் கூடிப்
பரிச்சித்தா லத்திசுர மிளைப்பு ஈளை
கண் காது நாவுமுக மலநீர் மஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சணோய் கண்ணோய்
உண்போது மறுத்தலிரத் தவிப்புருதி பித்தம்
உளமாந்தை பீனிசமு முரத்த வீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகிவந்து பல பிணியு நாடுந்தானே.

அத்தி சுரம்; இளைப்பு நோய்; ஈளை நோய்; மஞ்சள் நோய்; (கண், காது, நா, முகம், நீர் ஆகியவைகள் மஞ்சளித்துக் காணும்) பெருவயிறு; பொருமல்; கண்ணோய்; ஊண் மறுத்தல்; இரத்த விப்புருதி; உளமாந்தை; சோகை வெப்பு ஆகிய நோய்கள் காணும்.

**சேத்தும நாடி, குற்றமுற்றால்—**

தானமுள்ள சேத்துமந்தா னிளகில் வெப்பு
சயமிரும லீளைமந் தரகாசம்
ஈனமுறுஞ் சன்னி விடதோடம் விக்கல்
இருத்தி ரோகங் கரப்பான் விரண தோடம்
மானனையீர் சூலைதிரள் வாய்வு வீக்கம்
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சுடைப்புத் தூக்கம்
எனமுறங் காமாலை சோகை பாண்டு
எழு சுரங்கள் பலதிற்கு மிட முண்டாமே.

வெப்பு நோய்; சயம் இருமல்; ஈளை; மந்தாரகாசம்; சன்னி நோய்; விடதோடம்; விக்கல்; இதய நோய்; கரப்பான்; விரண தோடம்; சூலை; வீக்கம்; வாந்தி; சுவாசம்; தூக்கம்; நெஞ்சடைப்பு ஆகிய நோய்கள் காணும்.

**சேத்தும, பித்தநாடி குற்றமுற்றால்—**

இடமான சேத்துமத்திற் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்க முண்டாந்
திடமான குளிர்க் காய்ச்சல் மஞ்சணாவு
தேகமதி லுளைச்சலிளைப் பிருமல் வாந்தி
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுதாகம் நாவறட்சி பாண்டு ரோகந்
தடமான குவ்வை ரத்த விப்புருதியோடு
சார்ந்தணுகும் பல நோய்க்குந் தடங் கண்டாயே.

வடவீக்கம்; [illegible]டிவிர்க் காம்ச்சல்; மஞ்சள் நோய்; தேகம் உலைச்சல்; இளைப்பு; இருமல்; சுவாசம் வாத்தி; விக்கல்; வெகுதாகம்; நாவறட்சி பாண்டு; இரத்த விப்புருதி; ஆகியவைகள் காணலாம்.

**சேத்தும வாத நாடியில் காணும் நோய்கள்—**

கண்டாயோ சிலேற் பனத்தில் வாத நாடி
கலந்திடுகில் வயிற் பொருமற் கனத்த வீக்கம்
உண்டாலோ ஓங்காரஞ் சத்தி வக்கல்
உறுதிரட்சை வாய்வு வலி சன்னி தோடம்
விண்டாலோ யிளைப்பிருமற் சோகை பாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதந்
திண்டாடும் நாசிகா பீடகங்கள்
சிர நோய்கள் பலதும், வந்து சிறக்குந்தானே.

வயிற்றுப் பொருமல்; கனத்த வீக்கம்; ஓக்களாம்; வாந்தி; விக்கல்; திரட்சை வாயு வலி; சன்னி தோடம்; இளைப்பு; இருமல்; சோகை; பாண்டு; விட சூலை; பக்க வாதம்; நாசி நோய்கள்; சிர நோய்கள் பல காணும்.

## குருதி ஓட்டம்

குருதியானது நாடியில் குபீர் குபீர் என்று பாய்ந்து நாளங்களில் மெதுவாகவும் நிதானமாகவும் ஓடுகிறது. குதித்துச் செல்லும்படியான குருதி ஓட்டத்தை நாளத்திற்குக் குருதி உட்புகுமுன் ஏதோ ஒரு சக்தி தடுத்து நாளங்களில் மெதுவாகச் செல்ல மாற்றுகிறது. ஆகவே குருதி ஓட்டம் நாடியில் விட்டுவிட்டுச் செல்லுவதைப்போல உணரப்பட்டாலும் அது ஒரே தரமாக குருதி நாடியிலும் நாளத்திலும் பாய்கிறது. இவ்வாறு குருதி ஓட்டம் ஒரு தொடர் நிகழ்ச்சியாகிறது. குருதி ஓட்டம் ஒரு புழு நெளிந்து ஓட்டத்தை ஒக்கும். கண்டறையின் முதல் சிறிய பாகம் இதயச் சுருங்கல் காலத்தில் விரிவடைந்து குருதியை ஏற்கிறது. அடுத்த மற்றொரு இதயச் சுருங்கலில் முன்பு கண்டறையில் குருதியை ஏற்ற பாகம் சுருங்க அதற்கு அடுத்த பாகம் விரிவு கொள்ளுகிறது. கண்டறையின் முதல் பாகம் சுருங்கியதும் அதிலுள்ள குருதி அடுத்த விரிந்த பாகத்திற்குச் செல்லுகிறது. இவ்விதமாக ஒவ்வொரு இதயச் சுருங்கலுக்கும் கண்டறையின் பாகங்கள் சுருங்கியும் விரிந்தும் கொடுப்பதால், குருதி புழு நெளிந்து போவதைப்போல் நாடிகளில் பாய்கிறது. நாடிகளில் இசிவுப்பேசி நார்கள் நிறைய உள்ளபடியால் அவைகள் நாடிகளுக்கு இசிவுத் தன்மையைக் கொடுத்துச் சுருங்கி விரிவு கொள்கிறது.

இதயத்தில் சுருங்கல் விரிவுகளின் காரணமாக நாடிகளின் சுவர்கள் ஒழுங்காக நீண்டு சுருங்குகின்றன. நாடிச் சுவரின் சுருக்க விரிவுகள் கண்டறையில் ஆரம்பித்து சிறு நாடிகள் வரை செல்கின்றன. இதையே நாடித் துடிப்பு என்கிறோம். எனவே நாடிகளில் செல்லும் குருதி குதித்தாற் போன்று துடிப்புடன் செல்லுகிறது.

நாடிகளில் குருதி செல்லும் வேகம் முக்கியமாக சுழற்சி மண்டலத்திலுள்ள குருதிக் குழாய்களின் குறுக்களவைப் பொறுத்தது. எல்லா குருதிக் குழல்களின் குறுக்குப் பரப்பும் மொத்தத்தில் அதிகமாக இருந்தால் குருதி மெதுவாகச் செல்கிறது. இக் குறுக்குப் பரப்பு, தந்துகிகளில் அதிகமாக இருக்கிறது. இதனால் கண்டறையில் வினாடிக்கு 150-லிருந்து 240 மி.மீ. அழுத்தத்தில் செல்லும் குருதியின் வேகம் தந்துகிகளில் வினாடிக்கு 1 மி. மீட்டர் வேகத்தை அடைகிறது.

குருதி, செல்லும் வேகத்தில் ஏற்படும் மாற்றம் முக்கியமான தொன்றாகும். திசுக்களுக்கும் உறுப்புக்களுக்கும் குருதியைக் கடத்தும் வேலையைத்தான் தந்துகிகள் செய்கின்றன. எவ்வளவுக் கெவ்வளவு வேகமாக குருதி அவற்றில் பாய்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது. ஆனால் தந்துகிகளிலோ வாயுமாற்றம், உணவுப் பொருள் களின் மாற்றம் ஆகியவை ஏற்படுகின்றன. எனவே தந்துகிகள் திசுக்களுக்குக் குருதியிலிருந்து செல்வதற்கும். கரியமில வாயும், மற்ற கழிவுகளும் திசுக்களிலிருந்து குருதியில் கலப்பதற்கும் ஏற்ற தொரு சூழ்நிலையை உண்டு பண்ணுகின்றன.

ஒரு பிராணியின் உடலில் உள்ள தந்துகிகளின் எண்ணிக்கை மிக அதிகம். அதாவது பத்து கோடியிலிருந்து நாற்பது கோடியாக வுள்ளது. இதிலிருந்து பிராணிகளின் வாழ்வில் தந்துகிகளில் குருதிச் சுழற்சி எத்துணை பங்கு வகிக்கிறது என்று தெரிந்து கொள்ளவும்.

தந்துகிகளிலிருந்து குருதி நாளங்களின் வழியாக இதயத்தை நோக்கிப் பாய்கிறது. இதயச் சுருக்கத்தினால் ஏற்பட்ட சக்தியின் காரணமாகக் குருதி நாடிகளில் அழுத்தத்துடன் செலுத்தப்படுகிறது. அந்த அழுத்தச் சக்தி நாளங்களில் இருப்பதில்லை. எனவே நாளங் களில் குருதி வேகமாகப்பாய முடிவதில்லை. எனினும் நாளங்களால் குருதி ஓட்டத்தின் வேகம் குருதி ஓட்டத்திற்குத் துணைபுரியும் வேறு சில சாதனங்களைப் பொறுத்துச் சற்று அதிகமாகிறது. நாளச் சுவரின் மீளும் தன்மை, ஆழ்ந்த மூச்சு விடுதல், நடக்கும் போதும் அல்லது வேறு வேலை செய்யும்போதும் தசைகள் சுருங்குதல் ஆகிய வற்றினால் நாளங்களில், கார் குருதி ஓட்டத்தின் வேகம் சுமாராக அதிகமாகிறது.

சுருங்கும் தசைகள் அருகேயுள்ள நாளங்களை அழுத்துகின்றன. ஆனால் அத்தசைகள் மறுபடி விரிவடையும்போது நாளங்களின் மீதுள்ள அழுத்தம் நீக்கப்படுவதால் அவை மறுபடியும் விரிவடைந்து விடுகின்றன. இந்த ஏற்பாடு நாளங்களின் வழியாகச் செல்லும் குருதியின் வேகத்தை அதிகரிக்கச் செய்கிறது. குருதி ஓட்டம் இதயத்தை நோக்கி மட்டுமே இருக்குமாறு செய்யப்படுகிறது. நாளங் களில் காணப்படும் கபாடங்கள் குருதி எதிர்த் திசையில் பாய்வதைத் தடுக்கின்றன. இதனால்தான் நடந்து கொண்டிருப்பதைவிட ஒரே இடத்தில் அசையாமல் நின்று கொண்டிருப்பது கடினமாக உள்ளது. உடல் வேலை அல்லது தசை அசைவானது குருதி நாளங்களில் தேங்குவதைத் தடுக்கிறது. குறிப்பாக கால்களில் குருதி மேல் நோக்கிப் பாய வேண்டியிருப்பதால் தேங்குவதற்கு அதிக வாய்ப்புண்டு.

## குருதி அழுத்தம்.

குருதியானது நாடிகளிலிருந்து நாளங்களுக்குப் பாய்கிறது. குருதியை இவ்வாறு பாயச் செய்வது அழுத்தச் சக்தியாகும். குருதி அழுத்தம் மேலும் மேலும் பாய்வதற்கு உதவுகிறது. பாய்ந்து செல்லச் செல்ல குருதி அழுத்தம் குறைகிறது. நாடியைத் துண்டித்துப் பார்த்தோமேயானால் இதயபாக வெட்டுவாயினின்று குருதி 'குபீர், குபீர்' என்று துடிப்புடன் வெளிவருதைக் காணலாம். இதயபாக வெட்டுவாய் எவ்வளவு தூரம் இதயத்திற்கு அருகாமையிலிருக்கின்றதோ அவ்வளவு மிகுந்து வலிமையோடு வெளிப் பாயும் ஒவ்வொரு குபீர் பாய்ச்சல் இதயச் சுருங்கலைக் காட்டுகிறது. இவைகளெல்லாம் அதிகப்படியான குருதி அழுத்தத்தைக் காட்டுகின்றன. எனவே, இதயத்திலிருந்து வரும் அழுத்தச் சக்தியே குருதி நாடி நடையாகும். நாடிகளில் குருதியானது புழுவைப்போல வலிமையாய் நெளிந்து துடிப்புடன் பாயும் இயல்பைக் குருதி அழுத்தம் என்பர்.

நாளத்தின் பாதையில் குறுக்கே கயிற்றால் இறுகக்கட்டினால் உறுப்பு பாகம் உப்பும். அதனைத் துண்டித்தால் உறுப்பு பாக வெட்டு வாயிலின்று குருதி வெளிவரும். இதயத் துடிப்புக்குத் தகுந்தாற்போலல்லாமலும் குபீர் என்று பாயாமலும் மெதுவாகவும் நிதானமாகவும் வெளிப்பாயும். குருதிச் சுழற்சியின் வெவ்வேறு பாகங்களில் அழுத்தச் சக்தியைக் கவனிப்போமானால் இதயத்திற்கு அருகாமையிலுள்ள பெரிய பருத்த நாடிகளில் 100—120 மி. மீ. இரசம் ஆகும். பெரிய நாடிகள் தன் குறுக்களவில் குறுகிக்கொண்டே போகப்போக குருதி அழுத்தமும் குறைகிறது. கண்டறையின் குருதி அழுத்தத்தைக் காட்டிலும் ஆரை நாடியின் குருதி அழுத்தம் குறைவுற்றிருக்கும். தசிரங்களின் குருதி அழுத்தம் 10—20 மி. மீ. இரசமாகும். நாளங்களில் பின்னும் குறைகிறது. முடிவில் பெரிய நாளங்களில் இதயத்திற்கு அருகாமையிலுள்ள நாளங்களில் குருதி அழுத்தமே இல்லாமலாகிறது.

### குருதி அழுத்த அட்டவணை.

| | |
|---|---|
| பெரிய நாடிகள் (கிரீவ நாடி) | .. 90 மி. மீ. இரசம் |
| நடுத்தர நாடிகள் (ஆரை) | .. 65—110 மி. மீ. இரசம் |
| தசிரங்கள் | .. 10—30 மி. மீ. இரசம் |
| சிறிய நாளம் | .. 9 மி. மீ. இரசம் |
| குகா நாளம் | .. 3 மி. மீ. இரசம் |
| கழுத்து நாளம் | .. 0—8 மி. மீ. இரசம் |

**நாடிக் குருதி அழுத்தம்—**

இவ்வழுத்தம் பாதரசக் கருவியால் அளக்கப்படுகிறது. சுக தேசிக்குக் குருதியானது இதயத்திலிருந்து கண்டறையில் பாயும்போது உச்ச வரம்புக் குருதி அழுத்தமாகிறது. இதனைச் சுருங்கல் கால நாடி அழுத்தமெனபர். விரிவடையும் காலத்தில் ஏற்படும் அழுத்தம் விரிவு கால நாடி அழுத்தமெனப்படும். இவ்விரண்டுக்கும் இடையேயுள்ள தாரதம்மியத்தை நாடிக் குருதி அழுத்தமெனப்பட்டது.

பொது குருதிச் சுழற்சி, புப்புசக் குருதிச் சுழற்சி ஆகிய இரண்டு சுழற்சிகளிலும்; இதயம் குருதி நாடி, நாளங்கள் ஆகியவற்றின் இயக்கத்தின் காரணமாகத்தான் குருதி ஓடிக்கொண்டிருக்கிறது. குருதியை ஓடிக்கொண்டேயிருக்குமாறு செய்வதில் இதயச் சடரங்கள் பெரும் பங்கு பெறுகின்றன. சிரவங்கள் அதைவிடக் குறைவான அளவுதான் முக்கியத்துவம் வாய்ந்தன.

குருதி நாடிக் குழல்களின் சுவர்கள் மீள்திறனுள்ளவை. இந்தத் தன்மையினால் அவை நீண்டு சுருங்கிக் குருதிக் குழல்களில் குருதி ஓடிக்கொண்டிருப்பதற்கு உதவுகின்றன. இதயம் சுருங்கும்போது சக்தி செலவிடப்படுகின்றன. இந்தச் சக்தியின் காரணமாக இதயத்திலிருந்து நாடிகளில் குருதி செலுத்தப்படுகிறது. பின்னர் இதே சக்தி நாடிகளில் குருதி அழுத்தமாக மாற்றப்படுகின்றது. அதே சக்திதான் குருதி ஓடிக்கொண்டிருக்கவும் செய்கிறது.

இதயச் சுருங்கலின் காரணமாக ஏற்படும் சக்தியில் பெரும் பகுதி குருதி நாடிகளில் செல்லும்போது ஏற்படும் உராய்வாகவும், குருதி அணுக்கள் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்வதால் ஏற்படும் உராய்வாகவும் மாறுகிறது. அதிகமான குருதி நாடிகளின் வழியாகக் குருதிச் செல்ல செல்ல அது செல்லும் தூரமும் குறுக்குப் பரப்பும் அதிகரிக்கிறது, தூரம் அதிகரிக்க அதிகரிக்க உராய்வும் அதிகரிக்கிறது. உராய்வை மீறுவதற்கு மேலும் மேலும் அதிக சக்தி செலவிடப்படுகிறது, குருதிக்கு மிக அதிகமாக தடை ஏற்படுவது சிறிய நாடிகளிலும் தந்துகிகளிலும் எனலாம்.

நாடிகளின் சுவர்கள் சுருங்கும் தன்மை பெற்றிருப்பதனால், நாடியில் குருதி அழுத்தம் ஏற்படுவது சாத்தியமாகிறது. சிறிய நாடிகளின் சுவர்கள் விசேடமான தசை அடுக்குகளால் ஆக்கப்பட்டிருப்பதால் குருதி அழுத்தத்தை ஏற்படுத்துவதில் அவை முக்கியமான பங்காற்றுகின்றன. சிறிய நாடிகளின் தசைச் சுவர்களில் ஏற்படும் விரைப்பு மாறக்கூடும். இதன் காரணமாக, சிறிய நாடிகளிலிருந்து தந்துகிகளுக்குள் குருதி குறையவோ அல்லது கூடவோ செய்கிறது. அதன் விளைவாக நாடிகளில் அழுத்தமும் குறைகிறது அல்லது கூடுகிறது. இதனால் தான் சிறு நாடிகளைக் குருதிச் சுழற்சி மண்டலத்தின் எதிரது காத்தல் அழுத்தக் குழாய்கள் என்று கூறினார்கள். நாடிகளில் செல்லும் குருதியின் அளவும் நாடியின் அழுத்தத்தைப் பாதிக்கிறது. மற்ற நிலைமைகள் மாறாமல் இருந்தால் அதிக குருதி அதிக அழுத்தத்தை ஏற்படுத்துகிறது.

இதய வேலையின் பல கட்டங்களிலும், நாடியின் குருதி அழுத்தம் மாறுகிறது. இதயம் சுருங்கும்போது குருதி அழுத்தம் அதிகமாகிறது. இதயம் விரியும்போது குருதி அழுத்தம் குறைந்த நிலையை அடைகிறது. அழுத்தம் அதிகரிப்பது இதயத்தின் சடரங்களின் வேகத்தையும், அங்கிருந்து வெளியேற்றப்படும் குருதியின் அளவையும் பொறுத்தது. குறைந்த அழுத்தமோ சிறுதந்துகிச் சுவர்களின் விரைப்புத் தன்மையைப் பொறுத்ததாகும்.

கடின உழைப்பின்போதும், வலி ஏற்படுதல் கோபம், ஆத்திரம், பரபரப்பு போன்றவை ஏற்படும் போதும் உணர்வு நரம்புகளின் பல நுனிகளிலும் கிளர்ச்சி ஏற்படும் போதும் குருதி அழுத்தம் பாதிக்கப்படு

இரது. சுக தேகிக்குக் குருதி அழுத்தம் பாதிக்கப்பட்டாலும் அதைக் கட்டுப் படுத்தும் தன்மை உடலிற்குள்ளது. 'இரத்தாசயச் சுருங்கல்' தூண்டுதலின் காரணமாக நாடிகளில் குருதி அழுத்தம் அதிகமாகும்போது மாறுபட்ட அந்த அழுத்தமே இரத்தாசய விரிதல் அமைப்பிற்கு உணர்வாகிறது, இநத அனிச்சாச் செயல்களனைத்தும் மூளையின் காரையில் கட்டுப் படுத்தப்படுகிறது. நாடிக் குருதி அழுத்தம் அனுசரிப்பு அனிச்சையின் காரணமாகவும் மாறுகிறது.

உடல் உழைப்பு, மன உழைப்பு. அதாவது சிந்தனை, மனிதனைச் சுற்றியுள்ள உட்டிண நிலை வாயுவின் 'அழுத்தம், கீடங்கள் குருதியில் சேருவது இவையெல்லாம் குருதி அழுத்தத்தைப் பாதிக்கக் கூடியவைகளாகும்.

---

## அத்தியாயம் 14

### பிராணமயக் கோசம்.

பிராணன் என்றால் ஆருயிர். அண்டத்திலும் பிண்டத்திலும் உயிர் இருக்கிறது. அண்டத்தில் உயிர் வாயு உருவமாகவுள்ளது. பிண்டத்தில் உயிர் வாயு சக்தியாக இயங்குகிறது. ஆகவே, பிண்டத்தில் பிராணவாயு இயங்கும் பாகமெல்லாம் பிராணமயக் கோசமெனப்படும். முக்கியமாகப் பிராணவாயு உடலுக்குள் மூக்கு, தொண்டை, சுவாசக் குழல், அசுகம் தந்துகிகள், வாயுக் கண்ணறை ஆகிய உறுப்புகளின் வழியாக நுழைந்து டிப்புசத்தின் மூலமாக தசிரங்கள் கிரகிக்கப்பட்டு உறுப்புகள்தோறும் சென்று ஆங்காங்குப் பிராணவாயுவை ஆக்க வேலைக்கு ஊட்டி அவைகள் கழியும் மலின வாயுவை உட்சென்ற வழியாகவே திரும்ப வெளிச் செலுத்துகின்ற உறுப்பே பிராணமயக் கோசமெனப்படும்.

ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக் கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாது போய்ப்
பொய்யரைத் துள்ளி விழித்திடுந்தானே.

(திருமந்திரம்-546)

ஐம்பொறிகளை உறுப்பாகக்கொண்டு உடல் உறுப்பியாகத் திகழ்கின்றது, பிராணனுக்குத் தலைமை மனம். மனம் உய்யுமாறு கொண்டு ஊரும் குதிரை ஒன்றுண்டு மெய்மையை அனுசரிப்பவர்களுக்குப் பிராணன் பற்று கொடுத்து ஒழுகும் முறையான பயிற்சியில்லாத பொய்யர்க்குப் பற்று கொடாது துள்ளி எழுந்து அவரைக் கீழே வீழ்த்தித்தான் வேண்டியவாறு ஆர்வத்துடன் செலுத்துவிடும்.

ஆரிய னல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள் பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந்தானே.

(திருமந்திரம்-547)

குதிரையாகிய உயிர்ப்பு இருவகைத்து. அவ்வுயிர்ப்பு விடுத்தலும் எடுத்தலும் ஆகிய செயலைப் போன்றுளது.

ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பம் அறுபத்தி நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்
மாறுதல் ஒன்றின் கண் வஞ்சகமாமே

(திருமந்திரம்-550)

ஏறுதல் பூரகம்–உள்ளிழுத்தல்; ஆறுதல்–கும்பம்–நிலைப்பித்தல்;. ஊறுதல் ரேசகம் – வெளிவிடுதல்; பூரகம் 16 மாத்திரையாகவும் ரேசகம் 32 மாத்திரையாகவும்; கும்பம் 64 மாத்திரையாகவும் இயங்க வேண்டும்.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
சாற்றைப் பிடிக்குங் கணக்கறி வாறில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறிவாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியதுவாமே.

(திருமந்திரம் 553)

இடப்பால் மூக்கு வலப்பால் மூக்கு வழியாக ஏற்றியும் இறக்கியு மாகிய பூரித்தலைச் செய்கிறது.

மேல் கீழ் நடு பக்கமிக் குறப் பூரித்துப்
பாலாம் இரேசகத் தாலுட்பதிவித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
ஆலாலம் உண்டான் அருள் பெறலாமே.

(திருமந்திரம் 554)

உடல் முழுமையும் நிறையுமாறு உயிர்ப்பினை உள்ளிழுத்தல்–எடுத்தல் செய்தல் வேண்டும்; இதுவே பூரித்தல் எனப்படும். அங்ஙனம் எடுத்தல் செய்த உயிர்ப்பினை அளவுக்குமேல் வெளிவிடுதல் செய்யாது உட்பதி வித்தலாகிய் அளவுடை வடுத்தலைச் செய்தல் வேண்டும்.

கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண்டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற் கோல அஞ்செழுத்தாமே.

(திருமந்திரம் 557).

உடலின் கண் பன்னிரண்டு விரல் அளவு ஓடுதலும் மீளுதலும் புரியும். அப்பன்னிரண்டு விரலுள் எண்விரல் அளவு எடுத்துக்கொண்டு நான்கு அளவு வீணாக வெட்டி அவை வானாளென்று எண்ணாது போக்கி விடுவர். அந்நாள் விரலளவும் நாளும் அகத்தே கூடிக் கொள்ளின் மிகப் பெரும் வைப்பாகத் திகழும். இவ்வாறானால் உயிர் உறக்க நிலை அடையப் பெறாது.

பன்னிரண்டானை பகல் இரவுள்ளது
பன்னிரண்டானையைப் பாகன் அறிகிலன்
பன்னிரண்டானையைப் பாகன் அறிந்திபின்
பன்னிரண்டானைக்குப் பகல் இரவில்லையே.

(திருமந்திரம் 558)

## சுவாச உறுப்புகளின் விவரம்

புப்புசமாகிய சுவாசப்பை, சுவாசக்குழல், தமனிகளாகிய கிளைச் சுவாசக் குழல்கள், சுவாசான்றாயங்கள் அல்லது வாயுக் கண்ணறைகள் எல்லாவை களே சுவாச உறுப்புகளாகும். விதானமும், பழுக்களும், சில பேசிகளும் சுவாச இயக்கத்துக்கு உதவியாய் இருக்கின்றன.

சுவாசப்பைகள் (புப்புசங்கள்) பொகுட்டு வடிவமாய் நெஞ்சறையின் ஒவ்வொரு பக்கத்துக்கு ஒவ்வொன்றாக இரத்தாசயத்தை தழுவிக்கொண்டு ஒரு நடுச் சவ்வினால் ஒன்றையொன்று பிரிக்கப்பட்டவைகளாயிருக் கின்றன. அவைகளின் நிறம் வெண் சிவப்பாய்க் கரும்புள்ளியடைத்தாற் போன்றிருக்கின்றன. அவைகளில் சுவாசக் கண்ணறைகளும் சுவாசக் குழல்களும் அநேக சிறு குருதிக்குழல்களும் நரம்புகளும் இசைந்திருக் கின்றன. அவைகள் அடிக்கழுத்திலிருந்து பழுக்கள் பரியந்தம் விசாலித் திருக்கின்றன.

சுவாசப்பை ஒவ்வொன்றும் பரிபுப்புசம் என்னும் சவ்வினால் சுற்றப் பட்டிருக்கின்றது. இச்சவ்வு நெஞ்சறையின் பக்கங்களையும் அளாவிச் சுவாசப் பைகளையும் மூடுகின்றது. சுவாசப்பைக்கும் பரிபுப்புசத்துக்கு முள்ள சேர்மானத்தைத் தெளிவாய்க் காட்டுகையில் ஒரு தலையணையி லுள்ள பஞ்சை வாங்கிப் போட்டு அதன் ஒரு தலைப்பை உள்ளுக்குச் சொருகினால் அஃதொரு இரட்டை மடிப்புள்ள பையாய் வரும். அதற் குள்ளே ஒரு திட்டமான பூசணிக்காயை வைத்தால் அப்பூசணிக்காய் அத்தலையணையுறையால் மூடப்பட்டிருந்தாலும் முன்பு பஞ்சிருந்த பிர காரம் அதற்குள்ளே இராமல் அதற்கு வெளியே இருக்கின்றது. இவ்வித மாகத்தானே சுவாசப்பைக்கும் பரிபுப்புசத்துக்குமுள்ள சேர்மானமென்று அறியவும்.

சுவாசக் குழல் கழுத்தின் முற்பக்கத்திலே கிடந்து தொண்டையி லிருந்து சுவாசப்பைவரைக்கும் செல்லுகின்றது. அது மிகவும் இசிவு கொண்ட குருந்து வளையங்களாலுண்டாயிருக்கின்றது.

தமனிகளாகிய கிளைச் சுவாசக் குழல்கள் இரத்தாசயத்துக்கு மேலே சற்றுப் பின்னாகச் சுவாசக் குழலின் கீழ்த் தலைப்பிலே வலமிடமாக இரண்டு சுவர் விட்டெழும்பிச் சுவாசப்பைகளுக்குள் சென்று பல கிளையாய்க் கிளைக்கின்றன.

சுவாசானாமாகிய நுண்ணிய வாயுக் கண்ணறைகள் தமனிகளின் கிளைகளின் நுனியிலே இருக்கின்றன. அவைகளின் பக்கங்கள் மிகவும் மென்மையானவைகள். அவைகளின் உட்பக்கத்திலே சுவாசக் குழ லிருப்பதுபோல் வெளியூறும் சவ்வு சூழ்ந்து அளாவி இருக்கின்றது. இக் கண்ணறைகள் வித்தியாசமான பருப்படுள்ளவைகளாய் சுவாசப் பைகளின் நடுவிலும் அடியிலும் மிகவும் ஏராளமாக இருக்கின்றன.

விதானமானது நெஞ்சிலிருக்கும் சுவாச உறுப்புக்களையும் வயிற்றி லிருக்கும் சீரண உறுப்புகளையும் பிரித்து அவைகளுக்கிடையே பரந்து கிடக்கும் ஒரு உறுப்பாம். அது பேசியினாலும் நடுப்பெற வன்னசையி னாலும் உண்டுபட்ட வளையத்தக்க வட்டித்தச்சவ்வாகி முள்ளந்தண்டி னாலும் நெஞ்செழும்பினாலும் இரு பக்கத்திலுமுள்ள கீழ்ப் பழுவெலும்பு களின் குருந்துகளிலும் தொடுத்திருக்கின்றது.

சும்மா யிருக்கும்பொழுது அதன் மையம் நெஞ்சில வில் லைய்ய் எழும்புகின்றது. பெலனாய் உன்னி மூச்சை வெளியவிட அதன நடு வைவு நால ம் பழுவ ரைக்கும் மிதந்தெழும்பும். ஆள் உன்னி மூச்சை உள்ளுக்கிழுக்க அதன் மையம் ஏழாம் பழுவ ரைக்கும் இறங்கும்.

## நெஞ்சுக் கூண்டின் அமைப்பு.

நெஞ்சுக் கூண்டு பக்கவாட்டில் பெரும்ப னும் பழுவெலும்புகளாலும் முன்னல் நெஞ்செலும்பும் அதனோடு பொருந்திய பழுமுருந்துகளாலும் பின்னால் வம்சி எலும்புகளோடு பொருந்திய பழுவெலும்புகளாலும் ஆயது. சிறியதும் குறுகலான உள்வாசலும் அகன்றதும் பெரியதுமான வெளிவாசலுமுண்டு. உள்வாசல் கழுத்தோடு தொடர்ந்தும் வெளி வாசல் உந்தியைத் தொடர்ந்தும் ஆனால் விதானத்தால் தடுக்கப்பட் டிருக்கும். விதானம் தரையாகவும் உள்வாசல் கூரையாகவும உள; பழுவெலும்புகளுக்கிடையே பழுவிடைப் பசிகள் பற்றுகின்றன. ஆகவே பக்கத்திற்குப் பக்கம் அகன்றும் முன்னுக்கும் பின்னுக்கும் குறுகியும் மேல்மட்டில் குறுகியும் தரை அகன்றும் காணப்படும்.

## சுவாசம்

சுவாசம் என்பது வாய் நாசிகள் வழியாய், சுவாசப்பைக்குள்ளே காற்றை வாங்குவதும், திரும்ப அதை வெளியே விடுவதுமாகிய முயற்சி களடங்கிய ஓர் தொழிலாகும்.

இடது மூக்கால் நான்கு மாத்திரை அளவு தூய காற்றை உள்வாங்கு வதைப் பூரகம் என்பர். உள் வாங்கின காற்றைப பதினாறு மாத்திரை அளவு நிறுத்தலைக் கும்பம் என்பர். பின் எட்டு மாத்திரை அளவு வலமூக்கால் வெளியிடுதலை இரேசகம் என்பர்.

மேற்கூறியவாறு தூய காற்றை . உள்வாங்கி உடலின் மேல், கீழ், பக்கமீக கூறப்பூரித்து உட்பதித்தல் கிய அளவுடைய விடுத்தலைச் செய்தல் வேண்டும். தடுத்தல கிய கும்பத்தைச் செய்து வாழ்ந்து வந்தால் எளி தாய் சுகமுடன் வாழலாம் என்று திருமூலர் திருமந்திரத்தில் கூறுகிறார்.

பிராணி, தாவரங்கள் எல்லாம் தங்கள் உயிரைத் தாங்குவதற்கும் தொழில்கள் கிரமமாய் நடப்பதற்கும் உணவு மட்டுமின்றி காற்றும் ஆகாரமும் தாராளமாய் வேண்டியது இன்றியமையாததாகும். காற்று இவைகளின் உட்பகுதிகளிலும் தன்னிச்சையாய்ச் செல்லவும் வேண்டும். காற்று இப்படி புகுந்து பரம்புவது சுவாசம் என்பர். ஆகவே சுவாச இயக்கம் பிராணிகளுக்குப் பிரதானமாய் வேண்டியது. எதற்காகவெனில் சரீரத்துக்குத் தேவையற்று பழைய பதார்த்தங்களைச் சேர்ந்திருக்குங் காரியத்தை அப்பதார்த்தங்களினின்று பிரித்துப் பிராண (உயிர்) வாயுவைப் புகுத்துவது சுத்தி செய்யும் பொருட்டாகத்தான். காற்றானது சுவாசப் பைக்குள் (புப்புசம்) வாங்கப்படும்பொழுது விதானம் சுருங்கி ஒடுங்கிக் கீழ்போக நெஞ்சறை விசாலித்துப் பழுக்கள் தங்களுக்கிடையேயாகவும் மேலாகவும் இருக்கின்ற பேசிகளின் இழுப்பினால் முன்னாகவும் மேலாகவும் துள்ளுகின்றன. நெஞ்சறை விசாலிக்க, சுவாசப்பையும்

ஊதும். காற்றானது மூக்கு, வாய், சுவாசக் குழல் என்பவைகளின் வழியாய்ச் சுவாசப் பைக்குள்ளே போய் அதை விம்மப் பண்ணுகின்றது. இதுவே சுவாசம் வாங்கலாம். அதனைப் புப்புச நிறைவு எனவும் கூறுவார்.

நெஞ்சறை விசாலித்தப்பின் பழுக்கள் பதிந்து விதானம் மிதக்க அவற்றை ஒடுங்கிச் சுவாசத்திற் ஒரு பங்கு சுவாசக் குழல், வாய், மூக்கு என்பவைகளின் வழியாய் வெளியே தள்ளப்படுகின்றது. இதுவே சுவாசம் விடலாகும்.

சுவாசத்தில் மூச்சுப்பைத் துருத்தியைப் போல் ஊதியும் வற்றியும் வரும். வளர்ந்த ஆள் நிமிடத்திற்குப் பதினேழு பதினெட்டுத் தரம் சுவாசிப்பான். இந்த விதிப்படி ஒரு நாளைக்கு 12,000 நாழிகைக்கு அதிகமான காற்று சுவாசப்பைகளால் வாங்கப்படும்.

ஒரு நாளைக்கு வாங்கப்படும் மூச்சின் அளவைக் கீழ்வருமாறு திருமூலர் குறிப்பிடுகின்றார்:—

விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்
தளங்கொ ளிரட்டிய தரனு நடந்தால்
வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே

(திருமந்திரம் 2137)

விளக்கமிக்க முந்நூறும், முப்பதைப் பத்தினால் பெருக்கிக் கிடைத்த முந்நூறும் சேர்ந்து அறுநூறு ஆகும். இரட்டியதாறு என்பது ஆறு ஆறு பெருக்க முப்பத்தாறு ஆகும். இம் முப்பத்தாறையும் அறு நூறுடன் பெருக்க இருபத்தோராயிரத்து அறுநூறு ஆகும். இக்கணக்கின்படி ஒரு நாளைக்குச் செலவாகுமுயிர்ப்பு 21,600. அதற்கு வரவாகும் உயிர்ப்பு 7,200-ஆயின் பாக்கி 14,400.

மேலும் இதனை யூகிமுனி வைத்தியச் சிந்தாமணியிலும் காணலாம்.—

**பிராணன்**

உன்னியே மேலெழுந்து பன்னிரண்டங் குலந்தான்
உயர்ந்தவெட் டங்குலந்தான் மீள வாங்கி
நன்னிநா லங்குந்தான் பாழிற் பாயும்
நலமான குணமெல்லாம் பிராண வாய்வு
பன்னவே நீலவர்ணம் தேவதைதான் சந்திரன்
பலப்பலவாம் பொசிப் பெல்லாஞ் சீரணம் தாக்கும்
முன்னநா ழிகைக்குமுன் நூற்றறுபது சுவாசம்
முயர்ந்தநா ளொன்றுக்கு மூச்சைக் கேளே

அசைவையால் வாயுக்கள் பன்னிரண்டங்குலம் மேலுக்கு எழும்பி திரும்பி எட்டங்குலம் மீளும். மிகுந்த நாலு அங்குலமும் பாழில் பாயும். இதனால் பிராணவாயு உடலில் கலசகும். இவ்வாயுவுக்கு நிறம் நீலம். தேவதை சந்திரன். பிராண வாயுவினால் உண்ட உணவு சீரணமாகும். இவ்வாறு ஒரு நாழிகைக்கு முன்னூற்றறுபது சுவாசம் நடக்கும்.

நாளொன்றுக் கிருபத்தோ ராயிரத் தறுநூறு
நலமான சுவாசந்தா யெழுந்தி ருக்கும்
கோளொடுறிப் பதினாலாயிரத்து நானூறு
குளித்த மூலாதா ரத்துள் ஒடுங்கும்
பாளொன்றி யேழாயிரத் திருநூறு சுவாசம்
பாழிலே பாய்ந்திடுமென் றறிகப் பின்னை
ஏளொன்றியிதனையே உட்சா தித்தால்
எப்போதும் பாலரா யிருக்கலாமே.

ஒரு நாளில் இருபத் தாராயிரத்து அறுநூறு சுவாசம் நடக்கும். இதில் பதினாலாயிரத்து நானூறு சுவாசம் மூலாதாரத்தினுள் உள்ள டங்கும். ஏழாயிரத்து இருநூறு சுவாசம் வெளிப்பட்டு விடும். இவ்வாறு பாழாகும் பிராண வாயுவை உடலினுள் பெற்றால் மூப்படையாமல் இருக்கலாம்.

### சுவாச நிகழ்ச்சி.

நெஞ்சறையிலுள்ள புப்புசம் துருத்தியைப் போல் இயங்கும்போது வெளிக் காற்றை உள்ளுக்கிழுத்து உள்காற்றை வெளிச் செலுத்தி இயங்கு வது சுவாசம் எனப்படும். எனவே, இருவகைத் தொழில்களைச் சுவாசம் என்பர். சுவாச நிகழ்வை மூன்றுவகையாகப் பிரித்துள்ளனர். அவை.—

(1) புப்புசச் சுவாசம், (2) உடற் வாயுக்களையும் பிராணவாயுவையும் உள்ளும் புறமுமாக ஏந்திச் செல்லும் வழி, (3) திசு சுவாசம் என்பன.

### புப்புசச் சுவாசம்

சீவராசிகளின் மார்புக் கூண்டில் அடங்கியுள்ள புப்புசத்தின் பரந்த பரப்பினூடாகப் பிராணவாயு குருதியில் சுவர்ந்து கலக்கிறது. மற்ற உறுப்புகளில் தோல் புப்புசத்தைவிட மிகவும் ஏராளமான பரப்பை யுடையதாக இருந்தாலும் பிராணவாயு புப்புச மூலமாகவேதான் பெரும் பாலும் உள்ளுக்கிழுக்கப்படுகிறது.

**புப்புச உடல் கூறு.**—புப்புசப் பரப்புகள் புரியட்ட வாயுக்கண்ணறைகளினால் ஆக்கப்பட்டன. அவைகள் இசிவுத் தசை நார்களினால் பிண்ணப்பட்ட கண்ணறைகளினால் ஆனவை. அக் கண்ணறைகளைச் சுவாசப்பை என்பர். மெல்லிய சவ்வுப்போன்ற சுவர்களையுடையது. அச்சுவர்களில் குருதித் தந்துகிகளும் தசிரங்களும் ஏராளமாக நிரம்பப் பெற்றுள்ளன. இம்மாதிரியான கோடானு கோடி சுவாசப்பைகள் புப்பு

சத்தின் மேல் பரப்பில் அடங்கியுள்ளன. இவ்வாறிருந்தும் பார்ப்பதற்கு அளவில் சிறியதாகத் தோற்றமளிக்கிறது. எனினும், வாயுக்கண்ணறைகள் வெளிக்காற்றோடு மூக்கு, தொண்டை, சுவாசக் குழல், அசுகம் ஆகியவைகளின் மூலமாகத் தொடர்புகொள்கிறது. இவ்வுறுப்புகளின் மூலமாக உட்சென்று காற்று சுவாசக் கண்ணறைகளை அடைந்து நேர்முகமாகச் சந்திக்கிறது. ஆகவே, சுவாசக் குழல், அசுகம், அசுகக் கிளைகள் வெளிக்காற்றை உட்செலுத்தவும் உட்காற்றை வெளித்தள்ளவும் வழியாக உள்ளது. 2-3 லிட்டர் காற்றை வாங்கிக்கொள்ளும் சக்தியுள்ளது.

### புப்புச நிறைவு மாறுதல்.

புப்புச நிறைவு மாறுதல்கள் நெஞ்சறையின் வேறுபட்ட அசைவுகளால் ஏற்படுகின்றன. ஒவ்வொரு பூரக நிகழ்ச்சியின்போது நெஞ்சறைக் கூண்டின் பழுவிடைப் பேசிகள் சுருங்குகின்றன. நெஞ்சறை நிறைவு விரிவுகொள்ளுகிறது. புப்புசத்திலுள்ள காற்றின் அழுத்தச் சக்தி வெளிக்காற்றின் அழுத்தச் சக்தியைவிட குறைகிறது. குறையவே வெளிக் காற்றைப் புப்புசம் உறிஞ்சுகிறது. இரேசகத்தின்போது புப்புச நிறைவு குறைகிறது. ஏனென்றால் நெஞ்சறை நிறைவு குறைகிறது.

புப்புச நிறைவு மாறுதல்கள் நெஞ்சறையின் நிறைவு மாறுதலைப் பொருத்தும் புப்புச விரிதல் தன்மையைப் பொருத்தும் உள்ளன.

**புப்புச விரிவும் இசிவும்.**—புப்புசங்கள் ஏராளமான சிறப்பு இசிவுப் பேசி நார்களைக் கொண்டவைகள். ஆகவே அவை மெத்த விரிவடையும் தன்மையையும் இசிவுடையும் தன்மையையும் கொண்டுள்ளன. புப்புசங்கள் எப்பொழுதும் விரிவடையும். புப்புசக் காற்று அழுத்தம் வெளிக் காற்றைவிட அதிகமானால் புப்புசம் விரிவடைகிறது. புப்புசத்தின் உள் சுவரில் மேல்படும் புப்புசக் காற்றின் உள்ளழுத்தமும் நெஞ்சறைக் கூண்டின் வெளிச் சுவரில் மேல்படும் வெளிக்காற்றின் அழுத்தமும் விகற்பப்படுவதே புப்புச விரிவடைய போதுமான காரணமாகும். இவ்விதவித்திய சக் காற்றுகளின் அழுத்தமே புப்புச இசிவுச் சக்தியைப் பிறப்பிக்கிறது.

**பரிபுப்புச இடை அறையின் அழுத்தச் சக்தி.**—பரிபுப்புச நித்தைச் சவ்வினால் புப்புசம் கவ்வப்பட்டு மூடியிருப்பதாலும் மற்றொரு பகுதியினால் நெஞ்சறைக் கூண்டின் உள் சுவரைப் பற்றியிருப்பதாலும் பரிபுப்புச இடை அறை ஏற்படுகிறது. இவ்வறையின் நிறைவு மயிரிழை பிரமாணமுள்ளது. தான் கொண்டுள்ள காற்றும் வெளிக் காற்றும் சந்திக்கவோ போக்குவரத்துக்கோ வழியில்லை. ஆகையினால், வெளிக் காற்று புப்புசத்தினூடாகச் சென்று வாயுக்கண்ணறைகளையும் அவைகளை மூடப்பட்ட பரிபுப்புசச் சவ்வினோடு அணைந்து நின்று நெஞ்சறையின் உள் பக்கச் சுவரைப் பற்றியிருக்கும் பரிபுப்புசச் சவ்வை நெருங்கி மோதுகிறது. இதனால் புப்புசம் மிகவும் பெரிதாக ஊதப்படுகிறது. நெஞ்சறையில் அழுத்தச் சக்தி எவ்வளவாக இருந்தாலும் பரிபுப்புச இடை அறை அழுத்தமில்லாச் சக்தியைக் கொண்டமையால் புப்புசம் வெளிக் காற்றை உறிஞ்சி விரிவு கொள்ளுகிறது. இவ்வித சக்தி புப்புசத்திற்குப் பிரத்தியேகமாகவுள்ளது. நெஞ்சறையில் நிகழும் நேர்மாறான அழுத்தச்

சக்தியால் பழுவிடைப் பேசிகள், விதானம் போன்றவைகள் சுருங்குகின்றன. ஆகவே, நெஞ்சறைக் குறுக்குப் பக்கம் நெடுக்காகவும், மூன் பின் பக்கங்கள் விரிவு கொள்ளுகின்றன.

பூரகத்தின்போது நெஞ்சறைச் சுவர்களின் பேசிகள் சுருங்குகின்றன. நெஞ்சறை விரிவு கொள்கிறது. நெஞ்சறை விரிவுற்றும் பரிபுப்புசச் சவ்வுகள் ஒன்றேடொன்று ஒட்டியே இருக்கின்றன. விரிவு கொள்ள வில்லை. புப்புசக் காற்று அழுத்தமானதும் புப்புசம் அகபரிபுப்புசம், புறப் பரிபுப்புசம் நெஞ்சறை உள்சுவர் ஆகியவைகளை முறையே உந்துகிறது. இந்த உந்துதலினால் பரிபுப்புச இடை அறை அழுத்தம் தாழ்கிறது. இவ்விதக் குறைவு பரிபுப்புச இடை அறையிலிருக்கும்படியான வசா நீரின் அழுத்தச் சக்தியினால் ஏற்படுகிறது என்பதைக் கவனிக்கவும்.

இரேசகத்தின் போது, புப்புசத்திசுக்கள் நிரந்தர விரிவும் இசிவும் கொண்டுள்ளதாலும், பரிபுப்புச இடை அறையின் அழுத்தமில்லாச் சக்தியுடையதாலும், புப்புசம் முழுவதும் சுருங்கி விடுவதில்லை.

**நெஞ்சறையின் அழுத்தமில்லாச் சக்தி.**—நெஞ்சறைக் கூண்டின் உள் சுவர்களுக்கும் பரிபுப்புச அறைகளுக்கும் வெளியிலுமாகவுள்ள அழுத்தச் சக்தியை நெஞ்சறை அழுத்தமில்லாச் சக்தி எனப்படும். இவ்வாறான அறையில் இரைக்குழல், இதயம், அதன் பரீகம், இதய நாடிக் கிளைகள், மேல் குகாநாளம் கீழ்க்குகா நாளம் ஆகியவைகள் உள்ளன. சுவாசம் நடக்கின்ற காலங்களில் புப்புசம் பரிபுப்புச அறையை உந்தும்போது நெஞ்சறை அழுத்தமில்லாச் சக்தி நெஞ்சறையின் மற்ற அருகாமையிலுள்ள உறுப்புகளுக்குப் பரவுகின்றன. நெஞ்சறைக் காற்று அழுத்தமில்லாச் சக்தி இதயத்தின் சடரத்தையோ இதய நாடிகளிலுள்ள அழுத்தச் சக்தியையோ சிறிதேனும் பாதிப்பதில்லை. ஆனால் இதயத்திற்குக் குருதியைக் கொண்டு வரும்படியான பெரிய நாளங்கள் பாதிக்கப்பட்டு நாளங்களின் சுவர்கள் விரிவு கொள்கின்றன. பெரிய நாளங்களின் குருதி அழுத்தம் குறைகிறது. எவ்வளவுக் கெவ்வளவு இங்குக் குருதி அழுத்தம் குறைகிறதோ அவ்வளவுக் கவ்வளவு இதயத்துக்கு அருகாமையிலுள்ள தந்துகிகளிலும் சிறு நாளங்களிலும் குருதி அழுத்தம் மிகுகிறது.

**காற்று நெஞ்சறை.**—பரிபுப்புச இடை அறையில் வெளிக் காற்று நுழைந்தக்கால் புப்புசம் சுருங்கி வற்றிவிடும். அதனைக் காற்று நெஞ்சறை என்பர். நெஞ்சறைச் சுவரினூடே, உந்தி அறையினூடோ ஊடுருவிப் பாய்ந்த காயத்தால் புறப் பரிபுப்புசம் பாதிக்கப்பட்டுப் பொத்தலாகிறது. அப்பொத்தலின் மூலமாக வெளிக்காற்று பரிபுப்புச இடை அறையில் நுழையும். புப்புசமும் அகபரிபுப்புசமும் பிளவுற்று பொத்தல் ஏற்பட்டபோதும், வெளிக்காற்று பரிபுப்புச இடை அறையில் நுழையும். இவ்விரண்டு விதக் காரணங்களால் வெளிக்காற்று பரிபுப்புச அறையில் நுழைந்தால் புப்புசம் சுருங்கிக்கொள்ளும் நிலையைக் காற்று நெஞ்சறை என்பர். ஏனென்றால் வெளிக்காற்று அழுத்தமும் பரிபுப்புச அறைக்காற்று அழுத்தமும் ஒன்றாகிறது. இந்நிகழ்ச்சியால் புப்புச உள் சுவரிலும் புறச் சுவரிலும் ஏற்பட்டுக் கொண்டிருக்கிற அழுத்தச் சக்தி வத்தியாசமின்றி இருப்பதால் புப்புசம் இசிவுத் தன்மையை இழந்து சுருங்கிக் கொள்கிறது. அதனால் மூச்சுத் திணறல் ஏற்பட்டு மரணத்தைச் சம்பவிக்கும்.

விலெங்குகளில் காற்று நெஞ்சறை இரண்டு பரிபுப்புச அறைகளில் ஒரே காலத்தில் ஏற்பட்டபோது செயற்கை சுவாசத்தை ஊக்குவித்தால் சுவாசம் இயங்கும். ஆனால் மனித இனங்களில் பரிபுப்புச அறைகள் ஒன்றோடொன்று தொடர்பற்று விலகி இருப்பதால் ஒரு அறை முழுமையும் காற்று நெஞ்சறை ஆனாலும் மனிதன் இறப்பதில்லை. உயிர் வாழ முடியும்.

## சுவாச இயக்க ஏதுக்கள்.

புப்புசச் சுவாசம் அநேக இச்சாப் பேசிகளின் கிரியையினால் நடக்கிறது. அவைகளின் சுருங்களினால் நெஞ்சறையின் நிறைவு மாறுதல்களை அடைகிறது.

**விதானத்தின் தொழில்.**—விதானம் நெஞ்சறையையும் உந்தியறையையும் பிரிக்கிறது. அது பள்ளமுள்ள பாண்டம் கவிழ்த்து வைத்தது போலிருக்கும். வாய்ப்புறம் உந்தி அறையின் கூரையாகவும் அடிபாகம் நெஞ்சறையின் தரையாகவும் அமைகிறது. விதானப் பேசி நார்கள் சுருங்கும்போது குவிந்து இறங்குகிறது. பக்கச் சுவர்கள் நெஞ்சறையை விட்டு சற்று விலகுகிறது. விதானச் சுருங்கலினால் நெஞ்சறையின் நெடுவாட்டுப் பக்க நிறைவு அதிகரிக்கிறது. விதானச் சுருங்கி இறங்கும்போது உந்தி அறையில் அதன் அருகாமையிலுள்ள உறுப்புகள் உந்திச் சுவரை உந்துகின்றன. அதனால் உந்தி ஊதிக் காணும்.

**பழுவெலும்புகள்.**—நெஞ்செலும்பு-ஒவ்வொரு பழு என்பானது வம்சி என்போடு பொருத்தப்பட்டிருக்கிறது. பூரகத்தில் பழுசங்கிகள் எழும்புகின்றன. நெஞ்செலும்பு முன்னுக்கு உந்துகிறது. இரேசகத்தில், ஒவ்வொரு இணை பழுவெலும்புகளின் வட்டங்கள் நெஞ்செலும்போடு சாய்வாகவும் கீழாகவும் சரிகின்றன. அதனால் நெஞ்சறைக் குறுக்கு வாட்டில் பெரிதாகிறது. பூரகத்தில் புறப்பழு விடைப் பேசிகளின் சுருங்கலினால் பழுவெலும்புகள் இயங்குகின்றன.

பூரக நிகழ்ச்சியில் பழு விடைப் பேசிகளானது சுருங்கல் கிரியையிலிருந்து தளர்வடைகின்றன. முன் சுய நிலையை அடைகின்றன. விதானம் மேலுக்கெழும்புகிறது. பழுவெலும்புகள் இறங்குகின்றன. அதனால் நெஞ்சறை நிறைவு குறைகிறது. பொதுவாக, சுகத்தில் இரேசகம் இளைப்புறும் தொழிலாகும். தீவிர செயலாகாது.

**புப்புசப் பாகங்களின் காற்றோட்டம்.**—சுகச் சுவாசத்தில் மூன்றில் இரண்டு பங்கு புப்புசப் பாகங்கள் காற்றோட்டத்தில் ஈடுபடுகின்றன. அசுகமும் அசுகக் கிளைகளும் தசிரங்களோடு புப்புசத்தில் நுழைகின்ற பாகங்கள் பெரும்பாலும் காற்றோட்டத்தில் பங்கு கொள்கின்றன. இவைகளுக்கு எட்டவுள்ள பாகங்கள் பங்கு கொள்வதே இல்லை. அதிலும் புப்புச முனைகள் காற்றோட்டத்தில் ஈடுபடுவதற்கு வாய்ப்பே இல்லை.

வாயுக்கண்ணறைகள் எல்லாமே ஒரே காலத்தில் செயல்புரிவதில்லை. சில செயலற்றுக் கிடக்கும். உடற்பயிற்சியிலும் பேசிகளின் உழைப்பிலும் சில கிரியைப் புரிகின்றன. சில நேரங்களில் சில வாயுக்கண்ணறைகள் தொழில் புரியும். அப்பொழுது சில ஓய்வு பெறும். இவ்வாறாக மாறி மாறி தொழில் புரிகின்றன. இவை தொழில் அலகுகள் எனப்படும்.

**நிரந்தர நிலுவைக் காற்று.**—பெருமுயற்சியால் புப்புசத்தில் உள் வாங்கின காற்றை வெளித்தள்ளப்பட்டாலும் ஒரு சிறிய அளவு காற்று வாயுக்கண்ணறைகளில் நின்றுகொண்டே இருக்கும். இதனுடைய நிறைவு 1000—1,500 மி. லி. இதன் நிறைவு அளவு வயதிற்குத் தகுந்தாற்போல் மாறும். வயது முதிர்ந்தவர்களுக்கு 2—225 லிட்டர் ஆகும்.

**அலைக்காற்று.**—பூரக நிறைவு அளவும், இரேசக நிறைவு அளவும் 500 மி. லி. ஆகிறது. அது அலைக்காற்று எனப்படும்.

**கூடுதல் நிலுவைக்காற்று.**—நிரந்தர நிலுவைக் காற்றுடன் கொஞ்சம் காற்று வாயுக்கண்ணறைகளில் இருக்கத்தான் செய்கிறது. அதனைப் பெரு முயற்சி இரேசகத்தால் வெளிப்படுத்தலாம். அதிகப்படியான காற்றைக் கூடுதல் நிலுவைக் காற்று என்பர். இது 1,500 மி. லி.—1,800 மி. லி. ஆகும்.

**கூடுதல் அலைக்காற்று.**—சுவாசிக்கும் போது சாதாரணமாகப் புப்புசம் எவ்வளவு வெளிக்காற்றைக் கிரகித்துக் கொள்ள இடம் உண்டோ அதைவிட குறைவான அளவில் உள்ளிழுத்துக் கொள்ளுகிறது. ஆனால் அலைக்காற்று அளவைவிட கூட்டிக் கிரகித்துக் கொள்ளும் காற்றைக் கூடுதல் அலைக்காற்று என்பர். புப்புசச் சுவாச நிறைவு அளவு—அலைக்காற்று, கூடுதல் நிலுவைக் காற்று, கூடுதல் அலைக் காற்று ஆகியவைகளின் கூட்டுத் தொகையே புப்புசச் சுவாச நிறைவு அளவு எனப்படும் (3–5 லிட்டர்).

### சுவாச மாறுதல்கள்.

**தீவிர சுவாசம்.**—இருபது அல்லது முப்பது விநாடிகளுக்குச் சுவாசத்தைச் சற்று நிற்க செய்தால், சுவாசிப்பதற்குத் தடுக்க முடியாத அவா ஏற்படும். அதன் பின் சுவாசித்தால் தீவிர சுவாசம் உண்டாகும். இவ்வாறான முயற்சியினால் ஏற்பட்ட சுவாசத்தைத் தீவிர சுவாசம் என்பர்.

**அசுவாசம்.**—முப்பது விநாடிகளுக்குச் சுவாசத்தை மிக தீவிரப்படுத்தின பிறகு சுவாசத்தைக் கவனித்தால் சுவாசம் நின்று விட்டதுபோல் சில விநாடி காணும். இந்நிலை அசுவாசம் எனப்படும்.

கரியமில வாயு சுவாசத்தைச் செயல் புரியும்படி தூண்டும் செய்கையைக் கொண்டுள்ளது. குருதியில் கரியமில வாயு மிகுதியானால் பூரக, இரேசக மண்டலத்தைக் கிளர்ச்சியுறச் செய்கிறது. அதே காலத்தில் புப்புசத்திலுள்ள தந்துகிகளின் குருதியில் கரியமில வாயுவின் ஈர்ப்புச் சக்தி மிகுகிறது. மிகவே கரியமில வாயு வாயுக்கண்ணறைகளுக்குள் ஓடுகிறது. கரியமில வாயுவின் பிரிவு அழுத்தம் குறைகிறது. கரியமில வாயு குருதியில் குறைய குறைய சுவாசம் புரிதல் குறைகிறது. உடனே திசுக்களிலிருந்து கரியமில வாயுவைப் புப்புசத்திற்கு வரவழைக்கிறது. ஆகையால் கரியமில வாயு பூரக இரேசக மண்டலத்தைத் தூண்டுவிக்கும் கருவியாக உளது.

கரியமில வாயு மிகுதியினால் குருதியும் அமிலத்துவம் (புளிப்பு) மிகுகிறது. நீர்வாயுவின் தோய்வில் விழுக்காடு மிகுகிறது. கரியமிலத் திரவம் காரசாரங்களின் பூர்த்தங்களையும் குறையவைக்கிறது. ஆகவே கரியமில வாயுவின் ஈர்ப்புச் சக்தியும் குருதியின் அமிலத்துவமும் மிகுகிறது. குருதி அமிலத்துவம் சுவாசத்தைத் தீவிரமாகத் தூண்டுகிறது.

சுவாசிக்கும் காற்றில் பிராணவாயு குறைவுபட்டாலும் சுவாசம் தூண்டப்படுகிறது. இதனை அதிக உயரமுள்ள பிரதேசங்களில் உணரலாம். கடல் மட்டத்திற்கு மேல் 1,500 மீட்டர் உயரத்திற்குச் சென்றால் சுவாசம் அதிகப்படும். உயிர் வாயு குருதியில் கலப்பது மிகவும் சிறுபான்மையாகும். ஆனால் உயிர் வாயு அயசெந்தவளத்தோடு இணைந்து ஒரு கலவைப் பொருளாகச் செங்குருதியினால் ஏந்திச் செல்லப்படுகிறது. உயிர் வாயு எவ்வளவு செங்குருதியில் கலந்திருப்பதானது உயிர் வாயு எவ்வளவு அயசெந்தவளத்தோடு இயைபுற்றிருக்கிறது என்று கணக்கெடுப்பதாகும். அதனால் உயிர் வாயுவின் நிறைவு ஏற்படும். ஒரு கிராம் அயசெந்தவளத்துள் 1·34 மி.லி. உயிர் வாயு சேரும். மொத்த அயசெந்தவளத்தின் எடையைக் கணக்கெடுத்தால், உயிர் வாயுவின் மொத்த தொகை தெரியும். ஆகவே பிராணவாயு அயசெந்தவளப் பொருளில் இயைபுற்று பிராண அயசெந்தவளப் பொருளாகக் குருதி நாடிகளின் மூலமாகத் திசுக்களுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது

தந்துகிகளை அடைந்ததும் பிராணவாயுவின் ஈர்ப்புச் சக்தி நாடிகளிலிருப்பதைவிட மூன்றில் ஒரு பங்கு குறைகிறது. திசுக்களின் வளர்சிதைக்காகத் தகனம் நடக்கின்ற காலத்தில் பிராண வாயு செலவழிகிறது. பிராண அயசெந்தவளத்திலிருந்து பிராணன் விடுபட்டு அயநாத செந்தவளமாக நிற்கிறது. தகனம் முடிந்து குருதி, சிறு நாளங்களின் வழியாகத் திரும்பும் போது பிராணனல்லாத அயசெந்தவளப் பொருள் கார் குருதியோடு புப்புசத்திற்குக் கொண்டுவரப்படுகிறது. பிராண அயசெந்தவளம் குருதிக்குச் செந்நிறம் தருகிறது. பிராணவாயு பிரிந்ததும் குருதி கருமையாக மாற அதனைக் கார் இரத்தம் எனப்பட்டது. கார் இரத்தத்தில் அயசெந்தவளம் அதிக அளவில் மிகுந்துவிட்டால் குருதியின் நிறம் நீலநிறம் அடையும். அதனை நீல நிறச் குருதித் தோற்றம் (நீலம்பாரி) என்பர்.

திசுக்களில் வளர்சிதைக்காக நடக்கிற தகனத்தில் கரியமில வாயு உண்டாகிறது. கரியமில வாயு கரியமிலத்திரவமாகவும் காரசாரங்களாகவும் இயைபுறுகின்றன. முக்கியமாக சோடதசாரம், யவ்வாச்சார உப்புகளாக மாறுகின்றன. கார் இரத்த நாளங்களில் குருதி மிகுந்து காணப்படுகின்றன. கரியமில வாயு குருதியில் இவ்வித காரசாரங்கள் மூலமாகப் புப்புசங்களுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன.

**பிராண வாயுவைக் குருதியில் ஏந்தி செல்லும் வழி.**—புப்புசத்தில் பிராணவாயு எவ்வளவு குருதியில் கலந்துள்ளது என்று கணக்கிடக் கூடிய அளவிலில்லை. மிகவும் சிறுபான்மையே ஆனால் குருதியில் வந்தடைந்த பிராணவாயு எங்குச் செல்வானதென்று ஆராயுமிடத்து அயசெந்தவளத்தில் இணைந்து விடுவது கண்கூடாகிறது. நாடிக்

குருதியில் பிராணவாயு எவ்வளவு கலந்திருக்கிறது என்று அளவெடுக்க அயசெந்தவளத்தின் கணக்கெடுப்பே தெளிவுபடுத்தும். ஒரு கிராம் அயசெந்தவளம் 1·34 மி. லிட்டர் பிராண வாயுவைக் கிரகித்து பிராண அயசெந்தவளமாகும், சுகதேகிகளுக்கு 14 முதல் 16 கிராம் விழுக்காடுவரை அயசெந்தவளம் குருதியிலிருக்கும். எனவே, 18 முதல் 21 விழுக்காடு பிராணவாயுவைக் கொள்ளும். ஆகவே, உடல் குருதியில் பிராணவாயு 18—21 விழுக்காடு உள்ளது.

புப்புசத்தில் அயசெந்தவளததோடு கலந்த பிராணவாயுவை அய செந்தவளம் ஏந்தித் திசுக்களுக்குக் குருதி மூலமாகச செல்லுகிறது. இவ்வயச் செந்தவளம் செவ்விலங்களின் பரப்பிலுள்ளது. செவ்விலங்கள் குருதிச் சுற்றோட்டத்தோடு செல்லுகின்றபடியால் ஆங்காங்கு உடலுறுப்பு களுக்கென்று தன்னுள் அடங்கிய பிராண அய செந்தவளத்தின் மூல மாகத் திசுக்களுக்குச் சேர்ப்பிக்கிறது.

**கரியமில வாயுவைக் குருதியில் ஏந்திச் செல்லும் வழி.**—திசுக்களி னின்றும் பேசிகளினின்றும் பேசி அமிலங்கள் குருதியில் கலக்கின்றன. அதனால் கரியமிலங்கள் (இருந்தாமிலம்) மிகுதியாகின்றன. குருதி யிலுள்ள சோடதம், யவ்வம் போன்றவைகளோடு விரைவில் கூடி சோடத்து வீகாரம், யவ்வதுவ்காரம் உண்டாகின்றன. இவ்வாறாகக் கரியமில வாயு திசுக்களிலிருந்து புப்புசத்திற்கு ஏந்திச் செல்லப்படு கிறது.

## திசு சுவாசம்.

சுவாசத்தின் தொழிலானது புப்புசக் கண்ணறைகளிலிருந்து உயிர் வாயு செவ்விரத்தத்தின் மூலமாகத் திசுக்களுக்கு ஏந்திச் செல்லப் பட்டு, திசுக்களிலுள்ள கரியமில வாயுவைக் கார் இரத்தத்தின் மூலமாகப் புப்புச வாயுக் கண்ணறைகளையடைந்து புப்புசங்களினால் வெளியேற்றப்படுகிறது.

சுவாசச் சுழற்சி உயிர்வாயுவினைப் பெறுதலில் ஆரம்பித்து, கரியமில வாயுவை வெளிப்படுத்தலில் முடிவடைகிறது. இவ்வாறான வாயு மாற்றங்கள் குருதிக்கும் புப்புசவாயுக் கண்ணறை வாயு விற்கும் இடையிலுள்ள புப்புச தந்துகிகளின் சுவரோடு இணைந் திருக்கின்ற வாயுக்கண்ணறையின் சுவரின் மூலமாக நடக்கிறது.

கலவை வாயுக்களின் மொத்த அழுத்தம் கலவையில் சேர்ந்த ஒவ்வொரு வாயுவின் பிரிவு அழுத்தங்களின் கூட்டுத் தொகைக்குச் சமமாகும். வெளிக்காற்று ஒரு கலவை வாயுவேயாகும் முக்கியமாக காலக வாயு, உயிர் வாயு, நீர் வாயு, தீவாயு, கரியமில வாயு போன்றவைகள் கலப்புற்றனவாகும், இக் கலவை வாயுவில் உள்ள ஒரு தனி வாயுவின் பிரிவு அழுத்தம் அவ்வாயு தனியாக இருக்கும் போதுள்ள அதன் சுய அழுத்தச் சக்தியேயாகும். புப்புச வாயு கண்ணறையில் உள்ள வாயுவின் அழுத்தம் வெளிக்காற்றின் அழுத்தச் சக்தியே உடையதாக இருக்கும்.

புப்புச வாயுக்கண்ணறைகளின் வாயுவானது நீர் திரளைகளால் கரைசலாகின்றது. ஆகவே வாயுக்கண்ணறையின் கரைசல் வாயு நீர்த் திரளையின் கூட்டு அழுத்தம் 760 மி. மீ. பாதரசம். இது வெளிக் காற்றின் கூட்டு அழுத்தமாகும். மனித உடலின் சாதாரண வெப்ப நிலை (37°சி) யிலிருக்கின்ற காலத்து நீர்த்திரளையின் அழுத்தம் 47 மி. மீ. பாதரசம். எனவே தனித்த வாயுக்களின் கூட்டு அழுத்தம் (760–47) 713 மி. மீ. பாதரசம் ஆகும்.

வாயுக் கண்ணறையின் கலவை வாயுவின் அழுத்தம் 713 மி. மீ. பாதரசம். காலக வாயுவின் அழுத்தம் 575 மி. மீ. பாதரசம். உயிர் வாயுவின் அழுத்தம் 100 மி. மீ. பாதரசம். கரியமில வாயுவின் அழுத்தம் 40 மி. மீ. பாதரசமாகும்.

ஒரு வாயு மற்றொரு திரவத்தில் கலக்க நேர்ந்தால் அவ்வாயு திரவத்தில் கரைந்து கலந்த சிறிது நேரத்திறகெல்லாம் கலவையில் சமநிலை ஏற்படுகிறது. காற்றிலிருந்து எத்தனை காற்றுத் திரளைகள் திரவத்தைச் சென்றடைகிறதோ அதே எண்ணிக்கையுள்ள காற்றுத் திரளைகள் திரவத்திலிருந்து காற்றை வந்தடைகின்றன. கலவைத் திரவத்தில் வாயுவின் பூர்த்தம், அக்கலவைத் திரவத்தோடு சரி விழுக்காட்டில் காணும். திரவத்தில் பூர்த்தமாயுள்ள வாயுவின் திரளைகள் குறைவு பூர்த்தமுள்ள காற்றுக்கு ஒடுகின்றன. இவ்வாறு ஒரு திரவத்திலிருந்து பிரிந்து காற்றோடு கலக்கும் தன்மைக்குத் திரவ வாயுவின் 'ஈர்ப்புச் சக்தி' என்பர். ஒரு திரவத்தில் கலந்த அதிக பூர்த்தமுள்ள வாயுவின் திரளைகள் பிறிதொரு திரவத்தின் தொடர்புடைய காற்றில் உள்ள குறைந்த பூர்த்தமுள்ள வாயுவை நோக்கி ஓடும். வாயுவின் ஈர்ப்புச் சக்தியும் அருகாமையிலுள்ள வாயுவின் பிரிவு அழுத்தமும் சமமாகிற வரை இவ்வாறு வாயு ஓடிக் கொண்டிருக்கும்.

எல்லா வாயுக்களும் அதிக பிரிவு அழுத்தமுடைய இடத்திலிருந்து குறைந்த பிரிவு அழுத்தமுடைய இடத்திற்குச் செல்லும். அதுபோல அதிக ஈர்ப்புச் சக்தியுள்ள இடத்திலிருந்து குறைந்த ஈர்ப்புச் சக்தியுள்ள இடத்திற்குச் செல்லும்.

காரிரத்தத்தில் கரியமில வாயுவின் ஈர்ப்புச் சக்தி 45—48 மி. மீ. இரசமாகும். வாயுக் கண்ணறையில் கரியமில வாயுவன் பிரிவு அழுத்தம் 40 மி. மீ. இரசம். எனவே காரிரத்தத்திலிருந்து கரியமிலவாயு புப்புச வாயுக் கண்ணறைக்குச் செல்கிறது. புப்புசங்கட்கு வரும் காரிரத்தத்தில் பிராணவாயுவின் ஈர்ப்புச் சக்தி 70—80 மி. மீ. இரசம். வாயுக் கண்ணறையின் பிராணனின் பிரிவு அழுத்தம் 100 மி. மீ. இரசம். எனவே வாயுக் கண்ணறையிலிருந்து பிராணவாயு குருதிக்குச் செல்கிறது. இப்போது குருதியில் உயிர் வாயுவின் அழுத்தம் மிகுந்து கரியமில வாயுவின் ஈர்ப்புச் சக்தி குறைந்து காணும்.

திசுக்கள் ஓயாமல் பிராணவாயுவைப் போடணித்துக் கொண்டும் கரியமில வாயுவை உண்டாக்கிக் கொண்டும் இருக்கின்றன. இதனால் விலங்களின் உயிர் வாயுவன் ஈர்ப்புச் சக்தி குறைகிறது. கரியமில வாயுவின் ஈர்ப்புச் சக்தி அதிகரிக்கிறது. திசு திரவத்திலிருந்த உயிர் வாயு விலங்

களுக்குள் செல்லுகிறது. கரியமில வாயு வெளிவருகிறது. திசு திரவத்திலிருந்த உயிர் வாயு சென்றதும் அதில் மிதந்துள்ள தந்துகிகளின் குருதியிலிருக்கின்ற உயிர் வாயு திசு திரவத்திற்குச் சென்று கலக்கிறது. கரியமில வாயு திசு திரவத்திலிருந்து தந்துகிகளின் சுவர் மூலமாகக் குருதிக்குள் சேருகிறது.

திசு வளர்சிதை மாற்றம் அதிகரிக்க அதிகரிக்க உயிர் வாயுவின் ஈர்ப்புச் சக்தி குறைந்து கொண்டே போகும். தேக முயற்சிகளில் தந்துகிகள் விரிவடைகின்றன. ஓய்வில் சுருக்கிக் கொள்கின்றன என்பதினால் உணரலாம்.

உயிர் வாயு சடக்கிரியையால் குருதியில் கலந்திருத்தல் குறிப்பிடத்தக்க அளவில்லை. எனினும் உயிர் வாயு நாடிக் குருதியில் 18 முதல் 21 விழுக்காடு கலந்திருக்கிறது. இவ்விதம் மீண் செயலால் ஏற்பட்டதென்று தெரியவருகிறது. குருதியில் புகுந்த உயிர் வாயு அயசெந்தவளத்தோடு அதிவிரைவில் இணைந்துவிடுகிறது. இத் தவளப் பொருள் ஒவ்வொரு குருதி செவ்விலத்திலுள்ளது. ஆகையால் உயிர் வாயு அயசெந்தவளத்தோடு இணைந்து குருதிச் செவ்விலத்தோடு திசுக்களுக்கு எந்திச் செல்லப் படுகிறது.

## நரம்பு மண்டலத்தின் ஆட்சி.

முகுளத்தின் நான்காம் அறைத் தரையில் சுவாச நரம்பு மண்டலம் கிடக்கிறது. அது பூரகத்தையும் இரேசகத்தையும் தொழில் படுத்துகிறது. இதனைப் பூரக இரேசக நரம்பு மண்டலமென்பர். சுவாச நரம்பு மண்டலத்தில் ஒன்றுதான் சுவாசத்தை ஆட்சிபுரிகிறது என்று எண்ணி விடலாகாது. அதற்கு மேல் கசேரு கோர்த்தத்தின் காரையும் சேர்ந்தாற் போல் ஆட்சி புரிகிறது என்று கொள்ளவும்.

## அத்தியாயம் 15

### அன்னமயக் கோசம்

உயிர் வாழ் பிராணிகளுக்குச் சதா ஆக்க சக்தியை ஊட்டுவித்துக் கொண்டயிருக்க வேண்டியதாகிறது. உடலைப் போடணிக்க, உடலைக் காட்டு நின்ற பொருள்கள், இதய இயக்கச் சதனை திசுக்களில் அவ்வப்பொழுது சிதைவு ஏற்பட்டபோது அவைகளைப் பழுது பார்க்கும் பொருள்கள்போன்ற வைகள் அவசியம் தேவைப்படுகின்றன. மனித இனமும் மிருகங்களும் அப்பொருள்களை அவைகளின் அக்கம் பக்கங்களிலுள்ள தாவர, சங்கம, நீர் போன்ற உணவுப் பொருள்களிடமிருந்து பெறுகின்றன. மனித வாழ்க்கையில் அன்றாடம் பசியைத் தணிப்பதற்குண்டான நிகழ்ச்சிக்குக் காரணங்களில்லாமலில்லை அநாதியாகத் தொன்று தொட்டுவந்த பாச பந்தமே காரணமாகின்றன வென்று திருமந்திரத்தில் திருமூலர் கூறு கிறார் உயிர் வாழ் பிராணிகள், என் மனிதனுங்கூட உலகிலுள்ள இயற்கை பொருள்களுடன் அநாதியாகக் கூட்டுறவு கொள்ளுகின்றன. எனவே, உண்ட உணவானது உணவுப் பாதையில் சிக்கு முக்கலாகச் சின்னா பின்னமாகச் சிறியவைகளாக நொறுக்கப்பட்டு அநேகவித மாறுதலடை கின்றன. எண்ணற்ற சிறிய பங்குகள் புதிய சேர்க்கையால் பிறிதொரு பொருள்களாகின்றன. மறுபடியும் பிரிகின்றன. பிறகு தன் சுய ரூப மடைகின்றன. இவைகளின் நிகழ்ச்சிகளால் பிராணிகளின் மூலாதாரச சடக் குணங்களைப் பிரதி பலிக்கச் செய்விக்கின்றன.

ஆகவே, உணவுப் பாதையில் உண்ட உணவுப் பொருள்களானது சட இரசாயன மாறுதல்களைப் பெற்று உடல் விலங்களால் பேடணத்துக்குரிய பொருளாகி உடலைப் பேணவைக்கும் ஆக்க சக்திகளாகின்றன. இந் நிகழ்ச்சியே செரிமனம் எனப்படும். செரிமன நிகழ்ச்சியில் சிக்கு முக்கலான கரையாத பொருள்களும் கூட எளியவையாகவும் கரையக் கூடியப் பொருள்களாகவும் மாற்றப்படுகின்றன. மாற்றமடைந்த சீரணித்த பொருள்கள் குருதியின் வாயிலாக உடல் விலங்களுக்கு ஏந்திச் செல்லப் படுகின்றன. அவைகளைக் கொண்டு விலங்கள் வளர்கின்றன, வாழ் கின்றன. சத்துள்ளப் பொருள்களை உணவுப் பாதை மூலமாக இல்லாமல் வேறொரு வழியாக (குருதியிலேயே நேரிடையாக) செலுத்தினால் உடல் விலங்கள் அவைகளை ஏற்பதேயில்லை. அவைகளைத் தங்களுடைய அன் னியப் பொருள்களாகவே மதிக்கின்றன. செயற்கையாக, சீரணமான சத்துள்ளப் பொருள்களில் சில குருதியில் நேரிடையாகச் செலுத்தினால் சில சமயம் விலங்கள் ஏற்றுக் கொள்ளுகின்றன. ஆராயுமிடத்து, பன் விலப பிராணிகளில் செரிமனம் பிரத்தியேகமாகத் தனிப்பட்ட உறுப்பில் நடக்கிறது. அதாவது செரிமனம், உணவு உறுப்பில் அல்லது செரிமன உறுப்பில் பிரத்தியேகமாக நடக்கிறது. அதனை அன்னமயக் கோசம் எனபர்.

அன்னம் பிராணனென் றார்க்கு மிருவிந்து
தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்ன மாமுருத் தோன்றும் எண் சித்தியாம்
அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே

(திருமந்திரம் 1929.)

யார்க்கும் உண்ணும் உணவினால் நண்ணும் பயிற்சியாகிற உயிர்ப்பினாலும் உண்டாகும் இருவிந்துகள். அவ்விந்துவின் மாண்பினை அறிந்து தன் உடலகத்தே உண்டு கொள்வதாகிய தங்குதலைச் செய்ய வல்லார்க்கு அவர் தம் உடம்பு பொன் போன்று திகழும். அவர்கள் இந்நிலமிசை நீடுவாழ்வார்கள்.

அன்னத்தில் வந்து அடங்கும்படி கண்டு
மன்னப் பிராணனாம் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்து நா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயுங்காயத்திலே

(திருமந்திரம் 1928)

உண்ணும் நல்லுணவால் ஏற்படும் விந்து தன் உடம்பகத்தே அடங்கும் வகையினைக்கண்டு, உயிர் நெடுநாள் நிலை பெறுமாறு செய்தல் வேண்டும்.

சீவராசிகள் உயிர் வாழ வேண்டுமானால் தினமும் நடக்கும் வளர்சிதை மாற்றங்களைப் பூர்த்தி செய்ய உணவு உட்கொள்ளுவது அவசியமாகும். மனித இனமும் மிருக இனங்களும் தாவரப் பொருள் களையும், சங்கமப் பொருள்களையும் தண்ணீரையும் உணவுப் பொருள்களாக ஏற்கின்றன. உணவை ஏற்று உடலை வளர்க்கின்ற நிகழ்ச்சி இன்று நேற்று உண்டானதல்ல. என்று சீவ உடல்கள் ஏற்பட்டதோ அன்றே உணவை ஏற்று உடலை வளர்க்கும் செயல் ஏற்பட்டது. உயிரும் உடலில் ஒன்றி சரிவர இயங்குகிறது. உணவு ஏற்கும் பிரச்சாரம் இல்லை என்றால் பாச பந்தமே உலகில் அற்றுப் போம். ஆகையால் உணவு உட்கொள்ளும் செயல் அனாதியாக ஏற்பட்ட சீவராசிகளுக்குள்ள பச பந்த ஏற்பாடாகும். உண்ட உணவுப் பொருள்கள் அநேக மாறுதல்கள் அடைந்து, நுண் அணுக்களாகப் பிரிக்கப்பட்டு, புதிய செரிமனக் கூட்டுப் பொருளாக மாற்றப்பட்டு, அவைகளை உடல் அணுக்கள் உள்ளுக்கு வாங்கி மறுபடியும் அவை களால் அநேக பிரிதொரு பொருளாக மாற்றப்பட்டு சீவன்களின் உடலமைப்பையும் உயிரியக்கத்தையும் தெற்றென விளங்கச் செய்கிறது.

உணவுப் பதையில் ஓரறிவு இந்திரிய முப்பூக்கள் சுரப்பிக்கப் படுகின்றன. அம்முப்பூக்கள் உணவுப் பொருள்களை இரசாயன முறையாகப் பிளப்படுத்தப்படுகின்றன. இம்முப்பூக்களை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். அவைகளாவன;—

(1) காலிலிக முப்பூக்கள்.

(2) நிணமுப்பூக்கள்.

(3) கரிநீரக முப்பூக்கள்.

1. காலிலிக முப்பூக்கள்—காலிகப் பொருள் அல்லது புரோதப் பொருள்களைப் பின்னப்படுத்தப்படுகின்றன.

2. நிணமுப்பூக்கள்—நிணம் அல்லது கொழுப்புப் பொருள்களைப் பிரிக்கின்றன.

3. கரிநீரக முப்பூக்கள்—மாவுப் பொருள்கள், சர்க்கரைப் பொருள்கள் போன்றவைகளைச் சீரணிக்கச் செய்கின்றன.

இம் முப்பூக்கள் உணவுப் பாதையிலுள்ள சுரப்பிக் கோளங்களிலிருந்து விடுவிக்கப்பெறுகின்றன. செரிமன இரசங்களில் கலந்துள்ளன. ஆனால் ஒரே தொழிலைப் புரிந்தாலும் ஒவ்வொன்றும் அமைப்பில் வெவ்வேறாகத் திகழ்கின்றன. உதாரணமாக, குக்கியில் கிடக்கும் காலிலிக முப்பூவும் கணையத்தில் உண்டாகும் காலிலிக முப்பூவும் அமைப்பில் ஒன்றல்ல. தொழிலில் ஒரே வேலையைச் செய்கின்றன.

உணவுப் பொருளை இரசாயன மாறுதல் அடைதலன்றியும் உணவுப் பாதையின் இயந்திரத் தொழிலாலும் மாறுதலடைகின்றன. இயந்திர மாறுதல்களால் உணவானது வெவ்வேறு பொருள்களாகப் பிரிக்கப்படுகின்றன. உணவுப் பாதையில் ஒவ்வொரு கட்டங்களுக்கும் நெகிழ்ந்து செல்லுகின்றது, செரிமன நீரால் கலந்து சீரணிக்கப் பட்டும் செரிமனமாகாதப் பொருள்களை மலமாகக் கழித்துப் வெளித் தள்ளப்படுகின்றது.

மனிதன் மாமிசம் வகைகளையும் மரக்கறிகளையும் உண்கின்றான். அவன் வாழ்வதற்குத்தான் உண்கின்றான் என்ற உண்மையை யாராலும் மறுக்க முடியாதாயினும், அநேகர் இந்த உண்மையை அறிந்திலர். மேலும் உடலை அழகுடனும், பலத்துடனும், நோய் அணுகாமல் தடுக்கும் சக்தியுடனும் வளர்க்கதத்தக்க உணவையும் பலர் அறிந்திலர். அறிந்திருந்தாலும் நடைமுறையில் அனுசரிப்பதில்லை. செல்வந்தராயினும் சரி ஏழைகளாயினும் சரி வகையின்றி உணவருந்திப் பல நோய்களுக்கு ஆளாகிறார்கள்.

ஆரோக்கியமான வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்குவது சத்தான உணவாகும். உணவு வயிற்றுப் பசியை மட்டும் தீர்த்து விடுவதில்லை. நம் உடலுக்கும் அதனுள் இருக்கும் உள்ளத்திற்கும் உயிரை அளித்து வாழ்க்கையை மகிழ்வுறச் செய்கிறது. கருப்பையில் கருத் தரித்தது முதல் வயது முதிர்ந்த கிழவனாகி இம்மண்ணில் சாகும் வரை உணவானது நம் இவ்வுலகில் வாழ்வதற்கான சக்தியைத் தருகிறது. ஆண்மையும், வீரமும், அறிவும் தந்து இன்பம் எங்கும் நிறையுமாறு செய்வது சத்துள்ள உணவேயாகும்.

பிராணிகளுக்கு வேண்டிய சக்தி கிடைப்பதற்கு ஒரே வழி உணவு உட்கொள்வதுதான். மனித உடலும் ஒரு உலை. அந்த உலைக்கு வேண்டிய விறகு உணவாகும். உணவுப் பொருள்கள் உடலின் பல உறுப்புகளிலும் ஆங்காங்குள்ள எண்ணற்ற நுண்ணிய விலங்களில் எரிந்து உடலுக்கு வேண்டிய சக்தியைத் தருகின்றன. உணவிலுள்ள சீவ சக்தியுள்ள இரசாயனப் பொருள்கள் பிராணவாயுவுடன் கலந்து எரிகின்றன. இச்செயலைத் "தகனம்" என்று அழைப்பதுண்டு. அதன் பயனாக உட்டிணச் சக்தி அல்லது சூடு சக்தி பிறக்கிறது. இந்த வேலை எண்ணற்ற உடல் விலங்களில் நடைபெறுகிறது. இந்த எண்ணற்ற நுண்ணிய உலைகள் எப்போதும் வேலை செய்து கொண்டிருக்கவேண்டும். அவற்றை மூடிவிட முடியாது. உலைகள் இயங்க உணவு எப்போதும் தேவை. மழைக் காலமானாலும் கோடைக் காலமானாலும் உணவு உண்டாக வேண்டும். ஆகவே உடலுக்குச் சக்தி அளிப்பது உணவின் முதல் வேலையாகும்.

உடலை வளர்ப்பது உண்வின் இரண்டாவது பணியாகும். மராமத்து செய்வதும் ஆகும். உடல் அமைப்பிற்கும் விலங்களின் வளர்ச்சிக்கும். அவற்றின் கழிவு தேய்வை ஈடு செய்து மராமத்துச் செய்வதற்கும் உணவு தேவை. எனவே வளர்சிதை மாற்றங்களுக்கு உணவு உறு துணையாகிறது.

உணவினுடைய மூன்றாவது வேலை உடலைக் காப்பதாகும. உயிருள்ள உடலிலே சுவாசம், குருதி ஓட்டம், உடற்காங்கை உற்பத்தி இவை சதா நடந்துகொண்டே இருக்கும். இவை நடப்பது விலங் களில் நடக்கும் சில இன்றியமையாத இரசாயனக் கிரியைகளின் விளைவால் ஆகும். இந்தச் சீவாதாரச் செய்கைகள் நடப்பதற்குச் சில சத்துப் பொருள்கள் தேவை. ஆனால் இந்தச் சத்துப் பொருள் களுக்கு மாவுப் பொருள், கொழுப்பு, புரோதம் இவற்றின் அளவு குறைந்தால் உடனே பெரிய கெடுதல் எற்படுவதில்லை. ஏனெனில் இவற்றின் குறையைத் தீர்க்க உடலில் உள்ள சேமிப்புப் பயன் படுகிறது. இவைகளின் குறைவால் உடல் மெலியலாம். ஆனால் உண்மையில் இருக்கவேண்டிய காப்புப் பொருள் அளவு குறைந்தால் நோய்கள் தாக்குவது நிச்சயம்.

இயற்கையிலுள்ள பதார்த்தங்கள் (சடப் பொருள்கள்) எல்லாம் பிராணி, தாவரம், உலோகம் என்று மூன்று வகுப்புகளில் அடங்கும். இவ்வகுப்புகளைச் சேர்நத பொருள்கள் எண்ணிறைந்தவைகளாகும். (1) அநிந்திரியப் பொருள்கள் என்றும் (2) இந்திரியப் பொருள்கள் என்றும் இரண்டு பெரும் பிரிவில் அடங்கும். பிராணி, தாவரம் ஆகிய இவ்விரண்டும் இந்திரியப் பொருள்களாகவும் உலோகம் அநித் திரியப் பொருளாகவும் அடங்கும்.

பிராணிகள் அநேகமாக உணவாக உட்கொள்ளுவதெல்லாம் இந்திரியப் பொருள்களாக உள்ளன. அவைகளில் உலோகப் பொருள்கள் அடங்கியுள்ளன.

இந்திரியப் பொருள்களான நெய், கொழுப்பு, சர்க்கரை, மாவு, பிசின், காடி, சாராயம், பால், முட்டை, தசை, காய்கறிகள் முதலியவைகளைப் பல்லாண்டுகளாகப் பண்டைய நாட்களிலேயே அறிந்து உண்டு வாழ்ந்தனர். மேலும், உணவாதிப் பொருள் களிலுள்ள குண்ப பேதங்களையும் கண்டனர். ஒவ்வொரு பொருள் களிலும் முக்குணங்கள் உள்ளன. அதாவது சத்துவம், இரசத்துவம், தமோத்துவம் என்ற மூன்று குணங்கள் உள்ளன. எந்தக் குணம் ஒரு பொருளில் முதன்மையாக வுளதோ அதைக் கொண்டு இன்ன பொருள் இன்ன குணமுள்ள பொருளென்றனர். எனவே சாத்வீதகப் பொருள் என்றும் இரசத்துவப் பொருள் என்றும் தமோத்துவப் பொருளென்றும் குறிப்பிட்டுள்ளனர்.

ஆகவே உணவுப் பொருள்களில் குணங்கள் மட்டுமல்லாமல் உயிர் தாதுப் பொருள்களும் அடங்கியுள்ளன. வாதமானது உணவின் சத்துள்ள வாதத் தாதுவைத் தனக்கு இரையாகக் கொண்டு இத்தேகம் தன்னிச்சைப்படி ஓடவும், பேசவும் சாதகமாய் இருப்பதுடன் புத்தி, இந்திரியங்கள், மனம் ஆகிய இவைகள் சரியான நிலையில் நிற்கவுஞ் செய்கின்றது; பித்தமானது நமது உணவின் சத்துள்ள பித்தத் தாதுவை இரையாகக் கொண்டு தேக காந்தி, ஆரோக்கியம், ருசி, சடாரக்னி, தகனம் முதலிய பல நன்மைகளை விளைவிப்பதுடன் சடாரக்கினியானது சீரணிக்கச் செய்கையில் அதற்கு உதவியாய் நிற்கின்றது. கபமானது உணவின் சத்திலுள்ள கபதத் தாதுவைத் தனக்கு இரையாகக் கொண்டு தேகத்திற்கு மினு மினுப்பு, தைரியம் பலம் முதலியவைகளைக் கொடுப்பதுடன் கைகால்களின் கீல்கள் தன்னிச்சைப்படி அசைவதற்கும் அனுகூலமானவையாகவும் இருக்கின்றது.

மேற்கூறிய முத்தாதுக்கள் உணவின் சத்திலுள்ள முத்தாதுக் களையும் தமக்கு இரையாகக் கொண்டு மற்ற அம்சங்களாகிய சுவை, குணம் இவைகளைப் பூதம், குணம் ஆகிய தத்துவங்களுக்குத் தருகின்றன. ஆகையால் உட்கொள்ளும் ஆகாரம் அல்லது தீனியானது தேகத்திற் குரிய வாதாதித் தாதுக்கள் சரியாக இருக்கும்படி அவற்றிற்கு ஆகாரமான அந்தந்தத் தாதுக்களை அளவாயுடைய பொருள்களை யுடையதாயிருக்கவேண்டும்.

பஞ்ச பூதங்களில் வாயுவானது உணவின் சத்துள்ள துவர்ப்புச் சுவையைத் தனக்கு இரையாகக் கொண்டு உருவற்ற பொருள்களை பல தாதுக்களாகப் பகுக்கின்றது. தீ பூதமானது உணவின் சத்திலுள்ள கார்ப்புச் சுவையைத் தனக்கு இரையாகக் கொண்டு வாயு பூதத் தால் பகுக்கப்பட்ட தாதுக்களுக்கு உருவத்தைக் கொடுக்கின்றது. நீர் பூதமானது உணவின் சத்துள்ள இனிப்புச் சுவையைத் தனக்கு இரையாகக் கொண்டு தீயினால் உருவாக்கப்பட்ட தாதுக்களுக்குக் கெடுதியுண்டாகாதபடி ஈரத்தால் காக்கின்றது. மண் பூதமானது உணவின் சத்திலுள்ள புளிப்பு, உவர்ப்புச் சுவைகளைத் தமக்கு இரையாகக் கொண்டு நீர் பூதத்தால் காக்கப்பட்ட தாதுகளுக்கு அதிக ஈரத்தால் கெடுதியின்றிக் காக்கின்றது. ஆகாயம் (வண்) பூதமானது உணவின் சத்திலுள்ள கைப்புச் சுவையைத் தனக்கு இரையாகக் கொண்டு வாயு, தீ, நீர், மண் ஆகிய பூதங்களால்

ஆக்கப்பட்டும் காக்கப்பட்டும் வருகின்ற உருவங்களை விருத்தியடையச் செய்கின்றது.

ஆகையால் உட்கொள்ளும் ஆகாரம் தேகத்திலே மிகுந்த முதன்மையான செய்கைகளைச் செய்து வருகின்ற பஞ்ச பூதங்களின் ஆகாரமாகிய இனிப்பு முதலிய அறுசுவைகளையுடையதாய் இருத்தல் வேண்டும். இப்பூதங்கள் மேற்கூறிய செய்கைகளையல்லாமல் அப்பூதங்களில் ஒவ்வொன்றும் மற்ற பூதங்களுள் ஒவ்வொன்றையும் உதவியாகக் கொண்டு பின்வருமாறு இன்னுஞ் சில முதன்மை செய்கைகளையுஞ் செய்து வருகின்றன.

| | | |
|---|---|---|
| 1. வாயு | ஆகாயத்தின் உதவியால் | சமானத்தையும் |
| | தானாகவே | வியானத்தையும் |
| | தீயினால் | உதானத்தையும் |
| | நீரினுதவியால் | அபானத்தையும் |
| | மண்ணினுதவியால் | பிராணத்தையும் |
| 2. தீ | ஆகாயம் | காதுகளையும் |
| | வாயு | தோலையும் |
| | தானாகவே | கண்களையும் |
| | நீர் | நாக்கையும் |
| | மண் | மூக்கையும் |
| 3. நீர் | ஆகாயம் | ஓசையையும் |
| | வாயு | உணர்ச்சியையும் |
| | தீ | உருவத்தையும் |
| | தானாகவே | சுவையையும் |
| | மண் | மணத்தையும் |
| 4. மண் | ஆகாயம் | வாயையும் |
| | வாயு | கரங்களையும் |
| | தீ | பாதங்களையும் |
| | நீர் | மூத்திரப்பையையும் |
| | தானாகவே | விரேகியையும் |
| 5. ஆகாயம் | தானாகவே | ஆகாயத்தையும் |
| | வாயு | மனத்தையும் |
| | தீ | புத்தியையும் |
| | நீர் | சித்தத்தையும் |
| | மண் | அகங்காரத்தையும் |

உண்டாக்குகின்றன.

ஒவ்வொரு அணுக்கள் தோறும் முக்குணங்கள் நிறைந்துள்ளன. அனாதியான மூன்று மூலப் பொருள்களில் பதி, பசு ஆகிய இரண்டைத் தவிர மற்றைய மாயை அல்லது பாசத்தில் இம்மூன்று குணங்கள் கிரியை புரிகின்றன. மாயையினால் உலகம் பிறப்பதென்றால் இம்முக்குணங்களின் கிரியையினால் அநேக இந்திரிய ஞாநிந்திரியப் பொருள்கள் தோன்றுகின்றன. அவற்றுள் உத்தம

குணமாகிய சத்வ குணத்தினால் சாத்விகப் பிறவிகளும் பொருள் களும் தோன்றுகின்றன. மத்திம குணமாகிய இரசோ குணத்தினால் சீவராசிகள் தோன்றின. அதமக குணத்தினால் அநித்திரியப் பொருள் தாவரம் முதல் பஞ்ச பூதங்கள் உண்டாயின வென்று சித்தர்கள் கூறினர். இம்மூன்று குணங்களில்

ஒவ்வொன்றும் மூன்றாகப் பகுக்கப்பட்டு அப்பகுப்புகள் ஒன்றோடொன்று புணர்ந்து பின்வருமாறு.

| | |
|---|---|
| சத்துவம் | சத்துவத்தில் சத்துவகுணம் |
| | சத்துவத்தில் இரசோகுணம் |
| | சத்துவத்தில் தமோகுணம் |
| இரசோ | இரசோதத்தில் சத்துவம் |
| | இரசோதத்தில் இரசோதம் |
| | இரசோதத்தில் தமோதம் |
| தமோதம் | தமோதத்தில் சத்துவம் |
| | தமோதத்தில் இரசோதம் |
| | தமோதத்தில் தமோதம் |

என ஒன்பது குணங்களாய் நின்று அவ்வொன்பது குணங்களும் முதன்மையான மூன்று குணங்களில் ஒவ்வொன்றுடனும் கலந்து.

| | சத்துவம் | இரசோதம் | தமோதம் |
|---|---|---|---|
| 1. | சத்வ சத்வ சத்துவம் | இரசோத சத்துவ சத்துவம் | தமோத சத்வ சத்துவம் |
| 2. | சத்வ சத்வ இராசோதம் | இரசோத சத்துவ இரசோதம் | தமோத சத்வ இரசோதம் |
| 3. | சத்வ சத்வ தமோதம் | இரசோத சத்துவ தமோதம் | தமோத சத்வ தமோதம் |
| 4. | சத்வ இரசோத சத்துவம் | இரசோத இரசோத சத்துவம் | தமோத இரசோத சத்துவம் |
| 5. | சத்வ இரசோத இரசோதம் | இரசோத இரசோத இரசோதம் | தமோத இரசோத இரசோதம் |
| 6. | சத்வ இரசோத தமோதம் | இரசோத இரசோத தமோதம் | தமோத இரசோத தமோதம் |
| 7. | சத்வ தமோத சத்துவம் | இரசோத தமோத சத்துவம் | தமோத தமோத சத்துவம் |
| 8. | சத்வ தமோத இரசோதம் | இரசோத தமோத இரசோதம் | தமோத இரசோத இரசோதம். |
| 9. | சத்வ தமோத தமோதம் | இரசோத தமோத தமோதம் | தமோத தமோத தமோதம் |

என 27 குணங்களாய் நின்று மேற்சொன்ன உலக சட இந்திரியப் பொருள்களிலும் மேன்மை தாழ்மைகள் ஏற்பட்டிருக்கின்றன.

அவற்றுள் சத்துவ சம்பந்தமாயுள்ள இரசோதக் குணப்பிராணிகள் மேன்மையை அடைந்த மனிதர்கள் சத்துவக் குணங்களை விருத்தி செய்து கொள்வதன் பொருட்டு நமக்கு ஆகாரமாகிய சத்துவாதி குணங்கள் சம்பந்தப்பட்ட தமோகுணப் பொருள்களாகிய தானியங்களிலும் தாவரங்களிலும் விலங்குகளிலும் மேன்மை தாழ்மைகளை மட்டும் அறிந்து உணவு ஏற்க வேண்டும்.

# அத்தியாயம் 16

## உணவுப் பொருள்களின் அம்சங்கள்

உணவுப் பொருளின் அம்சங்கள் (1) சக்கை (2) சத்து (3) சுவை (4) யிர்த்தாது (5) குணம் ஆகிய ஐவகை என முன்னதாகவே கூறப்பட்டிருக்கின்றன. இவைகளில் சக்கை, சத்து ஆகியவைகளைத் தவிர மற்றவைகளாகிய சுவை, உயிர்த்தாது, குணம் ஆகிய இவை மூன்றும் கண்ணினால் பார்க்கவோ கையினால் தொடவோ முடியாதவைகளாக நின்று அவைகள் முறையே நாவினாலும் தேகத்திற்குள்ளுண்டாகும் விகாரங்களாலும் நமது செய்கைகளின் நன்மை தீமைகளாலும் மாத்திரமே அறியக் கூடியவைகளாய் இருக்கின்றன.

**சக்கை**.—பிராணிகள் தமது தீனி அல்லது ஆகாரத்தை வாயிற்கொண்டு மென்று அதன் எந்தப் பாகமானது உட்கொள்ளப்படாமல் உமிழ்ந்து விடப்படுகிறதோ அதனைச் சக்கை என்றும் திப்பி என்றும் கூறுவர். மேலும் மென்ற தீனி, உட்கொள்ளப்பட்ட தீனி அல்லது ஆகாரத்தின் எந்தப்பாகமானது குருதி மாமிசங்களுடன் சேராமல் சக்கையாக வெளிப்படுகிறதோ அதற்கு மலம் என்று பொது வழக்கிலுள்ளது; சிலர் சக்கை என்றும் கூறுவர்.

**சத்து**.—பிராணிகள் தமது தீனி அல்லது உணவை வாயிற்கொண்டு மென்ற பின் அதன் எந்தப் பாகமானது உமிழ்ந்து விடப்படாமல் உட்கொள்ளப்பட்டு மலமாக வெளிப்படாமல் குருதி தசைகளுடன் சேர்ந்து திசுக்களைப் போடணிக்கிறதோ அதனைச் சத்து அல்லது அன்ன ரசம் என்பர்.

**சுவை**.—இப்பூமியிலுண்டாகிற எந்தப் பொருளும் நாவிற் போட்ட மாத்திரத்தில் நாவிற்கு ஓர்வித அறிவு அல்லது உணர்ச்சியை உணர்த்துகின்றது. அவ்வாறு உணர்த்தும் உணர்ச்சிக்குச் சுவை அல்லது இரசம் என்று பெயர். இச்சுவைகள் நாவிற்கு உருசியைக் கொடுப்பதற்கென்று மாத்திரமே ஏற்படாமல் உடல் தத்துவங்களில் ஒன்றாகிய பஞ்ச பூதங்களுக்கு இரையாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இச் சுவைகளிற் சில நாவிற்கு இனிமையையும், மனத்திற்கு மகிழ்ச்சியையும் தராவிடினும் அவைகள் அவைகளுக்குரிய பூதங்களுக்கு இரையாகும்படி நாவிற்கு இனிமையான மற்றச் சுவைகளுடன் கலந்து நாம் உட்கொண்டு வருகிறோம். இவ்வாறு கொள்ளாவிடில் அச்சுவைகளுக்குரிய பூதங்கள் இரையின்றித் தத்தம் செய்கைகளைச் செய்யாமல் நமக்குப் பலவாறு துன்பங்களை விளைவிக்கின்றன. இச்சுவைகள் கண்ணுக்குத் தோன்றும்படி தனித்திராமல் உலகத்திலுள்ள பொருள்களுடன் கலந்தேயிருக்கும். ஆதலால் அவற்றை நாவினால மட்டும் அறியலாமேயன்றிக் கண்ணினால் பார்க்கவோ கையினால் தொடவோ முடியாதவைகளாய் இருக்கின்றன. இச் சுவைகள் கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என அறுவகைப்படுகின்றன.

சுவைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருள்களிலும் தனித்திருப்ப தோடல்லாமல் இரண்டு அல்லது அதிகமான சுவைகளுடன் ஒருமித்திருக் கும். ஆனால் அவற்றில் எதாவது ஒரு சுவை முதன்மையாய் நிற்க அதுவே அந்தப் பொருளின் சுவை என்று சொல்லப்படுகிறது.

**கைப்பு:** எந்தப் பொருளானது வாயில் போட்ட மாத்திரத்தில் நாவின் எல்லாப் பாகத்திலும் வியாபித்து மற்றப் பதார்த்தங்களில் உருசி யை அறிய வொட்டாமலும் வாயிலுள்ள அழுக்குகளைப் போக்கவுஞ் செய்கிறதோ அந்தப் பொருளின் சுவைக்குக் கைப்பென்று பெயர்.

இந்தச் சுவையானது சீக்கிரத்திற் சீரணிக்கச் செய்யுஞ் சக்தியுடையது. மிதமாய்ப் புசித்தால் கிருமிகளைக் கொள்ளலாம். உடம்பெரிச்சலைக் குறைக் கும். பாலைச் சுத்தப்படுத்தும். கபக் குற்றத்தைக் கண்டிக்கும். அதிகமாய் உபயோகப்படுத்தினால் கெடுதியுண்டாகும்.

**இனிப்பு:** எந்தப் பொருளானது வாயிலிட்ட மாத்திரத்தில் மனத் திற்கு மகிழ்ச்சியை யுண்டாக்குவதற்குக் காரணமாகயிருக்கிறதோ அந்தப் பொருளின் சுவைக்கு இனிப்பு என்று பெயர்.

இந்தச் சுவையானது சீத குணமுள்ளது. மெதுவாக சீரணமடை யும். மிதமாகப் புசித்தால் பலத்தைக் கொடுக்கும். பித்தத்தையும் வாயுவையும் சமணப்படுத்தும்; மிதமிஞ்சிப் புசித்தால் தொந்தி, உடல் முதலியவைகளும் பெருக்கும்.

**புளிப்பு:** எந்தப் பொருளானது வாயில் போட்ட மாத்திரத்தில் அதிலுள்ள அழுக்கை நீக்கி உடம்பில் மயிர்க்கூச்சமுண்டாகித் தலையை நடுக்கிப் பற்களைக் கூசச் செய்கிறதோ அந்தப் பொருளின் சுவைக்குப் புளிப்பென்று பெயர்.

இந்தச் சுவையானது சீரணத்தைச் செய்விக்கும். மிதமாய் புசித் தால் உருசிகரம், வாயுவைக் கண்டிக்கும்.

**உவர்ப்பு:** எந்தப் பொருளானது வாயில் போட்ட மாத்திரத்தில் அதில் உமிழ்நீர் ஊறச் செய்து தொண்டையில் கரிச்சலுண்டாகிக் கொஞ் சம் எரிச்சலைக் காட்டுகிறதோ அந்தப் பொருளின் சுவைக்கு உவர்ப்பு என்று பெயர்.

இந்தச் சுவையானது சூடு குணமுள்ளது. சீரணகாரி, மிதமாய்ப் புசித்தால் உருசிகரம் மலமூத்திரங்களைச் சுத்தப்படுத்தும். வாயுவைக் கண்டிக்கும். உடம்பை மிருதுவாக்கும். வியர்வையைப் பெருக்கி நஞ்சுகளை வெளிப்படுத்தும். அதிகமாக உபயோகித்தால் வாத நோய், குஷ்ட நோய் உண்டாகும். மயிர்ச் சீக்கிரத்தில் நரைத்துப் போகும். பலம் குறைந்து கண்ணோய்கள் உண்டாகின்றன.

**துவர்ப்பு:** எந்தப் பொருளானது வாயில் போட்ட மாத்திரத்தில் நாவில் தடத்துவத்தை உண்டாக்கி அதாவது நாவைக் கட்டைப் போலாக் கித் தொண்டை முதலானவைகள் கட்டிக் கொள்ளுகிறதோ அந்தப் பொருளின் சுவைக்குத் துவர்ப்பு என்று பெயர்.

இந்தச் சுவை சீத குணமுள்ளது. மெதுவாய்ச் சீரணமாகும். குருதியைச் சுத்தப்படுத்தும். பித்தத்தைச் சமன்படுத்தும். தோலை மிருது வாக்கும். அதிகமாக உபயோகித்தால் நாக்குத் தடிக்கும். வாயுவை அதிகப்படுத்தும்.

**கார்ப்பு:** எந்தப் பொருளானது வாயில் போட்ட மாத்திரத்தில் சுறுக்கென்று நாவில் எரிச்சலுண்டாக்கி நுனி நாக்கில சங்கடத்தையுண டாக்கி இரண்டு சன்னங்களில் உட்புறங்களில் எரிச்சலைக் கொடுத்து கண், மூக்கு, வாய், இவைகளிலிருந்து நீர் வரும்படி செய்கிறதோ அந்தப் பொருளின் சுவைக்குக் கார்ப்பென்று பெயர்.

இந்தச் சுவையானது சூடுள்ளது. சீரணகாரி. மிதமாய்ப் புசித்தால கபத்தைச் சமப்படுத்தும். அதிகமாக உபயோகித்தால் தேகத்திற்குகாந்தி யைக் கொடுத்துப் பலவித நோய்களை உண்டாக்கும்.

### நட்புச் சுவை—பகைச் சுவை

சித்தர் நூற்களில் உலோகங்களைப் பற்பமாக்கும் முறைகள் கூறுமிடதது, "சத்ருவால்கொன்று மித்ருவால் எழுப்பிக் கொள்ளே" என்று பாடியுள் ளனர். ஒரு உலோகத்துக்குப் பகையாகிய மூலிகையோ உலோகமோ ஒன்று இருக்கும். அம் மூலிகை அல்லது உலோகம் சேர்த்து எரித்தால் அந்த உலோகம் பற்பமாகும். ஆனல் அந்தப் பற்பம் வீரியம் அற்ற தாம் அந்த உலோகத்திற்கு மித்துருவாகிய மூலிகையையோ உலோக மோ ஒன்றிருக்கும். அந்தப் பற்பத்தை மித்துரு மூலிகை சேர்த்து எரித்தால் அப்பற்பம் வீரியம் உடையதாகின்றது. அங்ஙனமே சுவைகளி லும் நட்பும் பகையுமுண்டு.

துவர்ப்புக்கு உப்பு நட்பு. எனெனில் துவர்ப்பு, குருதியை உண்டாக் கும். உப்பு அதனைச் சுத்தமாக வைக்கும். ஆதலின் துவர்ப்புண்பவர் உப்பும்கூட உண்க. துவர்ப்புக்குப் புளிப்பு கைப்பு, காரம் பகை. ஆதலின் இவற்றை நீக்கி உண்க. அல்லது குறைத்துண்க. திருக்குறளில் "பகை நட்பாங்காலம்" என்று அரசியலில் பேசப்படுகிறது. அதுபோல் ஈண்டும் துவர்ப்புக்குப் பகையாகிய சுவைகள் அதற்கு நட்பாங்ககாலமும் உண்டு. துவர்ப்பு குறைந்த புளிப்புமிகுந்து இருக்கும். உடலினர்க்குப் புளிப்பு மிகுதியால் பசி மந்தம் இருக்கும். புளிப்பை எதிர்க்கவும் பசியை வளர்க்கவும் அவ்வுடலினர்க்கு மாத்திரம் துவர்ப்போடு கசப்பும் காரமும் கொள்ளுதல் பொருந்தும். அதே குறளில் "பகை நட்பாங்காலம் வருங் கால்" அப்பகைவரோடு எசசரிக்கையாகப் பழக வேண்டும் என்பர். அங்ஙனமே ஈண்டும் அதிகமானது வர்ப்பும் கொஞ்சமான கசப்பும் காரமுங் கொண்டு, புளிப்பை உண்ணுமலே விட வேண்டும். இதனுற்றுன் அயம் பற்பம், காந்தப் பற்பங்களுக்குப் புளிப்பு நீக்குதல் பத்தியமாக விதிக்கப் பட்டுள்து. சிலர்க்குத் துவர்ப்போடு புளிப்பும் குறைந்திருக்கும். அவர் கள் மாத்திரம் துவர்ப்போடு புளிப்பினைச் சேர்த்து உண்க.

உப்புக்கு இனிப்பே நட்பாம். ஆதலின் இதனை கொள்வாருக்குப்பாற் சோறே பத்தியமாகும். மற்றச் சுவைகள் உப்புக்குப் பகையாகும். அவை நட்பாங் காலமும் உண்டு. உப்புக்குப் பகையாகிய கசப்பை நட்பாகக் கொள்ள வேண்டுங்காலமுளதாயின் உப்பும் கசப்பும் கலந்த பொருளை உட்கொள்ள சிறந்த முறையில் பயன்படும்.

இனிப்புக்கு உப்பும் புளிப்பும் நட்பாம். இனிப்புக்குக் கசப்பும் காரமும் பகை. இனிப்புக்குப் பகை நட்பாங் காலம் இருப்பதாகத் தெரியவில்லை.

புளிப்புக்கு இனிப்பு நட்பு. மற்றவை பகை. புளிப்புக் குறைந்த உடலினர் எலுமிச்சம் பழ மணப்பாகு செய்து ஏராளமாகச் சாப்பிடலாம். புளிப்புக்குக் கசப்பு, துவர்ப்பு, உப்பும் நட்பாங்காலமும் உண்டு. கைப் புக்குக் காரமும் நட்பு. மற்றவை பகை, பகைசுவையும் நட்பாங் கால மும் உண்டு.

கார்ப்புக்கு மற்ற ஐந்து சுவைகளும் பகையே. சில பகை சுவையும் நட்பாகும் காலமுமுண்டு.

**உயிர்த்தாதுக்கள்—**

இவைகளும் சுவையைப் போலவே கண்ணுக்குத் தோன்றும்படி தனித்திராமல் உலகத்திலுள்ள பொருள்களுடன் கலந்தே நிற்கின்றன. இத் தாதுக்கள் மிகுதியாயுடைய பொருள்களைப் புசித்த பின் அவைகள் சீரணமாகுந் தருணத்தில் அல்லது அதற்குபின் அவைகளால் உண்டாகும் விகாரங்களால் அறியக் கூடியவைகளாய் இருக்கின்றன. இவைகள் தாது வென்ற பெயரை மட்டும் அடைந்து மிதமாய் இருக்கையில் தேகத்தில் இயற்கையாயுள்ள திரி தாதுகளுக்கு இரையாகின்றன. இவைகள் தன் அளவுக்கு மிஞ்சி அல்லது குறைவாய் இருக்கையில் மட்டும் பலவித கெடுதிகளை உண்டாக்குகின்றன. ஆகையால் இவைகளைக் குற்றங்களுள்ள பொருள்களென்று நீக்கிவிடாமல் இக் குற்றங்களை மிதப்படுத்தும் தன்மை யையுடைய மற்ற பொருள்களுடன் கலந்து உபயோகிக்க வேண்டும். அப்படி செய்யாவிடின் தேகத்திலுள்ள உயிர்த் தாதுக்களுக்கு இரையில் லாமல் பல கெடுதிகளை உண்டாக்குகின்றன. இவ்வுயிர்த் தாதுக் கள் வாதம், பித்தம், கபம் என மூவகைப்படுகின்றன. இத் தாதுக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளில் தனித்திருப்பதோடல்லாமல் இரண்டு அல்லது மூன்று தாதுக்கள் ஒருமித்திருப்பதுமுண்டு. ஆனால் அவற்றில் ஏதாவதொன்று பிரபலமாக நிற்க அதுவே அப்பொருளின் ‘தாது” என்று சொல்லப்படுகிறது. உலக வழக்கில் உயிர் தாதுக்களை யாண்டும் எங்கும் ‘தோடம்” அல்லது ‘குற்றம்” என்று கூறுகின்றனர். ஏனென்றால் இவைகள் எப்பொதும் குற்றமுற்றயிருக்கின்றமையால் ‘தோடம்” என்றும் குற்றங்கள் என்றும் வழங்கா நிற்பதைக் கவனிக் கவும். எனினும் மருத்துவ மாணவர் வாத, பித்த கபங்கள் நன்னிலையிலுள்ளபோது ‘உயிர்த் தாதுக்களென்றும் குற்றமற்ற நிலையில் தோடங்கள், அல்லது ‘குற்றங்கள்” என்று மகொள்ளவும்.

**வாதப் பொருள்.**—எந்தப் பொருளானது புசிக்கப்பட்டு அது சீரண மாகும் தருணத்தில் அல்லது அதற்குபின் தேகத்தில் குத்தல், குடைச்சல் வலி முதலியவைகளை உண்டாக்குகின்றதோ அந்தப் பொருளுக்கு வாதத்தோடப் பொருள் எனப்படும்.

**பித்தப் பொருள்.**—எந்தப் பொருளானது புசிக்கப்பட்டு அது சீரணமாகுந் தருணத்தில் அல்லது அதற்குபின் மயக்கம், வயிற்றை புரட்டல், வாந்தி, புத்திமாறுதல் முதலிய விகாரங்களையுண்டா கின்றதோ அந்தப் பொருளைப் பித்தத் தோடப் பொருளென்பர்.

**கபப் பொருள்.**—எந்தப் பொருளானது புசிக்கப்பட்டு அது சீரணமாகுந் தருணத்தில் அல்லது அதற்குப் பின் தேகத்தில் சிலுசிலுப்பு, தொண்டைக் கம்மல், தலைக்கனம், சல தோடம் முதலிய விகாரங்களுண்டாகின்றதோ அந்தப் பொருளுக்குக் கபத் தோடப் பொருள் என்று பெயர்.

**முக்குணங்கள்.**—முற்கூறிய சுவை, தாது இவைகளெப்படிக் கண்ணினாற் பார்க்கவோ வகையினால் பரிசிக்கவோ முடியாதவைகளாய் நின்று முறையோ நாவின் உணர்ச்சியாலும் தேகத்திலுண்டாகும் விகாரங்களாலும் மாத்திரம் அறியப்படுகின்றனவோ அவ்வாறே இக்குணங்களும் உடலில் செய்கைகளின் நன்மை தீமைகளாலும் தேகத்திலுண்டாகும் சுகதுக்கங்களாலும் மாத்திரம் அறியக்கூடியவைகளாய் இருக்கின்றன. இக்குணங்கள் சத்துவம். இரசோதம், தமோ குணம் என மூவகைப்படும்.

**சத்துவக் குணப் பொருள்.**—எந்தப் பொருளானது வழக்கமாய்ப் புசிக்கப்பட்டு அதன் சத்தினைத் தேகத்திற்காகரமான குருதி தசை தாதுக்கள் சுத்தம், ஆரோக்கியம் மிதபலம், இவைகளுள்ளவை. களாயும் மனது, புத்தி இந்திரியம் இவைகள் விகாரமின்றித்தெளிவு சாந்தம், தயை, பக்தி, திருப்தி, ஆனந்தம் முதலியவைகளை யுடையதாய் இருந்து எப்பொழுதும் நற்செயல்களையே செய்துகொண்டு சுகித்து வாழச் செய்கிறதோ அந்தப் பொருளின் குணத்திற்குச் சத்துவக் குணப்பொருள் என்று பெயர்.

**இரசோகுணப் பொருள்.**—எந்தப் பொருளானது வழக்கமாய்ப் புசிக்கப்பட்டு அதன் சத்தினாற் தேகத்திற்காதாரமான உடல் தாதுக்கள் மதோன்மத்தம், அதிபலம் இவைகளுள்ளதாயும் புத்தி மனம் இவைகள் சஞ்சலம் கோபம் அகங்காரம், அதிகாமம், ஆசை, துணிவு முதலியவைகளையுமுடையனவாய் இருந்து சஞ்சலப் புத்தியுடன் அதிகாமத்துடனும் பலகெடுதியும் துணிவுமான காரியங்களைச் செய்து கொண்டு சுகமின்றி வாழச் செய்கின்றதோ அந்தப் பொருளின் குணத்திற்கு இரசே குணப்பொருளென்று பெயர்.

**தமோகுணப் பொருள்.**—எந்தப் பொருளானது வழக்கமாய்ப் புசிக்கப்பட்டு அதன் சத்தினால் தேகத்திற்காதாரணமான உடல் தாதுக்கள் மதோன்மத்தம், அதி பலம் இவைகளுள்ளதாயும் புத்தி- மனம் இவைகள் சஞ்சலம், அறிவின்மை கோபம், மந்தம், அதிகாமம் சுகமின்மை, வஞ்சனம், துயில் முதலியவைகளை உண்டாக்குகின்றதோ அந்தப் பொருளின் குணத்திற்குத் தமோகுணப் பொருளென்று பெயர்.

**பருவ காலங்களும் உணவுப் பொருள்களும்**

| காலம் (1) | உயிர்த் தாது (2) | சுவை. (3) |
|---|---|---|
| முன்பனி<br>பின்பனி | கபம் விருத்தி | இனிப்பு, கார்ப்பு |
| இளவேனில்<br>முதுவேனில் | பித்த விருத்தி | உப்பு, கைப்பு |
| கார் காலம் | வாத விருத்தி | புளிப்பு. துவர்ப்பு |

எக் காலங்களிலும் அறுசுவையைக் கலந்து வழங்குவது நன்மையைப் பயக்கும். ஆனால் அவ்வவ் காலங்களில் சுவை விருத்தியடைந்துள்ள பொருள்களையே மிகுதியாய்க் கொள்ளல் நலம், மனித உடலிலும் இவ்வாறான சுவை விருத்திகள் காலத்திற்கேற்ப பிறழ்ந்து நடக்குமே யானால் நேரிடையான சுவையாதிப் பொருள்களை உண்ணவேண்டும். அதாவது கப விருத்தி காலத்தில் உடலில் கபம் பிறழ்ந்து நடக்குமே யானால் வாதவ்ருத்தியாகும் சுவையுள்ள பொருள்களை உண்டாலு கபத்தை நன்னிலைக்குக் கொண்டுவரும்.

துவர்ப்பை உண்டால் குருதி உண்டாகும். உப்பை உண்டால் எலும்பு வளரும். இனிப்பு உண்டால் தசை மிகும். புளிப்பை உண்டால் கொழுப்பு வளரும் கசப்பை உண்டால் நரம்புச்சக்தி மிகும் காரத்தை உண்டால் உமிழ்நீர் போன்ற சுரப்பி நீர்கள் சுரக்கும் என்று உணர்தல் வேண்டும். ஆறு தாதுக்களை வளர்க்கும் ஆறு சுவைகளும் உணவுப் பொருள்களில் உள.

சில உணவுப் பொருள்களில் சுவை நாக்குக்கு வெளிப்படையாகத் தெரியும். சிலவற்றில் சுவை நாக்குக்கு வெளிப்பட்டுத் தோன்ருது. புளி தயிர், எலுமிச்சம்பழம் முதலியவற்றில் புளிப்பு வெளிப்பட்டு நன்ருகத் தெரியும்.

ஆனல் இவை புளிப்பினைத் தரும் உணவுகளே. இவை பக்குவமான பிறகு ஒரு நாள் வைத்திருந்தால் புளிப்பதால் அறியப்படுகிறது. அரிசிச் சோறு, அரிசி கழுவின கழுநீரும் வைத்திருந்தால் புளிப்பேறுகிறது. மாப் பண்டங்கள் எல்லாம் கரைத்து வைத்தால் புளிக்கும். மாவாகச் செய்யக் கூடிய அரிசி, பருப்பு வகைகள், கருணைக் கிழங்கு ஒழிந்த மற்ற கிழங்குகள் வாழைக்காய் முதலியன மாவாகும் தகுதியுடையன.

நீர் கொண்ட பொருள்களைப் பிழிந்தால் நீர் வரக்கூடிய பொருள்களை உப்புப் பண்டங்கள் என்று கொள்க.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அஃததன் சுவை, வீரியம், பிரிவு, பண்பு, செய்கை, அளவு அதனல் உபயோகம் ஆகியவற்றைப் பொருட் பண்பு நூல் (குணப்பாடம்) விவரித்துக் கூறும். ஈண்டு உணவு மட்டும் கவனிப்போம்.

பொருட்களின் அணுக்கள் தொண்ணூற்றாறுத் தத்துவங்களைக் கொண்டவைகள் என்றறிந்தோம். அறிவற்றப் பொருட்களில் காட்சிக்குத் தோன்றுவதெல்லாம் ஐம்பூதக் கூட்டுறவேயாகும். ஐம்பூதக் கூட்டுறவால் தோன்றியவெல்லாம் ஒவ்வொரு பூதத்தின் பண்புகளையும் அவற்ருல் நடைபெறும் தொழில்களையும் அப்பூதங்களில் அடங்கி உள்ள பண்புகளே யாகும். மற்றெல்லாப் பண்புகளைவிட அதன் சுவையாதித் தன்மைகள் சிறப்பானது. சுவைகளைக் கொண்டே மனிதன் உடலில் தத்தமக்கேற்ற பண்புகளை உடலில் நிகழ்த்துவதை அறியலாம்.

| பூதங்கள். | சுவை. | உயிர்த் தாதுகள். |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| மண்+நீர் | இனிப்பு | கபம் |
| வளி+தீ | கார்ப்பு | தீ |
| நீர்+தீ | உப்பு | தீ (பித்தம்). |
| வளி+விண் | கைப்பு | |
| மண்+வளி | துவர்ப்பு | வளி |
| மண்+தீ | புளிப்பு | |

## உணவு வகை

எல்லா உயிர்ப் பொருள்களும், எண்ணற்ற மிக மிக நுண்ணிய, விலம், என்று அழைக்கப்படும். உயிர் அணுக்களால் ஆனவை. மனித உடலும் அவ்வித அணுக்களால் ஆனதேயாகும். மனித உடல் கோடிக்கணக்கான வில அணுக்கள் சேர்ந்து ஆனது. ஒவ்வொரு விலத்திற்கும் சீவனுள்ளது. தனித்து இயங்கும் வல்லமையுள்ளது. ஆனால் விலம் கண்ணுக்குப் புலப் படாது. மிக மிக நுண்ணியது. எத்தனையோ கோடி விலங்கள் சேர்ந்து கூட்டுறவாக உடலை உண்டாக்கின. அவையே உடலையும் இயக்குகின்றன. விலங்களின் அமைப்பும் தன்மையும் அவை செய்ய வேண்டிய வேலைக் கேற்ப மாறுபடும். உடலில் சருமத்தை அமைக்கும் விலத்தின் வேலை வேறு. நரம்புகளை அமைக்கும் விலத்தின் வேலை வேறு. சருமம், நரம்பு, தசை, எலும்பு போன்றவை வேறு வேறு வேலை செய்ய வேண்டியிருப்பதால் அவைகளை அமைக்கும் விலங்களும் அமைப்பிலும் தன்மையிலும் வேறுபட்டுள்ளன. அவைகளுக்குச் சக்தியும் போடணமும் பாதுகாப்பும் அளிக்க வேறு வேறு வகையான உணவுப் பொருள்கள் தேவை. அவைகளின் அமைப்பிற்கோ, வேலைக்கோ பங்கமேற்பட்டால் நோய் உண்டாக ஏதுவாகும். எனவே அந்தந்த விலங்களுக்கு எற்றவாறு வெவ்வேறு உணவுப் பொருள்கள் தேவை.

உணவு உடலுக்குத் தரும் சத்தியைச் சூடு காங்கை, அனல், கனல் என்று பல பெயர்களால் வழங்குகிறோம். உணவு தரும் சத்தியை அள வால் கனலி என்று குறிப்பிடுவது வழக்கம். மனிதனுக்குத் தினம் தேவையான கனல் சக்திகள் வயது, பால், செய்யும் வேலை இவற்றைப் பொருத்தது. அதிக வேலை இல்லாத வயது வந்த ஒரு மனிதனுக்கு 2400 கனல் சக்தி தேவை. மேற்கொண்டு 500 அல்லது 1000 கனலிகள் தேவையாயிருக்கும்.

## மனிதனுக்குத் தேவையான தினசரி சக்தி.

| | | |
|---|---|---|
| குழந்தைகள். | 1 வயதிற்குக் கீழ் | 100 கனலி |
| | 1 வயது முதல் 3 வயது வரை | 900 கனலி |
| | 3 வயது முதல் 5 வயது வரை | 1,200 கனலி. |
| | 5 வயது முதல் 7 வயது வரை | 1,400 கனலி. |
| | 7 வயது முதல் 9 வயது வரை | 1,700 கனலி. |
| | 9 வயது முதல் 12 வயது வரை | 2,000 கனலி. |
| சிறுவர்—12 வயது முதல் 21 வயது வரை | | 2,400 கனலி |
| ஆண்கள் | இலகு வேலை | 2,400 கனலி. |
| | மித வேலை | 3,000 கனலி |
| | கடின வேலை | 3,600 கனலி. |
| பெண்கள் | இலகு வேலை | 2,100 கனலி |
| | மித வேலை | 2,500 கனலி |
| | கடின வேலை | 3,000 கனலி |
| | கர்ப்பிணி | 2,100 கனலி |
| | பாலூட்டுந்தாய் | 2,700 கனலி |

மேலே உள்ள கணக்குக்குக் குறைவில்லாமல் சக்தி தரக் கூடிய அளவிற்கு உணவுப் பொருள்களைச் சாப்பிடுவது மிக அவசியம். உடலில் எரிந்து சக்தி தரவல்ல உணவுப்பொருள்கள் மூன்று பெரும் பிரிவில் அடங்கும். அவையாவன—(1) கபப் பொருள்கள் (சத்துவப் பொருள்கள்)—மாசத்துப் பொருள்கள் (2) பித்தப் பொருள்கள் (இரசோதப் பொருள்கள்)—காப்புப் பொருள்கள்— காலிலிகப் பொருள்கள்—புரதப் பொருள்கள்—(3) வாதப் பொருள்கள் (தமோதப் பொருள்கள்)—நிணப் பொருள்கள் கொழுப்புப் பொருள்கள். இப்பொருள்கள் உடலில் எரியும்போது தேவையான உட்டிணம் போன்ற சக்திகள் எழுகின்றன. இவற்றின் சிதைப் பொருள்கள் எரியும்போது சக்தி உண்டாகும். ஒரு கிராம் மாச்சத்து உடம்பில் தகனமாகும்போது 4.1 கனலி சக்தி தருகிறது. ஒரு கிராம் கொழுப்பு 9.3 கனலியும் ஒரு கிராம் காப்புப் பொருள் 4 கனலியும் சக்தி அளிக்கின்றன.

சக்திக்காக உணவு தேவை என்ற மட்டில் அவ்வுணவு எந்த உருவில் இருந்தாலும் சரி என்று எண்ணிவிடக்கூடாது. ஒரு நாளைக்கு 2,400 கனலி தேவைப்படுகிற ஒருவர் 600 கிராம் மாச்சத்து உணவுப் பொருளை மட்டும் உட்கொண்டால் போதும் என்று நினைப்பது தவறாகும். தேவையான கனலி அளவு மாச்சத்து மாத்திரமோ அல்லது புரதம் மாத்திரமோ உட்கொண்டு சரிக்கட்ட முடியாது. மாச்சத்தும், காப்புப் பொருளும் ஒரே அளவு சக்தி அளிக்கக் கூடியவையாக இருந்தாலும், மாச்சத்து மிகுந்த உணவுப் பொருள்களையே நாம் அதிகமாக உண்கிறோம். அரிசி, தானியங்கள் மரவள்ளிக்கிழங்கு, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, முதலியவை மாச்சத்து மிகுந்த உணவுப் பொருள்களாகும். அவற்றின் விலை மலிவாய் இருப்பதால் அவைகளை அதிக அளவில் உண்பது இயற்கையும் வழக்கமுமாம் ஆனால் புரதமே சேர்க்காமல் இருந்துவிடமுடியாது. ஏனெனில், புரதம் கழிக்கப்பட்டால் தீங்குகள் உண்டாகும். புரதம்

தேவைப்படுவது உடம்பில் சக்தி உண்டாக்குவதற்கு மட்டுமல்ல. அதற்கு இன்னுமொரு முக்கிய பணி உள்ளது. ஒவ்வொரு வகைச் சத்துக்கும் ஒவ்வொரு வகை அவசியம் இருக்கிறது. ஆகையால் கொழுப்பானது மாச்சத்தைவிட இரு மடங்குக்கு மேல் சக்தி தருகிறதென்று அதிகமாகக் கொழுப்பை உட்கொள்ளுவது முடியாத காரியமாகும். ஏனெனில் ஒரு அளவுக்கு மேல் கொழுப்பு நிறைந்த உணவு ருசிப்பதில்லை. சீரண மாவதும் கடினம். இருந்தபோதிலும் கொழுப்பை முழுக்கத் தவிர்ப்ப தற்கும் இல்லை. கொழுப்புச்சத்து போதிய அளவு சேராவிடில் நோய் களுக்கு இடமுண்டாகிறது. ஆகவே மூன்று வகைச் சத்துப் பொருள்களும் போதிய அளவில் சேர்க்கப்படுவது அவசியமாகும். உணவில் மாச்சத்து கொழுப்பு காப்புப் பொருள்கள் முறையே 7:3:2 என்ற எடை விகிதத் தில் இருப்பது சிறந்ததென்று அறிவியலறிஞர்கள் முடிவு செய்துள்ளனர்.

### சத்துவப் பொருள்

(கபப்பொருள்)

உலகில் இயற்கையில் கிடைக்கின்ற பொருட்களெல்லாம் பெரும்பாலும் மாச்சத்துள்ள பொருள்களாகக் காணப்படுகின்றன. இவைகளில் கரியணு, உயிர்வாயு அணு, நீரக அணு ஆகியவற்றால் இணைந்தஇரசாயனப்பொருள் களாகும் இவைகளில் நீரக அணுவும் உயிர்வாயு அணுவும் இரண்டுக்கு ஒன்று என்ற விகிதத்தில் அமைந்திருக்கின்றன. கரியணு கலவையில் பெரும்பங்கு கொள்கிறது ஆதலால் இப்பொருளைக் கரி நீரகப் பொருள் அல்லது நீரகக் கரிப் பொருள் என்று கூறுவர். தாவரங்களில் மொத்த எடையில் $\frac{3}{4}$ பாகம் கரி நீரகப் பொருட்கள் காணப்படுகின்றன; இவற்றை கீழ்க்காணும் விதமாகப் பகுக்கலாம். எல்லாம் இனிப்புச்சுவையை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

(1) சர்க்கரை : இது கருப்பஞ் சர்க்கரை, பழச் சர்க்கரை முதலிய உட்பிரிவுகளுடையது. இவை நமது உணவல் முக்கய பங்கு வகிக்கின்றன. சாராயம் உண்டாக்க நொதிப் பொருளாகவும் இவை பயன்படுகின்றன. பழங்கட்கு இனிப்புச் சுவையைத் தருவது இச் சர்க்கரை வகைகளே.

(2) மாவுப் பொருள்கள் : உணவில் பெரும்பங்கு வகிப்பவை இவ் வகை உணவுகளேயாகும். அரிசி, கோதுமை கேழ்வரகு, உருளைக் கிழங்கு, சர்க்கரை வள்ளிக் கிழங்கு மற்றும் பல கிழங்குகள் முதலியவற்றில் மாவுப் பொருட்கள் மிக அதிக அளவில் காணப்படும்.

(3) சக்கை : பருத்தி, சணல்கள், வைக்கோல், புல், பூண்டு, கீரை முதலியவற்றில் சக்கை அதிக அளவில் இருக்கும். இவைகளில் சில உணவுப் பொருளாகவும் இன்னும் சில துணி போன்ற பொருட்களின் ஆக்கத்திற்கும் உதவுகின்றன.

மனித சமுதாயத்தின் நாகரிகப் பண்பாட்டு வளர்ச்சியிலும் உணவு முறையிலும் கரி நீரகப் பொருட்களின் பங்கு மிக மிக அதிகமாகும். சீவராசிகளின் உடலில் அன்றாடம் நடக்கும் உயிரியற் செயல்கட்கு எரி பொருளாக, தகனத்திற்குக் கரி நீரகப் பொருட்கள் உதவுகின்றன. கரி நீரகப் பொருட்கள் தாவர வகுப்புகளில் மிகவும் ஏராளமாகவும், சீவ ராசிகளில் குறைந்த அளவிலும் உண்டாகின்றன. தற்கால அறிவிய

லாரால் நாற்பதுக்கும் அதிகமான சர்க்கரை வகைகள் தாவரங்களிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. கரி, நீர், உயிர்வாயு போன்ற அணுக்களைக் கொண்டு எவ்வாறு சிக்குமுக்கலான சர்க்கரைகளைத் தாவரங்கள் தோற்றுவிக்கின்றன என்பது தாவரவியல் ஆய்வாளருக்கு விந்தையாகவே தெரிகிறது. இவை மனித உடலில் எவ்விதம் பங்கு கொண்டு செயல் புரிகின்றன என்பதைச் செரிமனப் பகுதியில் விளக்குவாம்.

கரிநீரகப் பொருட்களை முன்னர் பகுத்தபடியல்லாது வேறுவிதமாகவும் பாகுபடுத்தி அறியப்படும். சர்க்கரை இயலை மனதிற் கொண்டு (1) சர்க்கரை வகுப்பு (2) அசர்க்கரை வகுப்பு எனப் பிரிப்பர்.

(1) **சர்க்கரை வகுப்பு**:—பழச் சர்க்கரை, கரும்புச் சர்க்கரை, வெல்லம், பனைவெல்லம் முதலியன. இவை நீரில் நன்றாகக் கரையும். இனிப்புச் சுவை அதிகம் படிமங்களையுடையது.

(2) **அசர்க்கரை வகுப்பு**—மாவு, மாவு பதார்த்தம், சக்கை முதலியவை. இவை நீரில் கரையா. சுவையற்றவை. படிமங்களற்றவை.

இன்னொரு வித பாகுபாடு, கரி நீரகப் பொருட்களின் இயைபில் அடங்கியுள்ளன. கரியணுவின எண்ணிக்கையை மனதிற் கொண்டு செய்யப்படும்.

(1) ஏக கரி நீரகச் சர்க்கரை : இவை ஒன்று முதல் ஒன்பது கரியணுக்கள் வரை இருக்கும்.

(2) துவி கரி நீரகச் சர்க்கரை : இது 12 முதல் 18 வரை அல்லது 24 கரியணுக்கள் கொண்டவையாக இருக்கும். உதாரணம் கரும்புச் சர்க்கரை.

(3) பன்மைக் கரி நீரகச் சர்க்கரை : இதில் மாவுகளும் சக்கைகளும் அடங்கும், இவை படிமங்களாக இருக்கின்றன.

ஏக கரிநீரகச் சர்க்கரைக் குணம்.—

பொதுவாகப் படிமங்களையுடையது. சாராயத்தில் கரைவது கடினம். நீரில் அதிவிரைவில் கரையும். அதிக இனிப்புச் சுவையுடையது. இதனைச் சர்க்கரைச் சத்து என்ப. சுட்டால் கரிப்பொருளாக மாறும்.

**திராட்சைச் சர்க்கரை**:—

விதைகளிலும் இலைகளிலும் இது நிறையக் கிடைக்கும். திராட்சைப் பழங்கள், இனிப்புள்ள பழங்கள், மகரந்தப் பொடிகள், முட்டைக் கரு, குருதி முதலியவற்றில் பத்து முதல் இருபது விழுக்காடு வரையிருக்கும் தேனில் திராட்சைச் சர்க்கரையும் பழச் சர்க்கரையும் கலந்து காணும். சீவராசிகளின் இரைக் குடலில் உண்ட உணவாகிய மாவு, மற்றச் சர்க்கரைப் பொருள்களும், திராட்சைச் சர்க்கரையாக மாற்றப்படுகின்றன.

கரும்புச் சர்க்கரை × நீர் (செரிமனத்தில்)— திராட்சை சர்க்கரை × பழச் சர்க்கரை.

சக்கை + நீர்—திராட்சைச் சர்க்கரை + பழச் சர்க்கரை + தானியச் சர்க்கரை.

**பழச் சர்க்கரை :—**

இவ்வகை சர்க்கரை பழங்களில் திராட்சைச் சர்க்கரையுடன் சேர்ந்து காணப்படுகிறது. கருப்பஞ் சர்க்கரையை நீரகப்படுத்தினால் பழச் சர்க்கரையாகவும் திராட்சைச் சர்க்கரையாகவும் கிடைக்கும்.

கரும்புச் சர்க்கரை :—பெரும்பான்மையாகக் கரும்பிலும், பனைவெல்லம், அன்னாசிப்பழம், வாழைப் பழம் போன்றவைகளிலும் இது பெறப்படும்.

**மாவுப் பொருள் :—**

இது வெண்மையான சுவையற்ற, வாசனையற்ற படிவமற்ற, அநிந்திரியச் சடப்பொருள். மாவுப் பொருளைக் கொதிக்க வைத்தால் பசைப் பொருளாக மாறும். பசைகள் சாராயம் தயாரிக்கவும், தாள், துணி முகப் பூச்சுகள் முதலியன செய்யவும், துணிகளைச் சலவை செய்யவும் மிகவும் பயன்படுகிறது. மருத்துவத்தில் பீச்சுக்கும் மாத்திரைகள் செய்வதற்கும் உபயோகப்படுகிறது. உணவுப் பொருள்களில் பெரும்பாலும் தானியங்களில் இருக்கிறது.

## இரசோப் பொருள்கள்

(பித்தப் பொருள்)

இயற்கையில் உலகத்திலுள்ள எல்லா சீவராசிகளிலும் தாவர இனங்களின் விலங்கள் தோறும் காணப்படும் சிக்குமுக்கலான கலவைப் பொருளே ஆரம்ப மூலாதாரப் பொருளாகும். அதனைத் தவளம் என்பர். உழக்கில் புரதம் என்று கூறப்படுகிறது. சீவராசிகள் அதிகம் தவளப் பொருளைக் கொண்டவைகளாகின்றன. தாவரங்கள் மிகவும் சிறுபான்மை தவளப் பொருளைக் கொண்டவைகளாகின்றன. சராசரி உடலின் எடையில் பதினைந்து விழுக்காடு தவளப் பொருள்களும் அறுபத்தைந்து விழுக்காடு நீருமாகயிருக்கின்றன. பிராணிகள் மாவுப் பொருளும் நிணப் பொருளும் இல்லாமல் நீண்ட நாட்கள் வாழ முடியும். ஆனால் தவளப் பொருள்களில்லாமல் வாழமுடியாது. எனவே தவளப் பொருள்கள் அன்றாட உணவில் இன்றியமையாததாகிறது. தாவரங்கள் அநிந்திரியப் பொருள்களிலிருந்து தவளப் பொருள்களைத் தயாரிக்கின்றன. பிராணிகளால் தயாரிக்க முடியாது. தாவரங்கள் தவளப் பொருள்களைச் சேமித்து வைத்துக் கொள்கின்றன. பிராணிகள் அவைகளைச் சேமித்து வைத்துக் கொள்ளாமல் இந்திரியப் பொருள்களாக மாற்றுகின்றன. தாவரங்களில் கிடைக்கும் தவளப் பொருள்களைப் போடணிக்கும் போது அவைகள் செரிமனதில் அநேக மாறுதல்களடைகின்றன. எனவே தவளங்களின் முக்கிய தொழில் என்னவென்றால் திசுக்களை வளர ஊக்குவிக்கும். புதிய திசுக்களை உண்டாக்கும். சிதைந்த திசுக்களுக்குப் பதிலாக புதிய திசுக்களை உண்டாக்கி அதனிடத்தை நிரப்பி, பழுது பார்க்கும்.

தவளப் பொருள்க்ள் இவைகளின் இறுதிக் கூறுகளாகிய நவனக் காடிகளால் ஆக்கப்பட்ட ஒரு சிக்குமுக்கலான கலப்புப் பொருளாகும். இந்த நவனக் காடிகளில் ஒன்றுக்கொன்று வித்தியாசமான 23 வகைகள் இருக்கின்றன. ஒரே சில எழுத்துக்களைப் பல வகையில் பொருந்திப் பல்வேறு வார்த்தைகளை உண்டாக்குவது போல் இந்த நவனக் காடிகளைக் குறித்த வகைகளைச் சேர்த்து பலவகை தவளப் பொருள்களை உண்டாக்கலாம்.

**தவளங்களின் உபயோகம்:—**

உடல் வளரச் செய்வது, தேய்ந்த அல்லது சிதைந்த பாகங்களைப் பழுது பார்த்து உடல் நலத்தை நிலை நாட்டுகிறது. உடலுறுப்புகளை ஒழுங்கான நிலையில் வைக்கும். நொதிகளில் இவை அதிகமாகக் காணப்படுகின்றன. குருதியில் சிவப்பு வண்ணம் இதனால்தான் ஏற்படுகிறது. நோய் வராமல் தடுப்பதற்கும் காயங்களைச் சீக்கிரம் ஆற்றுவதற்கும் இது மிக உதவியாக இருக்கிறது.

**வகைகள் :—**

(1) **வெண்தளம்.**—நீரில் கரையும்; உப்பு நீரிலும் கரையும்; சூட்டிற்கு இறுகும். கட்டியானது; நீரில் கரையாது; காரசாரங்களினால் கரையும். விதைகளில் சிறுபான்மையாகக் கிடைக்கின்றன. பெரும்பான்மையாக முட்டை வெண்கரு, பால், கோதுமை, பிசின் போன்றவைகளில் கிடைக்கின்றன.

(2) **மஞ்சள் தவளம்.**—நீரில் கரையாது. காரசாரங்களினாலும் அமிலங்களினாலும் கரையும். படிமங்களாகப் பிரித்து தனித்தெடுக்கலாம். சூட்டிற்கு இறுகும். இவைகள் பிராணிகளிலும் தாவரங்களிலும் கிடைக்கப்படுகின்றன. முட்டையின் மஞ்சட்கரு, தசைபோன்றவைகளில் காணப்படுகிறது.

(3) **செந்தவளம்.**—நீரில் கரையும், உப்பு நீர்களினால் கண்டலும் கரைச்சலுமாகும். நொதிப்புகளால் பின்னப்படுத்தப்படுவனவாகும். சூட்டிற்கு இறுகி கட்டியாகாது. மற்ற தவளப் பொருள்களோடு சேர்ந்தால் கண்டலும் கரைச்சலுமாகும். அய செந்தவளக் குருதியில் காணப்படும்.

இன்னும் அநேக தவளப் பொருள்கள் உள்ளன. இங்குத் தேவையானவற்றை மட்டும் விளக்கினேம்.

## தமோ குணப்பொருள்.

## (வர்தப் பொருள்)

உணவில் முக்கியத்துவம் பெற்றது. பெரிய இரசாயனப் பொருள் தொகுதி கொழுப்பு அல்லது நிணப் பொருளாகும். இது நீரில் கரையா. ஆனால் சாராயம் போன்ற கொழுப்புக் கரைப்பான்களில் சுலபமாகக் கரைகின்றன. நாம் உட்கொள்ளும் எண்ணெய்கள், கொழுப்பு என்ற தொகுதியில் அடங்கியுள்ளன. ஆகவே நெய், எண்ணெய்கள் முதலியன கொழுப்புப் பொருளாகும். சாதாரணச் சீதோட்டிண நிலையில் கொழுப்புகள் திடப்பொருளாக உள்ளன. எண்ணெய்கள் நீர்மை உருவத்தில் இருக்கின்றன. இரசாயனக் கிரியையில் திட உருவத்திலுள்ள கொழுப்புக்கும் நீர்மை உருவத்திலுள்ள கொழுப்புக்கும் வித்தியாசம் இல்லை. திடக் கொழுப்பைச் சூடாக்கினால் உருகி நீர்மையாகும். எண்ணெய்க் குளிர்ப்பித்தால் உறைந்து திடமாகும். கடும் குளிரில் தேங்காயெண்ணெய் உறைந்து போவதைச் சாதாரணமாகப் பார்த்திருக்கலாம் கொழுப்புத் தொகுதியில் பின்வரும் நான்கு பிரிவுகள் உள்ளன:—

(1) சாதாரணக் கொழுப்புகள்.

(2) திமிரிக் கொழுப்புகள்

(3) சர்க்கரைக் கொழுப்புகள்

(4) சாராயப் கொழுப்புகள்.

அன்றாடத் தேவைக்கு அதிகமாகக் கிடைக்கும் உணவை உடலானது வருங்காலத் தேவைக்காகச் சாதாரணக் கொழுப்பாகவே சேமித்துவைக்கிறது. எனவேதான் அதிக உணவுப் பிரியர்களின் உடல் பருத்துப் போகிறது. நடக்கமுடியாமல் அசதி ஏற்படுகிறது. அதனால் 'வாயு' உடலில் அதிகம் ஏற்பட்டுவிட்டது என்று கூறுகிறார்கள். திடச் சாராயம் (சாராயத்தில் ஒரு வகை) ஒரு அணுவுடன் கொழுப்புக்காடிகளின் (அமிலங்களின்) மூன்று அணுக்கள் இணைய விளையும் பொருள்தான் சாதாரணக் கொழுப்பாகும். ஆகவே, நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய் போன்ற கொழுப்புகள் பலவித சாதாரணக் கொழுப்புகளின் கலவையாம். வெண்ணெயும், நெய்யும் அப்படியே. எனவே அவை நீரில் மிதக்கும், ஆனால் கரையா. காரசாரங்கள் கலவையுற்றால் திடச் சாராயம் அதனை விட்டுப் பிரிந்து சவுக்காரக் கட்டியாகிறது. சவுக்காரம் கொழுப்பு நீரில் கலந்து பால நிறமாகின்றன. இந்தப் பால நிற நீர்மை உருவத்தில் கொழுப்புகள் குடலில் செரிமனமாகின்றன.

மேலே சொன்ன சாதாரணக் கொழுப்பில் இணைந்துள்ள கொழுப்புக் காடிகளின் அணு அமைப்பில் இணைப்புப் பூர்த்தி இல்லை. குறைவு இருக்கிறது. அதனால் உயிர் வாயு இரசாயனத் தாக்குதல் செய்ய ஏதுவாகிறது. ஆகையால் சாதாரணக் கொழுப்புப் பொருள்கள் நாளடைவில் கெட்டுவிடுகின்றன. இக்குறையைத் தவிர்க்கவே, இணைப்புக்குறையை நீர் வாயுவால் நிரப்பி "வனஸ்பதி" டால்டா போன்ற இறுகிய திடக்கொழுப்புகளாக்குகிறார்கள் அதாவது கடலை எண்ணெய், தேங்காய் எண்ணெய் போன்றவற்றில் நீர் வாயுவைச் செலுத்துவதால் இராசாயன மாறுதலேற்பட்டு இறுகி நெய் போன்ற உருவத்தைப் பெறுகிறது. 'டால்டா'வைத் தாவர நெய் என்கிறார்கள். உண்மையில் சுத்தமான எண்ணெய்க்கும் 'டால்டாவிற்கும் உணவுத் தன்மையில் வித்தியாசம் கிடையாது. ஆனல் திடச் சாதாரணக் கொழுப்பைத் தாவர நெய்' என்று எண்ணும்படி தயாரிப்பது மயக்குவதால் உண்டாகும் ஏமாற்றம். ஏனென்றால் அசல் நெய்யில் உள்ள சீவ சத்துக்கள் 'டால்டா' வில் இல்லை. எண்ணெய், நெய் ஆகியவைகளை விட செரிமனமாவது கடினமாகவுள்ளது குண வேறுபாட்டினால் செரிமனத்தில் அதிகம் தொந்தரவு கொடுக்கிறது.

தாவரக் கொழுப்பில் சீவ சத்துக்கள் இருப்பதில்லை. விலங்குக் கொழுப்பில் சீவ சத்துக்கள் நல்ல அளவில் உள்ளன. இந்த ஒரு வித்தியாசத்தைத் தவிர விலங்குக் கொழுப்பிற்கும் தாவரக் கொழுப்பிற்கும் பேதம் ஏதுமில்லை. ஆனால் குணங்களில் வித்தியாசங்கள் ஏற்படுகின்றன.

திமிரிக் கொழுப்புகளில் மஞ்சள் நிறத்தில் மெழுகு போன்றிருக்கும் மூலகம் நாதப் பொருளாகும். அந்த மூலகத்தைக் கொண்டு உண்டான காடிதான் திமிரிக் காடி. இக்கொழுப்புகள் முக்கியமாகத் தசையில் அமைப்புப் பொருளாக உள்ளன.

சர்க்கரைக் கொழுப்பில் மிகத் துல்லியமான சர்க்கரைக் கொழுப்பு அமிலமும் இன்னும் சில இரசாயனப் பொருள்களும் சேர்ந்துள்ளன. மனித மூளையின் பெரும் பாகம் சர்க்கரைக் கொழுப்பே.

கீழ்க்கண்ட வகைகளில் கொழுப்பு உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| முந்திரிப்பருப்பு | .. | .. | 46·9 விழுக்காடு. |
| வேர்க்கடலை | .. | .. | 40·1 ,, |
| இறைச்சி | .. | .. | 13·3 ,, |
| முட்டை | .. | .. | 13·3 ,, |
| கடலை | .. | .. | 5·3 ,, |
| பால் | .. | .. | 4·6 ,, |

முட்டை, பால், இவற்றில் காணப்படும் கொழுப்பு சிறந்தது. ஏனென்றால் இக் கொழுப்புகள் இலகுவில் சீரணமாகும்.

**சீருணவு:—**

உடலைப் பலத்துடனும், நோய் அணுகாமல் தடுக்கும் சக்தியுடனும் வளர்க்க, தக்க உணவை உட்கொளவது மிகவும் அவசியமென்பதை உணர்ந்தோம். மேலும் உணவுப் பொருள்களின் சத்துவ, இரசோத தமோ குணங்களையும் கொண்டு அறுசுவையுள்ள பொருள்களாக உண்ண வேண்டும். வாத, பித்த, கபப் பொருள்களையும் இன்னின்ன தேதிகளுக்கு எவ்வாறு உண்ணுவிக்க வேண்டுமென்பதைத் தெரியவேண்டும். மனித உடலாகிய இயந்திரமும் வெப்பச் சத்தியால் இயங்குகிறது. இந்த வெப்பச் சத்தி நாம் உண்ணும் உணவிலிருந்து உண்டாகிறது. அது போலவே குணங்களும் உண்டாகின்றன. சத்துவக்குணப் பொருள் மனிதனுக்குச் சத்துவகுணங்களை உண்டாக்கும். வாதப் பொருள்கள் உடலில் வாயுவை விருத்தி செய்யும். வெப்பச் சத்தியைக் கனலிகள் என்ற ஒருவத அளவையல் அளக்கலாம். நாள்தோறும் நமது வாழ்க்கைக்கு எவ்வளவு கனலிகள் (1) வெப்பச் சத்தி தேவை என்பதை அறிவியல் முறையில் கணக்கிட்டு அடியில் கண்டவாறு அறிவியலறிஞர்கள் கூறியுள்ளனர். (2) முக்குணங்களை உண்டாக்கும் பொருள்களையும் (3) முக்குற்றங்களை எற்படுத்தும் பொருள்களையும் சித்தர்கள் வகுத்திருக்கிறார்கள்.

**(1) வெப்ப சத்தியைக் கொடுக்கும் பொருட்கள்:—**

| உணவுப் பொருள். | அளவு (அவுன்சு). | கனலிகள். |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| அரிசி | 8 | 792 |
| கேழ்வரகு<br>சோளம்<br>கம்பு<br>கோதுமை | 4 | 392 |

| (1) | (2) | (3) |
|---|---|---|
| பருப்பு வகைகள் | 4 | 380 |
| எண்ணெய் அல்லது நெய் | 4 | 60 |
| கீரைகள் | 4 | 80 |
| பால் | 12 | 396 |
| காய்கறிகள் | 4 | 80 |
| மீன், இறைச்சி அல்லது அதிகப்படியான பால் | 4 | 220 |
| | | 2400 |

**சத்துவக் குணத்தையே மேலாகக் கொண்ட உணவுப் பொருட்கள்:—**

1. பச்சை அரிசி
2. கார் அரிசி
3. சம்பா அரிசி வகைகள்
4. கோதுமை
5. சம்பா கோதுமை
6. தினை
7. உளுந்து
8. பச்சைப்பயறு
9. பொரி
10. அவல்
11. எள்
12. சுக்கு
13. மிளகு
14. சீரகம்
15. வெந்தயம்
16. சர்க்கரை
17. சீனிச் சர்க்கரை
18. கற்கண்டு
19. தேன்
20. திராட்சைப் பழம்
21. பேரிச்சம் பழம்
22. பேரிச்சங்காய்
23. சாதிக்காய்
24. சாதிப்பத்திரி
25. ஏல அரிசி
26. பச்சைக் கற்பூரம்
27. குங்குமப்பூ
28. வாதுமைப் பருப்பு
29. கொப்பரைத் தேங்காய்
30. நல்லெண்ணெய்

31. இலுப்பை எண்ணெய்
32. பசும்பால்
33. பசுந்தயிர்
34. பசுவெண்ணெய்
35. பசுவின் நெய்
36. கண்டங்கத்திரிக்காய்
37. கொத்தவரைக்காய்
38. கொம்புப்பாகற்காய்
39. வெள்ளரிக்காய்
40. முள்ளு கத்திரிக்காய்
41. வாழைக்காய்
42. பலாக்காய்
43. விளாம்பழம்
44. இலந்தைக்காய்
45. மாங்காய்
46. மணத்தக்காளிக்காய்
47. சுக்கங்காய்
48. நாரத்தங்காய்
49. சுண்டைக்காய்
50. தேங்காய்
51. நெல்லிக்காய்
52. சேப்பங்கிழங்கு
53. வள்ளிக்கிழங்கு
54. கீரைத்தண்டு
55. வாழைத் தண்டு
56. பிரண்டை
57. கருவேப்பிலை
58. தூதுவளை இலை
59. முசுட்டை
60. வெந்தயக்கீரை
61. கொத்துமல்லி
62. முளை க்கீரை
63. பொன்னாங்கண்ணி
64. மணத்தக்காளிக்கீரை
65. அகத்திக் கீரை
66. அகத்திப் பூ
67. வேப்பம் பூ
68. வாழை வகைகள்
69. பேயன் வாழைப்பழம்
70. மாம்பழம்
71. நாவற் பழம்
72. கொய்யாப் பழம்
73. இளநீர்
74. பன்னீர்
75. சாமை

**இரசோ குணத்தையே மேலாகக் கொண்ட உணவுப் பொருட்கள்:—**

1. சவ்வரிசி
2. துவரை
3. கடலை
4. முந்திரிப்பருப்பு
5. நிலக்கடலை
6. மஞ்சள்
7. பெருங்காயம்
8. கத்தூரி
9. புளி
10. மிளகாய்
11. உப்பு வகைகள்
12. கடுகு
13. செங்கடுகு
14. வெண்கடுகு
15. கொத்தமல்லி விதை
16. இலவங்கம்
17. இலவங்கப் பட்டை
18. ஓமம்
19. கசகசா
20. பாக்கு
21. சிறுநாகப்பூ
22. வெள்ளாட்டு நெய்
23. வெள்ளாட்டுப் பால்
24. புடலங்காய்
25. வெண்டைக்காய்
26. பூசினிக்காய்
27. அத்திக்காய்
28. புளியங்காய்
29. எலுமிச்சம்பழம்
30. பச்சை மிளகாய்
31. கருணைக்கிழங்கு
32. வெற்றிலை
33. அறுகீரை
34. வாழைப்பூ
35. ஆவாரம்பூ
36. மாதுளம்பழம்
37. மான்
38. ஆடு
39. முயல்
40. மாமிசம்
41. மீன் (கடற் மீன்கள்)
42. சில பறவைகள், முதலியன.

**தமோ குணத்தையே மேலாகக் கொண்ட உணவுப் பொருட்கள்:—**

1. புழுங்கலரிசி
2. கேழ்வரகு

3. வரகு
4. கம்பு
5. சோளம்
6. பட்டாணி
7. மொச்சை
8. பயறு
9. கொள்ளு
10. பனைவெல்லம்
11. பனங்கற்கண்டு
12. எருமைப்பால்
13. எருமைத்தயிர்
14. எருமை வெண்ணெய்
15. எருமை நெய்
16. கத்திரிக்காய்
17. அவரைக்காய்
18. பீர்க்கங்காய்
19. முருங்கைக்காய்
20. சுரைக்காய்
21. உருளைக்கிழங்கு
22. முள்ளங்கி
23. பனங்கிழங்கு
24 வெங்காயம்
25 பூண்டு
26 முருங்கைக் கீரை
27 சிறு கீரை
28 புளியாரை
29 கோழிக் கீரை
30. காசினிக் கீரை
31. முந்திரிப் பழம்
32. சீதாப்பழம்
33. ஆமணக்கெண்ணெய்
34. பனங்கள்
35. தென்னங்கள்
36. ஈச்சங் கள்
37. போதைப் பொருள்கள் (கஞ்சா, அபினி முதலியன)
38. எரிமீன்கள்
39. மற்ற விலங்குகளின் மாமிசம்.

**பச்சரிசி.**—நாம் உணவில் பெரும் பகுதியாக உண்பது அரிசி. காலையில் அரிசியால் செய்த இட்லி, தோசை, ஆப்பம் இடியாப்பம் போன்றவைகளும் மற்ற இரண்டு வேளைகள் சோறு உண்பதால் தமிழ் மக்களின் முதன்மை உணவு அரிசி என்று கொள்ள வேண்டும். இந்த முதன்மை உணவாகிய அரிசியில் உடல் வளர்ச்சிக்குத் தேவையான சத்துப் பொருளும் உயிர்ச் சத்துப் பொருளும் மற்ற தானியங்களிலிருப்பதை (கம்பு, கேழ்வரகு, கோதுமை, சோளம்) விட மிகக் குறைவு. இக்குறைவான சத்துக்கள் அரிசியின் முனையிலும், தவிட்டிலும் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. இயந்திரததினால்

பச்சரிசியில் இருக்கும் இந்தக் குறைவான சத்துக்களும் தவிட்டுடன் வெளியேறி விடுகின்றன. அரிசியைப் பல தடவைகள் கழுவுவதனாலும், கஞ்சித் தண்ணீரை வடிகட்டுவதனாலும் அதில் கொஞ்ச நஞ்சமிருக்கும் சத்துக்களையும் நீக்கிவிட்டு எஞ்சியிருக்கும் சக்கையைத்தான் இறுதியில் உணவாக உட்கொள்கிறோம். ஆகையால் அநேகமாகப் பச்சரிசி உண்கிறவர்கள் மிகவும் பலவீனமாயும், சோர்வுடனுமிருக்கிறார்கள். அரிசியைப் பல தடவைகள் கழுவாமலும் கஞ்சியை வடிகட்டாமலும் உள்ள முறையைக் கையாண்டார்களேயானால் அது நல்ல உணவாகும்.

புழுங்கலரிசியில் மேற்சொன்ன சத்துக்கள் அநேகமாய் காப்பாற்றப் படுகின்றன. நெல்லை இயந்திரத்தில் அரைப்பதற்கு முன் 12 மணி நேரம் நீர்விட்டுப் புழுக்கப்படுகிறது. முளையிடும்போது அதிலிருக்கும் உயிர்ச் சத்தும் உலோகப் பொருள்களும் அரிசியின் மச்சத்தில் கலந்து விடுகின்றன. மேலும் நெல்லை வேக வைக்கும் பொழுது தவிட்டிலிருக்கும் சத்துக்கள் அரிசியுடன் ஒட்டிக் கொள்கின்றன. இந் நெல்லைக் குத்தும் பொழுது தவிடு வேறுபட்டாலும் இத் தவிடு சத்துக்கள் இல்லாத வெறும் தவிடு ஆகும்.

**கைக்குத்தலரிசி.**—இயந்திரத்தில் அரைத்த பச்சரிசியில் தவிடு சிறிது கூட இருப்பதில்லை. ஆனால் கைக்குத்தலரிசியில் தவிடு பூரணமாகப் போவதில்லை. இதைவிட மேலானது மரத்திரிகையில் நெல்லை அரைத்து உமியை வேறுபடுத்துவதாகும். இதுதான் முழு அரிசியாயிருக்கும். அரிசியின் சத்துக்கள் யாவும் நீங்காமல் இதிலிருக்கும். இதைத்தான் "தீட்டாத அரிசி" என்பர். இது பழுப்பு நிறமாயும், சொரசொரப்பாயுமிருக்கும். இந்த அரிசி பலருக்குப் பிடிப்பதில்லை.

பச்சரிசி சத்து அற்றது; புழுங்கலரிசி இயந்திரத்தில் தீட்டியதாயிருந்தாலும் பச்சரிசியை விடச் சிறந்தது. கைக்குத்தலரிசியே சாலச்சிறந்ததாகும்.

பொதுவாக ஆராய்ந்து பார்த்தால் நமது முதன்மை உணவாகிய அரிசியைச் சமைப்பதற்குமுன் உமியை வேறுபடுத்த அரிசியை இயந்திரத்தில் குத்தியாக வேண்டும். அப்பொழுது இச்சத்துக்கள் வெளியேறி விடுகின்றன. ஆனால் மற்ற தானியங்களாகிய கம்பு, கேழ்வரகு, கோதுமை ஆகியவைகளைச் சமைப்பதற்கு முன் அரிசியைப் போல் இயந்திரத்தில் அரைக்க வேண்டியதில்லை. ஆகையால், இவைகளின் முழுச்சத்தும் அவற்றினுள்ளேயே இருக்கிறது. அரிசியிலிருக்கும் குறையை ஈடு செய்ய வேறு தானியங்களில் ஏதாவது ஒன்றை அரிசியோடு தினமும் உண்ண வேண்டும். நகரவாசிகள் கம்பு, கேழ்வரகு, சோளம் போன்றவைகளை உண்ணவிட்டாலும் கோதுமையாகிலும் அவசியம் அரிசியோடு சேர்த்து உணவுப் பொருளாக உட்கொள்ள வேண்டும்.

**கோதுமை .**—தானியங்களில் இந்த ஒரு தானியத்தை தான் உலகம் முழுவதும் உபயோகிக்கிறார்கள். மற்ற தானியங்களைவிட கோதுமையில் காப்புச் சத்தும் உயிர்ச்சத்தும் அதிகமாயுள்ளன. கோதுமையை அரைத்த பின் மாவைச் சலிக்காமல் உபயோகப்படுத்தினால் முழுப்பலனையும் அடையலாம். கோதுமையிலிருந்து எடுக்கப்படும் மைதா மாவில் சத்துக்கள்

குறைவு. கடைகளில் விற்கும் கோதுமை ரொட்டியில் நொதிப் பொருள் சேர்ந்திருப்பதால் வீட்டில் செய்யும் ரொட்டியைவிடச் சத்துள்ளது. ஆகவே கடை ரொட்டி நோயாளிக்கு உகந்தது.

**கம்பு.**—கோதுமைக்கு அடுத்தது கம்பு. இது மிகவும் சத்துள்ளது. சிறந்த உணவுப் பொருளாகக் கொள்ளலாம். கம்பு உண்பது ஏழ்மைத் தனமென்று மக்கள் எண்ணுகிறார்கள்.

**கேழ்வரகு.**—தானியங்களில் இது மிகச் சக்தியுள்ளதும் மலிவானது மாகும். அப்படியிருந்தும் மக்கள் இதைச் சாப்பிட முன்வருவதில்லை. கேழ்வரகைப் பாயசமாகச் செய்து சாப்பிடலாம்.

**சோளம் :**—இத்தானியம் கேழ்வரகு, கம்பைப் போல் சத்துள்ளதும் மலிவானதுமாகும்.

**பருப்பு வகைகள்.**—இவைகளில் காப்புச்சத்து அதிகம். துவரை, கடலை, பச்சைப் பயறு, உளுந்து, பட்டாணி, அவரைப் பருப்பு போன்றவைகளைத் தினம் குறைந்த பட்சம் ஒரு நாளைக்கு 4 அவுன்சுகளாவது உண்ண வேண்டும்.

**காய்கறிகள்**—இவைகளில் உலோகச் சத்துக்களும் சுண்ணமும் அதிகமாயிருப்பதால் நம் உணவில் காய்கறிகளைக் கட்டாயம் சேர்த்துக்கொள்ள வேண்டும். காய்கறிகளைப் பிஞ்சாக உண்ணவேண்டும். அதிலும் நோயுற்றோர் பெரிதும் அனுசரிக்கவேண்டும். கத்திரி, வாழை, அவரை, வெண்டை, முள்ளங்கி, முருங்கை, அத்தி, சுண்டை, பாகை போன்றவை களின் பிஞ்சுகளைச் சமைத்துச் சாப்பிடவேண்டும். மேலும் காய்கறிகளை துண்டுகளாக நறுக்குவதற்கு முன்பே நன்றாக நீர்விட்டு கழுவ வேண்டும். சிறிய சிறிய துண்டுகளாகப் போடாமல் பெருந்துண்டுகளாக நறுக்கிச் சூடான நீரில் போட்டுச் சமைக்க வேண்டும். மூடியிட்ட பாத்திரத்தில் இளந்தீயில் வேகவைக்கவேண்டும். வெந்த பிறகு நீரை வடித்து விடுவதும் தவறாகும். இவ்வாறு சமைத்து உண்டால் முழு பலனையும் அடையலாம்.

**கீரைகள்.**—பச்சைக் கீரைகளில் குருதி விருத்திக்கு உகந்த அயச்சத்து அதிகமாயிருக்கிறது. மேலும் உபரசங்கள் நிறைந்திருக்கின்றன. உயிர்ச் சத்துக்களும் மிகவுள்ளன. நம் நாட்டில் இதை அறிந்தே சிற்சில கீரைகளைப் பச்சையாகவே உணவாக ஏற்றுள்ளனர். கரிவேப்பிலை, கொத்தமல்லிக்கீரை, புளிச்சக்கீரை, புளிஆரைக்கீரை போன்றவைகளைப் பச்சையாகவே "தொகையல்" செய்து சாப்பிடுவது வழக்கம். கீரைகளின் முழுப்பலனை அடையவேண்டுமானால் அவைகளைப் பச்சையாகவே சாப்பிட வேண்டும். அவ்வாறு பச்சையாக கீரையை நம்மால் சாப்பிடமுடியாது. ஆகையால் அவற்றை அதிகமாக வேகவைக்காமல் பக்குவமாகச் சமைக்க வேண்டும். அதிகமாக தண்ணீர் விட்டுக் கீரையை வேகவைத்து வெந்த பிறகு அதிகப்படியான நீரைக் கொட்டிவிடுகிறார்கள். கீரைகளைப் பறித்தவுடன் உபயோகித்து விடவேண்டும்.

**பழங்கள்.**—பழங்களில் அத்தி, கொய்யா, பப்பாளி, பலா, பேரீச்சை, மாம்பழம், வாழை மிகச் சத்துள்ளன. இவற்றில் ஏதாவது ஒன்றைத் தினமும் நம் உணவில் சேர்ப்பது நல்லது.

**கொட்டைப்பருப்புகள்:**—இவைகளில் காப்புப் பொருளும், கொழுப்பும் உயிர்ச் சத்தும் அதிகமாயுள்ளன. காலை உணவுக்குப் பிறகு பாதம், முந்திரி, வறுத்த நிலக்கடலை, அக்ரோட் இவைகளில் ஏதாவது ஒன்றை ஒரு பிடி சாப்பிடுவது நல்லது.

**நெய் .**—இது உடலுக்குத் தேவையான உட்டிணத்தையும் சக்தியையும் தர உதவுகிறது. பசுந்நெய் சாலச் சிறந்தது. "தாவர நெய்" என்று சொல்லும்படியான "டால்டா" வெறும்கெட்டி நிலக்கடலை நெய்யாகும். அதனால் பெரும்பாலோர் அசீரண நோயில் அவதிப்படுகிறார்கள். அதற்குப் பதிலாக எண்ணெய்களையே பயன்படுத்தலாம்.

**எண்ணெய் :**—சிறந்த தூய்மையான எள் நெய், தேங்காய் நெய், நிலக்கடலை நெய்களை உபயோகிப்பது சிறந்ததாகும். குறைந்தது இரண்டு அவுன்ஸ் எண்ணெய்யாவது தினமும் ஒவ்வொருவருக்கும் வேண்டும்.

**பால், முட்டை, தயிர், வெண்ணெய்.**—இவைகள் சிறந்த உணவுப் பொருள்களாகும். இரவில் தூங்கப்போவதற்குச் சற்று முன்பே பால் குடிப்பது நல்ல தூக்கத்தைத் தரும். ஆனால் ஏடுபடியாமலிருக்கக் கொதித்த பாலைக் குடிக்கவும். ஒரு நாளைக்குக் குறைந்தது எட்டுஅவுன்ஸ் பால் ஒவ்வொருவரும் சாப்பிடவேண்டும். தயிரில் பாலிலுள்ள சத்துக்கள் எல்லாமிருக்கின்றன. ஆனால் இதை மோராகச் செய்யும்பொழுது சத்துப் பொருள்கள் அநேகமாய் இல்லாமல் போகின்றன. பாலைப் போல் முட்டையும் சத்துள்ள உணவுப் பொருளாகும். தினந் தோறும் ஒரு முட்டையாவது சாப்பிடவேண்டும்.

**ஊண் உணவு.**—கல்லீரல், பிருக்கம், மீன் ஆகியவைகளில் சத்துக்கள் அதிகமுள்ளன. அதற்கடுத்தாற்போல் தசையும், என்பும் இவைகளின் கொதிநீர்களைக் (சூப்) குடிப்பது உகந்தது.

**சர்க்கரை.**—தினமும் இரண்டு மேசைக் கரண்டிக்கு மேல் சர்க்கரையைச் சாப்பிடக் கூடாது. சர்க்கரையில் உயிர்ச் சத்துக்களும் உலோகச் சத்துக் களும் கிடையாது. வெல்லத்திலும் பனை வெல்லத்திலும் இச்சத்துக்கள் இருக்கின்றன. ஆகையால், சர்க்கரைக்குப் பதிலாக வெல்லத்தை உப யோகிப்பது நல்லது.

**பானங்கள்.**—காப்பி, தேநீர், கோக்கோ இவைகள் உடல் வளர்ச்சிக்கும் தேக நலத்திற்கும் அவசியமில்லை. ஆகையால் இவைகளை உணவாகக் கருதக் கூடாது. இவைகளுக்குப் பதிலாக, பால், மோர், இளநீர், பத நீர் அல்லது எலுமிச்சம் பழச்சாறு உண்டு நல்ல பயன் அடையலாம்.

**உப்பு.**—தினமும் ஐந்து கிராம் உப்பே போதுமானது. ஆனால் தினமும் இருபது முதல் இருபத்தைந்து கிராம் உப்பு சாப்பிடப் படுகிறது. அளவுக்கு மீறின உப்பு இதயத்திற்குக் கெடுதியைப் பயக்கும்.

**தண்ணீர்.**—உண்ணும் உணவுப் பொருள்கள் கூழாய்க் கரைந்து அவற்றிலிருக்கும் சத்துக்கள் குருதியுடன் கலந்து உடலிற்குப் போஷணை அளிக்கின்றன. இதற்குத் தண்ணீர் மிகவும் இன்றியமையாததாகும். தண்ணீர் இல்லாவிட்டால் உணவிலுள்ள சத்துப் பொருள்களைக் குருதி யுடன் கலக்கச் செய்ய முடியாது. ஆகையால் நாம் தினமும் எட்டு முதல் பத்து கோப்பை வரை தண்ணீரைக் குடிக்கவேண்டும்.

**சிற்றுண்டி.**—சிற்றுண்டியாக இனிப்புப் பலகாரங்கள், முறுக்கு, வடை, காராபூந்தி, ஓமப்பொடி ஆகியவைகளை உண்கிறோம். இவை உடலுக்கு ஒருவித நன்மையும் அளிப்பதில்லை. இவைகளுக்குப் பதிலாக எள்ளுருண்டை வேர்க்கடலை உருண்டை, பயத்தம்பருப்புருண்டை ஆகியவைகளும் துவரை, கடலை, பட்டாணி, பச்சைப்பயறு, காராமணி ஆகியவைகளைத் தோல் நீக்காமல் செய்த சுண்டல்களையும் சாப்பிட்டால் உடலுக்கு அதிகப்பயனைத் தரும். இவைகளை ஓரிரவு ஊரவைத்து முளைக் கிளம்பிய வுடன் எடுத்து வேகவைக்காமல் சுண்டல் செய்து சாப்பிடுவோமாயின் உடல் வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களைப் பெறலாம்.

## உடல் உணவைப் பொதுவாகக் கையாளும் வகை.

உணவு உடம்பில் சேருவதற்கு முன்பே, பற்பல வேறுபாடுகளை அடைகிறது. வயிறு நிறைய உண்டபின்பு, போதும்; மறு கவளம் வேண்டாம்; உண்டு முடிந்தது என்று சொல்லுகிறோம். ஆனால் உண்மையில் அப்போது தான் உணவுத் தொழில் தொடங்கியிருக் கிறது. அந்தத் தொழிலில் ஒரு சிறு பகுதியே முடிந்திருக்கின்றது. அதாவது சோறு உள்ளே போயிருக்கிறது; இனிமேல் மற்றைத் தொழில்கள் நடக்க வேண்டும். வளர்வதற்கும் வேலை செய்வதற்கும் உடம்பிற்குத் தேவையான வலுக்கள் அனைத்தும் கிடைக்குமட்டும் இத்தொழில் தொடர்ந்து நடக்க வேண்டும். உடம்பிற்கு அது செய்ய வேண்டிய வேலையை எவரும் கற்பிக்க வேண்டாம். அதற்குத் தன் தொழில் தெரியும். எல்லா உறுப்புக்களுக்கும் உணவை மாற்றி பக்குவப் படுத்தும் தொழிலைச் செய்யத் தொடங்குகின்றன. அந்தத் தொழில் முடிவதற்குப் பல மணி நேரம் செல்லும். அத்தொழிலில் முற்பகுதி செரிமனமேயாகும்.

**சுவைத்தல்.**—

உணவைச் சுவை பார்க்கும் பொழுதே செரிபனம் தொடங்குகிறது; சுவையை அறிகிறது. அதே சமயத்தில் நாக்கு மூக்கின் உதவயைக் கொண்டு சுவையை அறிகிறது.

இதை விளக்க ஒரு பயிற்சியுண்டு. ஒருவரை நாற்காலியில் உட்கார வைத்து, துணியினால் அவர் கண்ணைக் கட்டிவிட வேண்டும். ஆப்பிள் பழம் ஒன்று பேரிக்காய் ஒன்று; இரண்டையும் தோலை நீக்கிச் சிறு துண்டுகளாக நறுக்க வேண்டும் பேரிககாய் துண்டு ஒன்றை எடுத்துக் கொண்டு அவர் மூக்கில் பிடித்துக் கொண்டு ஆப்பிள் துண்டு ஒன்றை அவர் வாயில் போட்டு சுவைக்கச் சொல்ல வேண்டும். "நீர் சாப்பிடுவது என்ன" என்று அவரைக் கேட்டால் பேரிக்காய் சாப்பிடுவதாகவே சொல்வார். இதனால் உணவின் சுவையை அறிவதற்கு மூக்கு, நாக்கு ஆகிய இரண்டு பொறிகளை யும் பயன்படுத்துகிறோம் என்பதை அறியலாம். பெரும்பாலும் மூக்கினாலேயே சுவையை அறிகிறோம் என்பதே உண்மை. நீர்க் கோர்வையால் மூக்கில் சளி பிடித்து, மணம் தெரியாமல் இருக்கும் பொழுது, உணவின் சுவை நன்றாகத் தெரியாதிருப்பதற்குக் காரணம் மூக்குப் பொறியேயாகும்.

**வாய்முதல் வயிறு வரை நடக்கும் செரிமனம்.—**

கண், மூக்கு இன்னதென்று தெரிவித்த பின்பு, அதை உண்பது நலம் என்று தெரிவிக்கிறது: உணவு நறுமணங்கமழ்ந்தல் வாயூறு கிறது. கண் உணவுகளைப் பகுபாடறிந்து உண்ணும் பெருளை உணர்த்துகிறது. இது மட்டும் அல்லாமல் செவிப் புலனும் வாயூறு வதற்குக் காரணமாகவுளது. இவைகளை விளக்க ஒரு வழியுண்டு.

ஒரு நாயை நல்ல ஒழுக்கமான முறையில் வளர்க்க வேண்டும். ஒரு கால வரம்பில் தான் அதற்கு உணவு அளிக்க வேண்டும். அக்காலங்களில் ஒரே விதமான உணவுப் பொருளைக் கொடுத்து உண்பிக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலங்களில் உணவு நாய்க்கு வரப் போவதாக ஒரு வித மணி ஓசையையும் கொடுத்து உணர்த்த வேண்டும். இவ்விதமான நாயைக் கவனித்தோமானால் மணி ஓசையைச் செவியால் கேட்டவுடன் நாய்க்கு வாயூறும். பகல் காலங் களில் மாமிசத் துண்டே கொடுத்துப் பழகியிருந்தால், அவ்வகையான உணவைத் தூரத்திலிருந்து கண் பார்வையாலே மாமிசத்துண்டு என்றறிந்ததும் வாய் மிகவும் ஊறும் உணவு அருகில் வர வர நறுமணம் வீசும். உடனே நாய்க்குச் சுவை தட்டுகிறது. மிகவும் வாயூறும். அவ்வுணவை உண்ணும் போது நன்றாகச் சுவையை அறிகிறது.

எனவே ஐம்பொறிகளால் உணவின் தன்மைகளை அறிவதே செரி மனத்தின் முதல் தொழில். இவைகளினால் வாயில் ஊறும் நீர், உமிழ் நீர் எனப்படும். உமிழ்நீர் வாயில் இட்ட உணவை நனைத்து மென்மை ஆக்கு கிறது. அதே வேளையில் பற்கள் அதை உடைத்து நொறுக்கிச் சிறு துண்டு களாக அரைக்கின்றன. பற்களினால் உணவுப் பொருள்கள் அரைபடுவதற்கு நாக்கும், தாடையும் தள்ளிக் கொடுத்து உதவுகின்றன. பற்களால் நொறுங்கிய கபப் பொருள்கள் உமிழ் நீரினால் கரைக்கப்பட்டு செரி மனம் ஆகிறது.

உணவு நொறுங்கி நனைந்து பக்குவமாக வழுங்குகிறநிலை வருகிற பொழுது, நா அதை வாயின் பின் பக்கத்திற்குத் தள்ளுகிறது. அங்கே ஒரு நீண்ட குழாய் இருக்கிறது. அதை இரைக் குழல் என்பர். அதன் வழியே உணவு வயிற்றுக்குள்ளே போகிறது. இந்தக் குழாய் தனிச் சிறப்புள்ள குழாயாகும். அது உணவை வயிற்றுக்குள்ளே விழும்படி விடுவதற்குப் பதிலாக அதை நெடுக இழுத்துக் கொண்டுபோய், வயிற்றுக் குள்ளே தள்ளக் கூடியதாக இருக்கிறது.

உணவுக் குழாயின் உட்பாகம் அமைந்திருக்கிற சிறு தசையே இவ்வாறு உணவை வயிற்றுக்குள்ளே தள்ளுகிறது. நொறுங்கி நனைந்து அரை பட்ட உணவு, கவளம் கவளமாகக் குழாய் வழியே போகின்றது. உண்ட உணவைத் தன்னுள்ளே அடங்கும் நிலையில் வயிறு நெகிழ்ந்து கொடுக்கிறது.

**வயிற்றுக்குள்ளே நடக்கும் தொழில்:—**

வயிறு உணவைத் தனக்குத் தேவையான பொருளாக மாற்றத் தொடங்குகிறது. முதன் முதல் உணவுப் பொருள் மென்மையும் நீர் வடிவமுள்ள பொருளாக மாறவேண்டும். வாயும் பல்லும் உணவை நொறுக்கினதாலும் அரைத்ததினாலும் வயிற்றில் செரிமன வேலை தொடங்குகிறது. உமிழ் நீரினால் கபப் பொருள்கள் செரிக்கப்பட்டு வயிற்றில் பித்தப் பொருள்களின் செரிமனம் நடக்கிறது.

வயிறு ஒரு வலுத்த பை. அந்தப் பை உணவை அடக்கிக் கொள்ளும் படி விரிந்து கொடுக்கக்கூடும். வலிய தசையினால் ஆகிய வயிறு பல்லால் நொறுங்கிய உணவை நெருக்கிக் கடைந்து உருட்டுகிறது.

அன்றியும் வயிறு தான் சுரப்பிக்கின்ற நீரினால் (குக்கி நீர்) முன்பு நொறுங்கி உமிழ் நீரினால் நனைக்கப்பட்ட கபப் பொருள்களை இன்னும் உடல் அணுக்கள் அவைகளை உட்கொள்ளும் அளவல் செரிமனப்படுத்து கிறது. எனவே கபப் பொருளின் துகள்களாக மாறுகின்றன. மற்றும் வயிறு பித்தப் பொருள்களை உடல் அணுக்கள் ஏற்கும் அளவில் நொறுக்கு கிறது. அப்பொருள்களைப் பின்னப்படுததுவது அனல் பித்தம் எனப் படும். மூன்றாவதாக வாதப் பொருள்களின் செரிமனமும் அங்கு ஆரம்பமாகிறது என்றாலும் பெருங்குடலில் வாதப் பொருளின் செரி மானம் முடிவடைகிறது. வயிற்றிலுள்ள உணவு கரைவதற்கு உதவியாக மற்றொரு செயலும் நடைபெறுகின்றது. அது உணவு நாற்பக்கமும் சுற்றிக் கடையப்படுவதாம். வாயிலும் வயிற்றிலும் ஊறுகின்ற நீர் வெறும் தண்ணீர் போன்றது அன்று. அவை பல்வேறு வகைப்படும். வெறும் தண்ணீரில் கரையாத பல்வேறு பொருட்களை அவை கரைக்கவும் மாற்றவும் வல்லன.

இந்நிலையில் உணவிற்குப் பல செயல்கள் நிகழ்ந்துள்ளன. பல், உணவை நொறுக்கியது, உமிழ் நீரால் அதை நினைத்துக் கபப் பொருள் கள் செரிமனமாகும் அளவுக்கு வயிற்றில் ஏறபட்டது. உமிழ் நீரினால் நனைத்து மென்மை ஆக்கிய உணவுப் பொருள்கள் வயிற்றுக்குத் தள்ளுகிறது. வயிறு பித்தப் பொருள்களைப் பின்னப்படுத்தி செரிமன அளவுக்குச் செய்கிறது. வாயுப் பொருளின் செரிமனம் வயிற்றில் ஆரம்பிக் கிறது. எனினும் அதில் பெரும் பகுதி இன்னும் உடம்பிற்குப் பயன்படு மாறு முற்றிலும் ஆயத்தம் ஆகவில்லை.

**சிறு குடலில் நடைபெறும் தொழில்:—**

வயிறு ஒரு நேரத்தில் சிறிது உணவைச் சிறு குடலுக்குள்ளே தள்ளு கிறது. சிறுகுடல் என்பது தொந்தியின் வளையம்போல் அமைந்துள்ள நீண்ட குழாயாகும். அது நீளமாய் இருப்பதால் வளையம்போல் தொந்திக்குள் அமர்ந்திருக்கிறது. அது உணவைக் கூழாக்கி மேலும் தனிப்பட்ட சத்துள்ள நீர்ப் பொருட்கள் அதில சுரந்து கலக்கும்படிச் செய்து அதை நெடுகத்தள்ளிக் கொண்டே போகின்றது. இப்பொழுது நமது உணவு அந்தக் குழாய்க்குள்ளே நெடுந்தொலைவு சென்று மிகுதியான மாறுதல் அடைந்திருக்கிறது. உண்ட உணவை உடம்பிற்கு ஏற்றதான ஒருவகை நீர்ப் பொருள் ஆகும் வரைக்கும் நொறுக்கித் திரைந்து கரைந்து மென்மையான கூழாக்கியுள்ளது.

**பெருங்குடலின் தொழில்:**

உண்ணும் உணவில் சில பொருட்கள் நம் உடம்பிற்குச் சிறிதும் பயன் படாதவை. அவற்றில் உடம்பிற்குத் தேவையான சத்துக்கள் இல்லை. அவற்றை உடம்பு, தனக்குப் பயன்படும் பொருள் ஆக்கிக் கொள்ளவும் முடியாது. அது கழிவு என்று சொல்லப்படும் பெருங்குடலில் இக்கழிவு ஏற்பட்டு அவற்றை வெளியே எறிந்து விடுகின்றது. எனவே பெருங்குடல் வாக பொருள்களைச் செரிமனம் செய்து நீரையும் இழுத்துக் கொண்டு கழிவுப் பொருளை வெளியே எறிகிறது.

## செரிமனம்

**வாயில் உணவின் செரிமனம் :**

உணவுப் பொருள்களை வாயிலிட்டதும் உமிழ்நீர்க் கோளங்களிலிருந்து உமிழ் நீர், சட்டென ஊறி உணவை நனைத்து மென்மை ஆக்குகிறது. அதே சமயத்தில் பற்கள் அதை உடைத்து நொறுக்கிச் சிறு சிறு துண்டுகளாக அரைக்கின்றன. பற்களினால் உணவுகள் அரைபடுவதற்கு நாக்கும், தாடைப் பேசிகளும் தள்ளிக் கொடுத்து மெல்லுகின்றன. இவ்விதமாக நொறுக்கப்பட்ட கரிநீரகப் பொருள்கள் மட்டும் உமிழ் நீரினால் கரையப்பட்டுச் செரிமனம் ஆகின்றன.

**உமிழ் நீர் குணம், செய்கை முதலியன :**

மூன்று இணை பெரிய உமிழ்க் கோளங்கள் உள. அவை (1) செவி உமிழ்க் கோளம், (2) கீழ்த் தாடை உமிழ்க் கோளம், (3) கீழ் நாக்கு உமிழ்க் கோளம் என்பனவாம். இவைகளின் கலவையான ஊற்று உமிழ் நீர் நிறமற்றதும் பிசுபிசுப்புள்ளதாகவும் இருக்கிறது. நீர்ப் பாகம் பெரும்பான்மையாகவும், சிறுபான்மை உப்புகளும் இந்திரியப் பொருள்களும் உள. சற்று உவர்ப்பு ருசியுள்ளது.

உமிழ் நீரின் முதன்மையான உமிழ் நொதி மாவுப் பதார்த்தங்களைச் சர்க்கரைப் பொருளாக மாற்றுகின்றன. திராட்சைச் சர்க்கரை பழச் சர்க்கரை போன்றவைகளாக மாற்றுகின்றன. உமிழ் நொதி மாவுப் பொருள்களை வாயிலுள்ளவரைக்கும் நொறுங்குவிக்கும். வாயில் செரிமான உணவு இரைப்பையில் தள்ளப்பட்டு அங்கு இரப்பைச் செரிமனம் ஆரம்பிக்கும் வரையில் உமிழ் நொதியின் சீரணம் நடக்கும். இரைப்பை ஊறுநீர் கலந்தும் உமிழ் நொதியின் செரிமனம் நின்று விடும். ஆகையால் உமிழ் நொதியின் செரிமனம் இருபது முதல் முப்பது நிமிடம் வரையில் நடக்கும். அதற்கு மேல் இரைப்பையின் சீரணத் தொழில் ஆரம்பமாகின்றது. எனவே, வாயில் உணவை மெல்லும் பேசிகள் (சருவணி கேநாரி, அகபாதவி, புறப்பாதவி, தமணி) மெல்லும் தொழிலைச் செய்கின்றன. தொண்டையிலுள்ள பேசிகளால் நாக்கினால் பின்னே தள்ளப்பட்டு மெத்தென நனைத்த உணவு உண்டைகளை இரைக்குழலினூடாக விழுங்கச் செய்து இரைப் பைக்குள் புகச் செய்கின்றது.

**வாயில் உமிழ்நீர் ஊறும் விதம்.**

கண், மூக்கு, காது ஆகிய பொறிகள் உணவை இன்னதென்று தெரிவித்த பின்பு அதை உண்பது நலம் என்று தெரிவிக்கிறது. உணவு நறுமணங் கமழ்ந்தால் வாயூறுகிறது. கண் உணவுகளை நிற பேதங் களைக் கொண்டு பாகுபாடறிந்து உண்ணும் பொருளை உணர்த்துகிறது. செவிப் புலனும் ஒருவாறு வாயூறுவதற்குக் காரணமாகிறது. ஐம்பொறி களால் உணவின் தன்மைகளை அறிவதே செரிமனத்தின் முதல் தொழிலாகும்.

(2) சாதாரணமாக உணவுப் பொருள் வாயிலிட்டதும், உமிழ் நீர் சுரப்பிக்கப்படுகிறது. உணவு இட்ட உணர்ச்சியை வாயில் பொருத்தியுள்ள உணர்வு நரம்புகளால் கோர்த்தகசேரு பகுதிக்குக் கொண்டு சென்று உமிழ் நீர்க் கோளங்களைத் தூண்டுவித்து உமிழ் நீரைச் சுரப்பிக்கச் செய்கிறது. நாக்கு, வாய் முழுவதும் தழுவிய சளிச் சவ்வுகள், மெல் லண்ணம், தொண்டை ஆகியவைகளின் உணர்வு நரம்புகள் உணவுத் தூண்டுதலை உணர்விக்கிறது. அவைகள் (1) மும்முகியில் கிளைத்த கீழ்த்தாடை நரம்பின் கிளையான சுவை நா நரம்பு, (2) நாத் தொண்டை நரம்பு, (3) உரோதர நரம்பின் கிளையான தொண்டை நரம்பு என்பனவாம். தூண்டுவிக்கும் நரம்புகள்: (1) முக நரம்பின் கிளையான ஆனகரச்சி நரம்பு, (2) கேநாரச் செவி நரம்பு ஆகியவை களாகும்.

**சகவேதனிப் பகுதி.** மேல் கழுத்துக் கிரந்தியின் நரம்புக் கிளை கீழ்த்தாரைக் கிரந்தி மூலமாகச் சென்று கீழ்த்தாடை உமிழ்க்கோளம் கீழ்நத்துக உமிழ்க்கோளம் பற்றி இருக்கிறது. செவி உமிழ்க் கோளத்தை மேல் கழுத்து கிரந்தியினின்று மற்றொரு கிளை ஆடிக் கிரந்தி மூலமாகப் பற்றுகிறது.

இவைகளுக்கு மேலும் முகுளத்தின் நான்காம் அறையின் தரையில் கிடக்கின்ற விலபதார்த்தத்தில் உமிழ்க் கோளங்களை ஊக்குவிக்கும் நரம்பு வலங்கள் உள. இதனை உமிழ் நீர் சுரப்பி விசை என்பர். இரு நரம்பின் விசை மூலமாக உமிழ் நீர் சுரப்பித்தலைத் 'திட்டமான விசை வேகம்' என்பர்.

இவைகளை எல்லாம் ஆதிக்கம் செய்யும் மற்றொரு நரம்பு விசையும உளது. அதனை "திட்டமில்லாத நரம்பு" விசை வேகம் என்பர். இவ்விசை கோர்த்தத்தின் உள்வலத்தின் மேற்பரப்பில் உள்ளது.

**இரைப்பையில் உணவு செரிமனம்**

வாயில் உமிழ் நீரினால் நடந்த செரிமனம் உணவுப் பொருள்கள் இரைப்பையில் அரைமணி நேரம் பொறுத்து இரைப்பையின் பேசிகளின் கடைதல் தொழிலாலும் இரைப்பைச் சுரப்பி நீராலும் சீரணம் உண்டா கிறது. எனவே, இந்த அரை மணி நேரத்திற்குள் உமிழ் நீர் செரி மனம் இரைப்பையில் நடந்து கொண்டே இருக்கின்றதெனக் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

இரைப்பையின் வியூகனத்தை ஆராய்ந்தால் அதன் உள்பாகம் சளிச் சவ்வுக் கவசத்தினால் ஆக்கப்பட்டது. சளிச் சவ்வு வில்லூர்தி போல அழுத்தமும் மெதுவும் உள்ள தடிப்பான சவ்வு வளர்ந்தவர்களுக்கு வெண்பீத நிறமாகவோ நரை நிறமாகவோ காட்டும். சீரணம் நடக்கும் வேளையிற் சிவக்கும். இட அந்தத்தில் மெல்லியதாகவும் வல அந்தத்தில் தடிப்புமாயிருக்கும். இரைப்பைச் சுருங்கியிருக்கையில் இதிற் பல சுருக்குகள் நெடும்பாட்டுக்கு விழுந்திருக்கும். வல அந்தத்திலும் பெருவளைவிலுமே இச்சுருள்கள் தோற்றமாய்க் காட்டும். இரப்பை ஊதும்போது இச் சுருள்கள் அற்றுப் போகும்.

சளிச் சவ்வின் உட்பாகத்தைப் பார்த்தால் அதிற் சிறு சிறு குழிகள் தோன்றுவதைப் போலக் காட்டும். இக் குழிகளின் அடியில் குக்கிக் குதுவங்கள் எனப்படும் நுண்ணியக் குழல்களின் வாயில்கள் காணப்படும். குக்கிக்குதுவங்கள் சளிச்சவ்வடங்கலும் அதற்கு நிறுதிட்டமாய்ப் பரவி யிருக்கும் குக்கிக் குதுவங்கள் ஒரே தன்மையுள்ள தாரகச் சவ்வாலாக, அச்சவ்வில் விலங்கள் படையாகப் பரவியிருக்கும். விலங்கள் இரைப் பையின் பல பகுதிகளிலும் வித்தியாசமான தன்மையுள்ளவைகள். (1) சளிக்குதுவங்கள், இரப்பைக்குரிய சளி இவைகளில் ஊறுகின்ற தெனப்படுகிறது, (2) பசக் குதுவங்கள், குக்கி நீரை ஊறப்பண்ணுகிற தென்று கூறுகின்றனர், (3) ஒற்றைக்குதுவங்கள், இரப்பைச் சளி சவ்வடங்கலுங் காணப்படும்.

இரைப்பைச் சுவர், சளிச் சவ்வுக் கவசம், ஆனாயக் கவசம, பேசிக் கவசம், வசாக் கவசம் என்ற நான்கு கவசங்களை அகமிருந்து புறமாக முறையே உடையது. இரைப்பைப் பேசிக் கவசமானது நெடுமிழை, சுற்றிழை, சாயிழை ஆகியவற்றாலானது.

**குக்கி ஊறு நீரின் குணம், செய்கை.**

குக்கி ஊறுநீர் அமிலத்துவமானது. அதில் தீவளிநீரக அமிலம் இருப்பதால் புளிப்புத் தன்மையுள்ளது. அதில் சிறுபான்மை சளிநீரும் சுரக்கும்.

குக்கி நீரில் இந்திரிய நொதிகளும் அநிந்திரிய உப்புகளும் இருக்கின்றன. இந்திரிய நொதிகளில் (1) குக்கி நொதி முக்கியமானது. இந்நொதி காலிலிகப் பொருள்களைக் காலிலிகப் பகுதிகளாக நொதிக்கச் செய்கின்றன. குக்கி நொதி பிறக்கும்போது வல்லமை யற்றது. தீவாயு நீரக அமிலத்துடன் சேர்ந்ததும் வல்லமையுற்று காலி லிகப் பொருள்களை நொறுக்குகிறது. சிறு குழந்தைகளுக்குப் பால் நொதி பெரும்பான்மையாய் உண்டாகும். அது பாலைச் செரிமனம் செய்விக்கிறது. ஆனால், வளர்ந்தவர்களுக்குக் குக்கி நொதிப் பாலையும் செரிப்பிக்கிறது. (2) நிண நொதி—கொழுப்புப் பதார்த்தங்களை நிண அமிலங்களாகவும் திரி நீரகச் சாராயமாகவும் பிரிக்கின்றன. ஆகவே, இரப்பையில் காலிலிகப் பொருளும் நிணப் பொருள்களும் செரிமன மாகின்றன.

**குக்கிநீர் ஊறும் விதம்:**

(1) **சிக்கு முக்கலான நரம்பு வேகங்கள்:**—இதில் திட்டமிட்ட நரம்பு விசை, திட்டமில்லாத நரம்பு விசை ஆகியவை அடங்கும்.

**திட்டமிட்ட நரம்பு விசை:**—வாய் செரிமனம், உணர்தல். சுவைத்தல், மெல்லுதல், விழுங்குதல், உமிழ் நீர் ஊறல் போன்றவைகள் இதிலடங்கும்.

**திட்டமில்லாத நரம்பு விசை:**—பார்த்தல், கேட்டல், முகர்தல் போன்றவைகள்.

பலவித சிக்குமுக்கலான பல உணர்வுகள் ஏற்பட்டாலும் ஒருவித விகாரமின்றி ஒத்துழைப்பால் ஒரே காலத்தில் எல்லாம் செயல்புரிகின்றன.

ஆகவே ஆராய்ந்து கூறுமிடத்து உமிழ்நீர் செரிமனமும் இரைப்பைச் சீரணத்துக்கு முதல் தூண்டுதலென அறியக் கிடக்கிறது. அதற்கான உணர்வு நரம்புகளும் இதற்கும் ஏதுக்களாகின்றன. ஆனால் குக்கி நீரைச் சுரப்பிக்கும் ஊக்கத்தைக் கொடுப்பது சுரப்பிக்கும் நரம்புகளாகிய ஆந்திரப் பெரு நரம்பு, ஆந்திர நடுநரம்புகளெனச் சகவேதனிப் பகுதிகளாகின்றன.

(2) குக்கியின் பேசிக் கவசங்கள் கடையும் தொழிலுக்கும் குக்கி நீரைச் சுரப்பிக்கவும் ஏதுவாகின்றன.

(3) இரைப்பையின் பேசிகளின் கடைதல் தொழில்மட்டுமின்றி வாயில் செரிமனமாகி இரசாயன மாறுதல்களை அடைந்த உணவுப் பொருள்களும், குக்கி ஊறு நீரைச் சுரப்பிக்கப்படுகிறதாக அறிந்தோம். ஆனால், இவைகளல்லாமலும் தனிப்பட்டுக் குருதியினால் பிறப்பிக்கப்பட்ட இனப் பெருக்க மற்ற நொதிப் பொருள்களாலும் குக்கி ஊறுநீர் பாய்கின்றது என்று உணர்த்தப்பட்டுள்ளது. அது தான் எதிர் நொதிப் பொருளாம். எதிர் நொதிகள் உரோதர நரம்பின் கூந்தலிலிருந்து உண்டாகும் பொருளாகும்.

வலக்குக்கிப் பாகத்தில் சுவரின் சளிச் சவ்வில் குக்கி முப்பூ ஏற்படுகிறது. அது குக்கி ஊறுநீரைச் சுரப்பிக்க ஏது என்பர். குக்கி முப்பூ இரைப்பைச் செரிமன உணவோடு பசதக்குடலுக்குச் சென்று அங்குப் பசதக் குடலால் உறிஞ்சப்பட்டு மறுபடியும் குருதியின் மூலமாகக் குக்கிவலப் பாகத்தை வந்து அடைகிறது. இவ்வாறு குக்கி முப்பூ குக்கி வலப் பக்கத்தில் தோன்றுவதும் பசதக் குடலில் உறிஞ்சப்படுவதும் குருதியின் மூலமாகக் குக்கி வலப்பாகத்தை அடைந்து குக்கி முப்பூச் சுழற்சியைச் செய்கிறது.

இரைப்பையின் இடப்பாகம் சற்று மென்மையுற்றும், வலப்பாகம் வலுத்ததுமானது. இடப்பாகத்தில் காலிலிகப் பொருள்கள் செரிமனமாகிறது. ஆனால், நிணப் பொருள்கள் சரிவர செரிமனமாகவில்லை. இடப்பாகத்தில் நிண நொறுக்கி நொதி சிறுபான்மையாகவும் வலுவற்றதாகவுமுள்ளது. இடப் பக்கத்தில் செரிமனமான உணவு வலப்பாகம் வந்தவுடன் பசதக்குடலினின்று பசத ஊறுநீர் இரைப்பையின் வலப்

பாகத்திற்கு எதிர் பாய்கிறது. பசத ஊறு நீரில் நிண நொறுக்கி நொதியுள்ளபடியால் வலப்பாகத்தையடைந்த இடப்பாகத்தின் செரிமன உணவு பசத நிண நொதிகளால் நிணப் பொருள்கள் சரியான நிண அமிலங்களாகவும் திரி நீரகச் சாராயமாகவும் நொறுக்கப்படுகின்றன. முன்பு சொன்ன குக்கி முப்பூவினாலும் காலிலிகப் பொருள்களும் நொதிக்கப்பட்டு வலுத்த வலப்பாகத்திலிருந்து செரிமனமான உணவு பசதக்குடலுக்குச் செலுத்தப்படுகிறது.

பசதக் குடலின் இறங்கும் பாதையில் பித்தக் குழலும் கணையக் குழலும் அகவலத்தில் நடுவுக்குப் பதியத்திற் நம் அக்குழல்கள் முறையே ஈரலினின்று பித்த நீரையும் கணையத்தினின்று கணைய நீரையும் பாய்விக்கச் செய்கின்றன. பித்த நீரும் கணைய நீரும் சிறு குடலின் உணவு செரிமனத்திற்கு முக்கிய ஆதாரங்களாகின்றபடியால் அவர்களை அறிவது அவசியம்.

**கணைய நீர்.**

கணையம் செரிமன கோளங்களுள் ஒன்று. முக்கியமானது. அமைப்பில் உமிழ் நீர் கோளங்களைப் போன்றது. இது இரண்டுவித சின்னஞ்சிறு கோளங்களை உடையது. (1) சுரப்பிக்கோளம்-குழல்களை உடையது. (2) முப்பூக்கோளம்-குழல்களில்லாதது. இங்குச் சுரப்பிக் கோளங்களைக் கவனிப்பது நன்று. கணையக் கோளங்கள் இருவித படையான சுரப்பி விலங்களையுடையது. இவ்விருவித படையின் மத்தியில் குழல்கள் ஆரம்பிக்கின்றன. பல கோளங்களின் குழல்கள் ஒன்று சேர்ந்து பொது கணையக் குழல் உண்டாகி கணையத்தின் பின் பக்கமாக வாலினின்று தலைவரை நெடுகச் சென்று பித்தக் குழலோடு அணைந்து பசதக் குடலில் திறக்கிறது.

கணையத்தை நிரம்ப நரம்புகள் பற்றுகின்றன. முக்கியமாக உரோதரி நரம்பின் கிளைகளும், சகவேதனிப் பகுதிகளும், கணையத்தைப் பற்றும் நரம்புகளாம். அதை, சுற்றியுள்ள அவையவங்களான ஈரல், இரப்பை, பசதக் குடல்களையும் பற்றுகின்றன. ஆகையால் இரைப்பைக்கு நரம்பு மண்டலத்தின் ஆதிக்கத்தைச் சொன்னது போலவே இவை நான்கிற்கும் பொருந்தும்.

கணைய சுரப்பிக் கோளங்கள் அநிச்சாப்பேசி இழைகளையுடையன. இவ்விழைகள் சுருங்கினால் கணையநீர் சுரப்புதல் குறையும் அல்லது நின்று விடும்.

குணம்:—தெளிவான நிறமற்ற நீர், காரமுள்ளது. இந்திரியப் பொருள்களும் அநிந்திரியப் பொருள்களும் உள. காலிலிகப் பொருள் களும், சளிப் பொருள்களும் மிகுந்து காணப்படும். அநிந்திரியப் பொருள் களுடன் சோடதச்சாரம் மிகவும் முக்கியமானது.

கணைய நீரில் காலிலிக நொதி, நிணநொதி, கரிநீரக நொதி ஆகியவைகளும் உள. கணைய காலிலிக நொதி எல்லா காலிலிகப் பொருள்களைக் காலிலிக அமிலங்களாகவும் மாற்றுகிறது. இவ்வமி லங்கள் காலிலிகப் பொருள்களுக்கு அடிக் கோளாக உள்ளன. புரோதப் பொருள்களையும் உடல் அணுக்கள் கிரகித்துக் கொள்ளும்

தன்மையான காலிலிக அமிலங்களாகக் கணைய நீரினால் மாற்றப் படுகின்றன. கவனிக்குமிடத்து கணைய நொதி சிறு குடலில் வந்து சேர்ந்ததும் குடலுப நொதியின் தொடர்பால் வலுப்பெறுகிறது. வலு பெற்ற பிறகு கணையக் குடல் நொதியாகிச் சிறு குடலில் புரோசப் பொருள்களைக் காலிலிக அமிலங்களாக மாற்றப்படுகின்றன. எனவே கணைய நொதி குடலுப நொதியோடு சம்பந்தப்பட்டு, கணையக் குடல் நொதியாகி சிறுகுடலில் செரிமனத்தை ஆரம்பிக்கிறது. இதே போன்று கணைய நிண நொதியும் ஆம். கணைய நிண நொதிப் பசதக் குடலில் பாய்ந்ததும் பித்த நீர் உப்புகளுடன் சம்பந்தப்பட்டதும் வலு பெறுகிறது. வலுப் பெற்று நிணப் பொருள்களை நிண அமிலங் களாகவும், திரி நீரகச் சாரமயமாகவும், சவுக்காரங்களாகவும் மாற்றப் பெற்று, பசை போன்ற கூழ்ப் பொருளாக மாற்றுகிறது. கரிநீரக நொதி, வாய் செரிமனத்தில் சரிவர சமிக்கப்படாத மாவுப் பொருள்களைப் பின்னப்படுத்துகிறது. இன்னும் அநேகவித சிக்கு முக்கலான காலிலிகப் பொருள்களைப் பின்னப்படுத்த அவைகளுக்குத் தகுந்தாற் போன்ற நொதிகளையும் பிறப்பிக்கின்றது.

**கணையம் சுரப்பிக்கும் விதம்.**— இரைப்பைக்கு அமைந்துள்ள நரம்பு மண்டலங்களே இதற்கும் பொருந்தும். கணையத்தைச் சகவேதனி நரம்புகளும் பரிசகவேதனி நரம்புகளும் பற்றும். பரிசகவேதனி நரம்பு மண்டல் மூலமாக உரோதர நரம்பும் சகவேதனி நரம்பு மண்டல மூலமாக பெரிய ஆந்திர, நடு ஆந்திர நரம்புகள் ஆகியவை இடுப்புக் கிரந்தி மூலமாகப் பற்றும். முதலில் சிறிது நேரம் கணைய நீர் பாய்வது திட்டமிட்ட நரம்பு விசையின் தூண்டலால் ஏற்படுகிறது. மற்ற சிக்குமுக்கலானவைகள் திட்டமில்லாத நரம்பு விசைகளாலும் முப்பூக்களாலும் நடைபெறுகின்றன.

இரப்பைச் செரிமன உணவோடு பசதக் குடலில் வந்தடைந்தவுடன் அவற்றிலுள்ள தீவளி அமிலமும், நிண அமிலமும் பசதக் குடல் சளிச் சவ்வும் கணையச் சுரப்பிப்பி முப்பூவைப் பாய வைக்கிறது. கணைய சுரப்பிப்பி முப்பூ, குருதி மூலமாக உறிஞ்சப்பெற்று கணையத்தை அடைந்து கணையச் சுரப்பி விலங்களைத் தூண்டுவிக்கிறது, கணையத்தை முன்சொன்ன நரம்பு மண்டலம் மட்டுமின்றி கணையச் சுரப்பிப்பி முப்பூவும் கணைய நீரை ஊறச் செய்கிறது.

**ஈரல்.**—பித்த நீர் ஈரலினின்று சதா காலமும் ஊறுதலடைந்து கொண்டிருக்கும். பித்த நீர், ஊறு நீருமட்டுமின்றி வெளித் தள்ளப் படும் ஈரல் மலமாகவும் கருதவேண்டும். பித்த நீர் செரிமன காலத் தில் ஈரலிலிருந்து நேரிடையாகப் பாய்கிறது. பித்தப்பையிலிருந்து சேர்த்து வைத்திருந்த பித்த நீரையும் வெளிப்படுத்தும்.

ஈரலின் பதார்த்தம் மிக நுண்ணிய ஆனாய நெசவால் இணைந்த சிறு மணிகளாகிய அம்சகங்களும், வேசக நாளம், பித்த தாரை, ஈரல் நாடி, ஈரல் நாளங்கள், சோடணிகள், நரம்புகள் என்பு வற்றின் கிளைகளுஞ் சேர்ந்துண்டாகிறது. இவைகளாலான முழு உறுப்பும் இழைக் கவசத்தாலும் வசாக் கவசத்தாலும் மூடப்படும்.

ஈரலின் மிகுதியான பங்கு அம்சகங்கள் இவைகள் உள்ளும் புறமுமாய் தோன்றும். அம்சகம் ஒவ்வொன்றிலும் வெளிப்பக்கத்தில் மிச்சமான பங்கு அயலிலுள்ள அம்சகங்களில் நின்று ஆனாய நெசவின் மெல்லியப் படலத்தாலும் சிறு தசிரங்கள் தாரைகளாலும் பிரிந்திருக்கும். ஈரல் நாளங்களிலொன்றைத் திறந்தால் அதில் அணைந்தாற் போலிருக்கிற அம்சகங்கள் தளவரிசை போலிருப்பது தெரியும். அவைகள் ஒவ்வொன்றின் மையத்தில் அம்சகவடி நாளங்களின் வாயிலாகிய சிறிதுவாரம், நாளத்தின் மெல்லிய சுவரினூடே தெரியும்.

அம்சகங்கள் ஒவ்வொன்றும் விலங்களும் பித்தக் குழற் பின்னலும் வேசக நாளப் பின்னலும் ஈரல் நாளத்தின் கிளையும் நுண்ணிய நாடிகளும் சேர்ந்துண்டாகும். சோடணி நரம்புகளும் இதில் சேரும்.

ஈரலின் விலங்கள் அம்சகத்தின் மிகுதியான பங்காகி தந்துகிப் பின்னலின் இடைவெளியில் பித்தத் தாரைகளின் முதற் பின்னலுள் அடங்கிக் கிடக்கும். வேசக நாளத்தின் மிகச் சிறிய கிளைகள் அம்ச கங்களுக்கிடையில் ஓடி அவைகளைச் சூழ்ந்து பின்னலாகும். இப் பின்னலில் நின்று கிளை அம்சகத்துக்குப் புகுந்து நுண்ணிய பின்ன லாகி அம்சகத்தின் மையத்திலுள்ள ஈரல் நாளத்தின் இறுதி கூந்தல்களைச் சந்திக்கும். அம்சகத்துக்குள்ளிருக்கும் ஈரல் நாளத்தின் கிளைகளைக்கூடி அம்சகத்தினடியால் அதற்கு வெளியே வந்து ஈரல் நாளத்தில் முடியும். வேசக நாளத்தால் குருதி ஈரலுக்குச் செல்லும். குருதியிலிருந்து பித்த நீருண்டாகும். மேல் மிச்சமான குருதி ஈரல் நாளத்தால் எடுபடும். ஈரல் விலங்களிலுண்டான பித்த நீர் பித்தத் தாரையால் குடலுக்குச் செல்லும்.

**பித்த நீர் குணம்.**—பித்த நீரில் பித்த அமிலங்கள், பித்த இந்திரிய நிறப் புள்ளிகள், பித்த நிண வைப்பு, மற்றும் அநிந்திரியப் பொருள்கள் சோடதம், யவ்வம், சுண்ணம் போன்ற உப்புக்கள் இருக்கின்றன. பித்த இந்திரிய நிறப்புள்ளிகளாகிய பித்த இந்திரியப் பொன் நிறப் புள்ளிகள், பித்த இந்திரியப் பச்சை நிறப் புள்ளிகள் பித்த நீருக்கு நிறத்தைக் கொடுக்கின்றன. குருதி சிவப்பு அணுக்களை ஈரலில் அழித்துப் பின்னப்படுத்தும்போது அதிலிருக்கும் அயசெந் தவளமும் பிரிக்கப்படுகிறது. அயசெந் தவளத்திலிருந்து மேற்சொன்ன பித்த இந்திரிய நிறப் புள்ளிகள் கிடைக்கப்பெறுகின்றன. இவைகளே சிறு நீரில் அமரிப் பொன் நிறப் புள்ளிகளாகவும் அமரிப் பச்சை நிறப் புள்ளிகளாகவும் வெளிவருகின்றன.

பித்த நீர் (1) மூன்று வகை நொதிகளின் தொழில்களை மேலும் ஊக்குவிக்கிறது. (2) நிண அமிலங்களைக் கரைய வைக்கிறது. (3) நிண அமிலங்கள் திரி நீரகச் சாராயம் முதலியவைகளைக் குழம்பு பாகமாக்கிக் கூழாகத் திரட்டுகிறது. (4) நிணங்களைச் சோடணிப்ப தற்கும் உதவுகிறது. (5) குக்கி நொதி அமில சம்பந்தத்தால் வலுப் பெற்று தொழில் பெறும். ஆனால் சிறுகுடலில் குக்கி நொதி வந்ததும் கணைய நொதியை எதிர்த்து அதன் தொழிலை அழிக்கும். ஆகவே பித்த நீர் குக்கி நொதியின் வல்லமையை அழித்து, கணைய நொதியை வலுப்படுத்துகிறது. இதேபோல் புரோதப் பொருள் சீரணிப்பி லிருந்து குக்கி நொதியையும் அழித்து கணைய நொதியைத் தொழில் புரியும்படி உதவுகிறது.

**பித்த நீர் ஊறும் விதம்.**—(1) பித்த நீர் அமிலங்களோ பித்த நீரையோ உள்ளுக்கு ஏற்றல் ஈரல் விலங்கள் தூண்டப்பட்டுப் பித்த நீர் ஊறுகிறது.

(2) நீர்த்திவளி அமிலம், அமிலத்துவமுள்ள சாறுகள், பழங்கள், முட்டையின் மஞ்சட்கரு, உலோக நீர்கள் போன்றவைகள் சிறு குடலை அடைந்தவுடன் ஈரல் தூண்டப்பட்டுப் பித்த நீர் ஊறுகிறது.

(3) திட்டமிட்ட நரம்பு வேக விசையும் திட்டமில்லாத நரம்பு வேக விசையும் ஊறச்செய்கிறது.

மேற்சொன்ன நரம்பு விசைகளால் ஈரல் விலங்கள் தூண்டப்பட்டு பித்த நீரை, பித்த தாரை வழியாகப் பசதக் குடலை அடையச் செய்கிறது. அன்றியும் பித்தப்பை, சீரணக் காலங்களில் அடிக்கடி சுருங்குவதால் சேர்த்துவைத்த பித்த நீர், பித்தப்பைத்தாரையினூடாக வந்து பித்தத் தாரையில் கலந்து சென்று பசதக் குடலில் பாய்கிறது.

**சிறு குடல் செரிமனம்.**—இரைப்பை செரிமன உணவை நாற்பக்கம் சுற்றிக் கடைந்து நீரில் கரையாத காலிலிக நிணப் பொருள்களை எல்லாம் பிடினப்படுத்தி நீரில் கரையும்படி செய்து பசதக் குடலுக்கு அனுப்புகிறது. எனினும் அதில் பெரும் பகுதி இன்னும் உடல் அணுக்களால் பயன்படுமாறு முற்றிலும் ஆயத்தம் ஆகவில்லை. சிறு குடல் உந்தியில் வளையவளையமாக அமைந்துள்ள நீண்ட குழல் போன்ற அங்கமாகும். சிறு குடலில் ஊறும்படியான சுரப்பி நீர் முன்னமே இரைப்பையில் செரிமனமான உணவைக் கூழாக்கி நெடுகக் குடல் அலைச் சக்தியால் நகரச்செய்து ஆங்காங்கே சோடணித்து மீதியுள்ள திப்பியையும் நீரையும் பெருங்குடலுக்குத் தள்ளுகிறது. உண்ட உணவு உடம்பினது வளர்ச்சிக்கு ஏற்றதான ஒருவகை நீர்ப்பொருளாக சிறு குடல் ஆக்கும்.

சிறு குடலின் சுவர் 1. வசாக்கவசம், 2. பேசிக்கவசம், 3. ஆனாயக் கவசம், 4. சளிக்கவசம் என நான்கு படங்களாகின்றன.

1. வசாக் கவசம் :—பரியாந்திரச் சவ்வின் ஓர் பங்கு.

2. பேசிக் கவசம் :—நெடும் இழைகளான வெளிப்படலமும் சுற்றிழைகளான உட்படலமுஞ் சேர்ந்து உண்டாகும் நெடும் இழைகள், குடல் அடங்கலும் பரந்து முன்னோரத்திலேயே தோற்றமாயிருக்கும் சுற்றிழைகள் தடித்த ஒப்புரவான படலமாகி பூரண வளையமாகாமற் குடலின் சுற்றளவில் மிகுதியான பங்கைச் சுற்றும்.

3. ஆனாயக் கவசம். பேசிக் கவசத்தையும் சளிக் கவசத்தையும் இணைக்கும். இது நுகைவானதும் கூந்தல்களை உடையதுமான கண்ணறை நெசவாகும். குருதிக் குழல்கள் சளிச் சவ்விற் படருவதற்கு ஏற்றாற்போல் இதில் கிளைக்கும்.

4. சளிக்கவசம்:—சிறுகுடலின் மேற்பகுதியில் தடிப்பாயும் தசிர நிறைவாயும் கீழ்ப்பகுதியிலோ மெல்லியதாயும் வெளிரல் நிறமாயும் இருக்கும். இதில் பின் வருபவைகள் தோற்றும்.

(1) ஆவரகம் என்ற இனமான நீண்ட விலங்கள் சிறு குடலின் சளிச் சவ்வில் ஆடை போற்பிடித்திருக்கும்.

(2) தரகங்கள்—தரகங்கள் என்பவை சளிச் சவ்வும் சளியணைப் படலமும் மடிவதாலான சுருக்குகளேயாகும். இவைகளிற் பேசி இழைகள் அகப்படாது. பெரும் மடிப்புகளும் சிறு மடிப்புகளும் ஒன்றைவிட்டொன்று கலந்திருக்கும்.

பசதக் குடலின் துவக்கத்தில் இவைகளில்லை. இறங்குபங்கின் கீழ்ப் பகுதியில் பித்தக் குழலும் கணையக் குழலும் குடலுள் திறக்கும் பகுதியில் மடிப்புகள் பெரிதாயும் அடர்த்தியாயும் இருக்கும். பசதக் குடலின் குறுக்குப் பங்கிலும் சூனிகக் குடலின் மேலறைவாசியிலும் இவைகள் பெரிதும் மிகுதியுமாயிருக்கும். இதற்கு அப்பாலுள்ளவைகள் சிறுத்திருக்கும். ஆகையால்தான் குடலில் இப்பங்கு, பசதம், சூனிகம், என்னும் பங்குகளிலும் அதிகம் மெல்லியதாய்க் காட்டுவது தரகங்களாகும். குடல் நெடுகச் செல்லுஞ் சாப்பாட்டைத் தாமதப்படுத்துவதாலும் குடலின் உட்பாகத்தை அதிகப்படுத்துவதாலும் அதன் சாரம் உறிஞ்சப் படுவதற்குத் துணையாகின்றன.

**சுணைகள்:**—சிறு குடலின் சளிச் சவ்வெடங்கலிலும் குத்தியபடி அடர்த்தியாய்ப் பரவியிருக்கின்றவை மென் சுணைகளே. சளிச்சவ்வு, சிவப்பாகத் தோன்றுவது இவைகளின் குருதி நிறைவினாற்றான். இவைகளில் சில தட்டையாயும், சில நுனியிற் கூராயும், சில திரண்டவைகளும் நுனி மழுங்கலுமாயும், சில நுனியிற் பொருமியும், சில பல கூந்தல் விட்டும் இருக்கும். பசதக் குடலிலும் சூனிகக் குடலிலும் உள்ள சுணைகள் பருத்தவைகளும் ஏராளமாகவுஞ் சிறு குடலின் கடைப் பக்கத்திலுள்ளவைகள் சிறுத்தவைகளும் சிலவுமாயும் இருக்கும். தந்துகிகளாலும் சோடணிகளாலுமான பின்னலும், பின்னலின் இடைவெளியிலுள்ள விலத்திரளைகளும் நிணத்திரளைகளும் சளிச்சவ்வுட் பொதிந்து யூபாவரக ஆடையால் மூடப்பட்ட சுணைகள் உண்டாகின்றன. மையத்திலுள்ள சோடணக் குழலைப்பைபோல் சுற்றிய அநிச்சாப்பேசி இழைபிலான ஓர் படலமும் சுணையில் உண்டென்பர். பசதநீர்க் குடலில் முன்னேறிச் செல்வதற்கு இப்பேசி துணையாகும்.

**குழிக்குதுவங்கள்:**—சுரப்பிக் குதுவங்கள் சிறு குடலின் சளிச் சவ்வின் எப்பகுதியிலும் தொகையாய்க் கிடக்கும். இவை சளிச்சவ்வில் அதன் முழுத் தடிப்பிலும் ஏறியிருக்கிற நுண்ணிய குழலான குழிகளே. இவைகளின் வாயில்கள் சுணைகளுக்கிடையிற் பரவியிருக்கிற புள்ளிகள் போல தோற்றும். இவைகளின் சுவர் மெல்லிய தாரகச் சவ்வுப் படலத்தாலுண்டாகி, யூபாவரகச் சவ்வை உள்ளுடையாகக் கொண்டு வெளிப் பக்கத்தில் தந்துகிக் குழலாற் சூழப்பட்டிருக்கும்.

**பசதக் குதுவங்கள்:**—இவைகள் பசதக்குடலிலும் சூனிகத்தின் தொடக்கத்திலும் இருக்கும். இவை சளியணைப் படலத்திற் கிடந்து நுண்ணிய துவாரங்களாற் சளிச் சவ்வில் திறக்கின்ற சப்பையான சிறுத்த மணிகளாகும்.

**தனிக் கோளங்களும் கூட்டுக் குதுவங்களும்:**—சிறு குடலின் சளிச் சவ்வு அடங்கலும் சிதறியிருந்தும், கடைப்பாகத்திலேயே மிகுதியாயுண்டு. இவைகள் சிறுத்த வெண்ணுண்டைகளே. இவைகள் வெள்ளையான பதார்த்தத்தால் நிறைந்த வாயில்லாத சிறுபைகளாகும். இவைகளின் உட்பக்கம் சுணைகளால் நிறைந்திருக்கும். இவை ஒவ்வொன்றின் சுற்றிலும் சுழிக்குதுவங்களின் சுற்றுள்ளவை போன்ற துவாரங்கள் உண்டு. கூட்டுக் குதுவக் கோளங்கள் சிறுகுடலின் கீழ்ப் பகுதியிலே சிறுத்தவைகளும் வட்டமானவைகளும் தொகையிற் குறையுமாயிருக்கும். இவை, குடலில் பரியாந்திரச் சவ்வுப் பிடிக்கும் நிலையத்திற்கு எதிர்பக்கத்தில் நீள்பாட்டுக்கு நீட்டித்துக் கிடக்கும்.

**குடல் ஊறுநீர்:**—இது படிக நிறமுடையது. காரமுள்ளது. இந்நீர் கீழ்க்கண்டவைகளைப் பெற்றுள்ளது.

(1) குடல் நொதி:—இது காலிலிக நொதி. இதுகாறும் செரிமனத்தில் புரோதப் பொருள்களைப் பின்னப்படாதவைகளைக் காலிலிக அமிலங்களாகச் சீரணிக்கச் செய்கிறது.

(2) குடலுபநொதி:—இது வலுவற்ற கணையநொதியை வலுப் பெற்ற கணைய்க் குடலுப நொதியாக மாற்றுகிறது.

(3) விலச நொதி—சிக்குமுக்கலான புரோதப் பொருள்களையும் செரிமனம் செய்விக்கிறது.

(4) நிணநொதி:—மற்ற பாகங்களில் கிடைப்பதைப் போலல்லாமல் இங்கு மென்மையானதும் திரமானதுமாகவுள்ளது.

(5) கரிநீரக நொதி:—மாவு பதார்த்தங்களைச் சீரணிக்கச் செய்யும்.

குடல் நீர் அதிக அளவில் பெரும்பாலும் பாய்கிறது. செரிமனமான உணவு, குடலின் சளிச்சவ்வின் மேல் பட்ட மாத்திரத்தில் குடல்நீர் ஊறுகிறது. குடல் நீர் ஊறுவது செரிமனமான உணவின் அளவுக்குத் தகுந்தாற் போலிருக்கும். மற்றும் செரிமன உணவிலிருக்கிற இரசாயனப் பொருள்களைச் சார்ந்துமிருக்கும். குக்கிநீர், மசாலாப் பொருள்கள், அமிலங்கள், சவுக்காரங்கள், புரோதப் பொருள்கள் போன்றவைகள் குடல் நீர் ஊற்றைப் பெருக்குகின்றன.

**குடல் நீர் ஊறும் விதம்:**—குடலின் சளிச் சவ்வுக் கவசத்தில் ஏராளமாக நரம்புச் சகாலங்களும் சுரப்பிக் கோளங்களும் பொருத்தப் பட்டிருக்கின்றன. குடலில் வந்தடையும் செரிமன பொருள்களே குடல் நீரைச் சுரப்பிப்பதற்குத் தூண்டுவிக்கும் ஏதுக்களாகின்றன.

ஈதன்றியும் மற்ற முப்பூப் பொருள்களும் குடல் நீரைச் சுரப்பிக்கக் காரணபூதங்களாகின்றன. ஆகவே குடலின் அருகாமையிலிருந்தும் பரிபாலிக்கும் நரம்புச் சாலங்களும் கோர்த்தகசேருப்குதியும் முப்பூக்களுடன் குடல் நீரைச் சுரப்பிக்கச் செய்கின்றன.

குடல் செரிமனக் காலங்களில் நீட்டத்தில் நீளுதலும் சுருங்குதலுமாகிய அடுத்தடுத்து புரியும் செய்கையால் செரிமன உணவு, குடலில் மெல்ல நகர்கிறது. குறுக்குப் பங்கிலும் குடல் விரிவதாலும் சுருங்குவதாலும் குழலில் நிறைவை விரிவாக்குவதும் சுருங்குதலும் செரிமன உணவு, குடலிலிருந்து ஒரு பங்கிலிருந்து மற்றொரு பங்கிற்கு நகர்கிறது. குடல் நெடுகக் குடலலைச்சக்தி புழு ஊறுவதைப் போல் அலை அலையாகக் குடல் பங்குகள் நெடுக விரிவதும் சுருங்குவதுமான செய்கையைப் புரிவதால் செரிமன உணவுப் பொருள்கள் நகர்ந்து செல்லுகின்றன. கோர்த்தக சேருபகுதி, சகவேதனிப் பகுதி நரம்பு மண்டலங்களால் குடலின் ஆட்சியால் அசைவு உண்டாகிறது.

சிறுகுடலில் செரிமனமான உணவன் அன்னரசம் உறிஞ்சப்பட்டு திப்பியும் சக்கையும் நீரும் பெருங்குடலுக்குத் தள்ளப்படுகிறது. உட்கொள்ளும் உணவின் இருபது பங்கில், ஒரு பங்கு நீரும் மலமுமாகத் தள்ளப்படுகின்றன. இதனை மலம் என்பர். செரிமனமாகாத உணவுப் பொருள்கள், தசைகளின் இழைகள், தாவரப் பொருள்களின் சக்கைகள், மாவுப் பொருள்களின் திப்பிகள், செரிமனமாகாத புரோதப் பொருள், நிணப்பொருள்கள் மலத்தில் காணப்படுகின்றன. இவைகளன்றியும் இரைக் குடலிலிருந்து சுரப்பிக்கும் பாகங்களின் சிதைவுகளும் காணலாம். சளிச் சவ்வுச் சிதைவு, பித்தமல மஞ்சள் நிறப் புள்ளிகள். நெடிகள் முதலிய கழிவுப் பொருள்கள் மலத்தை வெளித்தள்ள பெருங் குடலைத் தூண்டுவிக்கும் முக்கியமான அம்சங்களாகும்.

உணவுப் பாதையில் அநேகவித ஏராளமான பாசிகள் கிடக்கின்றன. (1) முக்கியமாக வாயப்பகுதியில் ஏராளம் (2) இரைப்பையில் சிலவும் கொஞ்சம் (3) நஞ்சுப் பாசிகள் சிறு குடலிலும் (4) சிறப்பானதும் ஏராளமான நற்பாசிகளும் நஞ்சுப் பாசிகளும் பெருங்குடலிலும் உள்ளது. ஆகவே சூக்குமம் அல்லது புரியட்டப் பாசிகள் மலத்தில் கணக்கிலடங்கா. முக்கியமாகப் பெருங்குடலில் குடல் நஞ்சுப் பாசிகளைக் காணலாம். மனித இனத்திற்கு அவைகளின் இனப் பெருக்கம் தீமையை விளைவிக்கும். இவைகள் மலத்தை அழுகலாக்கித் துர்கந்தத்தை விளைவக்கும், இவ்வித பாசிகள் சாதாரண அளவில் குடலிலிருந்தால் செரிமனத்திற்கு நன்மையைப் பயக்கும். அளவுக்கு மிஞ்சி அதிகமுற்றால் தீமையை விளைவிக்கும்.

மலம் பெருங்குடலை விட்டு ஆசன வாயிலுக்கு வந்தடைகிறது. பிறகு தக்க தருணத்தில் வெளித் தள்ளப்படுகிறது.

## அன்னரசம் உறிஞ்சல்

## சோடணம்

சரீரத்தை வளர்த்து அதைப் புதுப்பிப்பதற்கான சோடணக் குழல்கள் சிறுகுடலிலே இருந்து கிளம்புகின்றன. அவைகளின் பெயர் இரசாயனி எனப்படும். சோடணக் குழல்கள் கிளம்பும் இடத்தில் காணக்கூடாத அளவுமாக நுண்ணியவைகளாயிருக்கின்றன. அவைகள் போகப் போக ஒன்றுடனொன்று கூடிப் பருத்து கடைசியிலே நாளங்களுடனே பொருந்துகின்றன. இரசாயனிகள் சிறுமணிக்கோவையைப்போல நெடுக

கிரட்சியாகத் தோன்றுகின்றன. அவைகளுக்குள் அநேகக் கபாடங்கள் இருப்பதினால்தான் இப்படித் தோன்றுகின்றன. கபாடங்கள் உதவியால் ஒரே பக்கமாக அன்னரசம் ஊர்ந்து செல்லப்படுகின்றது. ஆகவே இரசாயனிகள் குடலின் சுணைகளின் நுனியில் நுட்பக் குழலாக ஆரம்பித்து ஆனாயக்கவசத்தில் பின்னலாகக் கூடி அன்னரசம் நாளங்களில் சேர்க்கப்படுகிறது.

சோடணம் மூன்று முறைகளாலே நடக்கின்றவென்று கருதப்படுகிறது. அவை, (1) உறிஞ்சல் (2) நுண்ணோட்டம் (3) பரிமாறுதல் என்பனவாம். மேற்கண்ட மூன்று முறைகளினால் செரிமனமான கரிநீரகப் பொருள்கள் கலிலிகப் பொருள்கள், நிணப்பொருள்கள் ஆகியவைகள் சோடணிக்கப் படுகின்றன.

கரிநீரகப் பொருள்கள் எல்லாம் குடலில் சமிக்கப்பட்டு சர்க்கரைகளாக மாறுகின்றன. திராட்சைச் சர்க்கரை, பழச் சர்க்கரை, முளைச் சர்க்கரைகளாகின்றன. இவ்வாறான சர்க்கரைகளெல்லாம் சிறுகுடலில் சோடணிக்கப்படுகின்றன. பெருங்குடலில் இவ்வித சர்க்கரைகள் காண்பது அரிது. சிறுகுடலின் மேல்பாகம் பெரும்பாலும் சர்க்கரைகளைச் சோடணிக்கிறது. கீழ்ப்பாகம் கொஞ்சமாகவும் நிதானமாகவும் உறிஞ்சுகிறது. திராட்சைச் சர்க்கரைதான் அதிக தீவ்ரமாகவும் அபரிமிதமாகவும் உறிஞ்சப்படுகின்றது. சர்க்கரைகளின் உறிஞ்சல் தன்மை உடலில் தோன்றும் சுரப்பி மூப்பூக்களைப் பொருந்தியது. சர்க்கரையில் பிரத்தியேகமாகக் குருதிக் குழல்களில் உறிஞ்சப்பட்டு உட்செல்லுகின்றன. மாவுப் பதார்த்தங்கள் செரிமனமானவுடன் குருதியில் சர்க்கரைப் பகுதி ·07 முதல் 0·1க்குமேல் அதிகமாகிறது. ஆகவே சர்க்கரைகள் நேரிடையாகக் குருதியினால் எடுத்து செல்லப்படுகின்றன.

நிணப்பகுதிகள் ரசாயனிக் குழல்கள் மூலமாகக் கொண்டு செல்லப் படுகின்றன.

புரதப் பொருள்கள் சமிக்கப்பட்டவுடன் சில இரைப்பையிலேயே உறிஞ்சப் படுகிறது. மிகுதியானவைகள் சிறு குடலில் உறிஞ்சப்பட்டுக் குருதியில் நேரிடையாகச் சேருகின்றன.

பெருங்குடலில் உணவு செரிமனம் நடப்பதில்லை. பெருங்குடலுக்கு வருவதெல்லாம் கழிவுப் பொருள்களே. ஆகையினால் பெருங்குடலில் சோடணமே நடப்பதில்லை. ஆனால் தண்ணீரை மாத்திரம் உறிஞ்சுகிறது. மிகுதியானவை மலமாகத் தள்ளப்படுகிறது.

### வளர்சிதை மாற்றம்.

உலக வாழ்க்கையில் சீவராசிகள் தனக்கு அக்கம்பக்கத்திலுள்ள அநிந்திரிய இந்திரியப் பொருள்களை உணவுப் பொருள்களாகவுண்டு உடலை மேம்பட வளர்த்து ஒவ்வாத கழிவுப் பொருளை வெளிப்படுத்தி வாழ்நாளை நடத்துகின்றன. சீவராசிகள் உடலை வளர்ப்பதற்காக வெளிப் பொருளை ஏற்றும் அதற்குப் பதிலாக உடலில் சிதைவுற்ற உட் பொருள்களை வெளித் தளளுவதுமான பண்டமாற்று நிகழ்ச்சிகள், வளர் சிதை மாற்றத்தைக் குறிக்கின்றன. வளர்சிதை மாற்றங்களுக்கு இவ்வாறான பண்டமாற்று இன்றியமையாதவையாகும். சரிவர உடல் அக்னியை

நிரந்தரமாக் ஒரே சீராக வைக்கவும், சரீர காரியங்கள் பேசிகளால் தொழில புரியவும் உண்ட உணவுகளைச் சுரப்பி நீர்களாலும் நொதிகளாலும் சமிப்பதற்கும் அவைகளை சோடணிப்பதற்கும் மற்றும் அநேகவித நரம்புகளின் விசைகளின் பண்பாட்டிற்குமாகிய இவை போன்றவைகளைப் பரிபாலிப்பதற்குச் சீவசக்தி மாற்றம் தோற்றுவிக்கிறது. இதனைச் சிதை மாற்றம் என்பர். அதே சமயத்தில் உடனுக்குடன் உடலிலுள்ள சிதை வுற்ற கண்ணறைகள் புதுப்பிக்கப்பட்டு மறுமலர்ச்சியடைகின்றன. இதனை வளர்மாற்றம் என்பர். இம்மாற்றங்கள் இயற்கையின் உடனிகழ்ச்சிகள் என்றறியவேண்டும்.

வளர்மாற்றத்தில் இந்திரியப் பொருள்களை நொதிக்கப்பட்டு உடலுக் குப் பயனுறுமாறு பின்னப்படுத்தி எற்று தகனத்தில் மறுபடியும் பிரி தொரு பொருளாக மாறுகின்றன. உடலுக்குப் பயனுறுமாறு மாறினப் பொருள்களை உடலணுக்கள் அவைகளைப் புதுப்பித்துச் சீவாதாரங் களாகக் கொள்கின்றன.

சிதை மாற்றத்தில் தகனம் ஏற்படுகிறது. அதனில் கழிவுப் பொருள் களும் பழுதடைந்த கண்ணறைகளும் வெளித்தள்ளப்படுகின்றன. இவ் விரண்டு சிறப்பான தொழில்களை வளர்சிதை மாற்றம் என்பர்.

மனித உடலில் உள்ள உயிரணுக்களின் வளர்சிதை மாற்றம் சரிவர நிகழவேண்டும். அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களும் புதுப் பிக்கப்பட்டுக்கொண்டே இருக்கின்றன. மேலும் அவற்றில் உள்ள பயனற்ற பொருள்கள் நீக்கப்படுகின்றன. இச்செயலுக்கு எந்தவித தடையும் நிகழாவண்ணம் இருந்தால் உயிரணு திடமாகவும் செயலுள்ள தாகவும் இருக்கிறது. வளர்சிதை மாற்றத்தில் கோளாறு ஏற்பட்டால் உயிரணுவின் செயல் பலவீனமடைகிறது. எனவே வளர்சிதை மாற்றம் மனிதனுக்கு இன்றியமையாத ஒரு அம்சமாகும்.

## கரிநீரக வளர்சிதை மாற்றம்.

சீவராசிகளின் உயிரியக்கத்திற்கும் உடலியக்கத்திற்கும் மிகவும் அத்தியாவசியமானது கரி நீரக உணவுப் பொருள்கள். மனிதன் நன்றாக உழைப்பதற்குத் தினசரி 500 கிராம் கரிநீரகப் பொருள்கள் தேவை. அவைகள் மாவு பதார்த்தம், கரும்புச் சர்க்கரை, பால் சர்க்கரை, பழச் சக்கரை, திராக்ஷைச் சர்க்கரைகளாகும். பன்மை கரிநீரகச் சர்க்கரை, துவிகரிநீரகச் சர்க்கரை, போன்றவைகள் எல்லாம் உணவு சீரணப் பாதையில் ஏக கரிநீரகக் சர்க்கரையாக மாற்றப்படுகின்றன.

**சீவசர்க்கரை:**—ஏக கரி நீரகச் சர்க்கரைகள் சீரணப்பாதையில் சிறு குடலில் உறிஞ்சப் பெற்று குருதியின் மூலமாக ஈரலுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. அங்கு இவைகள் சீவசர்க்கரையாக மாற்றப்படுகின்றன. ஈரல், சர்க்கரையைச் சீவசர்க்கரையாக சேமித்து வைத்துக் கொள்ளுகிறது. உடலுறுப்புகளுக்குத் தேவையான காலத்துச் சீவசர்க்கரை மறுபடியும் சர்க்கரையாக மாற்றப்படுகின்றது. மாற்றப்பட்ட சர்க்கரை, குருதியின் மூலமாகப் பல இடங்களுக்குப் பரப்பப்படுகின்றது.

குருதி ஏக கரிநீரகச் சர்க்கரை மட்டுமல்ல மற்ற புரோதப் பொருள்களும் நிணப் பொருள்களும் சீவசர்க்கரையாக ஈரலில் மாற்றப்படுகின்றன. ஏக கரிநீரகச் சர்க்கரை உணவாக இல்லாத போதும் கூட குருதியில் சர்க்கரை அளவு குறையாமலிருப்பதால் மற்ற காலிலிக நிணப் பொருள்கள் சர்க்கரையாக மாற்றப்பட்டு சர்க்கரை அளவை ஒரே சீராக அமைக்கப்படுகிறது. காலிலிகப் பொருளின் சரிபாதி அளவுக்குச் சர்க்கரையாக மாற்றப்படலாம்

அதிக அளவில் ஏக கரிநீரகப் பொருள்களை உட்கொண்டால் பத்து விழுக்காடு அளவல் ஈரலில் சீவ சர்க்கரை சேமிக்கப்படும். சாதாரணமாக ஈரலில் 150 கிராம் சீவசர்க்கரைச் சேமிக்கப்படும். பேசி, நரம்பு விலங்கள், மற்ற இணைப்புத் திசுக்களில் சீவ சர்க்கரைச் சேமிக்கப்படுகிறது. ஆனால் ஈரலில் சேமித்த சீவசர்க்கரைதான் தேவையான காலத்தில் மிகவும் பயன்படுகிறது.

வயிறு வறிதாக இருக்கும் போது குருதிச் சர்க்கரை எழுபது முதல் நூறு மலிகிராம் விழுக்காடு இருக்கும். சில சமயங்களில் சர்க்கரைப் பொருள் அதிக அளவில் உறிஞ்சப்பட்டால் குருதியில் சர்க்கரை அளவு மிதமிஞ்சி இருக்கும். ஈரலுக்கு அதிக அளவில் வந்த சர்க்கரையை எல்லாம் சீவசர்க்கரையாக மாற்ற நேரமில்லை. அதனால் குருதியில் சர்க்கரை அதிக அளவில் சுற்றுகிறது. இதனை "அதி சர்க்கரைக்குறி" என்பர். உடனே பிருக்கம் அதிகப்பட்ட சர்க்கரையை அமரி நீரோடு கழித்து விடுகிறது. அப்பொழுது சர்க்கரை அமரிநீர்க்குறி ஏற்படும். சுகதேகி 400 முதல் 500 கிராம் சர்க்கரை உட்கொள்ளலாம் என்று தெரியவருகிறது.

மதுமேக நோயில் ஏக கரிநீரக வளர்சிதை மாற்றம் சீர்கெட்டிருக்கிறது. இந்நோயில் குருதியில் 500 மி. கிராம் அளவு சர்க்கரை காணப்படும்.

சிற்சில சமயங்களில் அதர்வது நெடுநேர தீவிர உழைப்பினாலும் கணையச் சத்து அதிகரித்த போதும் குறை சர்க்கரைக்குறி ஏற்படும்.

குருதி சர்க்கரையை உடலிலுள்ள எல்லா திசுக்களுக்கும் கொண்டு சென்று அதில் அணுகளை மூழ்கவைக்கிறது. முக்கியமாகப் பேசிகள், மூளை கோளங்கள் போன்றவைகளுக்கு நிறைய தேவை. அங்குச் சர்க்கரை அணுகளின் புத்துணர்ச்சிக்காக தகனப்பட்டு உட்கொள்ளப் படுகிறது. மற்றும் சர்க்கரை வேறொரு சர்க்கரைப் பொருளாகவும் மாற்றப் படுகின்றன. தகனத்தில் சர்க்கரையானது கரியமிலவாயுவாகவும் நீராகவும் மாற்றப்படுகின்றது. குருதியில் சர்க்கரை அதிக அளவல் குறைந்தால் சர்க்கரையில்லா அதிர்ச்சி ஏற்படும்.

ஆராயுமிடத்து கரிநீரக வளர்சிதை மாற்றம் சீவராசிகளின் வாழ்வின தரத்திற்கும் அணுகளின் சுற்றுப் பக்க அமைப்பிற்கும் தகுந்தாற் போலிருக்கும். அதனால் சீவராசிகளுள் மிகுந்த வித்தியாசம் உண்டு. ஓய்வு காலத்திலும் உழைப்புக் காலத்திலும் கரிநீரக வளர்சிதை மாற்றம் வித்தியாசப்படும். குருதியில் பிராணவாயும் குறைந்தால் திசுக்களிலும் பேசிகளிலும் கரியமிலம் அதிகமாகச் சேருகிறது. பிராணவாயு தக்க அளவல் குருதியிலிருந்தால் சர்க்கரைத் தகனம் நடக்கிறது. அப்போது கரியமிலம், பாதி கரியமில வாயுவாகவும் பாதி சீவசர்க்கரையாகவும் மாற்றப் படுகிறது.

கரிநீரக வளர்சிதை மாற்றங்களை நரம்பு மண்டலம் பரிபாலிக்கிறது. அசனுடன் உள்ளிடைச் சுரப்பிக் கோளங்களின் சத்து உடனிருந்து உதவி புரிகிறது. முக்கியமாக முன் சுவலிச்சத்தும், பிருகோபரிகளிச்சத்தும், காரைச்சத்தும் குருதி சர்க்கரையின் அளவை அதிகப்படுத்துகிறது. ஆனால் கணையச் சத்து ஒன்று மாத்திரம் குருதி சர்க்கரையை வேண்டிய அளவுக்குத் தாப்படுத்துகிறது.

ஆனால் மூளையின் காரைப் பங்கு கரிநீரக வளர்சிதை மாற்றத்திற்கு வசை கொண்டுள்ளது. மனிதன் எட்டுவத இராக துவேசமுறும் போது குருதியில் சர்க்கரை அளவு அதிகரிக்கிறது.

கரிநீரக வளர்சிதை, மற்றப் பொருள்களின் வளர்சிதை மாற்றங்களோடு ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கிறது. ஆகவே தனிப்பட்டதல்ல. ஏனென்றால் காலிலிகப் பொருள்களும் நிணப் பொருள்களும் சீவசர்க்கரையாக மாற்ற காரணப் பொருள்களாகின்றன. இதற்கு நேரிடையாக, கரிநீரகப் பொருள்களை நிணப் பொருள்களாகவும் மாற்ற முடிகிறது. அன்றியும் சில கரிநீரகப் பொருள்களிலிருந்தும் காலிலிகப் பொருளகளாக மாற்றம் பெறுகின்றன.

## நிண வளர்சிதை மாற்றம்

சீவ விலங்குகளுக்கு நிணமும் நிண சம்மந்தமான பொருள்களும் இன்றியமையாத பொருள்களாகின்றன. வில அமைப்புகளுக்கு நிணப் பொருள்கள் முக்கிய அம்சங்களாகின்றன. சில திசுக்கள் உதாரணமாக நரம்புத் திசுக்களும் பிருகோபரியும் நிணப் பொருள்களால் பெரும்பாலும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இவைகளின் வலப்பைகளும் நிணப் பொருள்களை உடையன. சில இணைப்புத் திசுக்கள்—விலாவரியான இணைப்புத் திசு, முக்கியமாக, தோலின் கீழ் அடங்கிய திசுக்கள்—நிணப் பொருள்களை அடக்கி வைத்துள்ளன. சாதாரணமாக 10—20 விழுக்காடு நிணப் பொருள்கள் உடலின் உள்ளுறுப்புகளில் இருக்க வேண்டும். அதிதூலதேகிகளுக்கு இதனைவிட அதிக அளவில் காணப்படும்

நிணப் பொருள்கள் உடலில் போடணச் சேமிப்புப் பொருளாக விளங்காநிற்கின்றன. அன்றியும் நிண திசுக்கள் உடல் உள்ளுறுப்புகளுக்குப் படுக்கையாக அமைவதுமல்லாமல் அவ்வுள்ளுறுப்புக்கள் நழுவாமலிருக்கவும் உதவுகின்றன. நிண திசுக்கள் உள்ளுறுப்புகள் ஒன்றோடொன்று மோதி பாதகமேற்படாமல் பாதுகாப்பும் அளிக்கின்றன. நிற்க உடற் காங்கையை ஒரே தரமாக நிலைக்கச் செய்கிறது.

எனவே, நிணப் பொருள்கள் உணவு செரிமானப் பாதையில் நிண நொதிகளால் நொதிக்கப்பட்டு சோடணிக்கப்படுகின்றன. அதிக அளவில் நிணசெரிமானமானவுடன் குருதியில் சாதாரண அளவை வட ஒரு விழுக்காடு நிணப் பொருள் அதிகமாகக் காணப்படும். இவ்வாறு அதிகப்பட்ட நிணங்கள் சேமிப்புப் போடணப் பொருளாகச் சேமித்து வைக்கப்படுகின்றன. வேண்டிய காலங்களில் சேமித்த நிணப் பொருளைப் போடணத்திற்கு உபயோகப்படுத்தப்படுகின்றது. அன்றியும் உடலில் கரிநீரகம், காலிலிகப் பொருள்களிலிருந்தும் நிணப் பொருளாகவும் மாற்றும் வன்மைகள் உள்ளபடியால் அவைகளையும் தேவைப்பட்ட காலங்களில் நிணப் பொருளாக மாற்றப்படுகின்றன.

நிணங்கள் சீவசர்க்கரையாக மாற்றப்பட்டு மிகுதியான பாகங்கள் தகனம் செய்யப்படுகின்றன. தகன இறுதியில் கரியமில வாயுவும் நீரும் விடுபடுகின்றன. பேசிகள் தொழில் புரியும் காலங்களில் சீவ சர்க்கரையை உள்வாங்கி மிகுந்த நிணங்களின் தகனம் நடக்கிறது. இவ்வித வளர்சிதை மாற்றம் விலங்களில் நடக்கின்றன. அதனால் கரிநீரக வளர்சிதை மாற்றங்களில் கெடுதி அடைந்த காலத்தில் விலங்களில் நிண வளர்சிதை மாற்றமும் கேடுறுகிறது. கரிநீரக வளர்சிதை மாற்றம் கேடுறும்போது நிணப் பொருள்கள் சரியாகச் சமைக்கப்படாததினால் விலங்களில் கேடுற்ற பொருள்கள் விளைகின்றன. அவைகள் குருதியில் கலந்து அமரி நீரில் வெளித் தள்ளப்படுகின்றன. இக்குற்றம் மதுமேக நோயில் காணப்படும்.

கரிநீரக வளர்சிதை மாற்றத்திற்கு நரம்பு மண்டலம் எவ்வாறு ஆட்சி புரிகிறதோ அவ்வாறே நிண வளர்சிதை மாற்றத்திற்கும் ஆட்சி புரிகிறது. பார்வைத் தளத்தின் கீழ்பாகம் ஆட்சி செலுத்துவதாகக் கருதப்படுகிறது. குழலில்லாச் சுரப்பகளில் சுவலி, பீசசிணைக் கோளங்கள், வீதன கோளம், கணையம், பிருகோபரி போன்றவைகள் ஆட்சி செலுத்துகின்றன.

சில நிணப் பொருள்கள் உதாரணமாகத் திமிர்ப்பாடண் அணுக்களைக் கொண்டவைகள். ஈரல் திசுக்களைத் தோற்றுவிக்கின்றன. அங்கே இவைகளின் வளர்சிதை மாற்றம் நடக்கின்றன. இந்நிணப் பொருள்களின் வளர்சிதை மாற்றம் நடக்கிறது எனினும் ஈரலில் நடப்பதை விட மிக மெதுவாக நடக்கிறது. இந்நிணப் பொருள் மூளை திசுக்களுக்கு முக்கியமாகத் தேவைப்படுகின்றன.

## அத்தியாயம் 18

### கழிவு நீக்கம்

**விசர்க்கம்.**—தேகத்திலே திசு வளர்சிதை மாற்றங்களில் வேற்றுமையான தோற்றமும் தன்மையுமுள்ள நீரும் வைரமுமான அநேக பொருள்கள் ஏற்படுகின்றன. அவைகள் உடலுக்கு ஒவ்வாதனவாதலால் வெளித் தள்ளப்படுகின்றன. இவைகள் விசர்க்க உறுப்புகளின் தொழில்களால் உண்டாகின்றன. இவ்விசர்க்க உறுப்புகளில் சில ஏகத்திற்கொரு கட்டுப்பாடாயும் மற்றவைகள் பலசிக்குள்ள கட்டுப்பாடாயும் இருக்கின்றன. விசர்க்க உறுப்புகள் முக்கியமாக இரண்டு. அவை: 1. பிருக்கம் 2. தோல் என்பவையாம்.

மனித உடல் எல்லா வகைகளிலும் மேம்பட்டிருந்தாலும் விசர்க்க உறுப்புகளின் தொழில்கள் சரிவர இல்லையெனில் உயிர் வாழ முடியாது. உணவு இல்லாக் குறையினால் உடல் நாளடைவில் மெலிந்து வல்மைகுன்றி பிறகு இறப்பு ஏற்படும். ஆனால் விசர்க்கம் கோளாறடைந்தால் அதி விரைவில் கொல்லும். மனிதன் பட்டினியாகக் கிடந்தால் பத்து முதல் இருபது நாட்களில் சாவான். பிருக்கத்தின் விசர்க்கச் செயல் சரிவர இல்லை என்றால் சில நாட்களில் சாவு ஏற்படும்.

பெரும்பாலும் விசர்க்கப் பொருள்கள் எல்லாம் பிருக்கத்தின் மூலமாக வெளித் தள்ளப்படுகின்றன. சில வியர்வையாகவும், சில மலமாகவும் வெளித் தள்ளப்படுகின்றன.

ஆகவே சிறு நீர் அல்லது அமரி நீர் பிருக்கத்தில் விசர்க்கப்படுகிறது. அமரி நீரில் 98 விழுக்காடு தண்ணீர் உள்ளது. தண்ணீரில் காலிலிகச் செரிமனப் பொருள்களும், சரிவர செரிமனமாகாத காலிலிக நிணகரி நீரகப் பொருள்களும் கரைந்திருக்கின்றன. இவைகள் யாவும் வெளித் தள்ளப்படுகின்றன. பிருக்கத்தின் விழுகத்தை ஆராய்ந்தால் இரண்டு கூறுகள் காணலாம். உள்ளுக்கிருப்பது தரகபாகமெனவும் வெளியிலிருப்பது தசிரபாகமெனவும் அழைக்கப் பெறும்.

தசிரபாகம் பிருக்கத்தில் முக்காற் பங்காகும். தசிரபாகம் மெதுவுஞ் சிவப்பும் பருபருக்கையும் இலகுவிற் கிழியுந் தன்மையுமுள்ளது. ஏராளமான சிவந்த சிறுத்த உண்டைகளாகிய அமரி வியோகிகள் அமரிக் குதுவங்களில் பதிந்த அமரி வசுகங்கள் சிதறுண்டிருக்கும். அமரிக்குதுவங்களிலிருந்து அமரித் தரகங்கள் கிளம்பி முதலில் சுருண்டும் பிறகு நீண்ட வளைவுற்று மறுபடியும் சுருண்டும் பிறகு பிருக்கத் தாரையாக முடிவடைகிறது.

அமரி வசுகங்கள்.—இவை பிருக்கத்தில்தசிர பங்கில் மாத்திரமுண்டு, இவைகள் கருஞ்சிவப்பான சிறு உண்டைகளே. இவைகள் ஒவ்வொன்றிலும் தசிரக் கற்றைகள் சேர்ந்து அமரி தரகத்தின் குதுவங்களாகிய அந்தலைப் படர்ச்சியாகிய உறைச்சவ்வாற் போர்க்கப்படும். தசிரக் கற்றையிலுள்ள நாடியின் நுண்ணிய கிளைகள் உறையையுருவிப் பலவாகக் கிளைத்து நுண்ணிய தந்துகிகளில் முடியும். தந்துகிகளில் நின்று சிறுத்த நாளந்தோன்றி நாடிக்கருகில் உறையுருவி மற்றும் வசுகத்துக்குள்ளே இருந்து வரும் நாளக் கிளையோடு சேர்ந்து அயல் தரகங்களைச் சூழ்ந்து அடர்த்தியான நாளப்பின்னலாகும்.

## அமரி தரகங்கள்

இது அமரி வசுகங்களில் ஆரம்பிக்கிறது. அமரி தாரை அல்லது பிருக்கத் தாரையில் முடிகிறது. இதனை மூன்றாகப் பிரிக்கலாம். (1) முதல் சுருண்ட தரகம் (2) வடகலை நாமம் (U) போன்ற பாகம் (3) இரண்டாஞ் சுருண்ட தரகம்.

முதல் சுருண்ட தரகம் அமரி வசுகங்களினின்று புறப்பட்டு தசிர பாகத்தில் இரண்டு மூன்று தடவை வளைந்து தசிர பாகத்திலிருக்கிறது. இதன் சுவர்கள் ஒரே தள வரிசையான ஆவரக விலங்களால் ஆனவை. ஒவ்வொரு விலங்களிலிருந்தும் சிறு சிறு நூற்கள் போன்ற தரகக் குழல்கள் காணப்படும். இதிலிருந்து வடகலை நாமம் போன்ற வளைவு தரகம் காணப்படும். இது பிருக்கத் தரக பாகம் வரையில் இறங்கி வளைந்து பின் ஏறி காரை பாகமாகிய தசிர பாகத்தை அடைகிறது. இறங்கு பங்கு மெல்லியது. ஏறுபங்கு இரண்டாஞ் சுருண்ட தரகத்தை அடைகிறது. இரண்டாஞ் சுருண்ட தரகம் முடிவு பாகமாகும். அமரி தரகங்கள் பிருக்கங்களில் 2000000 அளவில் இருக்கின்றன.

அமரி தரகங்களின் குதுவங்களுக்குள் பிருக்க நாடி தசிரங்கள் உட்சென்று சிறு சிறு உண்டைகளாகப் பின்னி, மறுபடியும் தந்துகிப் பின்னலிலிருந்து வெளிக் கிளம்பி அமரிதரகங்களின மற்ற பாகங்களை அடைந்து பின்னி, பிறகு நாளங்களாகத் திரும்புகின்றன. இந்தத் தந்துகிகளின் குருதி அழுத்தம் கண்டறைக் குருதி அழுத்தத்தை ஒத்திருக்கும். ஏனென்றால் மற்ற உறுப்புக்களில் காணப்படும் தந்துகிகளை விட அகன்றும் சிறுத்தும் காணப்படுவதால் குருதி அழுத்தம் மற்ற பாகங்களை விட மிகுந்திருக்கும். இங்குக் குருதியின் சுழற்சிக்கு ஒரு வித தடங்கலுமில்லை. தடங்கலை எதிர்த்துச் சுழற்சியுற அதிக சக்தியைச் செலவழிக்கத் தேவையில்லை.

அமரி அசுவங்களை விட்டுச் செல்லும் குருதிக் குழல்கள் தந்துகிகளின் அம்சமே ஒழிய நாளங்களல்ல. வெளி வந்த தந்துகிகள் அமரி தரகங்களைக் பற்றி, பின்னிக் கொள்கின்றன. ஆகவே அமரி வசுகங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டு வெளி வந்த குருதியை இரண்டாந்தரமாக அமரி தரகங்களுக்குக் கொண்டு தரப்படுகிறது. இந்தத் தந்துகிகளில் குருதி அழுத்தம் குறைவு எனலாம்.

சுமார் பதினைந்து முதல் இருபது வீழுக்காடு வரை குருதி பிருக்கத்திற்குச் சேருகிறது. அதாவது **1.2** லிட்டர் ஒரு நிமிடத் திற்குப் பிருக்கச் சுழற்சி உண்டாகிறது.

## அமரி நீரும் குருதி வசா நீரும்

அமரி நீர் குருதி வசா நீரிலிருந்து உண்டாகிறது. பிருக்கம் அமரியில் அடங்கிய பொருள்களைத் தன்னிடமிருந்து எதுவுமே உண்டாக்குவதில்லை. பிருக்கத்துக்குக் குருதியில் கொண்டு வரப்பட்ட கூட்டுப் பொருள்கள் அமரி நீரில் அப்படியே மாற்றப்பட்டு வெளித் தள்ளப்படுகின்றன. எவ்வாறாயினும் அமரியிலுள்ள கலவைப் பொருள்களுக்கும் குருதியிலுள்ள பொருள்களுக்கும் பெருத்த வித்தியாசம் உண்டு. எனினும் குருதி வசா நீர் எப்போதும் ஒரே அளவாக இருக்கும். அமரியுப்பு வளர்சிதை மாற்றங்களுக்கு ஏற்ப மாறும் அல்லது விசறப்படும்.

| பொருள்கள். | | | குருதி வசாநீர் | அமரிநீர். |
|---|---|---|---|---|
| நீர் | .. | | 90 விழுக்காடு | 98 விழுக்காடு |
| காலிலிகப் பொருள்கள் | | .. | 7—9 விழுக்காடு | இல்லை |
| சர்க்கரை | .. | .. | 0.1 விழுக்காடு | இல்லை |
| அமரியுப்பு | .. | .. | 0.03 | 0.8—3.5 |
| சாரங்கள் | .. | .. | 0.9 | 0.8—1.8 |

ஆகவே பிருக்கக் குருதிச் சுழற்சியிலே குருதி வசா நீர் அநேக மாறுதல்களை அடைகிறது. இவ்வாறான மாற்றங்களை உடலியல் ஆராய்ச்சியாளர்கள் கண்டு அநேக கொள்கைகளை நிலை நாட்டி யுள்ளனர்.

அமரி வசுகங்களால் குருதி வசா வடிகட்டப்படுதலினால் அமரி நீர் உண்டாகிறது என்றனர். வசுகங்களில் குருதி, மிகுந்த குருதி அழுத்தத்தோடு பாய்கிறது. ஒரே தள வரிசையிலான விலங்களால் ஆகிய குதுவங்கள் காலிலிகப் பொருள்களையும் சிவப்பு அணுக் களையும் வடிகட்டி அனுப்புவதாக உறுதி செய்தனர். குதுவங்களில் குருதி இருக்கும் போது எங்கும் இருப்பதைப் போல இருக்கும். அதனை விட்டு முதல் சுருண்ட தரகத்திற்கு வந்த போது பார்த்தால் வித்தியாசம் உண்டு.

வடிகட்டிய முதல் அமரி நீர் அமரி தரகங்களுக்கு வந்தடை கிறது. முதல் அமரி நீருக்கும் கடை அமரி நீருக்கும் அதிக வித் தியாசமுண்டு. இவ்வித்தியாசம் ஏனென்றால் வடிகட்டி வந்த முதல் அமரி நீரில் தரகங்களில் தண்ணீர் சர்க்கரை போன்றவைகள் மறு படியும் உறிஞ்சப்படுவதால் கடை அமரி நீருக்குள்ள பொருள்கள் வத்தியாசம் ஏற்படுகிறது.

| பொருள்கள். | குருதிவசா நீர். | முதல் அமரி நீர். | கடை அமரி நீர். |
|---|---|---|---|
| நீர் .. .. .. | 90 – 92 | 99 | 98—99 |
| காலிலிகப் பொருள்கள் .. | 7—9 | இல்லை | இல்லை |
| நிணப் பொருள்கள் .. | 0.1 | 0.1 | இல்லை |
| சர்க்கரை .. .. | — | — | — |
| சாரங்கள் .. .. | — | — | — |
| அமரியுப்பு .. .. | 0.03 | 0.03 | 2.0 |
| கரியமிலம் .. .. | 0.004 | υ.004 | 0·05 |

(1) சர்க்கரை முதல் சுருண்ட தரகங்களில் மறுபடியும் உறிஞ்சப் படுகிறது.

(2) நீரும் முதல் சுருண்ட தரகங்களில் மறுபடியும் உறிஞ்சப் படுகிறது.

ஆகவே வடிகட்டல் கொள்கையும் மறுபடியும் உறிஞ்சப்படும் கொள்கையும் அமரிநீர் உண்டாவதற்குச் சரியான ஆதாரம் ஆகாமையினாலே மற்றொரு கொள்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. சுரப்பிக்கும் விதி கடைசியாக அமரி நீர் அமரி இரண்டாவது சுருண்ட விலங்களின் விசேடச் சிறப்பான செய்கையால் சுரப்பிக்கப் பட்டு அமரி நீர் உண்டானது என்றனர். எனவே, முடிவாக அமரி நீர் உண்டாவது மேற்சொன்ன மூன்று கொள்கையை ஒட்டியே என்று எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டவொன்றாகும்.

## தோல்

தோலென்பது உடலிலுள்ள எலும்புகளையும் தசைகளையும் மூடியிருக்கும் போர்வையேயாம். சிறுவர்களுக்கும் பெண்களுக்கும் தோல் ஒப்பமும் மெதுவாயுமிருக்கின்றது. நடு வயதுள்ள ஆண் பிள்ளைகளாயின் அது சற்று வயிரிப்பும் முரணுமுள்ளதாயிருக்கின்றது. வயது பின்னிட்டவர்களுக்கு அதிகமாய் மெலிந்தும் தளர்ந்தவர்களுக்குச் சரீரத்தின் பொருத்துகளிலுள்ள தோல் திரைந்தும் சுருங்கிப் போகின்றது.

மனித தோலிலே இரண்டு படைகள் உண்டு. அவை: வெளித் தோல், உள் தோல் என்பவைகளாம்.

பரிசருமமாகிய வெளித்தோல் உள்தோலிலுள்ள சிறு குருதிக் குழல்களால் மேனியெங்கும் காக்கப்பட்டிருக்கும் ஒரு நீர். இப்படிக் கக்கிவிட்ட நீராகிய வெளித் தோல் உள்தோல் அடங்கலும் அநேக படைகளாகும். அப்படைகளில் உட்படைகள் நீராயிருக்க, வெளிப்படைகள் காய்ந்து செதிலாகின்றதினாலே வெளித்தோல் பெலனுள்ளதாய் வருகின்றது.

சரீரத்திலுள்ள வெளித்தோல் உடம்பிலுள்ள உறுப்புக்களின் காரியத்துக்கிசைய அடுத்திருப்பது நாம் கவனிக்கத் தக்கது. உடலிலே உணர்ச்சி எவ்விடத்தில எவ்வளவு கூர்மையோ அவ்விடத்திலுள்ள வெளித்தோலும் அவ்வளவு மென்மையுமுள்ளதாயிருக்கின்றது. உடலிலுள்ள பொருத்துகள் இங்கும் அங்கும் அசையவேண்டிய படியினாலே அவ்விடங்களிலுள்ள வெளித்தோல் நுகைவும் சுருக்குமாயிருக்கின்றது. உறிஞ்சப்படுகிற இடங்களாகிய உள்ளங்கை உள்ளங்கால் முதலிய இடங்களிலுள்ள வெளித்தோல் மிகவும் காய்ந்து மரத்து வறைத்துப் போகின்றது. வெளித்தோலிலே ஆகக்கடைசியாய் உண்டாகி அதிகம் உள்ளேயிருக்கும் படைக்கு உள்ளாக அதாவது வெளித்தோலுக்கும் உள்தோலுக்கும் இடையிலேயிருந்து வெளித்தோலுக்கூடாகத் தோற்றும் ஒரு வண்ணம் உண்டு. இந்த வண்ணப் படை ஆப்பிரிக்காவில் கறுப்பாயும், மேல்நாட்டிலே வெண் சிகப்பாயும், இந்தியாவில் சிலர் கருப்பாகவும் சிலர் வெண்சிகப்பாகவும் ஆளுக்கு ஆள் சற்று வித்தியாசமாகவும் இருக்கின்றது. இவ்வண்ணம் அதிகமானால் கறுப்பாயும், அதிலிருந்து படிப்படியாய்க் குறையக் குறைய சிவப்பாயும், வெள்ளை நிறமாகவும் மாறும்.

தோலிலுள்ள இரண்டு படைகளுள் உள்தோல் சிறப்பான்தாகும். அது உடலின் முன் பக்கமாகிய நெஞ்சு, உந்தி என்பவைகளில் இருக்கிறதைப் பார்க்க முதுகிலே கனமாயும் கை கால்களின் அகத்திலும் புறத்திலும் அதிகத் தடிப்பாகவும், தேகத்தின் எப்பகுதியிலும் உள்ளங்கை உள்ளங்கால்களில் அதிக உரப்பாகவும் இருக்கின்றது. அதிலே பலவிதமான தசிரங்கள் என்னும் குழல்கள் உண்டு. அதாவது நாடிகள், நாளங்கள், மாசயனிகள், வியர்வைக் கோளங்கள், நரம்புகள் ஆகியவைகள் இருக்கின்றன.

நாடிகளும் நாளங்களும் உள்தோலிலே பரந்து தந்துகிகளாய் ஒன்றுடனேயொன்று பின்னி வலைபோலக் கிடக்கின்றன, ஆகையினால் இத்தோலின் எப்பகுதியை வெட்டினாலும் அப்பகுதியிலே குருதி காணப்படும்.

நாடிகள் போல நரம்புகளும் தோலிலே மிகுதியாயிருக்கின்றமையினால் மேனியிலே எங்கே குத்தினாலும் அங்கே நோவு உண்டாகும். நரம்புகளின் நுண்ணிய தலைப்புகள் தந்துகிகள் என்றும் சிறு இரத்தக் குழல்களுடன், பின்னித் திரண்டு உள்தோலிலே சிறு புடைப்புகளாகின்றன.

வியர்வை பிறக்கும் கருவிகளிலேயுள்ள அநேக சிறு துவாரங்கள் வெளித் தோலுக்கூடாக இறங்கி ஒவ்வொன்றுந் திருகி முறுகிக் கடைசியிலே தன்னில மடிந்து கடுகு விதை அளவாய்த் திரண்டு உள்தோலுக்குள் இருக்கும் கண்ணறைகளிலே முடிகின்றன. இத்திரட்சிகளுக்கு வியர்வைக் கோளங்கள் என்று பெயர்.

நிணக் கோளங்கள் என்பன உள்தோலிலே புதையப் பரவயிருக்கின்ற சிறுதிரட்சிகள்தான். அவைகளுக்கும் வெளித் தோலுக்கூடாகச் செல்லும் நேரான துவாரங்களுண்டு. மேனியில் சில பகுதிகளிலே இக் கோளங்களில்லை. அவைகள் வேண்டியவைகளாயிருக்கும் இடங்களிலே மிகுதியாயுண்டு.

## தொழில்.

தோல் சரீரத்தின் வெளிப்பகுதி முழுவதையும் மூடி அதன் மூட்டுக்கள் நெளிவுகளெல்லாம் தொடர்ந்து தான் மூடியிருக்கும் சரீரப்பகுதிகளையெல்லாம் காவல் செய்வதுமல்லாமல் அதற்குரிய தொழிலுள்ள பலவகையான கூறுகளுக்கும் ஆதாரமாயிருக்கின்றது.

சற்றும் உணர்ச்சியில்லாத வெளித்தோல் கூறிய உணர்ச்சியுள்ள உள்தோலை மூடும் ஒரு உறைக்குச் சமானமாக இருக்கிறது. வெளித் தோல் உள்தோலின் உணர்ச்சியை மழுக்கி மட்டுப்படுத்திவிடுகிறது.

உள்தோலிலுள்ள நீர்கள் அணுவணுவாய்ப் பரவாமலும் மனிதருக்கு நேரிடும் நச்சுக் காற்றுகள் உடம்பில் உட்செல்லாமலும் பண்ணுவதினாலே வெளித்தோல் உடலிலே சில வியாதிகள் வராதபடி காவல் பண்ணுகிறது. வெட்டு, கீறு, புண் முதலிய காரணங்களினாலே வெளித் தோலில் எதுமொரு நீக்கம் காணும் பொழுது அதன் காவல் குறையும். தோலிலுள்ள நரம்புகள் அதனுடைய பரிசத்துக்கு அல்லது உணர்ச்சிக்குரிய கருவிகளாம். அவைகள் வழியாய் வேகங்கள் அநேகம் காரியங்களை உணர்ந்து மிகுதியான இன்ப துன்பங்களை அனுபவிக்க முடிகிறது.

உடலிலேயுள்ள கழிவுகளில் மிகுதியானவைகள் தோலிலுள்ள துவாரங்கள் வழியாய்க் கழிந்து போகும். அவைகளில் நிணமாகவும் சில நீராவியாகவும் சில இருந்தாமிலமாகவும் கழியும். தோலை நனைக்கின்ற நிணம், நிணக் கோளங்கள் வழியாகக் குருதியிலிருந்து பிரிகின்றது. காங்கை, குளிர்மை, ஈரலிப்பு என்பவைகளை அதிகமாய்த் தாங்க வேண்டிய தோலின் பகுதிகளிலே நிணம் நிரம்பப் பரவியிருக்கும். இக்கோளங்களிலிருந்து நிணம் பொசிவதனால் தோல் மிருதுவானதுமன்றித் தேக்கத்திலுள்ள குருதியும் சுத்தியடைகின்றது.

வியர்வைக் கோளங்கள் குருதியிலிருந்து வியர்வையைப் பிரிக்கின்றன. சுகக் காலங்களிலே இக் கோளங்களிலிருந்து வியர்வை இடைவிடாமல் உண்டாவதினாலே தோல் பசுமை கொண்டிருக்கும். இந்நனைவு தோற்றாமலிருக்கும்பொழுது அதற்குத் தோற்றா வியர்வை என்று பெயர். அது துளித் துளியாய்த் தோற்றும்போது அதனைத் தோற்றும் வியர்வை என்பர். வியர்வைக் கோளங்களின் தொழில் தடங்கலின்றி நடப்பது சுகத்துக்கு மிகவும் அவசியமாகும்.

குளிரினால் அல்லது தோலிலுண்டாகும் எதேனும் வியாதியினால் வியர்வைப் பொசிவது தடைப்பட்டால் அதனாலே கழிய வேண்டியவைகள் கழியாமல் குருதியிலே கலந்து ஓடி உடலிலே செறிந்து சுவாசப்பை, இரைப்பை முதலிய உறுப்புகளினது தொழில்களைக் குழப்புகின்றது.

## உடற்காங்கைத் திட்ட அமைப்பு.

சீவன்களின் உயிர் இயக்கம் சதா காலம் காங்கையை உற்பத்திச் செய்யும்படியான நிலையான அம்சமாகத் தோன்றுகிறது உடலில் காங்கை உற்பத்தியாகிக்கொண்டேயிருக்கின்ற காலையில் காங்கை கழிந்து கொண்டேயும் இருக்கிறது. வெளிப்பட்ட காங்கை உடலின் சுற்றுப்

புறங்களின் பாகத்தையடைந்து சூட்டடையச் செய்கிறது. இவ்வாறாக (1) உடலின் அக்கம் பக்கமுள்ள காற்றை சூட்டடையச் செய்யும், (2) காங்கையுற்ற பாகத்திலிருந்து காங்கை கிரணிக்கும் (3) தோலின் பாகத்திலுள்ள நீர் நீராவியாக வெளியேறும். (4) சுவாசப் பாதையினின்றும் நீர் நீராவியாக வெளித்தள்ளப்படும். எனவே, உடலில் காங்கை எவ்வளவுக்கெவ்வளவு உற்பத்தியாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு மேற் சொன்ன முறைகளால் வெளிப்பட்டால் உடற்காங்கை ஒரேதரமாக இருக்கும். ஒருவருடைய உடலில் காங்கை உற்பத்தியாகின்ற அளவிற்கு வெளிப்படும் காங்கை அளவு சரியானால் உடற்காங்கை ஒரேதரமாக இருக்கும். உற்பத்தியைவிட வெளிப்படும் காங்கை குறைவு பட்டால் உடற் காங்கை அதிகப்பட்டு காணும். உற்பத்தியைவிட வெளிப்படும் காங்கை அதிகப்பட்டால் உடற் காங்கை குறையும்.

மனிதனின் உயிர் வாழ்க்கை உள்ளுறுப்புகளில் நிகழும் காங்கையின் ஒரு சிறு குறுகிய அதாவது 35° சி 43° சி மாற்றங்களுக்குட்பட்டிருக்கிறது. இந்தக் குறுகிய அளவில் தான் வளர்சிதை மாற்றங்கள் நிகழ்கின்றன. அதிலும் நரம்பு வலங்கள் காங்கை மாறுதல்களுக்கு மிகவும் பாதிக்கப்படுகின்றன. சீவன்களில் உடற்காங்கை ஒரே தரமாக இருக்கச் செய்வது சிறப்பான நரம்பு மண்டலத்தின் ஆட்சியே. சுகரண முறைகளால் சிக்குமுக்கலான திட்ட அமைப்பைக் காங்கைத் திட்ட அமைப்பு என்பர். இத்திட்ட அமைப்பு காங்கை உற்பத்தியையும் காங்கைக் கழிவையும் சரிசமமாக்கி ஒரே தரமாக்கி நிகழ்விக்கிறது. சுகரண முறையான காங்கைத் திட்ட அமைப்பு இல்லாத சீவன்களைக் 'குளிர் குருதி வாழ் சீவன்கள்' என்றும், காங்கைத் திட்ட அமைப்புப் பொருத்தியுள்ள சீவன்களைச் 'சூடு குருதி வாழ் சீவன்கள்' என்றும் கூறுவர்.

மனித சமுதாயம் 'சூடு குருதி வாழ் சீவனா'கையாலும் காங்கைத் திட்ட அமைப்புப் பொருந்தியிருக்கப்பட்டிருப்பதாலும் வெளி உலகின் (தன் அக்கம் பக்கத்தின்) சூழ்நிலைக் காங்கை உற்காங்கையைப் பாதிப்பதில்லை. உடற்காங்கை உற்பத்தியும் உடற் காங்கை கழிவும் நேரிடையான மாற்றச் செயல்களானபோதும் ஒன்றுக்கொன்று சரிசமமாக்கிக் கொள்வதால் உடற் காங்கை ஒரே தரமாகிவிடுகிறது. இவ்விரு நிகழ்ச்சிகளும் கோர்த்தகசேரு நரம்பு மண்டலத்தின் ஆட்சியால் நடைபெறுகின்றன. அதாவது வளர் சிதை மாற்றம், குருதிச் சுழற்சி, வியர்வை விசர்க்கம், பேசிகளின் உழைப்பு ஆகிய செய்கைகளைக் கோர்த்தகசேரு நரம்பு மண்டலம் ஆட்சி செய்கிறது.

அன்றியும் வேதி காங்கைத் திட்ட அமைப்பும் சுகரன முறைகளில் ஒன்றாகும். மனித சமுதாயத்தில் வளர்சிதை மாற்றங்களுக்கு வேதி காங்கைத் திட்டம் ஒரு முக்கிய அம்சமாகும். இது காங்கையை உற்பத்தியாக்கும். வெளி உலகக் காங்கை குறைந்த காலத்தில் வேதி காங்கைத் திட்டம் வளர்சிதை மாற்றத்தை அதிகரித்து உடற்காங்கையை அதிகப்படுத்துகிறது. இந்நிலையில் வெளி உலகக் குளிரிலிருந்து அதிஉற்பத்திக் காங்கை உடலைப் பாதுகாக்கிறது. இவ்வாறாகவே, வெளி உலகக் காங்கை அதிகப்பட்டால் வேதி காங்கைத் திட்டத்தால் வளர்சிதை மாற்றம் குறைகிறது. பேசிகளின் உழைப்பே வேதி காங்கைத் திட்டத்திற்கு ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகிறது. மற்றும் ஈரலில் நடக்கும் வேதி காங்கைத் திட்டம் அனுசரணையாகிறது. வேதி காங்கைத் திட்டம் பேசிகளாலும் ஈரலாலும்

மட்டுமல்லாமல் நரம்பு மண்டலமும் உள்ளிடைச் சுரப்பிச் சத்துகளாலும் நிகழ்கிறது. ஆகவே, வீதன கோளமும் பிருகோபரியும் வேதி காங்கைத் திட்டத்தை ஆட்சி செலுத்துகின்றன.

திட்டமிட்ட வேகத்தாலும் திட்டமில்லாத வேகத்தாலும் உடலில் சடகாங்கைத் திட்டமும் வேதி காங்கைத் திட்டமும் அநேகவித மாறுதலடைகின்றன. ஒருவனுக்குக் குளிர்ச்சிப் பொருளை வேனில் காலத்தில் காட்டினால் அவனுடைய தசிரங்கள் சுருங்குகின்றன. சூரியனுடைய வெப்பம் பட்டவுடன் தசிரங்கள் விரிவு கொள்கின்றன.

காங்கைக்கும் குளிருக்கும் இந்தத் திட்ட அமைப்புகள் ஒன்றையொன்று சமன்படுத்த சிறப்பான காரியங்கள் புரிகின்றன. இச்சிக்குமுக்கலான காங்கைத் திட்ட அமைப்புகள் குளிர் அல்லது காங்கை தூண்டுதலின் மீண் செயல்களுக்குச் செயல்புரிய சிறப்பான முக்கிய பாகங்களாக விளங்கா நிற்கின்றன.

வெளிதூண்டுதலான பருவ காலங்களும் இராப்பகல்களும் காங்கைத் திட்ட அமைப்புகளும் தொடர்புற்று ஒன்றோடொன்று ஒத்துழைக்கின்றன. மாரிக் காலத்தில் வேதி காங்கைத் திட்ட அமைப்புச் செயல் அதிகரிக்கிறது. வேனில் காலத்தில் தசிரங்கள் பெருமிதமாக விரிவடைகின்றன. இராக் காலத்தைவிட பகல் காலங்களில் வேதி காங்கைத் திட்டங்கள் மும்முரமாகத் தொழில் புரிகின்றன. குளிர், காங்கை என்ற போராட்டங்களில் மனிதனின் உள்ளுறுப்புச் சூழ்நிலைகளும் போராட்டத்தில் ஈடுகொடுத்து உடற்காங்கை சரிசமமான நிலையில் வைக்கின்றன.

அத்தியாயம் 18

## ஆயுள் காலத்தை வெல்லும் உறுப்புக்கள்

மனித இனத்தின் பழமையான எண்ணம் நிலைத்த வாழ்வாகும், வயது முதிர்ந்தவர்கள் எப்பொழுதுமே சிந்தனை செய்து வந்ததும் இதைப்பற்றித்தான். முக்கியமாக, சித்தர்கள் நிலைத்த வாழ்வைப் பெற்றதோடன்றி அவற்றிற்கான வழிகளையும் வகுத்துள்ளனர். இதனை உய்த்துணராமல் சில அறிவிலிகள் மத்திய காலத்தில் வாழ்ந்த இரசவாதிகள் 'காயகல்பத்தைத்' தேடி அலைந்தனர். இவற்றின் மூலம் சாதாரண உலோகங்களிலிருந்து தங்கம் பெற முடியும்; மேலும் குன்றாத இளமையை அடையலாம் என்றெல்லாம் நம்பிக்கைக் கொண்டிருந்தனர்.

தலைமுறை தலைமுறையாக இரசவாதிகள் தோன்றினர்; மறைந்தனர் ஆனால் 'நிலையான வாழ்வு' பற்றிய பிரச்சினை மனிதர்களின் மனதினின்று அகலவில்லை, தற்பொழுதுங்கூட இது பற்றி ஆய்வுகள் நிகழ்கின்றன. ஆனால் திருமூலர் தன் திருமந்திரத்தில் தெற்றெனக் கூறியதை யாவரும் அறியவில்லை. திருமூலர் உணர்ந்த 'காய சித்தி' காயகற்பங்களைத் தற்கால அறிவியல் ரீதியாக கவனிப்போம்.

மனிதன் மூப்படைகிறான், பின்பு இறக்கிறான் இது இயற்கை விதி, இது எல்லா அங்க சீவிகளுக்கும் பொருந்தும். மனிதனின் வாழ்நாளில் அவன் உடலின் ஒரு சில உயிரணுக்கள் பல தடவைகள் இறக்கின்றன. அவற்றின் இடத்தில் புதியன தோன்றுகின்றன. நாளொன்றிற்கு மூன்று அல்லது நான்கு கோடி குருதிச் சிவப் பணுக்கள் மனித உடலில் அழிகின்றன எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இதே அளவிற்குப் புதிய அணுக்களும் தோன்றுகின்றன.

தோல் உரியும்பொழுது கணக்கில்லா அணுக்கள் இறக்கின்றன. அவற்றிற்குப் பதிலாக, புதிய யூபாவரக உடலணுக்கள் தோன்று கின்றன. பிருக்க விலங்கள் புதுப்பிக்கப்படுகின்றன. அவ்வாறே கல்லீரல் குடல்கள் ஆகியவற்றின் அணுக்களும் புதியனவாகின்றன. சில உறுப்புகளில் இச் செயல்முறை விரைவில் நிகழ்கிறது. சிலவற்றில் மெதுவாக நடைபெறுகிறது.

ஆனால் எல்லா உடலணுக்களும் புதுப்பிக்கப்படவில்லை உதாரணமாக மூளை அணுக்கள் புதுப்பிக்கப்படுவதில்லை. பல்வேறு பிணிகளின் காரணமாக அவற்றின் எண்ணிக்கை குறைவுபடலாம். ஆனால் ஒரு பொழுதும் அதிகரிப்பதில்லை.

ஆகவே மனிதன் எவ்வளவு காலம் வாழ வேண்டும் என்பதைத் தீர்மானிப்பது, நினைப்பது போல் அவ்வளவு எளிதல்ல. இதனாலன்றோ சித்தர்கள் அரும்பாடுபட்டு உடல் நுணுக்கங்களை ஆராய்ந்து மூளையின் அணுக்கள் குறைவுபடாமல் மறுமலர்ச்சியை ஊக்குவிக்கும் சாதனைகளைக் கையாண்டார்கள், ஈதன்றியும், மறுமலர்ச்சியடைந்து உடலணுக்களைத் தளரவொட்டாமல் இயங்கவும் வைத்தார்கள். வாழ்ந்த காலம் போதும் என்று திருப்தி அடைந்ததும் உடல் அணுக்களை அருவமாக ஆக்கிக் கொள்ளவும் சக்தி பெற்றார்கள். இச்சாதனைகளையெல்லாம் மனிதர்கள் அறிந்தார்களேயானால் தற்காலம் சாவு விரைவில் வராமல் இருந்தால் சாவு நல்லதாகவும் வரவேற்கத் தக்கதாகவும் அப்பொழுது தோன்றும். ஆனால் அப்படி தற்பொழுது தோன்றுவதில்லை. மனிதன் வாழ்க்கையுடனே பிரிய முடியாதபடி ஒட்டிக் கொள்கிறான். வாழ்வதற்கு அவனுக்குள்ள இயல்பூக்கம் மிக பலமாக இருக்கிறது.

பொதுப்படையாகக் கூறும் போது, உடலிலுள்ள உயிரணுக்கள் இறக்கும்காலை, மனிதனும் சாகிறான். சாவு முக்கியமாக, கோர்தக சேரு நரம்பு மண்டலம், சகவேதனி நரம்பு மண்டலம், அவை போன்ற உருவமைப்பில் உருவாகிய "உள்ளிடைச் சுரப்பிகள்" ஆகியவைகளின் உடலணுக்கள் அழியும் பொழுது ஏற்படுகிறது.

சுருங்கக் கூறின் மனிதன் இறக்கும் போது அவன் உடலில் உள்ள ஒரு சில உயிரணுக்கள் உயிருடன் உள்ளன. சாவு கண்ட பிறகு குருதி போன்றதொரு திரவம் செலுத்தப்பட்டு இத்திரவம் உயிரணுக்களை ஒரு வாரத்திற்கு மேலாக உயிரை நிலைபெறச் செய்ததை ஆய்வு மூலம் கண்டனர். இவை போன்ற ஆய்வுகள் மனிதன் இறந்தவுடன் உடலில் உள்ள எல்லா உயிரணுக்களும் இறந்துபடவில்லை என்பதைக் காட்டுகின்றன. ஆனால் மெதுவாக இறக்கும் உயிரணுக்கள் மனிதனுக்கு இரண்டாந்தர முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். மிகவும் முக்கியமானவை, மத்திய நரம்பு மண்டலம், உள்ளிடைச் சுரப்பிகள், கல்லீரல், பிருக்கம் போன்ற உள்ளுறுப்புக்களின் அணுக்களேயாகும்.

மனித உடலில் உள்ள உயிரணுக்களின் வளர்சிதை மாற்றம் சரிவர நிகழ வேண்டும். அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களும் புதுப்பிக்கப்பட்டுக் கொண்டே இருக்கப்படுகின்றன. மேலும் அவற்றிலுள்ள பயனற்ற பொருள்கள் நீக்கப்படுகின்றன. இச்செயலுக்கு எந்தவிதத் தடையும் நிகழாவண்ணம் இருந்தால் உயிரணு திடமாகவும் செயலுள்ளதாகவும் இருக்கிறது. வளர்சிதை மாற்றத்தில் கோளாறு ஏற்பட்டால் உயிரணுவின் செயல் பலவீனமடைகிறது. முடிவில் ஒவ்வொரு வகை உயிரணுக்களாக விறைப்பு நிலையை அடைகின்றன. உடலில் ஒரு பகுதியில் நிலவும் விறைப்பு நிகழ்ச்சி அப்பகுதியோடு மட்டும் நின்று விடுவதில்லை. அது உடலின் உயிர்ச்செயல் முழுவதையும் பாதிக்கிறது. இருப்பினும் உயிரணுவிலுள்ள எல்லா உறுப்புகளையும் நரம்பு மண்டலத்தின் மூலம் கட்டுப்படுத்தி பரிபாலிக்கிறது.

சாவுக்குரிய காரணங்களை ஆராயுங்கால் நரம்பு மண்டலத்தில் இணைப்பு உயிரணு அதிகமாகவும் நரம்பு அணுக்கள் குறைவாகவும் ஆகின்றன. மனிதன் மூப்படையும் போது அவனது மூளையின் ஒரு பகுதியை இணைப்புத் திசு நிரப்புகிறது என்று புலப்படுகிறது.

மூளை, உள்ளிடைச் சுரப்பிகள், ஈரல், மண்ணீரல், இதயம், ஆகிய உறுப்புகளில் 'உயர்குல' அணுக்களின் இடத்தை முதுமையடையும் பொழுது கரடுமுரடான இணைப்புத் திசுக்கள் நிரம்புகின்றன. மூளை அணுக்களின் எண்ணிக்கை குறையக் குறைய ஞாபக சக்தியும் குறை கிறது. அறிவுத் திறமை குறைகிறது. மற்ற உள்ளுறுப்புகளை ஆட்சி புரிவதால் அவைகளின் செயல்கள் தடம் புரளுகின்றன. பிறகு ஈரல் மண்ணீரல், பிருக்கம் ஆகியவற்றின் அணுக்கள் குறைவதனால் அவை சரிவரச் செயல்புரிவதில்லை. இதனால் பலமற்றவனாகிறான்.

திருமூலரின் கூற்றுப்படி உயர்குல அணுக்கள், இணைப்புத் திசு அணுக்களை நீக்குவதில் தான் இருக்கிறது. பிந்தியவைகள் 'உயர்குல' அணுக்களை வெளியேற்றுகின்றன. ஏனென்றல் அவற்றிற்கு விரைவில் வளரும் திறன் உண்டு. காயம் பட்ட இடத்தில் தோன்றும் தழும்பு ஏராளமாக வளர்ந்துள்ளதும் பெருகியுள்ளதுமானது இணைப்புத் திசுவே. இவை, காயத்தின் முனைகளை ஒன்றாக இணைக் கின்றன. மனிதனுக்குக் காசநோய் தோன்றினால் அவனது நுரை ஈரலின் ஒரு பகுதி அழிக்கப்படுகிறது. அவ்விடத்தில் தழும்பு தோன்றுகிறது. இதுவும் இணைப்புத் திசுவே. புண்வாயை மூடுவதும் இணைப்புத் திசுவேயாகும்.

மூளை அணுக்கள், ஈரல், இதயம் போன்றவைகளின் அணுக்கள் ஆகியவை பலமிழந்து உயிர்ச்சக்தி குன்றி நின்றவுடன் இணைப்புத் திசு அணுக்கள் விரைவிற் பெருகி உறுப்புகளின் 'உயர்குல' அணுக்களை அகற்றுகின்றன. இந்த இடமாற்றத்தையும் அவை தடிப்புறுதலையும் உறுப்புகளின் உதிரல் என்றனர். இதுதான் முதுமைக்குக் காரணம். உயர்குல அணுக்கள் விரைவில் உதிர ஆரம்பித்தால் முதுமையும் விரைவில் தோன்றும். பின்பு சாவும் சீக்கிரம் நேரிடும்.

ஆகவே தசிர உதிர்வு, உறுப்புகளின் உதிர்வு, இணைப்புத் திசுவின் ஆக்கிரமிப்புத் தன்மையுடன் தொடர்புள்ளவையே முதுமைக்கும் சாவிற்கும் காரணம் என்று தெரியவருகிறது

திருமூலர்—

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே.

(பாடல் 704)

மூன்று மடக்குடைப் பாம்பிரண்டெட்டுள
ஏன்றவியந்திரம் பன்னிரண்டங்குலம்
நான்றவிம் முட்டை யிரண்டையுங் கட்டியிட்
டேன்றியிருக்க உடம்பழியாதே.

(பாடல் 708)

இவ்வாறு கூறியிருக்கிறார். உடலழியாமல் வளர்ப்பதற்கு உபாயங்களைக் கூறுகிறார். உடலில் உயர்குல அணுக்களின் தொகுப்பிலிருந்து சிவக்குடிலை நீர் ஊறுகிறது. அவை வளர்சிதை மாறுதல்களைக் கட்டுப் படுத்துகின்றன. மேலும் நரம்பு மண்டலத்தைக் கட்டுப்படுத்துவதில் இவையும் ஒன்று. உயர்குல அணுக்களின் தொகுப்புகளில் உள்ளிடைச் சுரப்பிகள் சில உள. அவை வீதன, சுவலி, பக்க வீதனங்கள், பிருக பரி போன்ற உள்ளிடைச் சுரப்பிகள் முப்பூக்களையும் சத்துக் களையும் சுரப்பிக்கின்றன. இன விருத்திச் சுரப்பிகள் உடலில் பல மாறுதல்களை நிகழ்விக்கின்றன. திருமூலர் கூறிய உபாயத்தினால் இச் சுரப்பிகளின் வேலையைக் குன்றாமல் சந்ததமும் இளமையோடிருக்கச் செய்வோமானால் சாவு ஏற்படுவதில்லை. ஆகவே உள்ளிடைச் சுரப்பிகள் உடலுக்கும் உயிருக்கும் முக்கிய ஆதாரங்களாகும்.

முடிவாக ஆராயுமிடத்து எது 'உயர் குல' அணுக்களின் அழிவிற்கு ஆதாரமாய் இருக்கிறதோ அந்த ஆவரகத் திசு உடலுக்கு ஒரு சிறப் பான முக்கியமான அம்சமாகும். ஆவரகத் திசு எல்லா உறுப்புகளுக்கும் ஒருவகை மெல்லிய ஆடை போன்றது. அன்னரசத்தைக் குருதியி லிருந்து உறிஞ்சுவதற்கும் தேவையற்ற உயிரணுக்களை அழிப்ப தற்கும் அது ஒரு நொதியைச் சுரப்பிக்கிறது. இது மட்டுமின்றி அநேக நொதிகளையும் அந்தந்த உறுப்புகளுக்குத் தேவையானது போன்ற நொதிகளைத் தோற்றுவித்து உடலின் அமைப்பைப் பண்படுத்து கிறது. இவ்வாறான ஆவரகத் திசுக்கள் நரம்பு மண்டலம், உள்ளி டைச் சுரப்பிகள், ஈரல், பிளிகம் ஆகியவைகளில் பெரும்பாலும் காணப்படும். இது குருதியை வடிகட்டி அதிலுள்ள புதுப் பொருள்கள் யாவற்றையும் தடுத்து நிற்கிறது. நஞ்சுப் பொருள்களுக்கு எதிரிடை நஞ்சுகளை உண்டாக்கி நசுக்கி விடுகிறது. நஞ்சுப் பாசிகளை எதிரிடை நஞ்சுகளை ஏற்படுத்தி அழிக்கிறது. இதனால் உயர்குல அணுக்கள் உட்பட மற்ற உடலணுக்கள் நன்கு செயலாற்றுகின்றன. ஆவரகத் திசுவின் நிலை சீர்கேடுறும்பொழுது 'உயர்குல' அணுக்களும் சீர்கேடடைகின்றன. திடமாகவும் இளமையாகவும் ஆவரகத் திசு இருந்தால் 'உயர்குல' அணுக்களும் நன்னிலையில் இருக்கின்றன. நல்ல உயிரணுக்கள் இருந் தால் உடல் சுக வாழ்வை அனுபவிக்கிறது. ஆயுளும் நீடிக்கிறது. ஆவரகத் திசு அணுக்கள் பிறப்பு அணுக்களினின்று பெருகிய தொகுதியே. அவைகளை இளமையோடு வாழவிட்டால் மனிதன் சாகமாட்டான். மனிதன் சந்தமும் இளமையோடு இருக்க, உடலில், அவைகள் சோதி மருந்தை உற்பத்தி செய்கின்றன. இச்சோதி மருந்துதான் 'உள்ளிடைச் சுரப்பிக் கோளங்களின் சத்துக்கள்' எனப்பட்டது. மற்றும் ஆயுள் விருத்திக்குத் திருமூலர் அமிர்த நிலைகளையும் அமிர்த கலைகளையும் போன்ற தத்துவங்களையும் கூறியிருக்கிறார். அகத்தியரும் காயகற்ப

நூற்களில் இவைகளைப் பற்றித் தெளிவாகக் கூறியுள்ளார். திருமூலர் கீழ்க்கண்டவாறு, சோதி மருந்தினைக் குறிப்பிடுகின்றார்.

"வீரமருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
தாரி மருந்தென்றும் நந்தி அருள் செய்தான்
ஆதி மருந்தென்றறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது சொல்ல வொண்ணாதே.

(திருமந்திரம் 830)

உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்
கடலிற் சிறு கிணற்றேற்றமிட்டாலொக்கும்
உடலில் ஒருவழி ஒன்றுக்கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாடலுமாமே.

(திருமந்திரம் 825)

தெளிதரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரு மோராண்டில் ஊனமொன்றில்லை
வெளியுறும் எட்டின் மனமும் ஒடுங்கும்
களிதருங் காயங் கனகமதாமே.

(திருமந்திரம் 826)

உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெல்லக் குடைந்து நின்றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ளமன முடைக் கல்வியிலோரே."

(திருமந்திரம் 492)

## உள்ளிடைச் சுரப்பிகள்

### 1. சினைப்பை

சினைப்பைகள், கருப்பையின் வல, இடப்பக்கங்களில் சினைப்பாதைகளுக்குக் கீழே கருப்பைச் சிறைகளின் பின் பள்ளத்திற் கிடக்கிற வட்டித்த சப்பையான இரு உறுப்புகளாகும். இது பாதம் கொட்டையின் அளவினை ஒத்திருக்கும். சினைப்பையின் ஒவ்வொன்றினது அகவந்தம் சினைப்பைப்பந்தத்தாற் கருப்பையோடு தொடுக்கப்பட்டிருக்கும். புறவந்தம் ஓர் குறுங்கொடியாற் சினைப்பாதையின் குஞ்சாந்தத்தோடு இணைக்கப்பட்டிருக்கும். இச் சினைப்பைக்குள்ளே குருதி நாடிகள் ஏராளமாய் செறிந்த ஒரு வகையான சதை உண்டு. இச் சதையில் உருண்டையான சிறு பைகள் அநேகம் உண்டு. இப் பைகளுக்குப் 'பரிசினைகள்' என்று பெயர். பரிசினைகள் ஒவ்வொன்றும் ஒரு ஒளியான மெல்லிய சுவருடையது. இப்பைக்குள் நிறமற்ற தெளிந்த நீர் நிறைந்திருக்கும்.

**பரிசினைகள்.**—பிறக்கும்போது ஒவ்வொரு சினைப்பையிலும் ஒரு இலட்சம் பரிசினைகள் பொருந்தி அமை[illegible]தாகக் கூறப்பட்டுள்ளது. பெண்கள் பருவம் எருவதற்குள் [illegible]ந்தாயிரமாக மாறுகிறது. சினைப் பையில் கரு அணு பரிசினையில் தொக்கியிருந்து வளர்ச்சியுற்று முதிர்ந்த பரிசினைகளாகக் கிடக்கின்றன. குழந்தைப் பருவம் தொடங்கி பிள்ளைப் பேறுகாலம் நிற்கும்முன் பரிசினைகளும் சினைகளும் இடைவிடாமல் தோன்றி வளர்ந்து முற்றிக்கொண்டே யிருக்கும். பெண் மங்கைப் பருவ காலத்திற்கு முன் சினைப்பைகள் சிறுத்தவைகளாகவும் அவைகளுக்குள்ள இருக்கும் பரிசினைகள் மிக நுண்ணியதாயுமிருக்கும். இவைகள் வளர்ந்து முற்றுவது அரிது. இவைகளில் உள்ள சினை கருசினையாக மாறாமல் சுருங்கி அற்றுப் போகும். பருவ பக்குவ காலத்தில் சினைப் பைகள் தசிர நிறைவு அடைந்து பரிசினைகள் வளர்ந்து பெருகி அவைகளில் உள்ள சினை களும் வளர்ந்து கருசினையாகத் தக்கதாகும்.

பரிசினைகள் படிப்படியாய் சினைப் பையின் வெளிப்பகுதிக்கு வந்து சுவர் மெல்லியதாகி சினைப் பாதையின் குஞ்சாத்தத்தின் அமுக்கத்தால் வெடிக்க உள்ளே இருக்கும் நீரும் சினையும் கழன்று சினைப் பையைக் கவ்விப் பிடித்திருக்கிற சினைப் பாதையின் குஞ்சாந்தத்தால் சினைப் பாதைக்குள் நுழையும். நுழைந்த சினை, சினைப் பாதையினூடாகச் சென்று கருப்பை அறைக்குச் செல்லும். இச் செய்கைக்கு "காமக் கிளர்ச்சி" எனப் பெயர்.

**பீதகம்.**—பரிசினைப்பைக் கழன்று நீரையும் சினையையும் வெளித் தள்ளிய பிறகு சினைப்பையில் குருதி கொண்டு சுருங்க ஆரம்பிக்கும். இவ்வாறான பரிசினைப் பையைப் பீதகம் என்பர். கழன்று சென்ற சினை கருவாகப் பெற்றால் பீதகம் சுருங்காமல் வளரும். அவ்வாறு வளருகிற காலத்தில் அதனின்று சில சத்துக்கள் குருதியில் கலக்கச் செய்கிறது. இச்சத்து கரு வளர்ச்சிக்கு மிகவும் ஏதுவாக இருக்கிறது. சினை கருவாகவில்லையானால் பீதகம் ஒடுங்கிப் போகும்.

**பூப்படைதல்.**—காமக் கிளர்ச்சி ஒவ்வொரு மாதப் பூப்படைதலுக்கு முன் பதின்மூன்று முதல் பதினைந்து நாட்கள் வரை நடைபெறுகிறது. வாடிக்கையாகப் பெரும்பாலும் இருபத்தெட்டு நாளுக்கொரு தரம் காணும் பூப்படைதலுக்கு காமக் கிளர்ச்சி நடுமையமாக அமைந்துள்ளது. இதனை இடைவேளை பூப்படைதல் காலம் என்பர். முதல் பாதி இடைவேளை பூப்படைதல் காலத்தில் சினைப் பைகள் வளர்ந்து அதிலுள்ள சினை கருசினையாகக் காணும். மறுபாதி காலத்தில் பீதகம் சினை கருவுற்றால் வளரும். சினை கருவாகாவிட்டால் பீதகம் சுருங்கி ஒடுங்கும்.

காமக் கிளர்ச்சி நிகழ்கின்ற காலத்தில் கருப்பை அறையின் சளிச் சவ்வு மாறுதல் அடைகின்றது. சினை கருவாக ஏதுவில்லாவிட்டால் சளிச் சவ்வு உதிர்ந்து தசிரங்கள் உடைந்து குருதி வெளித்தள்ளப்படும். கருப்பையினின்று வெளித்தள்ளப்படும் குருதி காலம் 'பூப்படைதல்' எனப்படும். பெண் பருவ பக்குவ கால முதல் பிள்ளைப்பேறு நிற்கும் முன் காலம் வரையும் பூப்படைதல் சாதாரணமாக இருபத்

தெட்டு நாட்களுக்கு ஒரு தரம் சுழன்று சுழன்று வரும். இதனைப் பூப்புச் சுழற்சி என்பர். பூப்புச் சுழற்சிக்குச் சினைப்பையினின்று உற்பத்தியாகும் "சினைப்பைச் சத்து" காரணமென்பர்.

## 2. பிருகோபரி

இவைகள் உள்ளிடைச் சுரப்பிக் கோளங்களோடு வகுக்கப்பட்டுள்ளன. தாரையில்லாதவைகள். இவைகள் வயிற்றறையின் பற்பகுதியிற் பிருக்கம் ஒவ்வொன்றின் மேற்பகுதியோடு அணைந்தாற்போலிருக்கும்.

இவ்வுறுப்பில் வெவ்வேறான இரண்டு பதார்த்தங்கள் வெளிக் கொன்றும் உள்ளுக்கொன்றுமாகச் சேர்ந்திருக்கும். வெளி பதார்த் தத்தைக் காரை என்றும் உள் பதார்த்தத்தைக் களி என்றும் அழைப்பர்.

காரை இவ்வுறுப்பின் மிகுதியான பங்காகும். இது மஞ்சள் நிற மும் நெருக்கமுமானதாகும். இது மூன்று வரிசை யூபவ அடுக்கு விலங்களைக் கொண்டது. வெளியிலிருந்து உள்ளாக (1) யூபவ விலங்கள் வரிசை, (2) செதிளாவரக விலங்கள் வரிசை, (3) உள்ளா வராக விலங்கள் வரிசை என்று மூன்று வரிசை விலங்கள் உண்டு. காரையின் விலங்கள் நிறைய நிணச் சத்துக்களைக் கொண்டவை. இவைகள் பிருகோபரி காரைச் சத்துக்களைப் பிறப்பிக்கின்றன.

**பிருகோபரி காரைச் சத்து தொழில்.—**

(1) அமரி தரகத்தின் விலங்களை முன் அமரி நீரிலிருந்து சோடத உப்பை மறுபடி உறிஞ்சப்பட்டு குருதியில் கலக்க ஏதுவாகிறது. உடலின் நீர் டங்கை ஒழுங்காக எல்லா பாகத்திற்கும் தரமாகப் பரப்புகிறது.

(2) இம்மாதிரியாகவே உமிழ்நீர் கோளங்களிலும் சோடத உப்பின் இருப்பைக் கட்டுப்படுத்துகிறது.

(3) எல்லாவித வளர்சிதை மாற்றங்களைச் சீராகவும் ஒழுங்கா கவும் கட்டுப்படுத்தித் திட்டமமைக்கிறது.

(4) திசுபுரோதட பொருள்களைப் பின்னப்படுத்த ஏதுவாகிறது.

(5) நிணப் பொருள்களைச் சேமித்துத் தேவையான காலத்து உடலைப் போடணம் செய்கிறது.

(6) ஈரலில் சீவ சர்க்கரையை அதிகப்படுத்தி சேமிக்கிறது.

(7) உடலுக்குத் தெம்பையும் ஊக்கத்தையும் கொடுக்கிறது. மனோதைரியத்தையும் உண்டாக்குகிறது. சோகத்திலும் துக்க காலத் திலும் மனதைத் தரப்படுத்தி தைரியத்தை அளிக்கிறது. இவைகளை எவ்விதமாகத் தொழில் புரியச் செய்கிறது என்பது புரியவில்லை.

(8) இரசாயனிகளையும் வெண்விலங்களையும் பரிபாலிக்கிறது

**பிருகோபரிகளிச் சத்து:**—இதனுடைய செய்கை சகசேதனி நரம்பு மண்டலம் புரியும் செய்கையை ஒத்திருக்கிறது. ஆகையினால் இதயத் துடிப்பை அதிகப்படுத்துகிறது. துரிதப்படுத்துகிறது. இதயப் பேசிக ளைத் தீவிரமாகச் சுருங்கச் செய்கிறது. தசிரங்களின் குழல்களைச் சுருக்குகிறது. எனினும் இதயம், மூளை ஆகியவைகளின் நாடிகளைச் சுருக்குவதில்லை. அவைகள் விரிவடைகின்றன. குருதி அழுத்தத்தை அதிகப்படுத்துகிறது.

## 3. கொங்கைகள்.

கொங்கைகள் அல்லது தனங்கள் பாலுக்கு ஊற்றாயிருக்கும் திரண்ட கோளங்களே. இவைகள் சிறியதாய் ஆண்களுக்கிருக்கும். இவைகள் தனக்குச் சொந்தமான ஓர்வகை கோள நெசவும் கோளத்தின் துண்டங்களாகிய கோள அம்சங்களை இணைக்கிற இழைகளாற் பின்னிய வன்சவ்வும் அம்சங்களுக்கிடையில் நிண நெசவும் சேர்ந்துண்டானது. இதில் குலைபோன்ற பல அம்சகங்களுண்டு. அம்சகங்கள் ஒவ்வொன்றிலும் சுலக்குகளாகிய அம்சகங்கள் பல சேர்ந்திருக்கும். இவைகள் ஆனாய நெசவு தசிரங்கள், தாரைகள், என்பவற்றால் ஒன்றாக இணைக்கப்படும். அம்சகங்கள் நுண்ணிய பைகள் கூடிச் சேர்வதால உண்டாகின்ற இப்பைகளினின்று நுண்ணிதான பாற்குழல்கள் தொடங்கும். இக் குழல்கள் தாரைகளாகச் சேரும். இத்தாரைகள் கூடி, கோளத்தின் அம்சகங்களுக்கு ஒவ்வொன்றாயிருக்கிற பால்தாரைகளில் முடியும். இப்படியான பல்தாரைகள் கொங்கைக் காம்பை நோக்கி வலையத்துள் சற்று விரிந்து அடிக்காம்பில் ஒடுங்கி அப்பால் நேராக ஓடிக் காம்பின் நுனியில் முடிகின்றன. பால்தாரைகள் ஆனாய நெசவும், நெடும் பாட்டிலும் குறுக்குப்பாட்டிலும் ஓடியிருக்கிற இசியிழைகளும் நெடும் பாட்டிலோடியிருக்கிற பேசியிழைகளும் சேர்ந்துண்டாகும்.

வன் சவ்வு முழுக் கோளத்தையும் சுற்றியிருப்பதோடன்றி அதன் அம்சகங்களுக்கிடையிலுஞ்சென்று அவைகளை இணைக்கும்.

குழந்தைகளுக்கும் சிறு பிள்ளைகளுக்கும் கொங்கைகள் மிகச் சிறியதாக இருக்கும். சிற்சில சமயங்களில் பிறந்த குழந்தைகளுக்கு மெத்த வீங்கிப் பால்சுரக்கும். தாயின் குருதியின் மூலமாக நஞ்சுக் கொடியின் சத்து குழந்தையின் குருதியில் கலந்து சுழற்சியுற்றால் கொங்கைகள் வீக்கமுறும். பிறகு சில நாட்களுக்கெல்லாம் மறைந்து விடும்.

கொங்கை, மங்கைப் பருவத்தில் அளவில் பெருத்து வளரும். பாற் குழல்கள் கிளைகளுற்று பாற் கோளங்களும் வளர்ச்சியடையும். அதிலும் பூப்படைதல் ஏற்பட்ட பிறகு கொங்கை இன்னும் அநேகவித மாறுதல்களையடையும். மெல்ல மெல்ல வளர்ச்சியுற்று, பெருத்துக் காணும். அம்சகங்களில் நிண உண்டைகள் சேமிக்கப்படும். வீட்டு விலக்கான இடைக் காலங்களில் கொங்கை கனத்துக் காணும். பாற் கோளத் திசுக்கள் அதிகப்படும். இம்மாறுதல்கள் தற்காலிகமே.

ஆனால் கருவுற்ற காலத்து கொங்கைகள் மிக்க பருத்து, திசுக்களில் பல மாற்றங்களைப் பெறும். பாற்கோளங்களும் பாற் கோளக் குழல்களும் எண்ணிக்கையில் அதிகப்பட்டும் புதியதாகவும் தோன்றும். முதற்பாதி கரு காலத்தில் பால் சுரப்பதில்லை பிற்பாதியில் கொஞ்சம் கொஞ்சமாகப் பால் சுரந்து பாற் கோளங்களில் சேரும் பாற் பெருக்கால் கொங்கை இன்னும் பருத்துக் காணும்.

சினைப்பைச் சத்து, பீதகச் சத்து போன்றவைகள் முக்கியமாக, கொங்கைகளில் பால்சுரப்பதற்குக் காரணங்களாகின்றன. இவைகள் முன்சுவலிச் சத்து, வீதனச் சத்து, பிருகோபரிச் சத்து ஆகியவைகளின் ஊக்கிச் சக்தி உதவ பெற்று கொங்கையைப் பரிபாலிக்கின்றன.

**சினைப்பைச் சத்து.**—இது கொங்கையைச் சிறிது பருக்க வைக்கிறது.

**பீதகச் சத்து.**—சினைப்பைச் சத்து, கொங்கையை ஊக்குவித்த பிறகு பீதகச் சத்து, குருதியில் கலந்தால் கொங்கை பருக்கிறது. சினைப்பைச் சத்தின துணையின்றி, பீதகச் சத்துமட்டும் கொங்கையை ஆட்சி செய்ய முடிவதில்லை.

## 4. சுவலி—சுவற்கம்

சுவலி என்பது சதுகவென்பின் சுவர் பள்ளத்தின் மேற்றங்கி அத்துடன் குகாதாரணியின் அகச் சுவரிற் சேர்ந்த பாலனிச் சவ்வால் இணைக்கப்பட்டிருக்கிற நெடு வட்ட வடிவ செந்நரை நிறமான திரண்ட கோளமாகும். இது தசிர நிறைவும் இரண்டு அம்சங்களும் உள்ளது. அவ்வம்சகங்களுக்கிடையில் இழைப்படலத்தலாகிய பிரிவுண்டு. இவ்விரண்டு பங்குகளுள் முற்பங்கு பரிதும், நீளமும், பிற்பங்குடன் அணைகிற இதன் பக்கங்கள் கவ்வுமாகும். முற்பங்கு வெளிக்குப் பீதநரைப் பொருளும் உள்ளுக்குப் பீத வெண்ணிறமுள்ள குழைவான பதார்த்தமுஞ் சேர்ந்துண்டாகும். பிற்பங்கு உண்டை வடிவமும் முற்பங்கிலும் கருமை கொண்டதுமாகும். அதில் உள்ளுக்கு அறையூருக்கும். அவ்வறை பிரணாளித் துவாரத்துக்கு ஊடாக மூளையின் மூன்றாம் அறையிற் போய்ப் பொருந்தும்.

இதன் வியூகனம் குழலில்லாச் கோளங்களைப் போலவே இருக்கும். அடர்த்தியான விலங்களைப் கொண்டதும் தசிரங்களைப் பெற்றதுமான உள்ளிடைச் சுரப்பிக் கோளம் வெளியில் யூபாவரகச் சவ்வினாலும் உள்ள அடுக்கடுக்காகவும் வரிசை வரிசையாகவும் வதுமான கூண்டைப் போல் பின்னலாகவும் விலங்களால் அமைக்கப்பட்டிருக்கும். விலங்கள் இருவகைப்படும். (1) நிறப்புள்ளியற்றது, (2) நிறப்புள்ளியுற்றது. எனினும் நிறப்புள்ளியற்றது நிறப்புள்ளியுற்றதாக நாளடைவில் மாறும் தன்மையுடையது.

சுவலிப் சுரப்பி இல்லையென்றால் கீழ்க்கண்ட கோளாறுகள் காணப்படும். (1) வளர் மனம் இல்லாமல் குள்ளமாகவும், (2) மீஇனப் பெருக்கச் சுரப்பிகளின் வளர்ச்சி குன்றுதலும், இனப் பெருக்கச் செயல்கள் குன்றுதலும், (3) வீதன கோளமும் பிருகோபரிக் கோளமும் வளர்ச்சியில் கயமடைதலும் (4) உடல் பலவீனமடைந்து நலிந்து போதலும், (5) சிறுநீர் அதிகப்படுதலுமாம்.

சுவலிச் சுரப்பி, குன்றி தொழில் பிரிந்தல் மனிதன் குள்ளமாகவும் நலிவுற்றும் ஒளி குன்றியும் இருப்பான். வீதன கோளமில்லாக் குறையினால் எற்படும் குள்ளனுக்கும் சுவலி இல்லா குறையினால் எற்படும் குள்ளனுக்கும் வித்தியசம் உண்டு. முதற்பட்டனுக்குப் புத்தி நுட்பமிருக்கும்; இரண்டாமவனுக்கு யந்த புத்தியாயிருக்கும் (2) நீரினைப் பெருக்கல் நேய், தகம் ஆகியவைகளை உண்டாகும். அதிசுவலியில் அதிக நெட்டையாக வளர்வான். முக்கியமாக நீண்ட எலும்புகள் மிகவும் நீண்டு காணும்; வயது முதிர்ந்த பிறகு இந்நோய் ஏற்பட்டால் உட்காய அதகாய எலும்புகள் நீண்டும் தடை எலும்புகள் பெருத்து வளர்ந்தும் காணும்.

**முன்சுவலிச் சத்துக்கள் தொழில்கள்**—

**உடல் வளர் சத்து.**—வளர்சிதை மாற்றத்தைப் பரிபாலித்து வளரச் செய்து உடலைப் பெருக்க வைக்கிறது. அதிக அளவல் பெருகினால்

**இனப் பெருக்கச் சத்து**:—இச்சத்து இனப் பெருக்கச் சுரப்பிகளை இருபாலரிலும் ஊக்குவித்து ஆட்சி புரிகிறது. ஆண்களில் வந்து, விந்துநீர் ஆகியவைகளைப் பீசத்தில் பிறப்பிக்க எதுவாகிறது. ஆண் தன்மையையும் ஆண்குறி குணங்களையும் தோற்றுவக்கிறது பெண் களுக்குச் சினைப்பை, சினைப்பைச் சத்து ஆகியவைகளையும் பூப்படைதல், கருவடைதல், பரிசினைகள், பீதகங்கள் போன்றவைகளும் தோற்றுவக்க எதுவாகிறது. இச்சத்து சற்று அதிகமுற்றால், இனப் பெருக்கச் செயல்கள் அதிகப்பட்டுக் காணும்.

**வீதன தூண்டிவிச் சத்து**:—இச்சத்து வீதன கோளத்தின் சுரப்பித் தலைப் பரிபாலிக்கிறது.

**பிருகோபரி தூண்டிவிச் சத்து**:—பிருகோபரிக கோளத்தின் சுரப்பித் தலைப் பரிபாலிக்கிறது.

**பால் சுரப்பிச் சத்து**:—இச்சத்து, பாலைப் பெருக்குகிறது. சில சமயங் களில் ஆண்களிலும்கூட பாலைச் சுரப்பிக்கச் செய்கிறது.

**முன்சுவலிச் சத்து**:—கரிநீரக வளர்சிதை, நிண வளர்சிதை மாற்றங் களுக்கும் உதவியாகயிருக்கிறது.

**பின்சுவலிச் சத்து**:—குருதி அழுத்தத்தை அதிகப்படுத்துகிறது. அனிச் சாப் பேசிகளைக் கட்டுப்படுத்துகிறது. சிறுநீரைக் குறைக்கிறது. பின்சுவலி முக்கியமாக இரண்டு சத்துகளைப் பிறப்பிக்கிறது. அவை (1) நாடிச்சுருக்கி (2) கருப்பைப் பேசிச் சுருக்கி என்பனவாம். நஞ்சுக் கொடி விழ கருப்பைச் சுருங்கல் வேண்டும். கருப்பைச் சுருங்க, கருப்பைச் சுருக்கிப் பயன்படும். (3) நீரினை அறுகல் சத்து:—அதி நீரிழிவு நோயில் சிறுநீரைக் குறைக்கும்.

**நடுசுவலிச் சத்து**:—நிறப்புள்ளிகளைக் கட்டுப்படுத்துகிறது.

## 5. பாலுகம்.

பாலுகம் மூளையில் சதுக கந்துகங்களுக்குச் சற்று மேலுள்ளது. இனப் பெருக்கக் கோளங்களைக் கட்டுப்படுத்துவதாகக் கூறப்பட்டுள்ளது.

## 6. பக்கவீதனங்கள்.

பக்கவீதன கோளங்கள் நான்கு. பக்கத்திற்கு இரண்டாக வீதன கோளச் சவ்வுப்பைப் புறவளத்தில் கிடக்கிறது. அவரக விலங்கள் ல் அடர்த்தியாக அமைப்பெற்றது. தசிரங்களும் நரம்புகளும் நிறைந் தவைகள். இவைகள் ஒவ்வொன்றும் சிறுபயறளவானது.

பக்கவீதன கோளங்களை உடலிலிருந்து அகற்றிவிட்டால் குதிரை வலிநோய் கண்டு இறப்பான். இது குருதிச் சுண்ணச் சத்துக் சுழற்சியைக் கட்டுப்படுத்துகிறது. நரம்புகளுக்கும் பேசிகளுக்கும் சுண்ணச் சத்து தேவை. அது இல்லை என்றால் வலி வந்து மரணமடைய ஏதுவாகும்.

## 7. கணையச் சத்து.

கணையத்தின் உடற்கூற்றைச் செரிமன பகுதியில் காணலாம்.

கணையச் சத்து குருதியிலுள்ள சர்க்கரை பாகத்தைக் கட்டுப்படுத்து கிறது. அது அதிக அளவிலுள்ள சர்க்கரையைச் சீவ சர்க்கரையாக மாற்றி ஈரலில் சேமித்து வைக்க ஏதுவாகிறது. சர்க்கரையை நிண அமிலங்களாக மாற்றுகிறது. திசுக்களில் நடக்கும் தகனத்தில் சர்க்கரை சிதைக்கப்பட்டு, கரியமில வாயுவைப் பிறப்பிக்கிறது. ஈரலில் சீவ சர்க்கரையைச் சர்க்கரையாக அதிகப்படியாக மாற்றமலிருக்க தடுத்துச் செயல் புரிகிறது. மற்ற பொருள்களிலிருந்து சர்க்கரையாக மாற்றப்படுவதையும் தடுத்துச் செயல் புரிகிறது. கணையச்சத்தின் செயலை முன் சுவலிச் சத்து குன்றச் செய்கிறது. பின் சுவலிச் சத்து குறைந்தால் கணையச் சத்து அதிகப்பட்டு சர்க்கரை குறை நோயை உண்டாக்கும். ஆகவே குருதி சர்க்கரையின் அளவை ஒன்றோடொன்று எதிரிடையாக நின்று தரப்படுத்துகிறது. இவைகள் தம்தரத்தில் கோளாறு அடைந்தால் நீரிழிவு நோய் (மதுமேக நோய்) ஏற்படுகிறது. பிருகோபரி காரைச் சத்து கணையச் சத்துக்கு எதிரிடையான தொழில் புரியும். களிச் சத்தும் அவ்வாறே. ஆகவே கணையச் சத்து மாத்திரம் சர்க்கரையைக் கட்டுப்படுத்துகிறது. மற்றவை உள்ளிடைச் சுரப்பிகளின் சத்து குருதி சர்க்கரையை அதிகப்படுத்துகிறது.

## 8. வீதன கோளம்

வீதன கோளம் என்பது சுவாசக் குழலின் மேற்பகுதியோடு அணைந் திருக்கிற சதையான உறுப்பாகும். இது கருஞ்சிவப்பு நிறமும், வலம் இடமான இரண்டு இதழ்களையுடையது. இவைகள் நடுவிலுள்ள ஒடுங்கிய பகுதியாகிய கழுந்தால் ஒன்றாக இணைக்கப்படும். இக் கோளத்திற்குக் கழிவாயில் இல்லை.

முன் வளம் குவ்வு. இது தனுவட்சி, வீதன வட்சி, தனுவாகி ஆகிய பேசிகளால் மூடப்பட்டிருக்கிறது.

பின்வளம் கவவுள்ளதாய்க் குரல் வளையையும், சுவாசக் குழலையும் அணைந்து கொள்ளுகின்றது. பின்னோரங்கள் மிடற்றின் கீழ்ப்பகுதியின் முன் பக்கத்தில் அண்டும்.

வீதன கோளத்துக்கு நாடிகள் மேல், கீழ் வீதன நாடிகளே சிலருக்கு அநாம நாடியில் நின்று ஒருகிளை இதில் சேறும். இவை கோளத்திற்குப் பருத்தவைகளாயும் ஒன்றோடொன்று அதிகம் பின்னியவைகளாயும் இருக்கின்றன. நாளங்கள் கோளத்தின் முற்பகுதியில் ஒரு பின்னலாக இருக்கும். இப்பின்னலில் மேல், நடு, கீழ் வீதன நாளங்கள் துவங்கும் நரம்புகள் உரோதர நரம்பிலும், சகதேதனியின் கீழ், நடு, கழுத்துக் கிரந்திகளிலுமிருந்து வருகின்றன. சேடணிகள் அநேகமும் பருத்தவைகளாகி உரதாரையிலும் வலது வப தாரையிலும் முடியும்.

வீதன கோளம் முழுமையும் கண்ணறை யூபாவரகச் சவ்வாலான பையல் அமைந்திருக்கிறது. அது ஒழுங்கற்ற உருண்டைத் திரள்களாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. வாய்மூடிய உருண்டைகளாகவும் பார்க்கக் கூடியதாகவும் தெரியும். அதனுள் பிசுபிசுப்புற்ற மஞ்சள் திரவம் கிடக்கும். இந்த உருண்டைகள் தொகுப்புத் திரளைகளாகக் காணும். உருண்டை யூபாவரக ஆடையால் ஆக்கப்பட்டது. உருண்டைகள் சிறிதும் பெரிதுமாய் கிடக்கும். உருண்டையின் யூபாவரகச் சவ்வு முக்கியமாகக் கடற்பாசிச் சத்தை உறிஞ்சி எடுத்துக் கொள்ளுகிறது.

கடற்பாசிச் சத்துக்களைத் தன்னைச் சுற்றியுள்ள தசிர பின்னல்களிலிருந்து உறிஞ்சுகிறது. இங்குக் கடற்பாசிச் சத்து வீதன சத்துடன் கிரியை பிரிந்து வீதன கடற்பாசித் சத்தாக மாற்றப்படுகின்றது. பிறகு வீதன தவளமாக உண்டாகிறது. இவ்விதமுண்டான வீதன தவளத்தை உருண்டைகளுக்குள் சேமித்து வைக்கப்படுகின்றது. வேண்டிய காலத்து வீதன கவளம் பின்னப்பட்டு. கண்ணறை வலங்களால் உறிஞ்சப்பட்டு, குருதியில் கலக்கப்பட்டு குறுதிச் சுழற்சியில் பாய்கிறது. குருதியில் குருதிப் புரேர்தப் பொருள்களோடு இயக்கங்கொண்டு வீதன சத்தாக வெளி வருகின்றன. வெளிவந்த சத்து குருதியினால் உடல் விலங்களுக்குக் கொண்டு போகப்பட்டு வீதன கடற்பாசிச் சத்துக்களாக மாற்றப்படுகின்றன. இது வலங்களின் வளர்சிதை மாற்றங்களுக்குச் சிறப்பான தூண்டுகோலும் ஊக்குவியமானது.

வீதன கடற்பாசிச் சத்துக்கள், மிகுந்த அளவில் அபரிமிதமாகத் தோன்றினால் அதிவீதன நோய் ஏற்படும். குறைந்த அளவில் உண்டானால் குறை வீதன நோய் ஏற்படும்.

**அதிவீதன நோய்:**—முண்டக்கண் தீவிர இதயத் துடிப்பு, உடல் எந்நேரமும் காங்கை தீவிர வளர்சிதை மாற்றம், உடல் அசதி ஆகியவைகள் காணும்.

**குறைவீதன நோய்:**—சோபை, குறுப்பைத் தட்டுதல், முகம் அதைத்துக் காணல், உடல் கனத்தல், உடல் ஊதல். உடலின் எல்லா பாகங்களிலும் நீர்தங்கல் ஆகியவைகள் காணும்.

வீதன கோளமே வளர்சிதையுறாமலிருந்தால் மந்தகாசக் குள்ளன் நோய் ஏற்படும். உடல் சிறுத்து மனம் குன்றி எலும்புகள் சிறுத்தும் அலித்தன்மையுற்றும் தோல் சொரசொரப்பாயும் மந்தபுத்தி போன்றவைகள் காணும்.

வீதன கோளம் சரிவர தொழில் புரிய கடற்பாசிச் சத்து மனிதனுக்குத் தேவை. தினம் 0·15 முதல் 0·3 மி. கி. வரை தேவை. குருதியில் 0·003 முதல் 0·01 மி.கி. வரை கடற்பாசிச் சத்துக் கிடைக்கிறது. இந்தக் கடற்பாசிச் சத்து குடி தண்ணீரிலும் தாவர இனங்களிலும் கிடைக்கின்றன. இவைகளில் குறைவுற்ற பொருள்களை உண்பதால் விதன கோளத்தில் தொழில் குறையும்.

வீதன கோளம் நரம்பு மண்டலங்களினாலும் மற்ற குழலில்லாக் கோளங்களினாலும் பரிபாலிக்கப்படுகிறது.

திட்டமில்லாத நரம்பு வகைகளும் சகவேதனிப் பகுதிகளும் கோளத்தை ஊக்குவிக்கிறது. முன் சுவலியினின்று வரும் வீதன தூண்டிவிரி சத்து வீதன கோளத்தைப் பரிபாலிக்கிறது. வீதன சத்து பிருகோபரி சத்தின் தொழிலுக்குப் பாங்காக நின்று உதவுகிறது.

## 9. பீசம்.

பீசமென்பது பீசப் பைக்குள்ளே பீசக் கொடியில் தொங்கும் இரண்டு கோள உறுப்புகளிலொன்று, பீசம் நீண்ட உருண்டை வடிவம். இது பிற்பக்கத்திலும் வல இடப் பக்கங்களிலும் சற்றுத் தட்டையாகப் பீசப் பைக்குள்ளே சரிவாய் நிற்கும். பின்னோரம் கொடியோடு தொடுத்திருக்கிறது. பீசம் பீசோபரியோடு பின்னோரப் புறப்பகுதியோடு அணைந்திருக்கும்.

பீசத்திற் சிற்றிதழ்களாகிய அம்சங்கள் அநேகமுண்டு. பீசம் ஒவ்வொன்றிலுமுள்ள அம்சங்களின் தொகை 250 முதல் 400 வரையில் எனப்பட்டுள்ளது. அம்சகங்கள் ஒவ்வொன்றினதும் ஒடுங்கிய நுனி, மையத்தை நோக்கியும், அடி வெளிப்புறத்தை நோக்கியுமிருக்கும். இவைகள் பீசமததிச் சவ்வுக்கும், பீசகச் சவ்வுக்கும் இடையில் ஓடியிருக்கிற இழைக் கச்சுகளுக்கு இடையிற் கிடக்கும். ஒவ்வொரு அம்சகத்திலும் இருந்து விந்துதரங்கள் எனப்படுகின்ற நுண்ணிய குழல்கள் ஒன்றிரண்டு தோன்றும். இவைகள் சுருண்டவைகளாய் தலைப்புள்ளவைகளாவது தடங்களாவது தொடங்கும். அம்சங்களின் நுனியில் இவைகள் சற்றே நேரானவைகளாகி இருபது அல்லது முப்பது குழல்களாகச் சேரும். இவைகளுக்கு நேரியதாரை என்று பெயர். நேரியதாரைகள் பின்னோக்கி ஏறிப் பீசவலையாக ஒன்றுடனொன்று பின்னும். பீசமத்தின் மேலந்தத்திற் பீசவலையிற் சேர்ந்த குழல்கள் அபிவாகதாரைகளாகிய முடியும்.

விந்துவாகி என்பது விந்து நீரைக் கழிப்பதற்குப் பீசோபரியோடு தொடர்ச்சியாயிருக்குங் குழலாகும்.

**விந்து தரகங்கள்**:--இவைகள் பீச அம்சங்களில் உள்ள நுண்ணிய குழல்கள். குழல்களின் சுவர் மேல் பரப்பில் ஆரக விலங்களால் ஆனவை. அதை அடுத்து உள்ளாக ஆண் பிறப்பு விலங்களாலான படைமேல் பரப்பை ஒட்டியிருக்கும். இவ்விலங்கள் நாளடைவில் விந்து அணுக்களாக மாறுகின்றன. விந்து அணுக்கள் விந்து தரகங்களில் தோன்றி பீசமத்தின் மேலந்தத்தின் பீசவலையிற் சேர்ந்த குழலாகிய அபிவாகதாரைகளில் சேருகின்றன. அங்குண்டாகும் விந்து நீருடன் கலந்து விந்துவாகியுனூடாகச் சென்று வந்துப்பையில் சேமிக்கப்படும். தேவையான காலத்தில் விந்துப்பையினின்று இணைதாரைகள் வழியாகச் சென்று சலரகியுனூடாக வெளி வரும். விந்து அணுக்களைச் சுரப்பிக்கும் நீரினால் போடணம் செய்யப்படுகிறது. வெளித் தள்ளப்படும் விந்து நீரில் இரண்டு கோடி விந்து அணுக்கள் உள்ளன. அதில் ஒன்றுதான் கருத்தரிக்கச் செய்கிறது.

**விந்து நீர்**: –இதில் விந்து அணுக்கள், விந்து பாதைகளில் தோன்றும் நீரும் பொருள்களும் காணப்படும். நீர்பாகத்தைத் தந்தது விந்துப் பையும் புரஸ்த கோளமுமாம். வெளி வந்த விந்து நீர் திரவமாகக் காணப்படும். சீக்கிரத்தில் கட்டிவிடுகிறது. பதினைந்து நிமிடத்தில் மறு படியும் திரவ நீராக மாறுகிறது. ஒரு தடவையில் வெளிவரும் விந்து நீர் இரண்டு முதல் நான்கு மி. லி. ஆகும். அதில் இரண்டு கோடி விந்து அணுக்கள் இருக்கின்றன.

**விந்து சத்து**:--இது ஆண்களுக்குப் பீசத்தில் தோன்றும் சத்தாகும். ஆண்களுக்கு இனப் பெருக்க இந்திரிய உறுப்புக்களின் வளர்ச்சிக்கு முக்கிய ஆதாரம். தக்க வயதில் ஆண்களுக்குரிய குறி குணங்களை ஏற்படுத்தும். அதாவது முகத்தில் மீசை, தாடி போன்ற மயிர்கள் வளரும். மேகன மயிரும் உண்டாகும். பெண் இச்சை அதிகப்படும். ஆண்களுக்கு இச்சத்து இல்லையென்றால் இனப் பெருக்கச் செயல்களில் ஈடுபடமுடியாது. குரல் உரத்தும் தடித்தும் ஒலிக்கும்.

**காளைப்பருவமடையும்போது நிகழும் உடல் மாறுதல்கள்**:—விந்து சத்துத் தோன்றினதும் மிடுக்காக உறுப்புகள் வளரச் செய்து காளைப் பருவம் அடைந்ததைக் குறிக்கிறது. பீசம் அளவில் பெருக்கிறது. விந்து அணு உற்பத்தியாகத் தொடங்குகிறது. மற்ற விந்து பாதை உறுப்புகளாகிய அபிவாகதாரை, விந்துப்பை புரஸ்த கோளம், ஆண்குறி வளர்ச்சி பெறுகின்றன. பீசப்பை தடிக்கிறது. முகத்தில் மயிர் வளர்தல், அக்குளில் மயிர் வளர்தல், மேகனத்தில் மயிர் வளர்த்தல், குரல் தடித்துக் கணக்கும். பேசிகள் முரடுகட்டும். ஆண்குறி விருவ்ருப்பு எப்போதாகிலும ஆண்குறி எழிச்சி, விந்துநீர் வெளிப் படுதல் ஆகியவை ஏற்படும். எப்போதாகிலும் வெளிப்படும். வந்து நீரினால் தேகத்திற்குத் தீங்குண்டாகாது. மனோபாவனைகள் நடத்தைகள் போன்றவைகள் மாற்றமடையும்.

**மங்கைப் பருவம்**:--பெண்களின் பருவ நிலைகளை ஆன்றோர்கள் எழு வகையாகப் பாகுபாடு படுத்தியுள்ளனர். அதில் மூன்றாவதாக மங்கைப் பருவத்தை வைத்துள்ளனர். 12 முதல் 13 வயது வரைக்கும் உள்ள பருவமே மங்கைப் பருவமாகும். இந்த வயதிலேயே பெரும்பாலும் நம் நாட்டில் பெண்கள் பூப்படைகின்றனர்.

மங்கைப் பருவம் அடைந்தவுடன் பெண்களுக்கு உரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற அருங்குணங்கள் தோன்ற ஆரம்பிக்கின்றன. குரலிலும் மாறுபாடு தென்படும். கொங்கைகள் அளவில் பெருத்து எடுப்பாகத் தோன்றும். மயக்கும் அழகு எங்கிருந்தோ வந்து குடியேறி கொள்கின்றது. அக்குளிலும், மேகனத்திலும் மயிர் தோன்றும். ஒக்கலை அகன்றும், பருத்தும் இருக்கும். கருப்பை வளர்ச்சியடைந்து தாய்மைக்கு வழி வகுக்கும் தன்மையையும் எய்துகின்றார்கள்.

**கலவி:**—யோனியுள் சிசனம் நுழைந்ததும் விந்துநீர் வெளிப்பட்டு வந்து அணுக்கள் யோனியுள் சென்றடையும் நிலைக்குக் கலவி எனப்படும். ஞானேந்திரி எனலினால் நரம்பு மண்டலத்தின் ஊக்குவியினால் இருதரத்தாருக்கும் ஏற்பட்டு உண்டாகும் ஒத்துழைப்புச் செய்கையாகும். அவை கீழ்க்கண்டவாறு:—

(1) சிசன பாகத்தின் குகாப் பங்குகளும் சுபஞ்ச பங்கும் விம்மும் நெசவால் ஆகியது. இவைகளில் அடர்த்தியான நாளப் பின்னல்கள் ஏராளம். நரம்பு மண்டலத் தூண்டுதலால் குகாப் பங்கும் சுபஞ்ச பங்கும் விம்முகின்றன. அங்குள்ள தசிரங்கள் பெருகின்றன. நாளங்கள் அழுந்தப்படுவதினால் குருதி நிறைந்து புடைத்து நிற்கும். குகாப் பங்கு தடிப்புற்றுக் காணும். இந்நிலையில் சிசுனம் நீண்டு உரப்புற்று யோனியினுள் நுழைப்பதற்குத் தகுந்தாற் போல் விம்மி விரைத்து நிற்கும். கங்காளத்தில் அமைந்திருக்கிற யோனிச் கோணங்களுக்குத் தகுந்தாற்போல் கலவி சிசன கோணமும் நேர்மையாக அமைகிறது. இதனால் யோனியின் மேல் அத்தந்தின் பின்புறத்தில் விந்துநீர் சேமிக்கப்படுகிறது. (2) சிசன மணியும் யோனிச் சளிச் சவ்வும் உராய்வதால் நரம்பு மண்டலம் வேகமுற்று விந்துப்பைச்சுருங்க விந்துவாகி முதற்கொண்டு புரஸ்த கோளம் வரை சுருங்குவதோடல்லாமல் அவை சக்தியால் விந்துநீர் வந்து பாதை வழியாக உந்தப்படுகிறது. குகாப் பஞ்சும் சுபஞ்ச பங்கும் ஏற்றமிறைக்கின்றன. விந்து நீர் சலவாகியுனூடாகத் தீவ்ரமாகக் குபுகுபுவென்று தள்ளப்படுகிறது. கலவியியல் சலவாகி விந்துவாகிச் செயலைச் செய்கிறது. அதே சமயத்தில் சகவேதனிப்பகுதி விந்து நீரைச் சலவாகியிலிருந்து சலப்பைக்குப் புகாமல் தடுக்கிறது.

(3) ஆணின் கலவி மோகமும் பெண்ணின் கலவி மோகமும் ஒத்திருக்க வேண்டும். பெண் மோக காலத்தில் விம்மியும், யோனி பேசிகள் தளர்ந்தும், யோனி வாசல் தளர்ந்தும், அல்குலிலிருக்கும் சளிக கோளங்களும் யோனியிலிருக்கும் சளிக்கோளங்களும், சசிவுற்றும் சுமரி எழுச்சியுற்றும் இருக்க வேண்டும். இவ்வாறான மாறுதல்கள் அடைந்தால் யோனிச் சுவர்கள் வழுவழுத்துத் தளர்வுற்று சிசுனம் நுழைய தாராளமான இடம் தரும்.

இதற்குமேல் கலவியை நடத்தும் முறை, சரியாக அனுபவிக்கும் முறை போன்றவைகள் மனித சமுதாயத்திற்கு இன்றியமையாததாகத் தோன்றினாலும் உடல் தத்துவ அறிவியலறிஞர்கள் இதனைக் கற்பிப்பதுமில்லை; மருத்துவக் கல்லூரிகளில் பாடத்திட்டமாகவும் வைப்பதுமில்லை. இவைபற்றி அறிய விரும்புவோர்க்கென தனியே புத்தகங்கள் கிடைக்கின்றன. அவைகளின் வாயிலாக அறிந்து கொள்ளவும்.

(4) கலவியின்போது கருப்பை சுருங்குகிறது. கலவி முடிந்ததும் கருப்பை விரிவடைகிறது. அச்சமயத்தில் யோனியின் நீரையும் அங்குத் தேங்கியிருக்கும் விந்து நீரையும் உறிஞ்சி உள்ளுக்கிழுத்துக் கொள்கிறது.

(5) விந்து அணு சாதாரணமாக ஊறும் சக்தி பெற்றுள்ளது வால் இருக்கும் வரையில் அது யோனி நீரில் வாலினால் நாற்பக்கமும் அடித்து அடித்து நீந்திச் செல்லும். இரண்டொரு நாள் விந்து அணு இயக்கச் சக்தி பெற்றிருக்கும். கலவிக்கு ஒரு மணி நேரத்திற்குப் பிறகு வாலிழந்து வல்லமையற்றதாகிறது. பெண் மோகம் சரியாக ஒத்திருந்தால் கலவியான மூன்று நிமிடத்திற்கெல்லாம் விந்து அணு கருப்பையினுள் உறிஞ்சப்படும். இல்லையேல் ஒருமணி நேரம் ஆகும்.

(6) இது நிற்க, இதயத் துடிப்பு, அதிகப்படும். குருதி அழுத்தம் அதிகரிக்கும். சுவாசம் மிகும். முகம் விகாரமடையும். வியர்வை காணும். கலவியில் பிருகோடரிகளச் சத்து அதிகப்படியாகக் குருதியில் கலக்கும். முலை சுவலியும் லீதன கோளமும் தூண்டப்படும்.

---

## விஞ்ஞானமயக் கோசம்

(புரியட்டகம்)

எண்சா ணளவால் எடுத்த வுடம்புக்குட்
சண்கால் உடலிற் கரக்கின்ற கைகளிற்
புண்கால் அறுபத்தெட்டாகவே புணர்க்கின்ற
நண்பால் உடம்புதன் னாலுடம்பாமே.

(திருமந்திரம்—2088)

எறும்பும் தன் கையால் எண்சாண் என்று கூறும் முறைப்படி அவரவர் உடம்பு அவரவர் கையளவுக்கு எண்சாணே ஆகும். அத்தகைய உடம்பில் அறிதற்கருவி செய்தற்கருவியாகிய கண், கால் முதலிய உறுப்புகளும், இவ்வுறுப்புகளின் ஊடே கலந்து நின்று தொழிற்படுகின்ற புலன்களாகிய இந்திரியங்களும், மேலோதிய புறப் புறக் கருவி அறுபதும், அகக் கருவி எட்டும் ஆகிய அறுபத்தெட்டும் கூடியதே யாக்கையாகும்.

உடம்புகள் நாற்கும் உயிராய சீவன்
ஒடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்
கடந்தொறு நின்ற கணக்கது காட்டி
அடங்கியே அற்றது ஆரறிவாரே.

(திருமந்திரம்—2089)

நால்வேறு வகையாகக் கூறப்படும் உடம்புக்கு உயிராக விளங்குவது ஆருயிராகிய சீவன். அவ்வாருயிர் என்றும் பேருயிராகிய சிவத்துடன் ஒடுங்கியே இருக்கும். இவ்வுடம்புகள் நால் வகைப்படும். அவைகள் பருவுடல், நுண்ணுடல், போர்வையுடல், முதலுடல் என்பனவாம்.

பூதங்கள் ஐந்தும் பொறியவை ஐந்துளும்
ஏதம் படஞ் செய் திருந்த புறநிலை
ஓது மலங்குண மாகுமா தாரமோ
டாதியவத்தைக் கருவி தொண்ணூற்றாறே.

(திருமந்திரம்—2107)

மேற்சொன்ன நான்கு உடம்புகள் உயிருக்கு உறைகள் போன்ற கவசங்களாகின்றன. அவ்வுறைகள் தொண்ணூற்றாறு தத்துவங்களுள் அடங்கும். அவ்வுறைகளில் இதுகாறும் அன்னமயக்கோசம், மனோமயக்கோசம், பிராணமயக் கோசம் ஆகியவற்றைக் கூறிய பின்னர் நுண்ணுடல் தொழில் புரியும் தத்துவங்களைப் பற்றி கூறும் அதிகாரம் விஞ்ஞான மயக் கோசமெனப்படும். நுண்ணுடல் தொழில் புரிய உருவப் பொருள் தேவை. அவையே நரம்பு மண்டலமும் நரம்புகளுமாம். உயிரானது நரம்பு மண்டலத்தை மையமாகக் கொண்டு நரம்பு மண்டலவுறையினூடாக இயங்குகிறது. அவ்வாறு இயங்கும் கிரியைக் கேற்ப பெயர்கள் பெற்று தத்துவங்களாகப் பரிமளிக்கின்றன.

மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங் கிருந்து உயிருண்ணுமாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத்துள் நின்று
சத்தமுதல் ஐந்துந் தானுண்ணுமாறே.

(திருமந்திரம்—2131)

அவ்வுடலினிறு உயிர் ஆட்டம் புரியும்.

நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலில் ஒடுங்கியிருந்திடுங்
கூடிய காமங் குளிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே.

(திருமந்திரம்—2135)

உயிர் முக்கியமாக முப்பத்தாறு தத்துவங்களுடன் ஏனைய அறுபது தத்துவங்களுடன் சேர்ந்து விஞ்ஞானமயக் கோசத்தைச் சடமாகக் கொண்டு இயங்குகிறது. அவைகளை ஆராய்வோம்.

அறிவு.—

அறிவு வடிவென றறியாத என்னை
அறிவு வடிவென் றருள் செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந்தேனே.

(திருமந்திரம்—2317)

உயிர் தன்னைச் செறியும் அறிவு வடி வென்று அறியாதிருந்தது. அவ்வுயிருக்கு உயிரானது அவ்வுயிர் மாட்டுப் போந்து அதனையே அறிவு வடிவமாகவுளது என்று அறிவுறுத்துகிறது.

பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்.
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே.

(திருமந்திரம்—289)

திருமூலர் அணுக்களைக் கொல்லாமை என்னும் போது உயிரைக் கொல்லாமை என்பதையே குறிக்கிறார். ஆகையினால் உயிரென்றாலும் அறிவென்றாலும் ஒன்றே. அதுவே அணுமயமாகும்.

உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்
அயாறி வில்லையா லாருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிருங் கிடந்துள்ளப் பாங்கறியாரே.

(திருமந்திரம்—2040)

உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்
உயிரை யறியில் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை வீழுங்கு முணர்வை
அயருப் பெரும் பொரு ளாங்கறி யாரே

(திருமந்திரம்—2041)

உயிர்பு ஆகிய உயிர் நின்றால் அவ்வுடற்கண் உணர்வு எல்லாவிடத்திலும் நிகழ்தல் வேண்டும். நினைப்பும் மறப்பும் உண்டாகா. உடலும் கீழ் வீழாது. ஆகையால் உயிர்ப்பும் உடலும் ஒற்றுமையுற்று வாழும். அவ்வாழ்வு சிவமயமாகும். உயிர் உடலின் வேறு என்னும் உண்மை ஏற்படின் உணர்வு சிற்றும் கடந்து முற்றாய் எங்கும் ஆகும். அதுபோல் உயிரின் உண்மையை அவ்வருளால் அறியில் அவ்வுணர்வே மெய்யுணர்வாகும். உடலை நீங்கச் செய்வது உயிரன்று. அவ்வுண்மையினை அறிவிக்காமல் மறைத்து வைத்திருப்பதும் பெரும் பொருளே. ஆகவே உயிர் நுண் உடலில் உறையும் ஐம்பெரும் மெய்களின் கூட்டாகியதே உயிராகும் என்று நிர்ணயிக்கப் பட்டது.

அந்தக்கரணம்

பராசக்தி மாசக்தி பல்வகையாலுந்
தராசக்தி யாய் நின்ற தன்மை யுணரா
உராசக்தி ஊழிகள் தோறும் உடனே
புராசக்தி புண்ணிய மாகிய போகமே

(திருமந்திரம்—1032)

சக்தியானது எங்கும் வ்யாபித்துள்ளதைப் பராசக்தி எனவும், பெரியதாகிய ஆற்றலுள்ள போது மாசக்தி எனவும்; பல வகையாலும் உலகு உடல் உயிர்களைத் தாங்கும் ஆதார ஆற்றலுடையதைத் தராசக்தி எனவும் தன்னையே உணராத போது உணரரவுருசக்தி எனவும்; எல்லா ஊழிகளிலும் ஆருயிர்களைப் புரக்கும் ஆற்றல் உடையதால் புராசக்தி எனவும் ஏற்பட்டுள்ளன. ஆகவே, மெய்யுணர்வு வடிவமாக உள்ளது.

வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்
பத்துமுகமும் பரையும் பராபரைச்
சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்
சத்தியும் வித்தைத் தலைய வளாமே.

(திருமந்திரம்—1035)

உலகுடல் உண் பொருள்களும் அப்பொருள்களுடன் இணைத்து வைக்கப் பெற்ற அழிவில்லாத பலவுயிர்களும், பத்துத் திசையிலும், நிறைந்து நின்றியக்கும் பான்மையால் பத்து முகமுடையதும், நடப்பாற்றலாகிய பரையும் வினைப்பாற்றலாகிய பராபரையும் எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்ற அந்தக்கரணம் நான்கினையும் செயல்படுத்தும்.

வினை

கருமங்கள் ஒன்று கருதுங் கருமத்து
உரிமையுங் கன்மமு முன்னும் பிறவிக்கு
அருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே.

(திருமந்திரம்—2507)

உயிர் செய்யும் கன்மங்கள் இருவினையாகிய கருத்தினால் பொருந்தும். அங்ஙனம் கருமப் பயனின் உரிமையும் மீண்டும் பிறவிக்கு வித்தாம் கன்மமும் கருதப்படுகின்ற பிறவிக்கு வினையாகும.

வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே.

(திருமந்திரம்—2516)

ஊழ்வினை காரணமாக அசத்து விளையும் உடம்பின் கண்ணதாகிய பிரார்த்த வாசனை உயிர்க்குத் தாக்குவதாயுள்ளளவும் அதனானே வரும் விருப்பு வெறுப்புக்களும் அவை பற்றிக் காட்சிப் படும் மண் முதன் மாயைகளும், அவை பற்றி நிகழும் விபரீத உணர்வுமாகிய அசத்துகள் வினை எனப்படும்.

மண்டலம்

நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்து
ஓடுமவரோடுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழியே சென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந்தார்களே.

(திருமந்திரம்—2145)

உடலகத்தே நாடப்படும் மண்டிலங்கள் மூன்று. அவற்றின் நன்மைகளை அறிந்து நிற்பாருடன் கலந்து நடப்பது இருபத்தைந்து மெய்களாகும். அவற்றுடனும் உயிருக்குயிரானதும் சென்று காண்பார்க்குக் கருவிகள் ஒன்றும் தோன்றா.

தோன்றியென் னுள்ளே சுழன்றெழுகின்றதோர்
மூன்று மடிமண் டலத்து முதல்வனை
என்றெய்தி யின்புற்றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறன்றே.

(திருமந்திரம்—2406)

உடம்பகத்துத் தோன்றி என்னுள்ளே வலம் சுழித்து எழும் மண்டிலங்கள் மூன்றுள. அவை முறையே தீமண்டிலம், ஞாயிற்று மண்டிலம், திங்கள் மண்டிலம் எனச் சொல்லப்பெறும். இளங்கொடியாகிய குண்டலினி மண்டிலங்களுடன் இயைந்து இயங்குகிறது.

முக்குணம்

சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மண்ணுங் கனவெனப
ஓய்ந்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
மாய்ந்திடு நிர்க்குண மாசில் துரியமே.

(திருமந்திரம்—2257)

மூலப் பகுதியில் வெளிப்படும் முக்குண இயல்பினைச் சொல்லுமிடத்து அமைதி குணமாகிய சாத்துவிகம் நனவாகும். ஆட்சிக் குணமாகிய இராசசநிலை கனவாகும். ஈட்டுதல் தொழிலினின்றும் ஓய்ந்து ஊட்டுதற்றொழிலில் தோய்ந்து நிற்கும். அழுந்தற் குணமாகிய தாமதம் உறக்கமாகும் இம் மூன்று குணங்களையும் மாயுமாறு செய்து அருட் குணம் மேலோங்கி நிற்கும் நிலை நிர்க்குணமாகும். இந்நிலை பேருறக்கமாகிய துரிய நிலையாகும் பேருறக்கமாவது உலகினை மறந்து உடலினைத் துறந்து அடங்கலற்று அழுந்தும் நிலை என்ப.

ஆறாதாரம்

நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்
கோலி மேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்து முதல் இரண்டுங்
காலங்கண் டானடி காணலுமாமே.

(திருமந்திரம்—1676)

அகநிலைகள் ஆறும் வருமாறு. நான்கிதழுள்ள (மூலாதாரம்) மூலமும் ஆறிதழுள்ள (சுவாதிட்டானம்) கொப்பூழும், பத்து இதழுள்ள (மணிபூரகம்) மேல் வயிறும், பன்னிரண்டிதழுள்ள (அனா

கதம்) நெஞ்சமும்—பதினாறு இதழுள்ள (விசுத்தி) மிடறும், இரண்டு இதழ் உள்ள (ஆஞ்ஞை) புருவ நடுவும் ஆகிய ஆறிடங்களும் ஆறு ஆதாரங்கள் எனப்படும்.

ஆறந்தமுங்கூடி யாகும் உடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மின்
ஆறிய அக்கரம் ஐம்பதின் மேலாக
ஊறிய வாதாரத் தோரெழுத்தாமே.

(திருமந்திரம்—1680)

ஆகும் உடம்பும் அழிகின் அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய அக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்தமாமே.

(திருமந்திரம்—1681)

உடம்பின்கண் மூலமுதல் ஆறு நிலைக்களங்களிலும் வழிபடும் முறைமைகளைக் குறிக்கொண்டு போற்றுமின், தோற்றும் பருவுடம்பு அழிகின்ற உடலாகும். தோன்றா நுண்ணுடல் இதன் கண்ணின்று உயிருடன் ஏகும் உடம்பாகும். இவற்றிற்குரிய எழுத்துக்கள் ஐம்பதாகும். தத்துவமாகிய உடம்புக்கு வழிகள் ஆறும் உறுப்புகளாகும்.

அவத்தை.

ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்
கை கண்ட பன்னான்கிற கண்டங்கனா வென்பர்
பொய்க்கண்டிலாத புருட னிதயஞ் சுழுனை
மெய் கண்டவந்நுதி யாகுந் துரியமே.

(திருமந்திரம்—2103)

மத்திமையாகிய புருவ நடுவின்கண் அறிதற் கருவி ஐந்து, செய்தற் கருவி ஐந்து, வளி பத்து, அகப்புறக்கலன் நான்கு, ஆள் ஒன்று ஆகிய இருபத்தைந்து கருவிகளும் தொழிற்படும். இந்நிலை விழிப்பு நிலையாகும்.

கண்டத்தின்கண் வளிபத்து, அகப்புறங்கலன் நான்கு ஆகப்பதினான்கு கருவிகளும் தொழிற்படும். இந்நிலை கனவு நிலையாகும்.

நெஞ்சத்தின்கண் எண்ணமும் ஆளும் என்னும் இரண்டு கருவிகள் தொழிற்படும். இந்நிலை உறக்க நிலையாகும்.

கொப்பூழின்கண் நிலைத்தவனாகிய ஆள் தொழிற்படும். இந்நிலை பேருறக்கநிலை (துரியநிலை) யாகும்.

முப்பதோடாறின் முதல் நனு ஐந்தாகச்
செப்பதி னுன்காய்த் திகழ்ந்திரண் டொன்ருகி
அப்பதி யாகும் நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீருய்த் தேர்ந்து கொள்ளீரே.

(திருமந்திரம்—2104)

உயிர் நாளும் ஐம்பாடு எய்தும். அவற்றுள் முதல் நிலையாகிய விழிப்பு நிலை ஐவகைப்படும். அவை—

1. விழிப்பில் ஐந்து:--

விழிப்பில் விழிப்பு, விழிப்பிற கனவு, விழிப்பில் உறக்கம், விழிப்பில் பேருறக்கம், விழிப்பில் உயிர்ப்படங்கள்.

2. விழிப்பில் நான்கு:--

விழிப்பிறகனவு, விழிப்பில் உறக்கம், விழிப்பிற் பேருறக்கம் விழிப்பில் உயிர்ப்படங்கல்.--

3. விழிப்பில் மூன்று:--

விழிப்பில் உறக்கம், விழிப்பில் பேருறக்கம், விழிப்பில் உயிர்ப்படங்கல்.

4. விழிப்பில் இரண்டு :--

விழிப்பில் பேருறக்கம், விழிப்பில் உயிர்ப்படங்கல்.

5. விழிப்பில் ஒன்று :--

விழிப்பில் உயிர்ப்படங்கல்.

கண்டகன வைந்தும் கலந்தன தானைந்து
சென்றுண்ட நான்கும் ஒருங்கே உணர்ந்தபின்
பண்டையதாகிப் பரந்த வியாக்கிரத்து
அண்டமுந் தானுய் அமர்ந்து நின்ருனே.

(திருமந்திரம்—2114)

கனவின் உண்டாகும் நிலைகள் ஐந்து-கலந்துள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் புலன்கள் ஐந்து, அகப்புறக் கலன்களாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் அந்தக் கரணம் நான்கு. இவற்றின் உண்மைத் தன்மைகளைத் திருவருளால் உணர்ந்தபின் தொன்மையாய் அண்டமெங்கனும் பரந்துள்ள புலிபோன்ற பாய்ச்சலும் பற்றும் உள்ள இடையருத வேத நடைவாய்ந்த மனம் அடங்கிற்று-கனவின் நிலைக்களம் கண்டம்.

சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி
கெழுமிய சித்தம் பிராணன்றன் காட்சி
ஒழுகக் கமலத்தின் உள்ளேயிருந்து
விழுமப் பொருளுடன் மேவி நின்ருனே.

(திருமந்திரம்—2117)

உறக்க நிலைக்களமாகிய நெஞ்சத்தின் கண் எண்ணமும், உயிர்ப்பும், ஆளும் ஆகிய மூன்று கருவிகளும் தொழிற்படும். பேருறக்க நிலைக்கள மாகிய கொப்பூழின் கண், உயிர்ப்பும், ஆளும் ஆகிய இரண்டு கருவிகள் தொழிற்படும்.

உயிர்ப்படங்குதலாகிய மூலத்திடத்து ஆள் மட்டும் தொழிற்படும். இங்கு உயிர், ஆள் என்னும் கருவியோடு கூடி மூலப்பகுதி என்னும் திரிபு ணர்ச்சிப் பண்டை நுகர்ந்து கொண்டிருக்கும்.

முத்தோடம்

முத்தோடம் என்பதை முக்குற்றம் என்றும் கூறுவர். வாத, பித்த கபம் என்ற இம்மிகளான சக்திகள் ஒவ்வொரு அணுக்கள் தோறும் உள்ளன என அறிவோம். இவைகளை உயிர்த்தாதுகள் என்றும் கூறு வர். பெரும்பாலும் சடப் பொருள்களில் இவைகள் தாங்கள் சுய நிலை யில்லாமல் எப்பொழுதுமே மாறுபட்ட நிலையில் காண்கின்றபடியால் இவைகளைச் சித்தர்கள் குற்றங்கள் (தோடங்கள்) என்று பகர்ந்ததினுல் வழக்கில் முக்குற்றமென்று வழங்கலாயிற்று. ஆகையால் சுகர்ணக்கிரி யையில் இவைகளை ஆராயும்போது உயிர்த்தாதுக்கள், என்று கொள்ளு தல் சாலப் பொருத்தமும் அறிவுள்ளதுமாகும். குகர்ணக்கிரியையில் இவைகளை அறியும்போது உயிர்த்தாதுக்கள் குற்றமுற்றது, என்று கொள்ள வேண்டும். இனி குற்றமுருத மூன்று உயிர்த்தாதுக்களைப் பற்றி ஆராய்வோம்.

உயிர்த்தாதுக்கள் பண்பிலும் குணத்திலும் ஒரே தன்மையுடையன. செய்கையினுல் பலவாக விரிந்துள்ள உயிர்த்தாதுக்களின் விரிவுப்பகுதிக்குள் எல்லாம் மூன்றனுள் அடங்கும். முதலில் வாதம் என்பதைக் கவனிப் போம். வாதம் என்னும் சொல்லைத் திருவள்ளுவர் குறளில் மருந்து அதிகாரத்தில் வளி என்று உச்சரிக்கிருர். வளி முதல்...........என்ற தொடரில் வாதத்தை வளி என்று குறிப்பிடுகிருர். மற்றும், வாதம் என்னும் சொல் பல பொருள்பட தமிழ் மக்களிடையே வழங்கி வருவது கவனிக்கத்தக்கது. ஒருவன் தன் வாக்கின் வன்மை யாலும் தேர்ச்சி யாலும் மற்ருெரு அறிஞனை வென்றபோது வாக்கு வாதத்தில் வென்ருன் என்பர். கீழ்த்தரமான உலோகங்களை மேன்மை பொருந்திய பொன்னுக மாற்றுவதற்கு இரசவாதம் என்ற சொல் நிலவுகிறது. ஆனல் உடல் தத்துவ நூற்களில் காணும் வாதம் என்ற தத்துவம் உயிர்த் தத்துவங்களில் ஒன்ருகும். எனினும் வாதத்தையே வாயு என்ற சொல்லாலும் விளக்குகிருர்கள். இந்த வாயு என்ற சொல் புற உலகில் இயங்குகிற காற்றையும் குறிக்கின்றது. உடலில் இயங்கும்படியாக உயிர்த்தாதுவையும் குறிக்கின்றது. இதனுல் வெளி உலக வாயுவும் உடலில் இயங்கும்படியான வாயுவும் ஒன்ரு என்ற ஐயம் தோன்றி அநேகக் குழப்பங்கள் ஏற்படுகின்றன.

உடலில் இயங்குகின்ற உயிர்த்தாதுவை வாதம், வளி, வாயு என்ற சொற்களால் குறிப்பிடப்படுகின்றன என்றுணர வேண்டும். புற உலகில் உலாவுகின்ற காற்றை கால், காற்று என்று அறிவுறுத்திக் கொள்ள வேண்டும். காற்று அணுக்களில்தான் வாத உயிர்த்தாது மிகுந்து கிடக் கின்றபடியால் சித்தர்கள் அதனையும் உயிர்த்தாதாக வளி, வாயு என்று குறிப்பிட்டுள்ளனர். காற்றில் அதனினும் முதன்மையாக உயிர்க் காற்றில் உள்ள வாத சக்தி இம்மிகள் சீவ அணுக்களில் ஊடுருவிப் பாய்ந்து தொழிலை நடத்தும்போது வாதம் எனப்பட்டது.

வாதம் என்பது சீவாத்துமாவின் ஆக்கல் தொழிலைப் புரிகின்ற உயிர்ச் சக்தியாகும். கிரியாச் சக்தியின் ஓர் பங்காகும். கண்கூடாகப் பார்க்க முடியாது. அதனின் இயக்கத்தினால் அவையவங்கள் தொழில் புரிவதால் அறியலாம். இது காண உடலிலிருந்து கொண்டு காரிய உடலில் (பருவுடல்) இயங்குகிறது. அதாவது அன்னமயக் கோசமெனும் உணவுடம்பில். தங்கி மற்ற நான்கு உடம்பாகிய வளிவுடம்பு, மன வுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்புகளின் ஆதாரத்தைக் கொண்டு இயங்கு கிறது. வாதமானது ஜீவாத்மா சக்தியின் பிரிவில் முதன்மையாக விளங்குவதால் இதைச் சிறப்பாக எடுத்துக்கொள்ளப்பட்டது. சித்தர் கள் ஆன்ம சக்தியைக் குண்டலினி சக்தி என்றும் கூறுகின்றனர்.

குண்டலினி சக்தியின் பண்பை ஒரு பாம்பானது தன் புற்றில் உடலை வளைய வளையமாகச் சுருட்டி படுத்துக்கொண்டிருக்கும் நிலைக்கு ஒப்பிடப் பட்டுள்ளது. வெளி உணர்வு கிளர்ச்சிகளுக்குத் தன்படுக்கை நிலையி லிருந்து தலையைத் தூக்கிப் படமெடுத்துச் சீறுவதுபோல ஆன்மாவின் ஆக்கல் சக்தி வெளி உணர்வுகளுக்கு சுருண்டிருக்கும் நிலையை விட்டு சீறிப்பாய்ந்து மற்ற அவயவங்களை ஆதிக்கம் செய்கிறது. இவ்வுணர்வு களைக் கன்மேந்திரியம் (செய்உணர்வு) மற்றும் ஞானேந்திரியம் (மெய் உணர்வு) என்றும் கூறுவர். தற்கால அறிவியலறிஞர்கள் இவ்வுணர்வு வேகத்தை “நரம்பு வேகம்” என்று கூறுகின்றனர். ஆகவே வாதம் என்ற சொல் பொதுவாக நரம்பு வேகத்தைக் குறிக்கிறது. என்று கொள்ளலாம். இப்பிரமாணத்தைக் கடைப்பிடித்தால் வாதம் இன்ன தென்பதை அறிய ஏதுவாகிறது. இல்லையேல், வாதம் இன்னதென்று விளங்காமல் தெளிவற்றதாகும். ஆகவே வாதம் பித்தம், கபம் என்னும் சக்தி இம்மிகள் ஒவ்வொரு அணுக்கள்தோறும் இருக்கின்றன. பலகோடி உடலணுக்களாலான (விலம்) சீவராசிகளானது, வாத, பித்த, கபம் என்னும் உயிர்ச் சக்திகள் நரம்பு மண்டலங்களிலிருந்து கொண்டு நரம்பு களின் மூலமாகச் செய்வுணர்வு, மெய்யுணர்வு, சூடுணர்வு, குளிர்வுணர்வு போன்ற அநேக உணர்ச்சி நிகழ்வுகளுக்குக் காரண சக்திகளாகிய உடலை இயக்குகின்றன.

உயிர்த் தாதுகள் உடலில் செயல்படும்போது மலங்கள் உண்டாகின்றன இம்மலங்கள் சரிவர வெளித்தள்ளப்படாமல் மிகுந்தும் குறைந்தும் உடலில் தங்கினால் உயிர்த்தாதுக்கள் குற்றமுறுகின்றன. குற்றமற்ற உயிர்த் தாதுக்களின் மலங்கள் சடப்பொருளாகத் தோற்றமளிக் கின்றன. வாதம் குற்றமுற்றபோது குடைச்சல், வலி, வலிப்பு போன்ற மலங்கள் தோன்றும். பித்தம் குற்றமுற்றபோது உடற் காங்கை அதிகரித்தல் (சுரம்), எரிச்சல், கோபம் போன்ற மலங்கள் தோன்றும், கபம் குற்றமுற்றபோது மந்தம். சோம்பல், பிசுபிசுப்பான சளி போன்ற மலம் தோன்றும். அப்போதுதான் உயிர்த்தாதுக்களை முக்குற்றமாக வாத தோடம், பித்ததோடம், கபதோடமென்பர்.

ஆகவே, வாதம், பித்தம், கபம் என்பவைகள் பரமஅணுதத்துவ மானவைகள் சீவாத்மாவின் செய்கையால் இடையறாத தொடர் நிகழ்ச்சியைக் கொண்டிருக்கின்றன. அவைகளைத் தொழிலில் உணரலாம். அவைகளின் மலங்களைச் சடப்பொருளாகவும் காணலாம்.

குண்டலினி சக்தி சுருண்ட பாம்பைப்போல் கோர்த்தகசேரு நரம்பு மண்டலத்தில் நிர்க்குணமாக இருந்து கொண்டு அந்தக் கரணம், ஞானேந்திரியம், கன்மேந்திரியம் போன்ற நரம்புகள் மூலமாக உள்ளும் புறமுமாகத் தொழில் புரிகின்றது. ஈதன்றியும் தசநாடி, தசவாயு ஆறாதாரம், பதினான்கு வேகம் என்ற கருவி கரணங்களாலும் உடலைப் பரிபாலிக்கிறது.

இப்பிரபஞ்சம் என்பது பேரண்டமாகும். சீவ உடல் சிற்றண்டமாகிய பிண்டமாகும். அண்டத்திலுள்ளதே பிண்டம்; பிண்டத்திலுள்ளதே அண்டம் என்பதற்கு இணங்கி; பேரண்டத்தில் எவ்வாறு அம்பரச் சக்தியானது பிரம்மாண்டமான கிரியை புரிகிறதோ அதைப்போல பிண்டத்திலும் அதே அம்பரச் சக்தியானது சீவராசிகளை இயக்கு கிறது. எனவே, தக்க அளவில் அண்ட அம்பர சக்தியை நரம்புகளினூடே பாய்ச்சினால் வாத நிகழ்ச்சியைத் தோற்றுவிக்கிறது. பிரபஞ்சத்தில் அம்பரச்சக்தி மகத்தான பிரம்மாண்ட சக்தி கிரியை புரிகிறது. அதே அம்பரசக்தி சீவராசிகளின் உடலில் அற்புதமாகவும், நுட்பமாகவும் திட்பமாகவும் ஆற்றல் புரிகிறது. ஆகவே, உடலின் வாத இயக்கக் குணத்திலும் பண்பிலும் அம்பரச்சக்திக்கு ஈடானது எனலாம்.

### பத்து வாதம் (தசவாயு)

அஞ்சுடன் அஞ்சுமுக முள நாயகி
அஞ்சுடன் அஞ்சது வாயுத மாவது
அஞ்சது வன்றி இரண்டது வாயிரம்
அஞ்சது காலம் எடுத்துளும் ஒன்றே

(திருமந்திரம்—677)

புலம் பத்தாகளின் திரு ஆற்றலாகிய உயிருக்கு முகம் பத்தாயிற்று, அத்தகைய பத்து முகங்களையுடைய ஆற்றல் உடலுக்குக் காரண கருவி யகதும்.

அவை.

1. உயிர் வளி .. (பிராணவாயு)
2. மேல் வரம்பு தொழில் வளி .. (உதானன்)
3. கீழ்வரம்பு தொழில் வளி .. (அபானன்)
4. ஒளிவளி .. (சமானவாயு)
5. நிரவு வளி .. (வியானன்)
6. தும்மல் வளி .. (கிருகரன்)
7. விழிவளி .. (நாகன்)
8. கொட்டாவி வளி .. (கூர்மன்)
9. இமை வளி .. (தேவதத்தன்)
10. வீங்கல் வளி .. (தனஞ்செயன்)

வாதமானது பிரதானமாகக் குண்டலினி சக்தியிடமிருந்து கொண்டு பத்து முகமாக இயங்குகிறது. மேலும் மற்றொரு பத்து முகமாக, தச 'நாடிகளின்' மூலமாகவும் இயங்குகிறது. ஈதன்றியும், பதினான்கு வேகங்களின் சார்பாகவும் சுலபமான காரியங்களையும் பூர்த்தி செய்கிறது.

தசநாடிகள் மூலபத்து முகங்களைத் தசநாடிகளென்பர்.

**இடகலை.**—கோர்த்தம், கோர்த்தபாசம், கோர்த்தகம், முகுளம், கோர்த்தக சேருக்கொடி ஆகியவைகள் சரிபாதியான நரம்பு மண்டலமாக அமைந்திருக்கின்றன. இடபாகத்தில் இயங்கும்படியான வாதத்தை இடகலை எனப்பட்டது

**பிங்கலை.**—மேற்சொன்ன நரம்பு மண்டல வடபாகத்தில் இயங்கும் படியான வாதத்தைப் பிங்கலை எனப்பட்டது.

**சுழிமுனை.**—இடகலைக்கும் பிங்கலைக்குமுள்ள மத்திம பாகத்திடமாக இயங்கும் வாதத்தை சுழி முனை எனப்பட்டது.

**புருடன்.**—வலக்கண் நரம்பினூடே இயங்கும் வாதத்தைப் புருடனெனப்பட்டது.

**காந்தாரி.**—இடக் கண் நரம்பினூடே இயங்கும் வாதத்தைக் 'காந்தாரி' எனப்பட்டது.

**அத்தி.**—வலச் செவி நரம்பினூடே இயங்கும் வாதத்தை அத்தி எனப்பட்டது.

**அலம்புடை.**—இடச் செவி நரம்பினூடே இயங்கும் வாதத்தை அலம்புடை எனப்பட்டது.

**சிகுவை.**—நாக்கு நரம்பு மூலமாக இயங்கும் வாதத்தைச் சிகுவை எனப்பட்டது.

**சங்குனி.**—கருவாய் அல்லது பிறப்புறுப்புக்களின் நரம்புகளின் மூலமாக இயங்கும் வாதத்தைச் சங்குனி எனப்பட்டது.

**குகு.**—விரேகி நரம்பினூடே இயங்கும் வாதத்தைக் குகு எனப்பட்டது.

**பத்து வர்தங்கள்:—**

**பிரானன்.**—சுவாசத்திற்கு எதுவான உறுபபுக்களை ஆட்சி புரிந்து பரிபாலிக்கும் வாத இயக்கத்திற்குப் பிரானன் எனப்பட்டது.

**உதரனன்.**—கோர்த்ததிலுள்ள நரம்பு மண்டலங்களுக்கும் புற உலகக் கிளர்ச்சிகளுக்கும் சந்திப்பு முகம், கோர்த்த கசேரு கொடி பாகத்திலுள்ளது. கோர்த்தகத்திலிருந்து கசேருக் கொடி சந்திப்பு முகம் வரையிலுள்ள நரம்பு மண்டலத்தில் இயங்கும் வாதத்தை உதானன் எனப்பட்டது.

**அபானன்.**—கோர்த்த கசேருக் கொடியிலுள்ள மேற்சொன்ன சந்திப்பு முகம் (முன் வேர்க் கொம்பு விலம்) முதலாக மற்ற அவயவங்களுக்குச் செல்லும் நரம்புகளினூடாக இயங்கும் வாதத்தை 'அபானன்' எனப்பட்டது.

**கவனிப்பு.**—அபானன் என்றால் ஆசன வாயிலில் காற்று பரிவதைக் கொள்கிறார்கள். மேலும் கரியமிலவாயுவையும் 'அபானன்' என்று கூறுவாரும் உளர். இவ்வித ஐயங்களை விளக்க அபானன் என்ற துல்லியமானதை மேற்சொன்ன வாத இயக்கத்திற்கே கொள்ள வேண்டும்.

**சமானன்.**—உணவுப் பாதையான வாய், இரைக் குழல், இரைப்பை, சிறுகுடல், பெருங்குடல், கடைக்குடல், விரேகி ஆகியவைகளையும் அவைகளைச் சார்ந்திருக்கின்ற நரம்பு மண்டலங்களில் நரம்புகளினும் இயங்குகின்ற வாதத்தைச் சமானன் என்பர்.

**வியானன்.**—இதயம், நாடி, நாளங்கள், தசிரங்களை அனுசரிக்கும் நரம்புகளின் மூலமாக இயங்கும் வாதத்தை 'வியானன்' எனப்பட்டது.

**நாகன்.**—கோர்த்த பாகத்தின் வெண் பதார்த்தத்திலிருந்து கொண்டு அந்தகரணத்திற்கு கருவியாக இயங்கும் வாதத்தை 'நாகன்' எனப்பட்டது. அறிவுக்கு இருப்பிடம் நினைவு செயலைப் புரியும்.

**கூர்மன்.**—முக நரம்பினூடாகத் தொழில் புரியும் வாதம் கூர்மன் எனப்படும்.

**கிருகரன்.**—மும்முகி நரம்பினூடாகத் தொழில் புரியும் வாதம் கிருகரன் எனப்படும்.

**தேவதத்தன்.**—இதயத்தையும் சுவாசத்தையும் ஆட்சிபுரியும் நரம்பு மண்டலங்களின் மூலமாக இயங்கும் வாதத்தைத் தேவதத்தன் என்பர்.

**தனஞ்செயன்.**—கபால எலும்புகளில் பெரும்பாலும் பஞ்சு போன்ற உள்இடை வெளிகளுண்டு. உயிர் அல்லது வாதம் இயங்கிக்கொண்டிருக்கும்போது என்பு இடைவெளிகளிலுள்ள காற்றின் அழுத்தம் புறவுலகிலுள்ள காற்றின் அழுத்தமும் சமமாக உள்ளது. என்புகளோ அல்லது இடைவெளி அறைகளோ பிணியுற்ற காலத்து, காற்று அழுத்தம் மிகுந்தோ குறைந்தோ காணும். அதன் காற்று அழுத்தமும் சமனாகும் வரையில் குற்றமுற்றதாக எண்ணவேண்டும். உயர் இயக்கம் நிறைவுடன் புறக் காற்று அழுத்தத்தைவிட என்பு இடை அறைக்காற்றின் அழுத்தம் அதிகப்படும். அதிகப்பட்டுக்கொண்டே வந்து என்புகளின் மேற்புறம் கண்ணுக்குத் தெரியாத வெடிப்புற்று வெளி ஏகும். இந் நிகழ்ச்சி உயிர் இயக்கம் நின்ற பத்து அல்லது பதினைந்து நாட்கள் ஆகும் இக்காற்று அழுத்தத்தை ஆட்சி புரியும் வாதத்தைத் தனஞ்செயன் எனப்பட்டது. உயிர் இயக்கம் நின்றும் மேற்கொண்டு பதினைந்து நாட்கள் வரை தனஞ்செயன் வாதம் செயல்படுகிறதைக் குறித்து சித்தர்கள் தனஞ்செயன் வாதத்திற்கு மதிப்பீடு அளித்தனர் என்பதை அறியலாம்.

நாடி (நாடி நரம்புகளினூடாக)யினூடாக இவ்வாயுக்கள் இயங்குகின்றன. இதனைத் திருமூலரின் கீழ்வரும் செய்யுளிற் காணலாம்.

இருநிதியாகிய எந்தையிடத்து
இருநிதி வாயு இயங்கு நெறியில்
இரு நூற்று முப்பத்து மூன்றுடன் அஞ்சாய்
இருநிதி வாயு இயங்கும் எழுத்தே

(திருமந்திரம்—681)

சங்கம், பதுமம் என்ற இருநிதிகளிலும் மிக்குள்ளதாகிய உயிர்ப்பு இயங்கும் சிறந்த நாடிகள் இருநூற்று முப்பத்து மூன்று ஆகும்.

எழுகின்ற சோதியுள் நாயகி தன்பால்
எழுகின்ற வாயுஇடமது சொல்லில்
எழுநூற்றிருபத் தொன்பானது நாலாய்
எழுந்துடன் அங்கி இருந்ததிவ் வாறே

(திருமந்திரம்—682)

திரு ஆற்றலாகிய உயிரால் தோன்றுகின்ற உயிர்ப்பின் நாடிகள் எழுநூற்றிருப்பத்தொன்பதாகும். அது பலவாறாய் விரிந்து பேறுபட்டு மண்டிலங்களுடன் ஒன்றியிருக்கிறது.

ஊனாய் உயிராய் உணர்வங்கியாய் முன்னஞ்
சேணாய்வா னோங்கித் திருவுருவாய் அண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்து
ஆண்முழு தண்டமு மாகி நின்றானே.

(திருமந்திரம்—361)

பூரண சக்தி எழுமூன் றறையாக
ஏரணி கன்னியர் எழு நூற்றைந் தாக்கினர்.
நாரணன் நான்முகனாதிய ஐவர்க்குங்
காரணமாகிக் கலந்து விரிந்ததே.

(திருமந்திரம்—643)

முழு நிறை ஆற்றல் நிலைக்களத்தை இருபத்தொன்று அறைகளாக்கினர். அவற்றுள் தங்குங்கன்னியர் அவற்றை எழுநூற்றைந்தாக்கினர். இக்கன்னியர் அரி, அயன் முதலாக ஐந்தொழிற் கடவுளருடனும் கலந்து அவர்களை இயங்கி எங்கும் விரிந்து நின்றனர்.

விரிந்து குவிந்து விளைந்த இம்மங்கை
கரந்துள் எழுந்து கரந்தங் கிருக்கிற்
பரந்து குவிந்தது பார்முதற் பூதம்
'இரைந்தெழு வாயு விடத்தினில் ஒடுங்கே.

(திருமந்திரம்—644)

ஆற்றல் (சக்தி) உலகுயிர்கட்குத் தாரகம். அதாவது மீநிறைவாய் இருக்கும். மீநிறைவு என்பது விரிவு; வியாபகம்; இந்நிலை உலகினை இயக்கும் நிலையாகும். இந்நிலையினும் வீழ்நிறைவாய் (வியாப்பியம்) நிற்கும். அதனால் விரிந்தும் குவிந்தும் என்றார் திருமூலர்.

ஓர்சீவன் தன் உலகின் அக்கம் பக்கங்களின் சூழ்நிலை மாறுதலுக்கேற்ப தன்னைச் சீர்மைப்படுத்திக் கொண்டால் தான் உயிர் வாழ முடியும். உதாரணமாக, சீவன் விருப்பு, வெறுப்பு உணர்வுகளோடும் மற்ற கால தேசமாறுபாடுகளோடும் அவைகளை எதிர்த்தோ இணங்கியோ வினைக்கிரியைகளைச் செய்தல் வேண்டும். இல்லையேல் உயிர் வாழ்வது கடினம். சீவனுக்கு உள்ளும் புறம்பும் நிகழும் விருப்பு வெறுப்பு மாறுதல்களைச் சமநிலைத் திட்டமாகச் சீர்மைப் படுத்துவதே உயிரின் இலக்கியமாகும். வாழ்க்கையில் அன்றாடம் ஒவ்வொரு வினாடியுமாக மேற்சொன்ன நிகழ்ச்சிகள் நடந்து கொண்டேயிருக்க அவ்வப்போது உயிர் சக்தி அவைகளுக்கு ஈடுகொடுத்து மற்ற உறுப்புகளின் கூட்டுறவு தொழிலின் பங்கீட்டினால் சமநிலைத் திட்டத்தைச் சீர்மைப்படுத்துகிறது. இவ்வாறான எண்ணற்ற சமநிலைத் திட்டங்கள் ஒவ்வொரு ஓரறிவு சீவராசிகள் முதல் ஆற்றிவு சீவராசிகள் வரை நடந்து புற உலகோடு தொடர்பாட்சி புரிகிறது.

உடலும், உடலில் இயங்கும் உயிரும், புற உலகின் அனுசரிப்பு, பிரிதிபலிப்பு, கிரியைகளைத் தாங்கி, சீர்மைப்படுத்தி நடப்பதே சுகரணக் கிரியையாகும். இந்தச் சுகரணக் கிரியைகள் உடலின் ஒவ்வொரு உறுப்புகளின் கூட்டுறவு வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இராசாயனப் பொருள்கள் குருதியின் மூலமாக எல்லா உறுப்புகளுக்கும் பாய்ந்து கூட்டுறவை ஏற்படுத்துகிறது என்று கருதுகிறார்கள். ஆனால் சீவராசிகள் வாத, பித்தம், கபம் என்னும் உயிர்த் தாதுக்கள், உயர்குல உடலணுக்களாகிய நரம்பு விலங்கள் திடமானதும் சிறப்பானதுமான கிரியை அமைத்து, கூட்டுறவு தொழிலைப் புரிகிறது என்று அறுதியிட்டுக் கூறினர்.

எனவே, விஞ்ஞான மயக் கோசம் எண்ணற்ற வெவ்வேறு நரம்பு விலங்களால் ஆயது. ஒவ்வொரு நரம்பு விலங்கலும் ஒரு நீண்ட இழையும் பல சிறிய இழைகளும் கொண்டுள்ளன. இவ்விழைகளோடு சேர்ந்த நரம்பு வலத்தை நரம்பலகு என்பர். நீண்ட இழையை வெளிச்செல் நரம்பு (அச்சு இழை) இழை என்றும் சிறிய இழைகளை உட்செல் நரம்பு இழை என்றும் கூறுவர். நரம்பின் வெளிச் செல் இழைகளும் (அதாவது (கார்த்தத்திலிருந்து செயலாக்கும் உறுப்புகளுக்கும்) உட்செல் இழைகளும் (அதாவது ஏற்கும் நரம்புக் கூந்தலிலிருந்து கோர்த்தத்திற்கும்) மெல்லிய நரம்புச் சவ்வறையால் மூடப்பட்டுள்ளன.

நரம்பு விலங்கள் தூண்டலுக்குக் கிளர்ச்சியை உண்டாக்குகின்றன. இக்கிளர்ச்சியானது நரம்பு விலம் முழுவதும் பரவி வெகு விரைவில் வெளிச் செல் நரம்பு இழையினூடாகச் சென்று அது எதைப்பற்றி யுள்ளதோ அதனையும் கிளர்ச்சியுறச் செய்கிறது. உதாரணமாக ஒரு நரம்பு ஒரு பேசியைப் பற்றியுள்ளது. அந் நரம்பின் பேசி பற்றிய முனையை விடுத்து மற்ற மறு முனையில் சூடோ இயந்திர மின்சாரமோ கொண்டு தூண்டுவித்தால் கிளர்ச்சியுண்டாகி நரம்பினூடே சென்று பேசியைக் கிளர்ச்சியுறச் செய்து சுருங்கப் பண்ணுகிறது. எனவே நரம்பின் ஒரு முனையில் தூண்டலுக்குக் கிளர்வுற்றதும் அக்கிளர்ச்சி நரம்பினூடாகப் பாய்ந்து பரவி அது எந்த உறுப்பைப் பற்றியுள்ளதோ

அதனைக் கிளர்ச்சியுறச் செய்கிறது. மொத்தத்தில் ஒரு தூண்டல் நரம்பு விலங்களில் கிளர்ச்சியை உண்டாக்கி அக் கிளர்ச்சியே பிரிதொரு விலங்களுக்குத் தூண்டலாகிறது என்றறியவும். தூண்டல், கிளர்ச்சி நரம்பினூடே செல்லும்போது முன்னும் பின்னுமாகவும் விட்டுவிட்டும் பாய்ந்து பரவும். நரம்பு விலம் கிளர்ச்சியுறும்போது மின்னோட்டத் திற்கு ஒப்பாகும் என்று ஆய்ந்துள்ளனர். தூண்டலுக்கு நரம்பு விலங்கள் துருவதமுறுகின்றன. இருண தன் துருவங்கள் ஏற்பட்டு மனதிற் கெட்டாத பல ஆயிர பின்னப் பகுதி விநாடியில் மறை கிறது. திரும்பத் திரும்ப தூண்டுதல் கொடுக்க கொடுக்க கிளர்ச்சிகள் உண்டாவதும் மறைவதுமாகவே இருக்கின்றன. ஆகவே தூண்டலுக்கு நரம்பு விலங்கள் துருவதமுற்று மின்னோட்டம் அலை அலையாக நரம்பி னூடே யாய்ந்து பரவுகிறது.

ஒரு தூண்டலுக்கு நரம்பு விலங்கள் துருவதமுற்று விரைவில் கிளர்ச்சி மின்னோட்டம் தோன்றி அதே சீராக மறைந்து விடுவது மல்லாமல் விலம் முழுவதும் கிளர்ச்சியடைந்தும் சட இரசாயண குணங்களில் மாறுதலடைந்தும் மின்னோட்டங்கொண்டு அலை அலை யாக நரம்பினூடே பாய்வதை நரம்பு மின்னோட்ட இயக்கம் (உயிர்த் தாது இயக்கம், வாத இயக்கம்) என்பர்.

**வெளித் துண்டலை வரவேற்கும் நரம்பு**

**விலங்கள் (வரவேற்பாளர்கள்).**

சாதாரணமாக, சுகத்தில், நரம்பு மண்டலத்தின் சில சிறப்பான பகுதிகள் வெளித் தூண்டல்களினால் கிளர்ச்சியுறுகின்றன. இவ்வதத் தூண்டலை வரவேற்பது நரம்பு திசுக்களிலுள்ள நரம்பாவரக விலங் களேயாகும். அவைகளை நரம்பு வரவேற்பாளர் என்பர். வரவேற்ற வெளித்தூண்டல் சக்தியைக் கிளர்ச்சிச் சக்தி யாகமாற்றி நரம்பு மின்னோட்டச் சக்தியாக, கோர்த்தகசேரு நரம்பு மண்டலத்திற்குப் பரப்புகிறது. தூண்டல் வரவேற்பாளர்கள் ஒரே தரமானவைகளல்ல. பல்வேறு தூண்டலுக்கேற்ப பல்வேறு வரவேற் பாளர்கள் உண்டு. சுவைத் தூண்டலை வரவேற்குமவைகள் பிரிதொரு தூண்டலுக்குத் தன் சுய கிளர்ச்சியைப் புரியா. ஆனால் எளியதாகவும் குணமில்லாக் கிளர்ச்சியுமுறும். ஆகையால், வரவேற்பாளர்கள் தனக்கே உரித்தான வெளித் தூண்டலை ஏற்று கிளர்ச்சியுறுமே தவிர மற்றவை களுக்கு அசட்டையாக இருக்கின்றன. உதாரணமாகச் சர்க்கரையைத் தோலின்மேல் வைத்தால் தோலினுள்ள வரவேற்பாளர்கள் சக்கரை யின் இனிப்புச் சுவையைக் கிளர்ச்சியுற்று எடுத்துக் காட்டா. எனவே உடலின் அநேக வகையான வரவேற்பாளர்கள் உள்ளனர். அவை.—

(1) இயந்திரத் தூண்டல் வரவேறபாளர்
(2) சீதோட்டிணத் தூண்டல் வரவேற்பாளர்
(3) இரசாயனத் தூண்டல் வரவேற்பாளர்
(4) ஒளி வரவேற்பாளர்
(5) ஒலி வரவேற்பாளர்
(6) வளி வரவேற்பாளர்

(7) மின்னோட்ட வரவேற்பாளர் எனப்படும். இவைகளைப் பின்னும் இரண்டு பெரும் பிரிவாக வகுத்துள்ளனர்.

**I. புறவரவேற்பாளர்.**—உடலுக்குப் புறத்தேயிருந்து வரும் தூண்டலை வரவேற்பவர்கள்.

(அ) நேர்முக வரவேற்பாளர்.--

(1) தோல், வாய், மூக்கு, சுவாசக் குழல் ஆகியவைகளில் படர்ந்துள்ள சளிச்சவ்வுகள்.

(2) சுவையும் நாற்றமும்

(ஆ) தூரத் தூண்டல் வரவேற்பாளர்கள்—

(3) கேள்வி, ஒலி

(4) வெளிச்சம், ஒளி

**II. அக வரவேற்பாளர்கள்.**—சீவராசிகளின் உடலுக்குள்ளிருந்து எழும் தூண்டல்களுக்குக் கிளர்ச்சியுறும் வரவேற்பாளர்களாவார்கள்.

(அ) இயந்திர வரவேற்பாளர்--இச்சாப் பேசிகள், இதயம், பொருத்துக்கள் போன்றவைகளின் அசைவே அகத்தூண்டலாகின்றன.

(ஆ) இரசாயன வரவேற்பாளர்--உடலிலே தோன்றும் வெவ்வேறான இரசாயனப் பொருள்கள், வெளியிலிருந்து உட்சென்ற இரசாயனப் பொருள்கள்.

(இ) சிதோட்டிண வரவேற்பாளர்.--உடற்காங்கை மாறுதல் இவ்விதமாக அநேக அக வரவேற்பாளர்கள் உள.

அக; புற வரவேற்பாளர்களில் சில சமயம் விகற்பம் கண்டுபிடிப்பது கடினம்.

நரம்பு விலங்கள் தன் அச்சு இழையினால் வரவேற்பாளர்களிட மிருந்து கோர்த்தகசேருபாகத்திற்கு இணைப்பதை வெளிச்செல் நரம்பு விலம் என்பர். வெளிச்செல் நரம்புகளினூடே கிளாச்சியை வரவேற் பாளரிடமிருந்து கோர்த்தகசேரு பாகத்திற்குச் செலுத்துகிறது.

**வரவேற்பாளர்கள், செயலாளர்கள் ஆகியவைகள் கோர்த்தக சேருபகுதியோடு இணைக்கப்படும் விதம்.**

நரம்பு விலங்களின் அசசு இழைகள் வரவேற்பாளர்களிடமிருந்து கோர்த்தகசேரு பகுதியோடு இணைக்கின்றன. அதனால் உட்செல் நரம்பு இழைகளாகின்றன. அவ்விலங்களை உணர்வு விலமென்பர். இவைகளின் மூலமாக உணர்வுகளை மூளைக்குப் பரப்புகின்றன.

இவ்வாறான உணர்வு நரம்பு இழைகள் கோர்த்தக்சேரு பகுதிக்கு அப்பாற்பட்டு வெளியே அமைக்கப்பட்டுள்ளது. எனினும் கசேருக்கொடி இரந்திகள் மூலமாகதொடர்புக் கொள்ளுகின்றன. அக்கிரந்திக்குள் உணர்வு விலங்கள் இரண்டு கிளை இழைகளை விடுகின்றன. ஒன்று அச்சு

இழை. வெகு தூரமுள்ள வரவேற்பாளரை இணைக்கிறது. மற்றொன்று கோர்த்தகசேருக கொடியைப் பின்வேர் மூலமாக சேருகிறது. அநேகமாக உணர்வு விலை இழைகள் நேராகக் கசேருக் கொடியில் சேருவதில்லை. அனால் இடையிலேயே இடை நரம்பு விலங்களோடு முடிவடைகிறது. இதனை இடை நரம்பு அலகு என்பர். இவ்விடை நரம்பு அலகுகள் நேரிடையாகச் செயலாளர்களேடும் வரவேற்பாளர்களோடும் இணைக்கப்பட்டிருக்கவில்லை. ஆகவே உணர்வு நரம்பு இழைகள் ஒரு நரம்பு அலகோடல்லாமல் அடுத்தடுத்துள்ள நரம்பு அலகோடு இணைகின்றன.

வரவேற்பாளர்களிடமிருந்து வரும் கிளர்ச்சிகள் (நாற்றம், பார்வைகளைத் தவிர) கோர்த்தகாரரையை அடையும். ஆனால் கோர்வை நரம்பு அலகுகள் மூலமாகத்தான் சேரும். வரவேற்பாளர்களிடமிருந்து எழும்பும் கிளர்ச்சிகள் எந்தவிதமாகிலும் உணர்வு நரம்புகள் மூலமாகவும் கோர்த்தகசேருக் கொடி வழியாகவும் கோர்த்த கரையை அடைந்தே தீரும். அங்கிருந்து இயக்கு நரம்பு அலகை செயல்படச் செய்கிறது.

இயக்கு நரம்பு அலகுகள் உடலின் அவையங்களைத் தன் அச்சு இழையால் கோர்த்த பகுதியை இணைக்கிறது. வரவேற்பாளர்கள் ஏற்ற தூண்டலை நரம்பு விசைகளை அடைந்து அவ்விசைகள் எவின கிளர்ச்சியை இயக்கு நரம்பு அலகுகள் அவையவங்களுக்கு பரப்புகின்றன. எனவே எந்த நரம்பு இழைகள் கோர்த்தத்திலிருந்து வந்த கிளர்ச்சியை மற்ற அவையவங்களுக்குப் பரப்புகிறதோ அவைகளை இயக்கும் நரம்புகள் என்றும் வெளிச்செல் நரம்புகள் என்றும் அழைக்கப் பெறும். வெளிசெல் நரம்புகள் கசேருக் கோடியின் முன் வேர் மூலமாக வெளிவருகின்றன. வெளிச்செல் நரம்புகள் எந்த உறுப்புகளைச் செயல்படச் செய்கிறதோ அவைகளைச் செயலாளர்கள் என்று கூறப்பட்டது (கண் இமைப்பதில் கண் இமையானது. செயலாளர் ஆகும்).

வெளிச்செல் நரம்பு அலகுகளின் அச்சு இழையினால் நரம்பு இயக்கத்தை இச்சாப் பேசிகளுக்குப் பரப்பி, சுருங்கச் செய்வதால் அதற்குக் கண்மேந்திய நரம்பு அலகு எனப்பட்டது. இவ்வித கண்மேந்திய நரம்பு அலகுகள் கசேருக் கொடியின் நரைபதார்த்ததில் முன் வேரில் பொருத்தப்பட்டிருக்கிறது. இவைகளின் அச்சு இழை ஒருவிதத் தடையில்லாமல் நேரிடையாக இச்சாப் பேசி இழைகளை அடைகிறது.

**சகவேதனி நரம்பு மண்டல நரம்பு அலகுகள்**

இச்சாப் பேசுகளை இயக்கும் கண்மேந்திரிய நரம்பு அலகுகள் தவிர, மற்ற எல்லா இயக்கும் நரம்பு அலகுகள் சகவேதனி நரம்பு மண்டலத்தைச் சேர்ந்தவைகளாகும். இவைகள் உறுப்புகளுடன் நேரிடையாக இணைவதில்லை. இவைகளின் வெளிசெல் இழைகள் கசேருக் கொடியை விட்டு அருகாமையிலுள்ள கிரந்திகளைப் பற்றுகிறது. அக்கிரந்தியிலிருந்து இணைப்பு நரம்புகளின் இழை வெளிப் புறப்பட்டு உறுப்புகளைப் பற்றுகிறது.

ஆகவே கோர்த்தத்திலிருந்து அனுப்பப்படும் கிளர்ச்சி கசேருக் கொடியிலுள்ள கன்மேந்திரிய நரம்பு அலகுக்கு வந்தடைகிறது. அங்கிருந்து கிரந்திக்குப் பரப்பும் கிரந்தியிலிருந்து இணைப்பு நரம்பு இழை மூலமாக உறுப்புகளுக்குச் செல்லும் சகவேதனிக்கு இரண்டு வித இழைகளுண்டு, அவை (1) கிரந்திக்கு முன் இழை, (2) கிரந்திக்குப் பின் இழை எனப்படும்.

சகவேதனி நரம்பு மண்டலத்தை இரு பிரிவாகப் பிரித்துள்ளனர் அவை (1) பரிசகவேதனிப்பகுதி, (2) சகவேதனிப்பகுதிகளாம்.

பரிசகவேதனிப்பகுதி.—இப்பகுதியின் இயக்கம் நரம்பு அலகுகள் பாசத்திலும் முகுளத்திலும், கசேருக் கொடி புச்ச பாகத்திலும் அமைந்திருக்கின்றன.

சகவேதனிப்பகுதி.—இப்பகுதியின் இயக்கும் நரம்பு அலகுகள் 12 நெஞ்சு பாகம் முதல், முதல் 4 முதுகு கசேருக் கொடிபாகம் வரையில் அமைந்துள்ளன.

சகவேதனிப்பகுதியில் இயங்கும் நரம்புச் சலனத்தைப் பித்த உயிர்த் தாது இயக்கம் எனலாம். சகவேதனிப் பகுதி கசேருக் கொடியின் (1) 12 ஆவது முதுகுபங்கும் 3, 4 இடுப்புப் பங்கும் வல இடப் பக்க வாட்டின் நரம்பு அலகுகளிலிருந்து அவைகளின் அச்சு நரம்புகளில் ஆரம்பமாகின்றன. இவைகளைச் சகவேதனிப்பகுதியின் முன் கிரந்தி இழை என்றும் (2) சகவேதனி கிரந்திகளிலிருந்து அச்சு இழைகள் ஆரம்பித்து அவயங்களைப் பற்றுகின்றன. இவ்விழைகள் பின்கிரந்தி இழை எனப்படும். சகவேதனி கிரந்திகள் முதுகெலும்பு பக்கங்களில் சங்கிலிக் கோவையாக உந்தி அறையில் அமைந்துள்ளன.

## அநிச்சா இயக்கம் (வேகம்)

அங்க சீவிகள் புற உலகத் தூண்டுதல்களுக்கு வரவேற்பாளர்கள் கிளர்ச்சியுறுகின்றன. அதன் பயனாக வரவேற்பாளர்களின் கிளர்ச்சிகள் கோர்த்தகசேரு நரம்பு மண்டலத்தைத் தூண்டுதலடையச் செய்கிறது. தேவையான தொழிலைப் புரியவைக்கின்றன. இதனைச் சிலர் வேகம் என்பர். சிலர் அநிச்சா இயக்கம் என்றும் சிலர் இச்சையின்றி நடைபெறும் செயல்கள், பிரதிபலிப்புச் செயல்கள் என்றும் கூறுவர். இவ்வாறு பிறப்பிலேயே எத்தனையோ தூண்டுதல்கள் மனிதனுக்கும் விலங்குகளுக்கும் உள்ளன. உதாரணமாக, (1) கண்இமைத்தல் (2) சூரிய வெளிச்சத்தை நேராகப் பார்த்தால் கண் கூசுதல் (3) உணவு விழுங்குதல், (4) சலப்பைச் சுருங்கி விரிவு கொள்ளுதல் (5) உமிழ்நீர் சுரத்தல் ஆகியவைகள் பிறவியிலேயே ஏற்பட்டுள்ளன. ஆகவே கோடானுகோடிக் கணக்கான நரம்பு விலங்களைக்கொண்ட மனித உடலில் ஒவ்வொரு விலக் கூட்டங்கள் குறிப்பிட்ட வேலைகள் செய்கின்றன. குறிப்பிட்ட வேலைக் கென்றே சிறப்பான அமைப்பைக் கொண்டவை இவ்விலங்கள் பிற வேலைகளைச் செய்யா. இந்த விலங்கள் யாவும் வெவ்வேறு வேலைகளைச் செய்து கொண்டு அதே சமயத்தில் ஒன்றோடொன்று ஒத்துழைத்து கொண்டிருக்கின்றன என்று அறிந்துள்ளோம். சிக்கலான பல வேலைகளை நரம்பு விலங்கள் செய்து முடிக்கின்றன.

அநிச்சாச் செயலில் மூன்றுவித நரம்பு விலங்கள் பங்கு கொள்கின்றன. உதாரணமாக உடலின் ஒரு பாகத்தில் எறும்பு கடிக்கிறதென்று வைத்துக்கொள்வோம். மேலே கூறிய மூன்று வலங்களுள் முதலாவது தோலில் உள்ளது உணர்ச்சி நரம்பு விலமாகும். அதுதான் வரவேற்பாளராகும். இது எறும்புக்கடியின் துன்பத்தை உணர்கிறது. உடனே ஒரு தூண்டலான உணர்ச்சியானது கோத்தகச்சேரு கொடி மூலமாகக் கோர்த்தகத்திற்குப் பரவுகிறது. கோர்த்தகச்சேரு கொடியில் முடியும் இழையின் நுனி அருகில் இரண்டாம் நரம்பு விலம் உளது. இதனை இணைப்பு நரம்பு விலமெனபர். இவ்விணைப்பு விலம் வரவேற்பாளரின் ஒரு நுனியையும் மற்றொன்று இயக்கும் நரம்பு விலத்தையும் பற்றுகிறது. ஆதாவது இயக்கு நரம்பு வில்தத்தையும் வரவேற்பாளரையும் இணைக்கிறது. இதுவும் கோர்த்தகச்சேருக கொடியிலே உளது. ஆகவே, எறும்புக்கடி துன்ப உணர்வு இயக்க விலத்திற்கு அனுப்பப்பட்டதும் அது உடனே கை தசைகளுக்கு ஏவி எறும்பைத் தள்ள வைக்கிறது.

### பதினான்கு வேகங்கள்

வேகங்களைச் சிலர் பதினெட்டாகவும் வகுத்துள்ளனர். அவைகளும் பெரும்பாலும் பதினான்கிலேயே அடங்கிவிடும்.

பதினான்கு வேகப் பேர்கள்
பகர்ந்திட அவற்றைக் கேளாய்
விதித்திடும் வாதந் தும்மல்
மேவுநீர் மலங் கொட்டாவி
கதித்திடு பசிநீர் வேட்கை
காசமோ டிளைப்பு நித்திரை
மதித்திடு வாந்தி கண்ணீர்
வளர்சுக்லஞ் சுவாசமாமே

அவையாவன:—

(1) வாதம் (2) தும்மல் (3) நீர் (4) மலம் (5) கொட்டாவி (6) பசி (7) நீர்வேட்கை (8) காசம் (9) இளைப்பு (10) நித்திரை (11) வாந்தி (12) கண்ணீர் (13) சுக்கிலம் (14) சுவாசம் என்பனவாம்.

### 1. வாதம்

வாதம் நரம்புகளினூடே இயங்குகிறது என்று கவனித்தோம். இவ்வித இயக்கத்திற்குத் தடை ஏற்படக்கூடும். நரம்புகள் தபபித மடைந்தாலும் நரம்பைக் குகரண நோயால் ஏற்பட்ட சீழ் போன்றவைகள் அழுத்தத்தைக் கொடுப்பதாலும் உறுப்புகளில் வலியும் உடம்பு நோதலும் ஈரல் சரிவர சுரப்பிக்காமலும், இரைப்பைச் சுரப்பிக்காமலும் அதனால் பசி மந்தமும் போன்ற உபாதைகள் ஏற்படும.

வாதத்தைத் தடை செய்தாலோ
மார்பினோய் குன்ம வாயு
பேதித்த வுதர வாதம்
பெருகிடு முடம்பு நோதல்
வாதைகள் திரட்டும் வல்லை
மலசலங் கட்டுப் பட்டுப்
பேதையே பசித்தீ மந்தம்
பெருகியே மலிதலுண்டே

என்ற செய்யுளால் அறியலாம்.

## 2. தும்மல்

சிங்காணசில்லி என்னுஞ் சளியூறுஞ் சவ்வு நாசித் துவாரங்களையும் இவைகளுடனே உள்ளுக்குத் தொடுத்திருக்கும் அறைகளையும் மூடியிருக்கின்றது. இச்சவ்விலே தான் மோப்பு நரம்பின் கூந்தல்கள் வந்தடைகின்றன.

மூக்கிலே தூசி, சளி, காரப் பொடிகள் போன்றவைகள் நுழைந்து நாசி சளியூறு சவ்வில் படிந்தக்கால் அங்குள்ள நரம்புக் கூந்தலை மழுக்குவது மாத்திரமல்ல, அவைகளிருக்கும் சவ்வையும் தடிக்கப் பண்ணுகிறது. இவ்விதமாக அச்சவ்வு எரிச்சலையடைந்து புப்புசம் திடிரென்று அளவு கடந்த பூரகமாகிறது. உடனே இரேசகமடைகிறது. உள்ளிழுக்கப் பெற்ற காற்று பெருமளவில் வன்மையாக வெளித் தூரத்தப்படுகிறது. இரேசகக் காற்றினால் சவ்வில் சென்றடைந்த தூசோ, பொடியோ வெளியேறும் வரையில் பூரகமும் இரேசகமும் மாறி மாறி வலுவாய்க் காணும். இச் செய்கையான நரம்பு வேகத்தைத் தும்மல் என்பர். தும்மலுறுங்காலையில் சுவாசம் சற்று நேரம் தடைப்படும். இத்தும்மல் வேகத்தை அடக்கினால் அச்சளிச்சவ்வு தடித்துப் போகும். சுவாசமானது மூக்குக்குள்ளாகத் தட்டு முட்டின்றிச் செல்லமாட்டாதாகையால் வாயைத் திறந்து மூச்சு வடவேண்டிவரும். தடிமன் அல்லது சலதோடம் காணும். தடிமனின் குறிக் குணங்களைக் காட்டும்.

தும்மலைத் தடைதான் செய்தால்
தொகுத்திடும் தலைநோயுண்டாம்
இம்மையிந் திரிய மெல்லாம்
இயல்புடன் தெறித்தலாகும்
செம்மையில் முகம் வலித்தல்
தீரவே யரைவாதங்கள்
வெம்மையாம் வாயு கொண்டால்
வளைந்திடுங் குணங்களாமே.

தலைநோய், கண் மேந்திரியம், ஞானேந்திரியங்களின் இயல்பான செய்கையை விட்டு மாறுபட்டுச் செயலாற்றி, நிலை கொள்ளாது முகம் வலிக்கும் என்னும் குறிகுணங்களாம்.

### 3. சிறுநீர்.

சலப்பையின் கழுந்து பாகத்தில் "சுருக்கி" இருக்கிறது இச்சுருக்கி, சாதாரண காலங்களில் சுருங்கிச் சலப்பையில் சேருகின்ற சிறுநீரைச் சலவாகியினூடே அவ்வப்போது விடாமல் தடுத்து, சலப்பையிலேயே தேக்கி வைக்க உதவுகிறது. சிறுநீர் ஓரளவு சலப்பையை நிறைத்தவுடன் நாம்பு வேகத்தினால் சலப்பைச் சுருங்கி விரிவு கொள்ளுகிறது. சிறுநீர் கழிய வேண்டும் என்ற உணர்வு ஏற்படுகிறது. இதனைச் சிறுநீர் வேகம் என்பர். இந் நிகழ்ச்சிக்குத் தடங்கல் செய்தால் கீழ்க்கண்டவாறு ஏற்படும் என்றறியவும்.

நீரினைத் தடுத்தல் செய்யின்
நீர்க்கட்டுத் துவாரம் புண்ணாம்
பாறிடுஞ் சந்து சந்தில்
பண்புறு நோவதாகும்
நேரிலங்கயருங் காம்யம்
நிச்சய நோதல் செய்யும்
பாரினி லபான வாயு
பண்புறச் சேருமன்றே.

நீர் அடைப்பு, சலவாகிப் புண்ணாதல், கீல்கள் தோறும் நோதல், ஆண் குறி சோர்வுடன் குத்தல், அபான வாயுவும் நரம்புகளும் குற்றமுறும் என்பனவாம்.

### 4. மலம்.

மலத்தைக் கழிக்கக் காரணமாகவுள்ளது மலத்தை வெளித் தள்ளும் வேகமாகும். உண்ட உணவு செரிமனத்திற்குப் பிறகு அன்னரசம் உறிஞ்சப் பட்டு சக்கை அல்லது திப்பியானது கடைக் குடலுக்கு வந்து சேருகிறது. விரேகியின் மூலமாக வந்து வெளித்தள்ளப்படும் முன்பே மலம் கடைக் குடலின் கீழந்தத்தில் சேர்ந்து தங்குகிறது. ஓரளவு சேர்ந்தவுடனே கடைக் குடலின் சுவர்கள் மேல், சக்கை அழுத்தத்தை உண்டாக்குகிறது. போதிய மலம் சேர்ந்தவுடன் வெளித்தள்ளுவதற்கான அழுத்தம் ஏற்படுகின்றது. அங்குள்ள அபான வாயுவின் ஆட்சியால் கடைக்குடல் சுவர் பேசிகள் சுருங்கி மலத்தை விரேகிக்குள் தள்ளிவிடும். தள்ளப்பட்ட மலம் விரேகியின் சுவர் களினால் தூண்டப்பட்டு விரேகியின் தசைத் தாதுக்கள் சுருங்குகின்றன. இச் சுருங்கல் உணர்ச்சியே மலம் வேகம் எனப்படும். மேலும் கடைக்குடல் அங்குள்ள மலத்தை விரேகிக்கு உந்த விரேகி, சுருங்க மலம் வெளித் தள்ளப்படும்.

மலவேகம் ஏற்பட்டு மலம் கழிக்க வேண்டும் என்ற உணர்ச்சியை அவ்வப்போது நிகழவொட்டாமல் தடை உண்டாக்கினால் கீழ்க்கண்ட நோய்கள் காணும்.

மலமதை யடக்கினாலே
மலந்தனை வாயு தள்ளும்,
சலதோட முழங்கா லின்கீழ்த்
தன்மையாய் நோவுண்டாகும்

தலைவலி மிகவுண்டாகும்
சத்தமா மபான வாயு
பெலமது குறையும் வந்து
பெருத்திடும் வயாதி தானே.

மலத்தைக் கீழ்த்தள்ளும் தொழிலையுடைய அபான வாயுவின் செயலை எதிர்த்து மலவேகத்தை அடக்கினால் சேர்ந்த மலம் வெளித்தள்ளாமல் இறுகும். தலை கனக்கும், சலதோடம் உண்டாகும், தொடை, கால் முதலியன குடையும்; மலம் தேங்குமேயானால் அவைகள் நசைந்து துர்நாற்றக் காற்று பறியும், பலம் குறையும் என்பனவாம்.

## 5. பசி.

உடலின் போடணத்திற்கு உணவு தேவை எனும் உணர்ச்சியே பசி எனப்படும். பசியும் அனுசரிப்பு வேகமாகும். உண்ட உணவு உடலின் தேக முயற்சிகளால் செலவழிந்து போகின்றன. உடலின் இயக்கத்திற்கு செலவழிந்த சக்திகளை ஈடு செய்ய திரும்பத் திரும்ப காலகிரமத்தில் உணவு தேவை. உணவு சக்திய க மாறி செலவழிந்த சக்திகளைப் பூர்த்தி செய்து கொண்டே இருக்கும். தேவையை உணர்த்துவது நரம்பு மண்டலத்தின் ஆட்சியாகும் ஆகவே பசி வேகத்தை அடக்கினால்

தீவனத் தடைகள் செய்யில்
தேகமே யங்க பங்கம்
மேவுறுஞ் சூலை பிரமை
மிக்குட லிளைப் புண்டாகும்
தாவுற முகமே வாடிச்
சந்துகள் நோதல் செய்யும்
சீவனக்கினியா தாரம்
தேர் முனியுரைத்த தாமே.

என இப்பாடலில் கூறியவைகள் ஏற்படும்.

## 6. தாகம்

சீவராசிகளின் உடலில் தண்ணீர் பெரும் பான்மையாகும். சீவன்கள் உணவோடு தண்ணீரை ஏற்கின்றன. அதே சமயத்தில் உடலை விட்டு நீர் பிருக்க மூலமாகவும், தோல் மூலமாகவும், புப்புச மூலமாகவும் வெளித் தள்ளப்படுகிறது. மலைமேலேறுதல், தேக உழைப்பு போன்ற காலங்களிலும் சிற்சில நோய்களிலும் மிகவும் நீர் வெளிக் கழியப்படுதலாலும் உடலுக்கு நீர் அவசியம் தேவை என்ற உணர்ச்சியை வெளிப்படுத்துவதே தாகம் எனப்படும். சிறுநீராலும், வியர்வையாலும், புப்புசத்தினின்று கழியும் நீராவியாலும் உடலின்று வெளிச் சென்ற நீரின் அளவை உட்கொள்ளும் நீரால் ஈடு செய்யவேண்டும். இவ் வேகத்தைத் தடுத்தால் பசியை அடக்கியதற்குள்ள குறிகுணங்களே காணும்.

## 7. கொட்டாவி

கொட்டாவி என்பதும் வேகமே. தசைகளில் கரியமிலத்துவம் நிறைந்து குருதிச் சுழற்சியினால் வெளியேற ஒட்டாமல் அங்கேயே தேங்கி நின்ற போது உடலின் அசதியைக் காட்டும் அறிகுறியே கொட்டாவி எனப்படும். இதனை அடக்கினால்,

கொட்டாவி தனை யடக்கின்
குறுகிடு முகம்பல் லிக்கை
திட்டமாம் அன்னந் தானும்
செரித்திடா மேகந் தங்கும்
வெட்டையிற் பிரமை காட்டி
மேவுந்தும் மற்குணங்கள்
அட்டியே யில்லா நோவாம்
அகந்தனக் கிடம தாமே

என்றபடி முகம் வலிக்கும்; பலவீனம் திட்டமாக உண்டாகும்; உணவு செரித்திடாது, நீர்க் கோவை நோய்கள் ஏற்படும். சிறு நீருடன் குருதி கலந்து வீழ்ந்து மூர்ச்சையுண்டாக்கும். கை கால்களில் குடைச்சல் வலியுண்டாகும்.

## 8. தூக்கம்

மூளையின் காரையில் அமைதி அடக்கம் ஏற்பட்டவுடன் வெளித் தூண்டுதல்களுக்குத் தூண்டப்படுவதில்லை. இச்சாப் பேசிகளின் மீதுள்ள ஆட்சி வீழ்ச்சியடைகிறது. ஆகவே தலை தொங்குகிறது. கண் இமை மூடுகிறது, இச்சாப் பேசிகள் தளர்வடைகின்றன. காது கேட்கப்படாமை, கண் தெரியாமை ஆகிய நிகழ்ச்சிகள் தோன்றவே தூக்கம் நிகழ்கிறது. எனவே, தூக்கம் நிகழ்வதும் வேகத்தின் செயலாகும். தூக்க வேகத்தை அடக்கினால்,

நித்திரையடங்கிப் போக
நிகழ்ந்திடு கருமங் கேளாய்
நித்தமுந் தலைக்கனப்பு
நின்றகண்ணோத லாகிச்
சித்தத்திற் செவிடுண் டாகித்
தெளிவறு பேச்சு முண்டாம்
உற்றதோ ருறக்கந் தன்னி
லுண்டாமோர் வாய்வின் கூறே

என்ற பாடலின்படி, நாள்தோறும் தலைக்கனம், கண்கள் சிவத்தல், செவிடு, அரைப் பேச்சு முதலியவை உண்டாகும்.

## 9. காசம், 10. இளைப்பு, 11. சுவாசம்

சுவாசப் பாதையில் சாதாரணமாக வெளிக் காற்றை வாங்கியும் உள் காற்றை வெளித் தள்ளலுமாகிய சுவாசம் நடக்கிறது. பிறிதொரு காரணங்களால் சுவாசப் பாதையில் அன்னியப் பொருள்கள் (அதாவது தூசி, தும்பு போன்றவைகள் உள் நுழைந்தாலும் அல்லது நீர், கோழை போன்றவைகள் தேங்கினாலும்) சுவாசத்திற்கு இடர்ப்பாட்டைக் கொடுக்கின்றமையால் அவைகளை வெளித் தள்ளும் செயலே இருமலெனப்படும். இச் செயலும் நரம்பு மண்டலத்தின் வேகமேயாகும். இவ்வாமுறற்படும் நற்செயலாகிய இருமலை தடை செய்தால்,

> காசத்தை யடக்கினாலோ
> கதித்திடுமிருமல் மெத்த
> வாசமாஞ் சுவாசமுண்டாம்
> மருவ்டு மிருத்து நோயும்.

மிகுந்த இருமல் நோய் உண்டாகும், மிக்க சத்தத்துடன் சுவாசம் ஏற்படும், இதய நோய் உண்டாகும்.

தேகப் பயிற்சிக்குப் பின் ஏற்படுவது இளைப்பேயாகும். அன்றாடம் தொழில் புரிவதும் தேகப் பயிற்சியே. தன் வன்மைக்குத் தக்கபடியில்லாமல் மிதமிஞ்சின வேலையை உடல் செயலாற்றினதினால் ஏற்படும் விளைவு இளைப்பாகும். இவ்விளைப்புக்கு இடமளிக்காமல் தடையிட்டு மேலும் மேலும் தொழில் புரிந்தாலும்,

> பேசிய இளைப்படக்கில்
> பெருத்திடு மேகங்குன்மம்
> நாசஞ்செய் மூர்ச்சை யோடு
> நளிர்தும்மல் குணமு முண்டே

உண்ட உணவு செரித்திடாத குன்ம நோய் உண்டாகும். நீரிழிவு, மூர்ச்சை, நடுக்கம், தும்மல் ஆகியவைகள் காணும்.

## 12. வாந்தி

இரைப்பையிலுள்ள பொருள்களும் சிறுபான்மையாகச் சிறு குடலிலுள்ள பொருள்களும் எதிரெடுத்து இரைக் குழல், வாய் வழியாக வெளியே ஒக்காளித்துத் தள்ளப்படுவது வாந்தி எனப்படும்.

இரைப்பைச் சுவரின் பேசிகளின் அழுத்தச் சக்தியாலும் விதானத்தின் எதிரெடுத்துத் தள்ளும் சக்தியாலும் இரைப்பை கொண்டுள்ள பொருள்கள் எதிரெடுத்து வெளித் தள்ளப்படுகின்றன.

இரைப்பையின் சுவர்களில் அமைந்துள்ள ஏற்கும் நரம்புக் கூந்தல்கள் தூண்டப்பட்டாலும் நாக்கு, அடி தொண்டை, உந்தி உறுப்புகள், உள் காது போன்றவைகள் ஏற்கும் நரம்பு கூந்தல்கள் தூண்டப்பட்டாலும் வாந்தி ஆகலாம். மேற்சொன்ன ஏற்கும் நரம்புக் கூந்தல்கள் கருவிகளால் தூண்டப்பட்ட காலத்தும் வாந்தியாகலாம்.

அதாவது அபரிமிதமாக வயிற்றின் அழுத்தச் சக்தி நிறைந்தாலும், அடி நாக்கையோ தொண்டையையோ கிசுகிசுத்தாலும் வாந்தி ஏற்படுகிறது. எந்தெந்த காரணங்களினால் சீரண உறுப்புக்கள் பாதிக்கப்படுகிறதோ அந்தந்தக் காரணங்களினால் வாந்தியுண்டாகும் என்பதை அறியவும். உந்தியறை பேராவளிகை ஆகியவற்றின் தாபிதங்களினாலும் வாந்தியாகும். எனவே, வாந்தி ஒரு வேகத்தின் செயலாகும். வாந்தியை அடக்கினால்,

சத்தியை யடக்கி னக்கால்
 தடித்திட்ட கடி குட்டங்கள்
மெத்தவுந் தினவு பாண்டு
 மேவுகண் ரோக முண்டாம்
பித்தத்தின் விடபாகங்கள்
 பெருகிடுஞ் சுவாசங் காய்ச்சல்
பற்றிய காசமாகும்
 பகர்ந்தவக் குணங்களுண்டே

புழுக்கடியினால் உண்டாக்கக்கூடிய தடிப்புக் குட்டம் போன்ற தடிப்புகள், நமை பாண்டு, கண் நோய்கள், பித்த விடபாகங்கள், இரைப்பு, காய்ச்சல், இருமல் என்னும் இவைகளெல்லாம் தோன்றும்.

## 13. விழி நீர் (துன்பம்).

உடலில் வேதனை, துன்பம், வலி முதலியவைகள் ஏற்பட்ட காலை, கண்ணீர் பாய்வது தொன்றுதொட்டு பாயும் வேகம் ஆகும். இத்துன்பமெனும் மன வேகத்தை அடக்கினால்,

விழியினில் நீரடக்கில்
 விதமான இருத்து ரோகம்
வழியடு பீந சங்கள்
 வந்திடும் நேத்ர ரோகம்
அழுகிடும் சிரசில் ரோகம்
 அதனுடன் வாதங் கூடில்
பழுதுடல் பண்ணிக் குன்மம்
 பற்றிடுங் குணமு முண்டே

இதய நோய், பீநசங்கள், கண்நோய், தலைவலி ஆகிய நோய்கள காணும், இவைகளுடன் வாதமும் குற்றமுற்றால் குன்மமும் உண்டாகும்.

## 14. சுக்கிலம் (விந்துநீர்).

சுக்கிலம் (வெண்ணீர்) ஆண்களுக்கும் சுரோணிதம் பெண்களுக்கும் (பூப்பு) சுகத்திற்காக வெளித்தள்ளப்படுகின்றன. இவைகளை வெளித் தள்ளப்படுவதும் வேக நிகழ்வுகளே. இவ்வேகங்களுக்குத் தடைசெய்தால்

சுக்கிலந் தனையடக்கின்
சுரமுடனீர்க் கட்டாகும்
பக்கமாங் கைகால் சந்து
பாரநோய் வழியிறங்கும்
மிக்கமார் நோயுண்டாகும்
மிகுத்திடும் பிரமேகந்தான்
தக்கதோர் போதுமாகின்
தரித்திடும் வாயுக் கூறே.

சுரம், நீர்க்கட்டு, கை, கால்கள், கீல்கள் மெத்த வலிக்கும். மார்பு நோய், விந்து அநிச்சையாகக் கசியும், குறி வலிக்கும்.

### திட்டமிட்ட நரம்பு வேகம், திட்டமிடாத நரம்பு வேகம்.

திட்டமிடாத நரம்பு வேகத்தை இதுகாறும் அறிந்தோம். வாயில் தின்பண்டத்தைப் போடுகிறோம். வாயில் உமிழ் நீர் ஊறுகிறது. இச் செயலும் நரம்பு வேகமே. இது அநிச்சா நரம்புச் செயலாகும். நரம்புக் கூந்தல்களில் கிளர்ச்சியைத் தோற்றுவித்து நரம்பு அலை இயக்கத்தை உண்டாக்கும் பண்பு அல்லது பொருள் தூண்டுதல்கள் எனப்படும். இவ்வாறு பிறப்பிலேயே எத்தனையோ தூண்டுதல்கள் சீவராசிகளுக்கு உள்ளன. இவைகளைத் திட்டமிடாத நரம்பு வேகம் என்பர்.

### திட்டமிட்ட நரம்பு வேகம்:—

ஒரு நாய்க்குச் சோறு போடுகிறோம். சோறு வாயினுள் சென்றதும் உமிழ் நீர் ஊறுகிறது. இது நரம்பு வேகத்தின் செயலாகும். தூண்டுதல், வாயில் சோறு சேர்தல், சோற்றின் தன்மைகள் ஆகியவைகள் நரம்பு நுனிகளில் நரம்பு அலைகளைத் தோற்றுவிக்கின்றன. அந்நரம்பு அலை பிரதிபலித்துக் திரும்பி உமிழ் நீர்சுரப்பியை இயங்கச் செய்கிறது இனி உணவு கொடுக்கும் நேரத்தில் மணியை அடிப்பது ஒரு நாள் உணவு கொடாமலேயே மணியை அடிப்பது, உணவு கொடாமலேயே மணியைக் கேட்டதும் உணவு வாயிலில்லாத போதும் உமிழ்நீர் சுரக்கிறது. காது தான் மணியைக் கேட்கிறது. நாய் மணியோசையைக் கேட்கிறது. உடனே அதனோடு பலதடவை கொடுக்கப்பட்டதை ஞாபகததுககுக் கொணருகிறது. உடனே நீர் ஊறுகிறது. இச் செயலும் நரம்பு வேகமே என்றாலும் திட்ட மிடாத நரம்பு வேகத்திற்கு மாறானது எனலாம். இதில் உமிழ் நீர்ச் சுரக்கும் செயல் வேறொரு நரம்புப் பாதை வழியாக இணைக்கப்படுகிறது. காதிலுள்ள நரம்புகள் மூளைக்கு நரம்பு அலைகளைக் கொண்டு செல்லு

கின்றன. அங்கே இந் நரம்பு அலை உமிழ்நீர்ச் சுரப்பியை இணைக்கும் நரம்புக்கு மாற்றப்படுகிறது. இவ்வாறு மாற்றும் தன்மை மனம் என்னு தத்துவத்திற்குத்தான் மூளையில் உண்டு.

சில நாட்கள் மணி மட்டும் அடித்து சோறு போடாமல் மணியோசைக் கேட்டதும் உமிழ்நீர்ச் சுரப்பது நின்று விடுகிறது. இயற்கையான தூண்டு தலோடு பலமுறை இச் செயற்கைத் தூண்டுதல் சேர்ந்து வராவிட்டால் மனம் அதனால் தோன்றும் நரம்பு அலையைத் தடுத்துவிடுகிறது. அதனை உள்ளடக்குதல் எனப்படும். இம்மாதிரி மனம் எந்த உறுப்போடும் எந்தத் தூண்டுதலையும் இணைக்கும்; உள்ளடக்கும். இதனைத் திட்டமிட்ட நரம்பு வேகம் என்பர்.

| திட்டமிடா நரம்பு வேகம். | | திட்டமிட்ட நரம்பு வேகம். |
|---|---|---|
| (1) பிறவியிலேயே உள்ளது இது இயற்கை. | .. | இயற்கை வேகத்தை அடிப்படையாகக் கொண்டது. |
| (2) மாற்ற முடியாதது | .. | மாறக்கூடியது, அனுபவத்தில் உருவானது. |

மனிதனும் விலங்குகளும் சூழ்நிலைக்கேற்ப வாழ்வதற்கு இவையிரண்டும் தேவை. மாறிக்கொண்டு வரும் சூழ்நிலையோடு தொடர்பு கொள்ளவும், அதற்கேற்பச் செயல்புரியவும் ஆயிரக்கணக்கான திட்டமிட்ட நரம்பு வேகங்களைத் திட்டமிடா நரம்பு வேகங்கள் ஏற்படுத்திக் கொடுக்கின்றன.

## பகுத்தறிவு.

மூளையிலுள்ள மனம் மற்றொரு வேலை தூண்டுதல்களைப் பிரித்தறிதல் ஒரு ஒலியை ஒலி யென்று மட்டும் அறியாமல் அதன் பல வகைகளையும் பிரித்தறிதல். அது போலவே ஒரு நிறத்தை நிறமென்று மட்டுமறியாமல் அதிலுள்ள பல வேறு பேதங்களைப் பிரித்தறிதல். இவ்வாய்வுகளை நொடிப்பொழுதில் மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் என்னும் நால்வகை குணங்களால் பாகுபாடு செய்கிறது என்று சித்தர்கள் கூறியுள்ளனர். இதனைப் பகுத்தறிவு என்பர்.

உடம்பிலுள்ள உறுப்புகளின் தொழில்களெல்லாம் ஒன்றைப் பற்றி ஒன்ருயும் ஒன்றன்பின் ஒன்ருயும் அவற்றிற்குரிய முறை தவருமல நடைபெற்று வருகின்றன. ஆகையினாலே அத் தொழில்களை நடப்பிக்கும ஒன்றிலேயொன்று பற்றியிருக்கும்படி அவைகளை ஒன்ருய் இணைக்கும பொருளொனறு இடையிலே இருக்க வேண்டும். இப்படி அவைகளை இணைக்கும் பொருளே நரம்பு மண்டலமாம்.

மூளையும், சிர நரம்புகளும், கசேருக்கொடியும், கசேருக்கொடி நரமபுகளும், சகவேதன நரம்புகளுமாகிய இவைகளின் கூட்டமே நரமபு மண்டலம் எனப்படும்.

கோர்த்தம், கோர்த்தபாசம், வறோளித் துண்ணம், கோர்த்தகய (துணை மூளை, சிறு மூளை), முகுளம், கசேருக்கொடி, ஆகிய இவைகளின் கூட்டம் வளி (வாதம்) இயங்கும் நரம்பு மண்டலம் எனப்படும்.

சகவேதனி அல்லது ஐக்க நரம்பு மண்டலம் பித்த உயிர்த் தாதுவை இயங்க வைக்கிறது. பரிசகவேதனி பங்கும் இதனுள் அடங்கும். இது சரீரம் எங்கும் பரந்தோடுவதுமன்றி அதற்குச் சில பிரதான நிலைகளும் உண்டு. அதன் நிலைகள் முள்ளந் தண்டை அணைந்து இடுப்பிலும் இரைப் பைக்குப் பின்னாகவும் அடிக்கழுத்திலும் இருக்கின்றன. இதுவுமன்றி முதுகு முள்ளந்தண்டுக்கு வலமாகவும் இடமாகவும் வம்சி என்பு களுக்கிடையே ஒவ்வொரு திரட்சியாகி நெடுகச் சங்கிலிக் கோவை போலச் சென்று உடம்பிலுள்ள பிரதான உறுப்புகள் எல்லாவற்றிற்கும் பரந்து செல்வதுமல்லாமல் கோர்த்தம், கசேருக் கொடியிலிருந்து கிளம்புகிற நரம்புகள் எல்லாவற்றோடும் பொருந்துகின்றது. பித்த உயிர்த்தாது இயங்கிச் சமநிலைத் திட்டத்தை ஆங்காங்கே ஏற்படுத்துகிறது.

உடலில் எங்கும் வியூபாவரக விலங்களாலாகிய மெல்லிய சளிச் சவ்வு உளது. ஒவ்வொரு உறுப்புகளுக்கு உறையாகவும் பாதுகாப்புச் சவ் வாகவும் உளது. சளிச் சவ்வு விலங்களின் விலசம் கப உயிர்த் தாது இயக்கத்தைக் கொண்டுள்ளது. இச்சளிச் சவ்வு விலங்களின் விலசகத்தை வாத உயிர்த் தாதுவும் பித்த உயிர்த்தாதுவும் பற்றி ஆட்சி புரிகின்றன. ஆகவே, இம்மூன்று வித நரம்பு மண்டலக் கூட்டங்களில் வாத, பித்த, கப உயிர்த்தாதுகளின் இயக்கங்கள் நடைபெறுகின்றன.

மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் என்ற நான்கு நிலைகளைக் கொண்ட பிராணன் மூளையினது நரம்புக்கூட்டங்களினூடே மூன்றுவித வாத, பித்த, கப உயிர்த்தாது இயக்கங்களைத் தொழில் புரிய வைக்கிறது என்கின்றனர். கோர்த்தகம் (துணை மூளை) உடலின் இச்சைக்கு உறைவிடம். மூளை சகல உணர்வுகளையும் ஏற்கிறது. உடலின் எப்பகுதிகளிலும் உண்டாகும் உணர்ச்சிகளை அது உணர் நரம்புகள் வழியாய் மனமானது மூளையில் அறிகின்றது. மூளையிலிருக்கும் சித்தத்தின் காரணமாக பேசி இயக்கங்கள் நடக்கின்றன. பேசிகளை இயக்குவது இயக்கும் நரம்புகளாகும். உணர்வுகளை அறிவது ஞானேந்திரியம் என்றும் பேசிகளை இயக்க வைப்பதைக் கன்மேந்திரியம் என்றும் அறியக் கிடக்கிறது. எனவே கன்மேந்திரியமும் ஞானேந்திரியமும் புரிகின்ற இயக்கத்தை வாத இயக்கம் என அறிந்துள்ளோம்.

ஐக்க நரம்புகளினால் (சகவேதனி) உடம்பில் உணர்ச்சியும் இயக்கமும் உண்டாகவில்லை. அது சரீரத்திலுள்ள சிறப்பான உறுப்புகளுக்கும் பகுதி களுக்கும் சீவத்துவம் கொடுக்கின்றது. அதிலுள்ள சில கூந்தல்கள் குருதிக்குழல்களுடனே கூடி இவைகளைப் போலவே தேகம் எங்கும் செல்லு கிறதினால் உடம்பின் எப்பகுதியும் ஒருமைப்பாட்டுக்கு அவைகளினுடைய நயம் பெற்றிருக்கின்றது. ஐக்க நரம்புகளின் மூலமாக இயங்கும் நரம்பு இயக்கத்தைப் பித்த உயர்த்தாது இயக்கம் என்றறியவும். சரீரத்தின் பகுதிகள் பலவாய் ஒன்றுக்கொன்று வித்தியாசமிருப்பினும் அவை களெல்லாம் ஐக்க நரம்பு மூலமாக ஒருமித்திருக்கின்றன. ஆகவே பித்த உயிர்த்தாது என்றால் நரம்பின் இயக்கத்தின் தொழில் வேறுபாட்டில் ஓர் வகை எனப்பட்டது. பித்தக் கிரியையின் பலனாக ஏற்பட்ட மலத்தையும் பித்தம், பித்தநீர் என்பர். ஆகையினால் உயிர்த்தாது இயக்கம் சூக்குமம். அவைகளின் மலம் சடமயமானது. இப் பிரிவுப் பெயர்களை முக்கியமாகப் பாகுபாடறியவும்.

வியூபாவரக விலங்கள், மூலவிலகங்ள், ஆகியவைகளில் விலசங்கள் சதா இனப் பெருக்கம் செய்து பெருக்கிச் சிதைந்த பாகங்களை நிறப்பும் சுகத்தில் தற்காப்பு கிரியை புரிகிறது. குகரண முறையில் மிகவும் சிதைந்து சளிப்பொருளாக வெளித் தள்ளப்படும். ஆகவே ஒவ்வொரு விலங்கள் தோறும் உள்ள விலசங்களின் கிரியை கப உயிர்த்தாது இயக்கு கிறது. இதனைக் கப உயிர்த்தாது இயக்கம் என்பர். இக்கிரியையினால் ஏற்பட்ட மலினமே சளி என்னும் சடப்பொருள். அதனையும் சிலர் கபம் என்பர். இங்கும் இப்பாகுபாட்டை அறியவும்.

## கன்மேந்திரியம்.

வளர்சிதை மாற்றம் குருதிச்சுழற்சி, சுவாசம், செரிமனம், விசர்க்கம் போன்ற தொழில்கள் அங்க சீவிகளில் உடலின் அகத்தில் நடக்கின்றன. இவைபோன்ற தொழில்கள் தாவரங்களிலும் காணப்படுகின்றன. ஆகையால் பிராணிகளுக்கும் தாவரங்களுக்கும் இவ்வித தொழிற்களில் வேறுபாடில்லை. ஆனால் சீவராசிகளில் புற இயக்கங்களான தொழில்கள் நிறைய உள்ளன. அவைகள் தாவரங்களுக்கில்லை. இப்புற இயக்கங்களை உடலின் இச்சாப் பேசிகளாலும் நரம்பு மண்டலங்களாலும் உணர்வுகளாலும் உண்டாகின்றன என அறிகிறோம். தாவரங்களை விட அதிகப் படியானது சீவராசிகளில் உள்ளன. எனவே, இவ்வடிப்படையான இயக்கங்களைச் சித்தர்கள் கன்மேந்திரியம் என்றனர். கன்மேந்திரியம் நரம்பு மண்டலத்திலிருந்து கொண்டு உடலிலுள்ள பேசிகளை இயக்குகிறது. அம்மாதிரியாகவே உணர்வுகளும் அனுசரிப்பாக இருந்து கன்மேந்திரியங்களுக்கு உதவுகிறது. இத்தொழில்களை வாத இயக்கம் அல்லது வளி இயக்கம் என்பர். சீவராசிகளில் தாவர இயக்கங்களைப் போலுள்ளதைப் பித்த இயக்கம் எனப்பட்டது. உடலின்கண் எல்லா விலங்கள் தோறும் விளங்கா நின்ற விலசம் கப இயக்கம் எனப்பட்டது. பித்த கப இயக்கங்களுக்கு மிகவும் பிரதானமாகவும் சிறப்பாகவுமுள்ளது வாதமேயாகும். வாதம் முக்கியமாகக் காரியங்களைப் புரிகின்றமையால் கன்மேந்திரியம் என்றாயிற்று.

## கன்மேந்திரியமும் கன்மேந்திரியத் தொழில்களும்.

கன்மேந்திரியங்களில் மிகவும் சிறப்பானதும் முக்கியமானதும் வாக்காகும். அதனைக் குரல் என்றும் வசனம் என்றும் கூறுவர். இக் கன்மேந்திரியத் தொழிலை வாய் என்னும் கன்மேந்திரியம் செயல்படுத்துகிறது. இங்கு வாய் என்றால் வாக்குகள் தோன்றுதற்குரிய உறுப்புக்கள் அடங்கும். வெளித் தோற்றத்திற்கு வசனிக்கும்போது வாய் அசைகிறது. அதனால் வாக்குக் கன்மேந்திரியம் வாய் என்று வழக்கில் கொள்ளப் பட்டுள்ளது. ஆனால் ஒலிக்குறிப்பு எனும் எழுத்து, அசை, சொல் ஆகியவைகளாக வசனிக்க குரலுறுப்புகளாகிய நா, பல், உதடு, மேலன்னம் போன்ற உறுப்புகள் தங்கள் அசைவின் வாயிலாய் உதவிபுரிகின்றன. ஆகவே, வாக்கை வசனிக்க வாயானது கன்மேந்திரியமென்றால் மேற் சொன்ன தொகுதி உறுப்புகளைக் குறிக்கின்றன என கவனிக்கவும்.

மிகுதியும் அலறிவெடித்த சத்தமில்லாத சத்தம் முதல் அதிக மென்மையும் இனிமையுமான குழலோசை பரியந்தம் உண்டாகின்ற

மனிதனுடைய குரற் கருவிக்குச் சரியான பின்னொரு இசைக் கருவி மனிதரின் புத்தி வல்லமையினாலே செய்யக் கூடியதல்ல. அநேக சுகரண வாதிகள் இதை, குழலுக்கும் யாழுக்கும் உவமையாகப் பேசியிருக்கிறார்கள். இக் கருவிக்குக் கிருகமென்று பெயர். வழக்கமாய் முடிச்சென்று சொல்லப்படும் கிருகம் சில முருந்து துண்டுகளாலாகிய ஒரு குழாயான செப்புப் போன்ற உறுப்பு. அதனுடைய மேற்றுவாரம் பெரிதாக முக்கோண வடிவாகி அடிநாக்கிற் கிடக்கும் எலும்போடே பொருந்திருக்கின்றது. அதனுடைய கீழ்த்துவாரம் சிறுத்து வட்டமாய்ச் சுவாசக் குழலோடே பொருந்துகின்றது. அதிலுள்ள முருந்துத் துண்டுகள் ஒன்றிலொன்று தங்களிலே பொருந்திருப்பதுமல்லாமல் நாக்குடனும் கீழ்த்தாடையுடனும் சுவாசக் குழலுடனும் இசைந்திருக்கின்றது.

இம் முருந்துகளாலாகிய துவாரத்திற்கிடையே நாலு சவ்வு மடிப்புகள் பக்கத்திற் கிரண்டாக இழுத்துக் கட்டப்பட்டிருக்கின்றன. அவைகளுக்குக் குரல் நாண் என்று பெயர். இந் நாண்களுக்கிடையே ஒரு கமர் இருக்கின்றது. அதற்குக் கிருகவாயில் என்று பெயர். அதனுடைய பருப்பம் ஒரு விரல் செல்லக் கூடியதாயிருக்கிறது. மேலுங்கீழும் இருக்கப்பட்ட குரல் நாண்களுக்கிடையே வலம் இடமாக இருக்கும் இரண்டு பதிவாகிய இடைவெளிகள் கிருகக் குழிகள் எனப்படும்.

அடிநாவிலே பன்னையிலைக்குச் சமானமாய் ஓர் முருந்து உறுப்பு நிமிர்ந்து நிற்கின்றது. அதற்குக் கிருகக்கபாடம் என்று பெயர். சாப்பிடும் சாப்பாடெல்லாம் விழுங்குகையில் சுவாசக் குழலைக் கடந்து இரைக் குழலிலே சேருகின்றன. இப்படிச் செல்லுகையில் ஒரு அணுவளவாகுதல் சுவாசக் குழலுக்குள்ளே போகாதபடிக்குக் காவல் பண்ணுவதே அதன் தொழில். இக்குழலைத் தப்பிச் சுவாசக் குழலுக்குள்ளே சென்றால் புரையேறும். கிருகம் அத்தோடே, மேலே சொல்லப்பட்ட சகல குரலுறுப்புங் கூட இயங்குவதினால் குரலாகிய சத்தம் பிறக்கின்றது. கிருகத்திலுள்ள முருந்துகளினாலே அதற்கு வடிவமும் உறுதியுமுண்டாகின்றன. அம் முருந்துகளிலே தொடுத்திருக்கும் பேசிகளில் சில இயங்குவதினால் கிருக வாயில் விரிந்து அங்குள்ள குரல் நாண் சுண்டிநிற்கும். இம்மாறுதல்களினாலேதான் குரல்விகற்பம் உண்டாகின்றது.

சுவாசப்பையிலிருந்து காற்றானது கிருகவாயிலுக்கூடாகப் பலமாய்த் தள்ளப்படும் பொழுது குரல் நாண்கள் கிடுகிடுத்து அதிருகின்றன. இப்படி அதிர, சத்தம் பிறக்கின்றது. நா, பல் உதடு, மேலண்ணம் முதலியவைகள் இயங்குவதினால் சத்தம் எழுந்து அதன் காரணமாக எழுத்து, அசை, சொல் ஆகியவைகள் உண்டாகின்றன. கிருகத்தினது பருப்பமும் சுவாசப்பையினது அளவும் சுகமும் மிடற்றினதும் நாசித் துவாரங்களினது நிலையும், நாவுதாடையென்பவைகளினது இயக்கமும் ஆளுடைய குணா குணாங்களும் குரல்விகற்பத்துக்குக் காரணங்களாகும்.

பகுத்தறிவுடைய மனதின் எண்ணமே கன்மேந்திரியமாகிய வாண உறுப்புகளின் வழியாகச் சத்த மூலமாகத் தெரிவிப்பதே வாக்கு அல்லது வசனம் (பேச்சு) ஆகும். மூளையின் கேநாரப்பங்கின் காரையில் மனதின் எண்ணக் கோவைகள் தாரையாகக் குரலுறுப்புகளைப் பற்றியிருக்கும்படியான நரம்புகளினூடே சென்று பேசும்படி செய்கிறது.

## கை, கால் கன்மேந்திரியங்களும் அவைகளின் தன்மாத்திரைகளும் (தொழில்)

கை, கால்களைக் கன்மேந்திரிய மென்றால் எங்கெல்லாம் இச்சாப் பேசிகள் உடலில் உள்ளனவோ அங்கெல்லாம் கன்மேந்திரிய நரம்புகள் (இயக்க நரம்புகள்) அவைகளைப் பற்றியிருக்கின்றன. ஆகவே, மற்ற பாகங்களில் இச்சாப் பேசிகளின் கிரியையும் இதனுள் அடங்கும்.

## தசவாயு

இயக்க நரம்புகளில் வாத இயக்கங்களைச் சித்தர் நூற்களில் கீழ்வருமாறு காணலாம்:

1. பிராணன் இயக்கம்—பிராணவாயு
2. உயர்நரம்பு இயக்கம்—உதானன்
3. கீழ் நரம்பு இயக்கம்—அபானன்
4. உள்ளடக்குதல் இயக்கம்—சமானன்
5. சமநிலை இயக்கம்—வியானன்
6. அறிவுக் கிரியை—நாகன்
7. ஞானேந்திரியங்களின் செயலாளர்களின் இயக்கம்—கிருகரன்
8. முகபேசி நரம்புகளின் இயக்கம்—கூர்மன்
9. சுவாசம், இதயச் சுழற்சி ஆகியவைகளின் இயக்கம்—ஆட்சி—தேவதத்தன்
10. மும்மலக் கிரியை, விசர்க்கம்—தனஞ்செயன் ஆகியவைகளின் இயக்கம்

இக்கிரியைகளைச் சித்தர் நூற்களில் தசவாயுவென்று கூறப்பட்டுள்ளது. வாயுக்களின் கிரியைகளைக் கொண்டு பெயரிடப்பட்டுள்ளன.

### எருவாய், கருவாய் ஆகிய கன்மேந்திரியங்களும் அவைகளின் தொழிலும்:-

மலத்தைக் கழிவதற்கும் விந்துவையும் மகவையும் வெளிப்படுத்துவதற்கும் பேசிகளின் இயக்கம் அவசியம் தேவைப்படுகின்றன. ஆகவே, இவ்விரு தொழிற்களை இயக்குவிக்கும் நரம்புகள் கன்மேந்திரியமாகக் கொள்ளப்பட்டன. கோர்த்தக சேருப்பகுதியான புச்ச நரம்புகளின் கிளை நரம்புகள் கூபகப் பேசிகளையும் எருவாய், கருவாய் பேசிகளையும் பற்றுகின்றன. இவைகள் இயங்குவதால் மலம், நீர் கழித்தலும், விந்து, நாதம், மகவு ஆகியவைகளை வெளித்தள்ளுதலுமான செயல்கள் நடைபெறுகின்றன.

## ஐம்பொறியும் ஐம்புலனும்

புலன் என்பது பொறிகள் வழியாய் மனதிலே உண்டாகும் உணர்ச்சியாம். புலன்கள் ஐந்து. அவை ஊறு அல்லது பரிசம்; இரசம் அல்லது சுவை; நாற்றம் அல்லது கந்தம்; ஒளி அல்லது வெளிச்சம்; சத்தம் அல்லது ஓசை என்பவைகளே. ஆகவே புலன்களுக்குப் பொறிகள் உறுப்பாக அமைகின்றன. அப்பொறிகளும் ஐந்து. அவையாவன:— ஊறுக்குத் தோல்; இரசத்திற்கு நாக்கு; நாற்றத்திற்கு அல்லது மோப்பத்திற்கு மூக்கு; ஒளிக்குக் கண்; ஓசைக்குக் காதும் ஆகும். புலன்களை அறியும் போது அவைகளின் பொறிகளையும் தெரிவது அவசியமாகும்.

### ஊறு (பரிசம்)

ஊறென்பது நாம் தொடும் பொருள்கள் அல்லது நம்மேலே படும் பொருள்கள் ஒப்பமோ, முரணோ, குளிர்மையோ, காங்கையோ, சூரோ, மணையோ, வன்மையோ, மென்மையோ வென்று பகுத்தறியப் பண்ணும் புலனாக இருக்கின்றது.

உணரும் உணர்ச்சி உறுப்பு தோல் ஆகும். உணர்வுகளை ஏந்திச் செல்லும் உணர்வு ஏற்கும் நரம்பு இழைக் கூந்தல்கள் நிறைய உட்டோலில் மேற்றோலுக்குக் கீழே அமையப்பட்டிருக்கின்றன. மயிர்க் கால்களின் அடிப்பாகத்திலும் நரம்புக் கூந்தல்கள் பற்றுகின்றன. மயிரை மட்டும் தொடுவோமானால் அதன் அடிப்பாகத்திருக்கும் நரம்பு நுனியைத் தூண்டுதலாகும். இவற்றைத் தவிர தட்டைப் போன்ற நுனிகளும் இன்னும் பலவகைகளும் உள்ளன. இவற்றின் உதவியினாலேயே பொருள்களைத் தொடும் போது அவை வெப்பமானவை அல்லது குளிர்ச்சியானவை அல்லது கடினமானவை என்பதனைத் தெரிந்து கொள்ள முடிகின்றது. எந்தவகையான நரம்பு நுனிகள் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சியை அனுப்புகின்றன என்பதை அறிவியலறிஞர்கள் இன்னும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் தனிமை நரம்பு நுனிகள் வேதனை உணர்ச்சியை உணர்த்துவதாகக் கருதுகின்றனர். இவ்வாறே வெப்பம், குளிர்ச்சி, தொடுதல் ஆகியவற்றையும் அவை உணர முடியும். ஆகவே, ஒவ்வொரு நரம்பு விலங்கள் எத்தகைய வேலையைச் செய்கின்றன என்பது தெரியாவிட்டாலும் தோலின் மூலமாகப் பல உணர்ச்சிகளை உணரமுடியும் என்பதனை அறியவும்.

மேல் தோலின் நரம்புக் கூந்தல்கள் முடிவடைவதில்லை. மேற்றோல் தோலின் இறந்த பகுதியாகும். உயிருள்ள வளரும் பகுதி அதற்குக் கீழே இருக்கின்றது. உயிருள்ள பகுதியிலுள்ள விலங்கள் ஒவ்வொன்றும் இரண்டாகப் பிரியும். இவற்றுள் சில மேல் நோக்கி நகரும், இவை இறந்து விடும். இவையே தோலின் மேல் பகுதியாகின்றன. மேல புறத்திலுள்ள இறந்த விலங்கள் உதிர்ந்து விடுகின்றன. பின்பு புதிய புதிய இறந்த விலங்கள் உண்டாகி மேல் நோக்கி வந்துகொண்டிருக்கின்றன.

தசை உணர்வு, நசை உணர்வு என்பவையும் உள. தசை உணர்வின் மூலமாக நிலைகளைத் தெரிந்துகொள்வது முக்கியமான ஒன்று ஆகும். தசை உணர்வானது பொருள்களின் எடை வேறுபாட்டை உணர்த்தும் ஒரு

உள் அளவு கோலாக அமைந்துள்ளது. உடல் அசைவுகளை உணர்த்தும் தசை உணர்வானது தசைகளில் மட்டுமிருந்தே வருவதில்லை. அசைவதற்கும் அசைப்பதற்கும் பயன்படுகின்ற மற்ற உறுப்புகளிலிருந்தும் வருகின்றது. இத்தசை உணர்ச்சியைத் தெரிவிக்கும் உணர்ச்சி நரம்பு விலங்கள் பொருத்துகளிலும் எலும்புகளை இணைக்கும் நசைகளிலும் உள்ளன.

### சுவை (நாக்கு)

நாக்கு, சுவைப்புலனின் கருவியாகும். இது கீழ்த் தாடையென்பின் குடாவில் வாயின் தளர்த்திப் பிடித்திருக்கின்றது. இது பல நேராகவுஞ் செல்லுகிற பேசி இழைகளாகி, குருதித் தசிரங்களும் நரம்புகளும் நிறைந்திருக்கின்ற உறுப்பாகும்.

நாக்கின் மேற் பக்கம் குவ்வு. இதன் நடுவற் காணப்படும் தந்து இப்பாகத்தைச் சரி வந்த இரண்டு பாதியாகப் பிரிக்கின்றது. இப் பக்கத்தின் முற்பகுதி நாக்கடுக்களாலும் பிற்பகுதி சளிக்குதுவங்களாலும் மூடப்பட்டிருக்கும்.

சளிச் சவ்வு நாவில் அயற் பகுதிகளோடு பிடித்திராத பக்கங்களை யெல்லாம் மூடும். நாவின் கீழ் வளத்திலுள்ள சளிச்சவ்வு மிக மெல்லியதும் அழுத்தமும் சடுக்களில்லாததுமாய் இருக்கும். நாவின் மேல் வளத்தில் இச் சவ்விற் கடுக்கள் நிறைந்திருக்கும்.

**நாக் கடுக்கள்:—**

மேல் வளத்தில் அடர்த்தியாய் பரவியிருக்கும். இவைகள் மெல்லிதான ஆவரகத்தால் மூடப்பட்டிருப்பதால் அதிலுந்தடிப்பான வெளித் தோலால் மூடப்பட்டிருக்கிற தோலிலுள்ள கடுககளைப் பார்க்கத் தோற்றமாயிருக்கும். நாக்கடுக்களை, பருக்கடுக்கள், மத்திமக் கடுக்கள், சிறு கடுக்கள் என மூவகையாகப் பிரித்துள்ளனர்.

**நாவின் நரம்புகள்:—**

பக்கத்திற்கு மூன்று. அவை பக்கத்திலும் முற்பகுதியிலும் இடமுள்ள கடுக்களுக்குச் செல்லுகிறதும் உணர்ச்சிக்கும் சுவைக்கடியிலும் மானதுமான ஐந்தாம் நரம்பின் நாக்கிளையும் நாவின் அற நாத் பக்கத்திலுமுள்ள சளிச் சவ்வுக்கும் பருக்களுக்குச் செல்லுகிசெல்லு தொண்டை நரம்பின் நாக்கிளையும் நாவின் பேசிப் பகுதிக்குச் செல்லுஇறதும் நாவை அசைக்கிறதுமான நாக்கீழ் நரம்பேயாகும்.

உணவு நாக்கின் சளிச் சவ்வோடு நேரடியாகப்பட்ட போது நாக்கடுக்களால் சுவை உணரப்படுகிறது. நாக்கடுக்கள் சளிச்சவ்வின் பிரத்தியேக பாகங்களில் நிறைந்து கிடக்கின்றன. நீரில் கரைந்துள்ள பொருள்கள் சுவைத் தூண்டுதலை எற்கும் நரம்புகளைச் சார்ந்ததும் சிறப்பாக ஆறு சுவை உணர்வுகளை உணர்விக்கின்றன. அவை, இனிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆவன. பொருள்களின் வெவ்வேறு சுவை உணர்வுகளை வெவ்வேறு பிரத்தியேக நாக்கடுக்கள் மூலமாகச் செல்கின்றன. ஈதன்றியும் சூடு, தொடுதல், வலி போன்ற உணர்வுகளையும் ஏற்கின்றன.

ஒவ்வொரு சுவைக்கும் நாக்கில் ஒரு குறிப்பிட்ட பகுதி இருக்கின்றது. ஒவ்வொரு பகுதியும் குறிப்பிட்ட சுவை மட்டுமே நன்கு உணரும். மற்றச் சுவைகளை அவ்வளவாக உணர்வதில்லை. இனிப்பு நாக்கின் நுனிப் பகுதியிலும், கைப்புச் சுவை இதற்குச் சற்றுப் பின்புறத்திலும் உணரப் படுகின்றன. புளிப்புச் சுவை சிறப்பாக நாக்கின் பக்கங்களிலும் துவர்ப்பு நாக்கின் பின் பக்கங்களிலும் உணரப்படுகின்றன. நாக்கிலும் தனிப்பட்ட நரம்பு வலங்கள் உள்ளன. இவை சுவை நரம்பு விலங்களெனப் படும். நாக்கடுக்களில் சுவை அரும்புகள் இருக்கின்றன. சுவை அரும்பின் அமைப்பு, பல சுவை விலங்களாலானது. இவ்வலங்கள் அடுத்தடுத்து பக்கமாக உள்ளன. இவை ஒவ்வொன்றிலும் ஒரு பக்கத்தில் ஒரு சிறு மயிர் போன்ற உறுப்பு உள்ளது. இச் சுவை அரும்பானது நாவின் மேற் பக்கத்தில் திறக்கும் இடத்தில் நீட்டிக்கொண்டிருக்கின்றது. உணவிலுள்ள இரசாயனப் பொருள்கள் இச் சிறிய மயிர்ப்பகுதிகளைத் தொடும்போது சுவை தெரிகின்றது. ஒவ்வொரு சுவை வலத்தின் இழைகள் யாவும் ஒரு நரம்பாக இணைந்து உணர்ச்சியை மூளைக்கு எடுத்துச் செல்கின்றன.

சுவை உணர்ச்சியைப் பெறவேண்டுமானால் சுவை அரும்புகளைத் தொடுகின்ற இரசாயனப் பொருள்கள் திரவமாக இருக்க வேண்டும். சுவை உணர்ச்சியானது மோப்ப உணர்ச்சியோடு சேர்ந்தது. ஆகவே அவ் வுணர்ச்சியானது மற்ற உணர்ச்சிகளும் சேர்ந்த ஒரு கலவை என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

ஒவ்வொருவருக்கும் உணவுச் சுவை மாறுபடும். மிதமிஞ்சின இனிப்பை மற்றவர்கள் எவ்வாறு விரும்புகிறார்கள் என்று ஆச்சரியப் படலாம். உப்பிட்ட கருவாட்டு மீனையோ, சுடப்பட்ட நத்தையோ, தவளையோ, வறுத்த ஈசலையோ மற்றவர்கள் சாப்பிடுவதை நினைத்தால் குமட்டல், வெறுப்பு ஏற்படுகிறது. ஆனால் வேறு சில நாட்டிலுள்ளவர் களுக்கு இவை சுவையான உணவாகும். சுவை சீவராசிகள் வாழும் இடத்தைப் பொருத்தது. இது சுவையின் இயல்பு. உலகத்தில் அத்தனை சுவைகளுக்கும் இடம் உண்டு.

## மோப்பம் (மூக்கு)

மூக்கு நாற்றப் புலனின் கருவியாகும். இப்புலன் புப்புசப் பைக் குள்ளே தூசு, தும்பு, காற்று முதலியனவைகள் புகாதபடிக்குக் காவலாகவும் உணர்வைத் தெரிவு செய்வதற்கும் உதவியாகவும் நிற்கின்றது.

**நாசியின் சளிச் சவ்வு:**

நாசியால் வருஞ்சளி நாசிக்கு உள்ளுறையாயிருக்கும் சளிச் சவ்வு அதற்குள்ளே இருக்கின்ற பரியாயந்திரச் சவ்வோடும் பரிமுருந்தெனுஞ் சவ்வோடும் நெடுக ஒட்டிக் கொள்ளும். அது வெளியே தோலோடும் பின்னே தொண்டையின் சளிச் சவ்வோடும் ஒரே படலமாக இருக்கும். மேலும் இது நாசிப்புரை, கண்ணீர்க் குழல் வழியாய் கட்குழிக்கும்; தொண்டை, காது துவாரம் வழியாய காதுக்கும்; நாசிக்கால் வாயி லிருக்கும் பல தொளைகள் வழியாய் நெற்றியறை, சதுகவறை போன்ற வைகளுக்கும் ஓடியிருக்கின்றது.

இச்சவ்வு பல பகுதியிலும் தடிப்பாய் இருப்பதனாற்றான் நாசியறை ஒடுங்கினதாகவும் சுருள் என்பகள் பருத்ததாகவும் தோற்றுகிறது. மோப்பு நரம்பும், நயன நரம்பின் முற்ற சனக்கிளையின கூந்தல் களும் விழிய நரம்பும், நாசியண்ண நரம்பும் தாலுமுன் இறங்கு நரம்பும், சதுக்கத்தாலுக் கிரந்தியின் சதுக்கத்தாலுக் கிளைகளுமேயாம்.

நாற்றப் புலனுக்குரிய நரம்பாகிய மேப்பு நரம்பு நாசி மத்தியின் மேல் மூன்றிலொரு பங்கிலும் மேல் சுருள் நடுச்சுருள் என்புகளிலும் படரும். நயன நரம்பின் நாசிக் கிளை, நாசி மத்தியின் முன் பங்கு மேற்பங்குக்கும் நாசியறையின் புறச் சுவருக்கும் கூந்தல்கள்விடும்.

## ஒளி, உருவம் (கண்)

ஒளியானது மற்றெல்லாப் புலன்களை பார்க்கிலும் மனிதனுடைய அனுபவத்திற்கும் மகிழ்ச்சிக்கும் அதிக உதவியாகயிருக்கின்றது. அக்கம் பக்கங்களிலுள்ள பொருள்களையும் அவைகளினது நிலைகளையும், உருவத்தையும், நிறத்தையும், பருமத்தையும் இப்புலன் வழியய் அறியலாம். இம்மகத்தான புலனுக்கு ஆதாரமான உறுப்பு கண்ணேயாம்.

## கண்ணின் விவரம்

கண்ணானது உண்டை வடிவமாய் தலையோட்டின் முற்பகுதி யிலிருக்கும் குழியிலே பதிக்கப்பட்டிருக்கின்றது. கண் விழி மூன்று சவ்வுப் படலங்களுள்ளதயிருக்கிறது. இச்சவ்வுக் கவசங்களுக்குள்ளே கவச்சங்களென்னும் நீர்கள் நிறைந்திருக்கின்றன.

கவசங்களாவன.—(1) கடினையும் சிருங்கையும்; (2) தரணிசமும் வருணியும், பரிதிகமும்; (3) தரிசியம் என்பவைகளே, அதிலிருக்கும் உருவொளியான கவசங்களும் மூன்று. முற்பக்கத்தில் (1) வனமும் முந்தினதற்கடுக்க (2) இயவமும், பின்னுக்குப் (3) படிகமும் என மூன்றாகும்.

கடினை என்னுஞ் சவ்வு பலப்பாகவும் அதன் நிறம் வெண்மை யாகவும் இருக்கின்றது. வழக்கமாய் அதை வெள்ளை விழி என்பர். இச்சவ்வும் கண்ணுக்கு முற்பக்கத்திலிருக்குஞ் சிருங்கையும் அதில் வன்மையாயிருக்கிறபடியினால் அவைகள் கண்ணைப் பேணும் உறை யாயிருக்கின்றன.

சிருங்கையானது கண்ணுண்டையின் முற்பக்கத்தில் ஆடியைப் போல உருவொளியுள்ளதாய் அவ்வுண்டையின் எப்பகுதியைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பிதுங்கியிருக்கும் பகுதி. நலமாயிருக்கும் போது இது கண்ணிலே பளபளவென்று மினுங்கும்.

தரணிசம் எண்ணும் சவ்வு கருமை நிறமுள்ளதாய் கடினைக்குள் அடுத்தாற் போலிருக்கின்றது. இது கண்ணிலுள்ள பல பகுதிகளையும் போடணிக்கின்ற நுண்ணிய வெகு குருதிக் குழல்களினால் வலைபோல் பின்னப்பட்டிருக்கின்றது.

வருணியானது சிருங்கத்திற்பின் கொஞ்ச தூரத்திலிருக்கும் ஓர் சவ்வு. கண்கள் பல வித்தியாசமாய் காணப்படும்படி கண்ணுக்கு நிறத்தைக் கொடுப்பதும் இதுவே. இது கண்ணிற் படும் வெளிச்சத்துக்குத் தக்கதாய் கொஞ்ச வெளிச்சத்திலே விரிந்தும் அதிக வெளிச்சத்திலே சுருங்கியும் நிற்குந் துவாரம்.

முற்பகுதியினுள் பக்கத்திலே ஆராய்ந்து பார்க்கும்போது அதற்கயலான மற்றப் பகுதிகளிலும் கருமை குறைந்தவைகளாய் ஏறக் குறைய அறுபது வரிகள் வருணியின் சுற்று விளிம்பிலிருந்து பரந்து போகிறவைகளாய் காணலாம். இவைகள் ஒன்றோடொன்று அடுத்திருப்பதினாலாகிய வட்டத் துக்குப் பரிதிகம் என்று பெயர்.

தரிசியம் என்பது கண்ணிலே தரணிசத்துக்குள் அடுத்தாற் போலே ஈர உள்ளேயிருக்கும் மெத்த மெல்லிய வெள்ளைச்சவ்வு. ஆக முதலிலே காட்சிப் புலன் சேரும் இடமாகிய இச் சவ்வு. பார்வை நரம்பினுட் பகுதி கண்ணுக்குள்ளுறைக் கவசமாக விசாலித்து விரிவதினாலாகின்றது.

வனம் என்னும் சுவச்சம் வருணிக்கு முன்னும் பின்னுமாக சிருங்கைக்கும் இயவத்துக்கும் இடையிலே இருக்கின்றது. அது சுத்த சலமாயிருக்கக் கொள்ள அதிலே வருணியானது நீந்திக் கொண்டிருக் கின்றது.

இயவம் என்னும் சுவச்சம் வருணிக்குப் பின்னாகவும் படிகத்துக்கு முன்னாகவும் இருக்கின்றது. அது தண்ணீர் நிறமாகப் பளிங்குச் சமான மாய் உருவொளியுள்ளதாகவும் சற்றே தடித்து வைரங் கொண்டதாகவும் இருக்கின்றது. அது மங்கி புகைந்து போக, காச நீராம். படிகம் என்னும் சுவச்சம் இயக்கத்திற்குப் பின்னடுத்தாற் போல் கண்ணிலே ஈரப் பின்னுக்கு இருக்கின்றது. அதனுடைய நிறமும் தடிப்பும் ஏறக் குறைய கோழி முட்டையின் வெள்ளைக் கருவுக்குச்சமானமாயிருக்கின்றது. பார்வை நரம்பு அடி மூளையிலிருந்து கிளம்பிக்கண்ணின் பிற்பகுதி மட்டும் ஓடி முன் சொன்னபடி கண்ணுக்குள்ளே தரிசியம் என்னும் சவ்வாகப் பரந்து விரிந்து கிடக்கின்றது.

## கண்ணின் தொழில்

கட்புலனுக்கு வெளிச்சம் அவசியம் வேண்டியதாகையால் கண்ணி லுள்ள பல பகுதிகளினது பிரயோசன மின்னதென்று அறியம்படிக்கு வெளிச்சஞ் செல்லும் ஒழுங்குப் பிரமாணம் இன்னதென்று முதலில் அறிய வேண்டும்.

ஒளியானது ஒரே பொருளுக் கூடாகப் பாயும் பொழுது சரி நேர் வரியாகச் செல்லும். ஒருப் பொருளிலிருந்து திண்மையளவைப் பிறகப மான பின்னொரு பொருளுக்கூடாக ஒளி செல்லும்போது அதன் போக்கில் மடங்கி அல்லது வளைந்து செல்லும். இப்படி ஒளிவளைந்து செல்வதற்குக் கதிர் மடங்கல் (வக்கிரீகரணம்) என்று பெயர். ஒரு பொருளிலிருந்து அதன் கிரணங்கள் எவ்வளவு தூரமாய் பாயுமோ அவ்வளவாக அவைகள் ஒன்றுக்கொன்று அகன்று விரியும்.

ஒரு பொருளிலிருந்து கிரணங்கள் கண்ணுள்ளே செல்லும்பொழுது ஒன்றுக்கொன்று கத்திரிக்கோல் போற் குறுக்கிட்டுச் செல்லும். இதனால் அப் பொருளினுருவம் அடிதலை மாறிக் கண்ணின் பிற்பக்கத்திலுள்ள தரிசியத்திலே விழுகின்றது. இடவலமாகவும் மாறியும் விழும். ஆனால் மூளை தன் உயர்பார்வை ஆட்சியால் நேரான உருவத்தை உண்டாக்கிக் காண்பிக்கும்.

தரிசியத்தில் கோடிக்கணக்கான உணர்ச்சி நரம்பு விலங்கள் இருக்கின்றன. அவை ஒளியை உணரும் தன்மையுடையவை. செய்திகளைக் கடத்துகின்ற மற்றொரு வகையான உணர்ச்சி விலங்களும் உள்ளன. ஆகவே, தரிசியத்தில் ஒளியை உணரும் கோடிக்கணக்கான நரம்பு விலங்களில் இரண்டு வகைகள் உண்டு. பெரும்பாலான விலங்கள் நேரான பக்கங்களையுடையன. அதனைக் கோல்கள் என்பர். சிறு பான்மையான விலங்கள் தடித்த பக்கங்களையுடைய கூம்புகள் ஆகும். பார்வைக்கு இவ்விரண்டு வகைகளும் தேவை. ஒவ்வொன்றும் ஒரு தனிப்பட்ட வேலையைச் செய்யும்.

தெளிவான பார்வைக்குக் கூம்புகள் அவசியம். பொருள்களின் நிறங்களை உணர்வதற்கு இவையே உதவுகின்றன. கூம்புகள் திறமையாகவேலை செய்தவற்குச் சற்று நல்ல வெளிச்சம் தேவை. ஒளி குறைந்தால் அவை வேலை செய்யா. இதனாலேயே ஒளி குறைந்து இடத்திலுள்ள ஒரு பொருளின் உருவத்தை நம்மால் உணர முடிந்தாலும் அதன் நிறத்தை அறிய முடிவதில்லை.

கூம்புகளைவிட ஒளியை உணரும் தன்மை கோல்களுக்கு அதிகம் உண்டு. ஆகவேதான் மிகக் குறைந்த ஒளியிலும் இவை வேலை செய்கின்றன. கோல்களும் கூம்புகளும் ஒன்றோடொன்று கலந்து காணப்படுகின்றன. ஆனால் விழித்திரையில் எல்லா பாகங்களிலும் அவ்வாறு இருப்பதில்லை சில இடங்களில் கோல் மட்டுமே இருக்கும். ஒரு இடத்தில் கூம்புகள் மட்டுமே உள்ளன.

தரிசியத்தில் ஒரு புள்ளியின் அளவாகக் காட்சிப் புலன் சேரும் இடமுள்ளது. இப்பகுதியிலிருந்து பார்வை நரம்பினுட் பகுதி கண்ணுக்குள் ளுறைக் கவசமாக விசாலித்து விரிவடைந்து தரிசியமாகிறது. காட்சிப்புலன் சேரும் புள்ளியில் நேராகப் பார்க்கும் ஒளியானது விழுகின்றது. இப் புள்ளியில் தெளிவான பார்வை விழுகின்றது. மேலும் இப்புள்ளியில் கூம்புகள் மட்டுமே இருக்கின்றன. இங்குள்ள கூம்புகள் யாவும் மிகவும் மெல்லியவை. சற்றும் இடைவெளியில்லாமல் மிகவும் நெருக்கமாக அமைந்திருக்கின்றன. இதனால் சிறிய பகுதிகளும் தெளிவாகத் தெரியும். இப்பகுதியின் மத்தியிலுள்ள கூம்பு ஒவ்வொன்றும் நரம்பு இழையின் மூலமாக மூளையோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ளன.

ஒவ்வொரு கோல் அல்லது கூம்பின் முன் பக்கமும் மெல்லிய இழை போன்றது. கூம்பிலுள்ள இழையானது நுனியில் கிளை விட்டிருக்கும். ஒவ்வொரு கூம்பிலிருந்தும் கோலிலிருந்தும் செய்தியை எடுத்துச் செல்லும் இரண்டாவது நரம்பு விலம் ஒன்று தொடங்குகின்றது. இரண்டாவது நரம்பு விலத்தின் மறு பக்கத்திலிருந்து மூன்றாவது நரம்பு விலம் ஒன்று செய்தியை எடுத்துச் செல்கிறது. முதலிரண்டு நரம்பு விலங்களைவிட இது சற்று நீண்டது. இது தரிசியத்திலிருந்து மூளை வரையிலும் நீண்டிருக்கும்.

இத்தகைய நரம்பு இழைகள் தரிசியத்திலிருந்து வெளிவந்து மூளைக்குச் செல்கின்றன. இவையாவும் ஒன்று சேர்ந்து பார்வை நரம்பு ஆகின்றன.

தரிசியத்தில் காட்சிப் புலன் சேருமிடத்தில் குருட்டுப் புள்ளி ஒன்று உளது. இது பலருக்குத் தெரியாது. தரிசியத்தின் எல்லாப் பகுதியிலிருந்தும் வரும் நரம்பு விலங்கள் யாவும் இப்புள்ளியில் ஒன்று கூடுவதே இதற்குக் காரணம். இப்புள்ளியில்தான் நரம்பு விலங்கள் யாவும் ஒன்று சேர்ந்து பார்வை நரம்பு ஆகின்றன. இப்புள்ளியில் கோல்களும் கூம்புகளும் இல்லை.

**வெள்ளெழுத்து.**—வயது சென்ற ஆட்களிலே சிருங்கையும் இயவமுந் தட்டையாவதினால் பொருளின் உருவம் தரிசியத்திலே சரியாய் விழாமல் அதற்கப்பாற் கடந்து செல்ல வெள்ளெழுத்துண்டாகின்றது. குவிவான கண்ணாடி போட இக்குறை நீங்கும்.

**குறுகிய பார்வை.**—சிருங்கையும் இயவமும் மட்டுக்கு மிஞ்சக் குவிவாயிருக்கில் பொருள்களிலிருந்து பாயும் ஒளிக் கதிர்களினால் ஆகும். அப்பொருள்களின் உருவம் தரிசியத்திற் படாமல் அதற்கு எட்டாமல் விழும். இவ்வித குறைவுக்குக் குறுகிய பார்வை என்பர். இப்படிப்பட்ட ஆட்களுக்கு எட்டிய பார்வை வரும்படிக்குக் குவிவான கண்ணாடிக்கு மாறான கவிவான கண்ணாடி போடவேண்டும்.

மூக்குக் கண்ணாடி செய்கிறவர்கள் விகற்பமான விம்பதூரங்களுக்கு இணங்கத் தங்கள் கடைகளிலே விற்கிறார்கள். கண்ணாடி போட வேண்டியவர்கள் இயலுமையாயின் கண் மருத்துவர்களிடம் போய் சோதித்து உள்ளபடி தெளிவாகக் காட்டும் கண்ணாடியை அணியவேண்டும். இணங்காத கண்ணாடி போடுவதிலும் ஒன்றும் போடாமலிருப்பது நயமென்றறியவும்.

**ஒளிமுனைப்பார்மை.**—சாதரணமாக கண்ணில் ஏற்படும் மற்றொரு குறை ஒளி முனைப் படாமை ஆகும். சிலருக்கு இயவம் உருவத்தில் ஒழுங்காக இல்லாமல் மாறுதலடைகிறது. இம்மாதிரியான இயவம் ஒளியை ஒரே மாதிரி குவிப்பதில்லை. ஆகவே ஒளி முனைப்படாமைக் கண் ஒரே சமயத்தில் தெளிவாகவும் மங்கலாகவும் பார்க்கின்றது. உதாரணமாக வகுப்பிலுள்ள ஒரு மாணவன் எதிரிலுள்ள சுவரில் மாட்டியிருக்கின்ற கடிகாரத்தைப் பார்க்கிறான் என்று நினைத்துக் கொள்ளவும். அம்மாணவனுக்கு ஒளி முனைப்படாமைக் கண்ணாகயிருந்தால் நிமிடமுள்ளைத் தெளிவாகப் பார்க்கமுடியும். ஆனால் மணி காட்டும் முள் மங்கலாகத் தோன்றும். கடினையின் மேல் பரப்பு ஒழுங்காக இல்லாமல் இருந்தாலும் ஒளி முனைப்படாமை ஏற்படும்.

மேலே கூறிய கிட்டப்பார்வை, தூரப்பார்வை, ஒளி முனைப்படாமை ஆகிய மூன்று குறைகளும் சாதாரணமாக ஏற்படுவன. அவை அதிகத் துன்பத்தைக் கொடுக்கும். ஆனால் கண்ணாடி அணிந்து கொண்டால் இக்குறைகள் நீங்கிவிடும்.

ஓசை (காது).

ஓசை என்னும் புலன் புலன்களுக்குள் மேன்மையுடையதாகிய ஒளி என்னும் புலனுக்கு இரண்டாவதாய் சிறப்புடையது. இதனாலே மக்கள் (சீவராசிகள்) மன ஆறுதலுக்கும் களிப்பிற்கும் அறிவு தேற்றத்திற்கும் உதவியாயிருக்கின்ற ஒலிகளைக் கேட்கிறோம். மனித தேகத்திலுள்ள அதிக சிக்குமுக்கலான உறுப்புகளுக்கெல்லாம் ஓசைக்கருவியாகிய காதும் ஒன்று.

காதைப் பற்றி தெளிவாய்க் காண்பிக்கும் பொருட்டு அங்காதி பாதிகள் அதை (1) வெளிக் காது, (2) நடுக் காது, (3) உட்காது என்று மூன்று பகுதிகளாகப் பிரித்திருக்கிறார்கள்.

இவற்றுள் வெளிக்காது தலைக்குப் புறம்பே சில புருவங்களாகி, விரிந்த முருந்தாயும், தலைக்குள்ளே நடுக்காதளவுக்கு ஏறக் குறைய ஒரு அங்குல நீளமாய்ச் சற்று வளைந்த துவாரமாயும் தோலினால் மூடப் பட்டிருக்கின்றது.

காதின் வெளித் துவாரத்தின் உள்ளிறுதியில் வெளிக்காதுக்கும் நடுக்காதுக்கும் இடையே எல்லையாயிருப்பது ஆனகம் எனப்படும். அரை திட்ட மளவுக்கு உருவொளியான சவ்வொன்று உண்டு .மனித தேகத்தி லுள்ள எலும்புகள் எவற்றிலும் பார்க்க அதிகம் நுண்ணிய நான்கு எலும்புகள் ஒரு கோவையாய் நடுக் காதிலே கிடக்கின்றன. அக்கோவை யின் ஒரு தலைப்பு ஆனகத்திலும் மற்றது உட்காதிலும் தொடுத்திருக் கின்றன. நடுக் காதிலிருந்து பின் தொண்டையின் அருகுக்கு நிகராண னசி என்னும் ஒரு சிறு குழல் போகின்றது. ஆனகம் இட்டமாய் அசையத் தக்கதாக அக் குழலின் வழியாய்க் காற்று போக்கு வரத்துமாயிருக் கிறது. ஏதாவது ஒரு காரணத்தினால் இக்குழல் அடைக்கப்படத் தக்க தாய்த் தொண்டை வீங்கினால் அப்படி வீங்கிய ஆளுக்குக்கேள்வி குறைந்துபோம்.

உட்காது மிகவுஞ் சிக்கு முக்குள்ள குடைவாயிருக்கின்றது. இது பல சுழற்சி கொண்டு நிற்பதால் அதற்குப் பிரமணம் என்று பெயர். இது எலும்பினாலாகும் மூன்று அறையுள்ளது. (1) முக்கோண வடிவமான வாரி, (2) நத்தையோடு போன்ற கூம்பு, (3) திரிதடம் என்பவைகளே. கேள்விக்கு அவசியபாய் வேண்டிய பகுதி உட்காது மட்டுந்தான். இதை வட்டுக் காதின் பிற்பகுதிகளை வெட்டித் தள்ளினாலும் கேள்வி புலன் கெடாது.

கேள்வி நரம்பு மூளையிலிருந்து கிளம்பி உட்காதுக்குள்ளுறையாகுஞ் சவ்வுக் குள்ளிருக்கும் நீரிலே படர்ந்து நீந்துகின்றது.

ஓசை அல்லது கேள்விப் பொருள்கள் அதிர்ந்தசைவதினாலே பிறக்கும் ஒலியை அறியப் பண்ணும் புலனேயாம். வெளிக்காது தன்னிடத்திலே தாவும் ஒலிகளைக் கூட்டி அதிலிருந்து நடுக்காதுக்குள்ளே அவைகளைச் செலுத்தும் முயற்சியுடையது. ஆனகமானது வெளிக்காதால் வரும் ஒலி களால் அதிர்ந்து தன்னிலிருந்து உட்காதோடே தொடுத்திக்கும் எலும்புக் கோவை வழியாய் அவ்வதிர்ச்சியை உட்காதிலே சேர்ந்துவிடும், அன்றியும்

அது அளவுக்கு மிஞ்சிய ஒலி கேள்வி நரம்பிலே தாவி அதைச் சேதப் படுத்தாதபடிக்கு அவ்வொலியைச் சரிக்கட்டி விடுகிறது. இப்படி வந்த ஒலியின் அதிர்ச்சி கேள்வி நரம்பின் கூந்தல்களிலே பட்டுக்கேள்வி நரம்பின் வழியாய் மூளைக்குச் செல்வதினாலே கேள்வியுண்டாகும்.

உட்காது நீள் வட்ட சன்னலில் தொடங்குகின்றது. இந்தச் சன்னல் மூடிக் கொண்டிருக்கிற சவ்வை எடுத்துவிட்டால் எலும்பின் மீது துளையிட்டதைப் போன்ற துளை ஒன்றைக் காணலாம். இது நேரான துளையல்ல. இது சுருண்டு சுருண்டு இரண்டரைச் சுற்றுக்களைக் கொண்டது. இத் துளையை மொத்தமாகப் பார்த்தால் நத்தை யினுடைய ஓட்டைப்போன்று தோன்றும். இதனை கம்பு எனப்பட் டுள்ளது. இந்தக் கம்புச் சுருளின் உட்பாகத்தில் இரண்டு சவ்வுகள் உள்ளன. இதில் நீர் நிரம்பியுள்ளது. இக்குழாயில் நீளவாக்கில் அமைந்துள்ள இரண்டு சவ்வுகள் குழாயை மூன்று அறைகளாகப் பிரிக்கின்றன. நீள் வட்ட சன்னலை அடைகின்ற அதிர்வுகள் நத்தைச் சுருள்கள் குழாயிலுள்ள நீரில் அலைகளாகச் செல்கின்றன. கம்பின் மூன்றறைகளில் மத்திய அறையில் தான் கேள்விக்கான உறுப்பு இருக் கின்றது. இம்மத்திய அறையில் ஒரு மேடை போன்ற அமைப்பு இருப் பதைக் காணலாம். மேடை என்பது இரண்டு சவ்வுகளால் ஒன்றான அடிதளச் சவ்வாகும். அடிதளச் சவ்விலிருந்து ஆயிரக்கணக்கான சிகை விலங்கள் உண்டாகின்றன. இவை யாவும் நரம்பு விலங்கள். இவை ஒலி உணர்ச்சியை எற்கும் நரம்பு விலங்கள். இவற்றின் மேற் புறத்தில் அசைவுச் சவ்வு ஒன்றுள்ளது.

நத்தைச் சுருள் அறையிலுள்ள நீரில் தோன்றும் ஒலி அலை களினால் அசைவுச் சவ்வும் அடிதளச் சவ்வும் சற்று அசைகின்றன. அசைவினால் சிகை விலங்கள் மின்சார மாற்றம் ஒன்று ஏற்பட்டு ஒரு நரம்பு உணர்ச்சியானது தோன்றுகிறது. கேள்வி நரம்பின் வழியாக மூளைக்குச் செல்கின்றது. இதனை ஆராய்ந்து கேட்டால் உணர்ச்சி யாக்குகின்றது.

### தச நாடி

சித்தர் நூற்களில் கூறப்பட்டுள்ள தச நாடி (பத்துநாடிகள்) பெரும் பான்மையாக, சிர நரம்புகளாகவும் உணர்வு நரம்புகளாகவும் உள்ளன. அவை:—

| | | |
|---|---|---|
| 1. இடைகலை இயக்கம் | — | இடசாயு கோபுரப் பாதை இழை இயக்கம். |
| 2. பிங்கலை இயக்கம் | — | வலசாயு கோபுரப் பாதை இழை இயக்கம். |
| 3. சுழுமுனை | — | கசேருக் கொடி இயக்கம் |
| 4. சிகுவை | — | விழுங்கல் இயக்கம் |
| 5. புருடன்<br>6. காந்தாரி | — | வல இடப் பார்வை நரம்பின் இயக்கம் |

| | | |
|---|---|---|
| 7. அத்தி<br>8. அலம்புடை | — | வல இடக் கேள்வி நரம்புகளின் இயக்கம். |
| 9. சங்கினி | — | குறி நரம்பின் இயக்கம் |
| 10. குகு | — | மல வாசல்களின் நரம்புகளின் இயக்கம். |

தச நாடிகளில் பெரும்பாலும் சிரசில் இருப்பிடமும் சிறுபான்மை கசருக் கொடியில் இருப்பிடமாக இருந்துகொண்டு இயக்க நரம்புகளாகவும் உணர்வு நரம்புகளாகவும் இயங்கித் தொழில் புரிகின்றன.

அத்தியாயம்

20

## ஆனந்த மயக்கோசம்

### அறிவு

அறிவின் தோற்றம், இயல்பு, உண்மை, வரம்புகள் முதலியவற்றைக் குறித்து எழுகின்ற பிரச்சனைகளை அறிவளவை இயல் ஆராய்கின்றது. அறிவை ஆராயப்படுகிறபோது அறிவு, விழைவு அல்லது உணர்ச்சி, செயல் என்ற அதன் மூன்று முக்கிய அம்சங்களும் விளக்கம் பெறுகின்றன. புலக்காட்சி, நினைவாற்றல், கற்பனை, கருத்தமைவு, சிந்தனை ஆகியவற்றை உள்ளத்தியலார் அறிவு நிலையின் பல்வேறு முறைகளாகக் கருதி ஆராய்கின்றனர். இவை யாவும் அறிவின் பாற்படுகின்ற காரணத்தினால் அறிவானது அளவையியலால் ஆராய்வதற்கு உரியது எனினும் அத்துறை சிந்தனையை மட்டுமே சிறப்பாகக் கருதுகிறது. அறிவு என்பது உள்ளம் (மனம்), விழைவு, செயல் ஆகிய முக்கூறுகளால் ஆன கூட்டு நிலையாகும். மனம் இம்மூன்றன் இணைப்பேயெனினும், ஒவ்வொன்றின் நுட்பங்களையும் நன்கு அறிவதற்காக அம்மூன்றையும் தனித் தனியே ஆராயலாம். உள்ளத்தின் தொழிற்பாடுகளுள் ஒன்றாகிய அறிவு நிலையை மட்டும் அறிவளவையியல் அறிய முற்படுகிறது.

உள்ளத்தை உள்ளவாறு, நிகழ்ச்சிகளை நிகழ்கின்றவாறு அறிகின்ற முறையை அறிவியல் மேற்கொள்கிறது. ஆனால் ஆராயப்பெறும் நிகழ்ச்சிகள் எவ்வாறு எழுகின்றன, வளர்கின்றன என்று வினவாது அவை உண்மைக்குரியனவாக விளங்குதல் வேண்டுமெனின் தத்துவத் துறையின் முறையாகும்.

உள்ளத்தியல் உண்மைகளை அறிந்தோர் உள்ளத்தை அல்லது மனத்தை உணர்வின் அல்லது அறிவின் தொடர்ச்சியாகக் கருதுகின்றனர். இவ்வுணர்வின் தொடர்ச்சியில் பல்வேறு உருவங்கள், உருவங்களின் தொகுப்புகள், எண்ணங்கள் முதலியவற்றைக் காண்கின்றனர். எண்ணங்களும் மற்றவையும் ஒன்றையொன்று இயக்கித் தொழிற்படவும் காண்பர். இவ்வாறு தொழிற்படுகின்ற நிலையில் இவை கருத்தமைவுகளாக இயைகின்றன. இயைபின் காரணமாக "ஆன்ம உணர்வு" தலைப்படுகின்றது. இவ்வுணர்வின் தொடர்ச்சியில் சில கூறுகள் பொதிந்து விளங்குகின்றன. இவை பொதிந்து விளங்குவனவாகக் கொள்ளுதல் வேண்டுவதாகின்றது. இவ்வாறு தொடர்ந்து பல கூறுகளுடன் விளங்குவது தனி ஒருவனிடத்தில் விளங்கும் மனமாகும்.

இம்மனம் தனியோர் உடலோடு இயைந்தே விளங்கும். ஆதலால் மனம் என்பது தனி நிலையில் அறிவு நிலைகளை மட்டும் உடையதாகக் கருதுவதற்கு இல்லை. உடலோடு தொடர்புடையது. ஆதலால் உடலில் தோன்றும் உணர்ச்சிகளும் செயல் நிலைகளும் சேர்ந்தே மனம் இயங்குகின்றது. இவ்வாறு ஒவ்வொருவனது மனத்தினிடையே தோன்றும் எண்ணங்கள் முதலியன அவனது உள்ளத்தில் சிறப்பாக அமைகின்றன.

எனினும் அவன் மனத்தை மட்டும் விளக்காது புற உலகில் உள்ளவற்றைப் பற்றியும் விளக்குகின்றன. எண்ணங்கள் தம் தோற்றத்தைப் பொறுத்த அளவில் உள்ளத்தைச் சார்ந்ததெனினும் புற உலகை விளக்குகின்றன. வெளியுலகம் தனி ஒருவனுக்கு மட்டும் உரியதன்று. எல்லோருக்கும் பொதுவான உலகையும் மனத்திடையே விளங்கும் எண்ணத்தையும் விளக்குவதாகும். தனியொருவனிடத்தில் உடலோடு ஒன்றிய நிலையில் விளங்கும் உணர்விற்கும் அவனால் அறியப்படும், விரும்பப்படும், உலகிற்கும் என்ன தொடர்பு உள்ளது? இந்நிலையில் தான் உள்ளத்தியலில் உண்மையாக விளங்குகின்ற ஒன்று, அளவை இயலில் கருதுவதற்கு உரியதாக மாறுகிறது. உள்ளத்தியல் ஒருவனது மனதில் விளங்கும் எண்ணங்கள், உணர்ச்சிகள் அவ்வியற்றின் தொடர்ச்சியை அறிகிறது; உணர்கிறது. ஆனால் அளவையியல் ஒருவனது மனம் அறியப்படுகின்ற உலகை எவ்வாறு உருவாக்குகிறது என்பதைக் கருதுகிறது. ஒருவனது உள்ளத்தில விளங்குகின்ற எண்ணங்களும் உணர்ச்சிகளும் எவ்வாறு பொருள் உணர்ச்சிகளும் எவ்வாறு பொருள் களும் மனிதர்களும் நிறைந்த உலகை உடையதாகின்றது? இப்பொருள் களும் மனிதர்களும் இவன் உள்ளத்தில் எவ்வாறு விளங்குகின்றனர்?

புற உலகு நம்மால் எண்ணங்களாகவும் அறியப்பெறுகிறது. மனிதன் அறிவது நேராகச் சூரியன் பூமி ஆகியவற்றை. ஆனால் அவனுக்கு நேராகத் தொடர்புள்ளவை சூரியனைக் காணும் கண்ணும் மண்ணைத் தொட்டு அறியும் கையுமேயாகும். இவ்வுறுப்புகளின் செயிலகப் பெறுகின்ற எண்ணங்களே—கருத்துக்களே சூரியனைப் பற்றியும், பூமியைப் பற்றியும் அவன் அறிவதற்குத் துணை செய்வனவாகும். பூமி சூரியனைச் சுற்றி வருகின்றது என்ற உண்மையை நாம் அறியும்போது நமது மனநிலையை விளக்கவில்லை. பூமி என்ற கருத்து சூரியன் என்ற கருத்தைச் சுற்றுகிறது என்பதன்று. பூமி சூரியன் ஆகியவைகள் புற உலகில் நமக்கு அயலாக விளங்குவன. அவற்றுள் பூமி சூரியனைச் சுற்றுகிறது என்பதே. இவற்றை நாம் அறிவதெல்லாம் கருத்துக் களாலேயே என்று கொள்ளவேண்டும். ஆனால் கருத்துக்களுக்கு வெளி யுலகை விவக்கும் திறமை உண்டு என்பதை மறக்கின்ற அனைத்தும் இவ்வுலகு முழுமையும் அறிவான் ஒருவனுக்கு அறிபொருளாக விளங்கு கிறது. காண்பான் ஒருவனுக்குக் காட்சியாக விளங்குகிறது. கருங்கச் சொன்னால் கருத்தாக விளங்குகிறது. ஆகவே அறிவு எவ்வாறு அறி கிறது? அறிவின் அகத்தே விளங்குவனவாகிய எண்ணங்களும் பிறவும் புறத்து விளங்குவனவாகிய பொருள்களையும் மற்றவற்றையும் அறிய நேர்தல் எவ்வாறு? இவ்வாறு அறியும் அறிவு எந்த அளவிற்கு உண்மை அறிவாகிறது? உண்மை அறிவு எது? தவறுடைய அறிவு எது? என்று பகுத்தறிவதற்கு அளவு கோல் யாது? இத்தகைய அடிப்படைப் பிரச்சினைகளைத் தெளிவு படுத்தி இவற்றிற்குரிய விடை களைக் காணுதலே அறிவு அளவை இயலின் முக்கிய நோக்கமாம்.

சிந்தனையை ஒரு நிகழ்ச்சியாகக் கருதி அந்நிகழ்விற்கு உரிய நிலைகள் யாவை என உள்ளத்தியல் அறிகிறது. சிந்தனையின் வளர்ச்சியைச் சிறு குழவிப்பருவம் தொடங்கி நல்ல மூளை வளர்ச்சி நிரம்புகின்ற பருவம் வரை தொடர்ந்து வெவ்வேறு படி நிலைகளை எல்லாம் முறையாக உள்ளத்தியல் ஆராய்கிறது. பல்வகைச் சிந்தனைகளையும் கருதி 'சிந்தனை' என்னும் நிகழ்ச்சி குறித்து, பொதுவான உண்மைகள் யாவை என உள்ளத்தியல் உணர்த்துகிறது. சிந்தனைகளை அறியும்போது முறையான

சிந்தனை, முறைபிறழ்ந்த சிந்தனை அல்லது மன நலம் குன்றியோரது சிந்தனை, உட்பட்ட அனைத்துவகைச் சிந்தனைகளையும் உள்ளத்தியல் ஆராய்கிறது. சிந்தனையின் தோற்றம், வளர்ச்சி, பொது உண்மைகள் ஆகிய வற்றைக் குறித்து அறிவு அளவையியல் அறிவதில்லை. சிந்தனையின் விளைவான கருத்துக்கள், எண்ணங்கள், ஒரு மொழியின் வாயிலாக வெளிப்படுத்தப்பெற்ற பின்னர் அவ்வெண்ணங்கள் அளவை இயல் விதித்துள்ள சட்டங்கட்கு முரணாகாமல் விளங்குகின்றனவா எனக் காண் கின்றனர். சிந்தனையின் விளைவாகத் தோன்றும் தீர்ப்புகளது உண்மையே, அறிவாராய்ச்சி இயலின் முக்கிய நோக்கமாகும்.

அறிவு அமையும் வகை அல்லது அறிவின் வாயில்கள், அறிவின் ஆற்றல்கள், வரம்புகள் போன்றவற்றை ஆராய்வதே அறிவு அளவை இயலாகும்,

அறிவு அளவை இயலுள் வழக்கிலிருக்கும் சில முக்கிய கருத்து நிலைகள்:—

(1) **ஆட்சிக் கொள்கை**—ஆட்சி தகுதி புலர் ஏற்பு, கால நீடிப்பு ஆகியவற்றை அளவு கோல்களாகக் கொண்டு நாம் கருத்தை ஏற்க இயலாது. இவ்வளவு கோல்கள் பிழையுடையனவாதலை நாம் அவ்வப் பொழுது வாழ்க்கையிலே காண்கிறோம், அறிவியல், கலை, அரசியல், சமயம ஆகிய துறைகளுள்ளும் பிறவற்றிலும் முரண்படும் கருத்துக்கள் விளங்குகின்றன. இவற்றுள் தக்கனவற்றை, ஏற்புடையனவற்றைத் தேர் வதற்கு உரிய அளவுகோலாக ஆதிக்கம் விளங்காது. சில சமயங்களில் சில கருத்துக்களை ஏற்கும்போது ஆதிக்கத்தைக் கருதியே ஏற்கிறோம். அவற்றின் உண்மையை நம்புகிறோம். இவ்வாறு ஏற்றல், நம்புதல் துணிகரமேயாகும். உண்மை நாட்டத்திற்கு ஆதிக்கம் துணை செய்யாது. ஆதிக்கத்தின் அடிப்படையில் அறிவனவற்றை அறிவு, அனுபவம் ஆகிய வற்றின் துணை கொண்டு தெளிதலே உண்மை அறிவிற்கு வேண்டு வதாகும்.

(2) **ஐயக் கொள்கை.**—ஐயம் திரிபு இன்றித் திட்டமாக ஏற்கத்தக்க அறிவு என்பது ஏதும் இல்லை என்று கூறுகின்றனர். பல்வேறு அறிவுத் துறைகளில் வல்லுநர் நுணுகிய ஆராய்ச்சியின் பயனாகப் பல உண்மை களைத் தேறுகின்றனர். இவ்வுண்மைகளுள் சில ஒன்றோடொன்று ஒவ்வாது முரணுகின்றன. இவ்வாறு முரணுதல் துறைதோறும் காணலாம். பல் வேறு அறிஞரிடையே கருத்து வேறுபாடு நில்வுவது வெளிப்படை. இவ் வகையில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடும் கொள்கைகளிடையே முரண்பாடும் நிலவக் காணும்போது பொதுமக்கள் "அறிவே நாம் அடைவற்கு உரியது அன்று" என்ற முடிவுக்கு வந்து விடுகின்றனர்.

கருத்து வேறுபாடுகள் அறிவு வளர்ச்சிக்கு வேண்டுவன. கருத்து வேறுபாடு இல்லாத இடத்து அறிவு வளர்ச்சி இல்லை, என்று துணிந்து கூறலாம். அறிவியலின் வரலாற்றிலே உண்மைகள் மறுக்கப் பெறு தலையும் நாம் காண்கிறோம். இதனால் நாம் அறியும் உண்மை யாதெனில் உண்மைகள் தோன்றுகின்ற காலத்திற்கு ஏற்பச் சில ஆதாரங்களைக் கொண்டு விளங்கும். பின்னே வேறு ஆதாரங்கள் கிடைக்கும்போது முன்னே கொள்ளப்பெற்ற உண்மைகள் மறுக்கப் பெறுகின்றன.

இவ்வாறு நிகழ்வதை நாம் மறந்து மனிதன் உறுதியான மறுக்க முடி யாத உண்மைகளைக் கண்டறியவில்லை என்று கூறுவது பொருந்தாது. உண்மை நாட்டமே அறிவியலறிஞனின் குறிக்கோளாகும்.

சில பேருண்மைகளைக் கருதுகின்றபோது அறிவு தனத ஆற்றல் இன்மையை உணர்கிறது. அறிவு தொழிற்படும்பொழுது முரண் நிலை களும் மாறுபாடுகளும் எதிர்ப்படுவதை அறியலாம், இவ்வாறு தோன்று கின்ற இடர்ப்பாடுகளைக் கொண்டு அறிவு நமக்கு உண்மைகளைத் தரவல்லது எனத் துணிதல் பொருத்தமன்று.

உண்மை உலகைப்பற்றிய மெய்யறிவு நமக்குக்கிட்டாது. கிட்டினாலும் அது உண்மை என்று நிக்சயிக்க இயலாது. ஏனெனில் நாம் கேட்கும் ஒலிகள், காணும் நிறங்கள், உணரும் வடிவங்கள், வன்மை, மென்மை கள், நுகரும் மணங்கள் கணுக்கும் சுவைகள் ஆகிய புலனுகர்ச்சிகள் யாவும் நம்மிடத்து விளையும் மாற்றங்களேயாகும். இம் மாற்றங்கள் புறப்பொருள்களின் தொடர்பினால் விளைவனவாகும். இம் மாற்றங்கள் புற உலகில் நிகழ்வன அல்ல. முள் தைக்கின்றது, நோய் செய்கின்றது. நோய் உணர்வு நம்மிடத்து நிகழ்கின்றதேயன்றி முள்ளிடத்து அமைவதன்று. இதைப்போல புலன் அனுபவங்கள் யாவும் நம்மிடத்து விளைவன ஆதலால் புற உலகில் நிகழ்வனவற்றை நாம் உள்ளவாறு அறிகிறோம் என்று கூற இடமில்லை. புற உலகின் நிகழ்ச்சிகளை பொருள்களை நாம் அறியும்போது அறிகின்ற நிகழ்ச்சி காரணமாக, நமது காட்சிகள் பலவும் திரிபுறுகின்றன. மாற்றங்கொள்கின்றன. ஆதலால் புற உலகு நமது காட்சியில் உள்ளவாறு பிரதிபலிப்பதில்லை.

நமது இந்திரியங்கள் அறிகருவகள், புலன்கள் எல்லைக்குட்பட்ட தொழில் புரிகின்றன. மிக நுண்ணிய வடிவங்களைக் கருவகள் உதவியின்றிக் காண முடியாது. உரு பெருக்கிக்கொண்டு சிறிய நுண்ணிய உயிர்களை, பொருள்களைக் காண்கிறோம். ஆகவே கருவி களும் கண் முதலிய பொறிகளும் ஒன்றோடொன்று ஒவ்வும் வகையில் திறம்படத் தொழிற்பட்டாலன்றி அறிவுத் தகுதி பெற்ற, ஏற்புடைய அறிவாக அமைதல் இயலாது.

புலக்காட்சி, சிந்தனை போன்றவைகளைச் சிறநத அறிவை வழங்குவனவாகக் கருதுவதற்கு இல்லை. இக்காட்சிகளினால் அமையும் அறிவு பிழைபடும் அறிவாகவும், முரணும் அறிவாகவும்: மாற்றங்கொள் அறிவாகவும் விளங்குவதால் இவ்வாயில்களுக்கு அயலான பிறிதொரு வாயில் உண்டு எனக் கொள்வோர் சிலர். இவ்வாயில் அகக் காட்சி, அகவுணர்வு என்று பெயர் பெறுகிறது. மறைபொருள் அறிவு எனவும் அனுபூதி அறிவு எனவும் வழங்குவர். நேர்க்காட்சியிலே புலனாகும் உண்மைகள் உள என்பர். புலன்களின் துணையின்றியே உண்மைகளைத் தேர்தல் கூடும் என்பர். அகவுணர்வில் அமைவன, புற உலகிற்குப் பொருந்துவன என்றும் கூறுவர். ஆனால், அகவுணர்வில் தெளிவன வெல்லாம் பெரும்பாலும் உலகு கடந்த உண்மைகள் ஆகும். அகக் காட்சியில் இறையோடு அல்லது உலகொடு ஒருமை உணர்வு நேர்கிறது என்பர். சமயததுறையில் பெரியோர் சிலர் இத்தகைய அகக் காட்சி ஒருமை உணர்வு பெற்றுள்ளமையை அவர்தம் வாக்கால்

அறிகின்றோம். ஆனால் இத்தகைய அகவுணர்வு எல்லோருக்கும் நிகழக்கூடியதன்று.

**(3) உள்ளுணர்வுக் கொள்கை.**—உள் உணர்வு அனைத்து வகை அறிவிலும் மெய்ப்பொருள் இயலார், "யோகக் காட்சி" என்பர். சிந்தனையின் வளர்ச்சியிலே கருத்தமைவுகள் தோன்றுகின்றன. கருத்தமைவுகள் இன்றி அறிவு வளர்ச்சி தோன்றாது. துறைதோறும் கருத்தமைவுகள் தோன்றுவதைக் காண்கிறோம். இக் கருத்தமைவுகள் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதவை. கருத்தியல்பான எண்ணங்கள் அறிவியல் வளர்ச்சிக்குத் துணை செய்வதைக் கவனித்துச் சிறப்பிடம் தரப்பட்டது.

## அறிவின் வாயில்கள்

பிரமாணம் என்பது அளத்தற்குரிய கருவி என்றும் அளவை என்றும் பொருள்படும். அறிதற்குப் பிரமாணம் என்ற சொல்லின் பொருள் அறிவு துணை செய்யும். நாம் பெறுகின்ற அறிவு பிழையா, சரியா என அளந்து அறிவது பிரமாணத்தின் நோக்கமாகும் அனுபவத்தில் அமைவனவற்றைப் பிரமாணங்களின் மூலம் ஆராய்ந்து அறிதலாகும். ஆதலால், பிரமாணம் அறிவு பெறுதற்கு வாயிலாக விளங்குவது என்ற வரையறை அமைகின்றது. அதாவது அறிவான் ஒரு பொருளை அறிதற்குப் பயன்படுத்துகின்ற சாதனம் பிரமாணமாகும். முக்கியமான அவைகள் 1 வாயிற்காட்சி, 2 கருதல், 3 உரைகல் என்பர். இதனை அளவை நூலில் தெளிவாகக் காணலாம்.

## மரணம்

"மரணம்" என்பதை இயற்கைக்கு இறுதிக் கடன் என்கிறார்கள். மனிதன் பிறந்து மழலைப்பருவம் முதற்கொண்டு முதுமைப் பருவம் அடையும் வரையில் தன் தேகத்தைத் தொண்ணூற்றாறு தத்துவங்களால் பஞ்சபூதக்கூட்டுறவினால் போடணித்து வளர்கிறான். இறுதியில் இயற்கையின் மடியில் சென்றடைகிறான். எப் பஞ்சபூதத் தத்துவங்களால் தோற்றமுற்றானோ அப் பஞ்ச பூதங்களாகவே பிரிந்து செல்கிறான். எவ்வாறு இயற்கையினால் வளர்ந்தானோ அவ்வாறே இயற்கைக்கு ஈடாக, தன் தேகத்தைக் கடனாக திருப்பிக் கொடுக்கையில் இயற்கையாகவே மாறுகிறான். இந் நிகழ்ச்சிதான் மரணமாகும்.

இருள் தருமா ஞாலத்தில் நடக்கும் பிறப்பும் இறப்புமான மாறுதல்கள் சர்வ சாதாரணமாகிவிட்டது. அன்றாட நிகழ்ச்சிகளில் விழிப்பும் தூக்கமும் எவ்வாறோ அவ்வாறே சீவராசிகளில் பிறப்பும் இறப்புமாகின்றன. ஆனால் மனித சமுதாயத்தில் பிறப்பை இன்பமாகவும் மரணத்தைத் துன்பமாகவும் கருதுகிறான். இன்பத்தை எந்த அளவிலேனும் அனுபவிக்கிறான். ஆனால் அதிலும் மரணம் என்னும் துன்பத்தை அறவே வெறுக்கிறான். எனினும் மரணம் என்ற துன்பம் தவிர்க்க முடியாத நிலையாகிவிட்டது. இவ்வித பிறப்பும் இறப்பும் யுகயுகமாக நடக்கிறது.

மரணமானது காலச் சக்கரத்தின் கிரியையாகும். உலகிலுள்ள சராசரங்கள் எல்லாவற்றினுள்ளும் காலம் என்ற சக்தி இம்மிகளுள்ளது. அது அனாதியாகவே தோற்றமும் ஒடுக்கமும் கொண்ட நிலைகளான சக்கரத்தைக்கொண்டுள்ளது. தொடர்புற்ற இரு காரியங்களைச் சதா புரிந்துகொண்டே சுற்றும். தோற்றமும் ஒடுக்கமும் மாறிமாறி நடந்து கொண்டேயிருக்கும். எனவே உடலணுக்கள்தோறும் காலச்சக்கரம் செயல் புரிந்துகொண்டிருக்கிறது. ஒடுக்க நேரம் வந்ததும் உடலணுக் களின் உயித் தத்துவம் உறக்க அவத்தையை அடைகின்றன. அதாவது அறிவற்ற பொருளாகின்றன. விழுப்பிலிருந்து கனவுக்குச் சென்று உறக்கத்தை நிலையாக அடையச் செய்யும் நிகழ்ச்சியே 'மரணம்" என்பதாம், உடல் அணுக்கள் தோறும் உள்ள "அறிவு" அல்லது "உயிர்** உறக்க அவத்தையை அடைந்ததும் உடலை "பிணம்" என்கிறோம். சாதாரண மனிதர்களின் உடலைப் பிணமாகக் கிடததப் படுகின்றது. ஆனால் சித்தர்கள் உடலைப் பிணமாகக் கிடததாமல மேலும் "துரியம்" துரியாதீதம் என்ற நிலைக்குக் கொண்டு சென்று உடலை அருவமாக மாற்றுகிறார்கள். அதனால் சித்தர்களின் உடல் பிணமாகக் கிடப்பதில்லை. அருவமாகவே மாறிவிடுகிறார்கள். அதற்கு யோகப் பயிற்சி அவசியம் தேவை.

**மரண நாடி, குறி குணங்கள்.—**

(1) "வாட்டிய வாதமது மழுங்கி நின்றால்
மாறிபடா மரணமென மதிக்கலாமே""

(2) வாதந்தா னற்று நிற்கில் மரணமும் வந்துசேரும்""
இவைகள் வாத நாடியின் வீழ்ச்சியைக் குறிக்கும்.

(3) குறைபடா பித்தமென்றுங் குறைந்துமே நிற்குமாகில்
உணவிடும் பிராணனென்றே உண்மைசொல் வாகடத்தில்
வேமப்பா பித்தம்போனால் வெம்பிடு முயிர்தான் காணும்
பித்தமடங்கினிற் பேசாமல் போய்விடு

இவை, பித்த நாடியின் வீழ்ச்சியைக் குறிக்கும்.

(4) சேத்துமத்திற் சேத்துமமாகில் திமிர்தமா யறியுஞ் சொன்னோம்
ஆத்தும நல்லதல்ல அழிவது மெய் கண்டாயே
கூற்றன் வந்திடுவதாகும் குறுவழி வட்டங்கொள்ளும்
சாத்திர மறிந்து சொன்னோம் யாத்திரை நாடிதானே.

(5) அருவிய சிலேத்பந்தானு மடர்ந்து தானிருக்குமாகில்
வருமிக் குணங்களெல்லாம் மரணமென் றுரைக்கலாமே.

(6) சிலேத்தும மிகுந்து தின்னால் செப்பிடு மரணந் திண்ணம
இவை, கப நாடியின் வீழ்ச்சியைக் குறிக்கும்,

(7) "தேடிப்பார் மூவிரலுஞ் சமனா யோடில்
தீராது யிவை சன்னி வாதந்தானே"
"அறிந்திடு மூன்று மடங்கியே முட்டிலும்
எரிந்துமிக ஓடினு மெய்தாத சாவுதான்
பறிந்து நன்றாகப் பற்றற்றுக் கீழ்நோக்கில்
வறிந்தே உயிர் சென்று மறலிகைப் புகுமே."

(8) அரணைவால் துடிபோலாடி லாங்கவன் பிழைப்பதில்லை
பரவுதேட் கொடுக்குபோலும் பதைத்திடிற் சாவு திண்ணம்
கரையெறும் பதுபோலோடிற் கண்டிடாய் திங்கள் மூன்றில்
வரையணி முலை நம்மாதே மரணமென் றறிந்துகொள்ளே.

(9) நிருக்கவே நின்று நின்று நேரோடாமல்
நிலைதப்பி முன்பாய்ச்சல் பின்பாய்ச்சலாகில்
செருக்கவே செடந்தானு மெட்டா நாளில்
சிவபுரத்துக் செய்திவிடுந் திண்ணந்தானே.

(10) மதிக்கலாம் மூவரும் முன்னிட் டுரைத்தால்
வந்த நோய் தீர்ந்துவிடும் மரணமில்லை
பதிக்கலாம் மூவருமே பின்னிட் டுரைத்தால்
பழியாகிப் பிணிமீறும் பதைத்துக்கொள்ளும்.

(11) தாவொத்து மேனோக்கின் சாகானொரு நாளும்
பாவொத்துக் கீழ் நோக்கிற் பதையாமற் சாவானே.

(12) பித்தமே வாதத்தானும் பிலத்துடன் சடலந்தன்னில்
மத்திய வையந்தானும் வலப்புற மோடுமாகில்
ஒத்தகண் நீலமாகி வுடல்தனில் வியர்வையாகும்
சத்தியமாகச் சொன்னோம் சடுதியில் மரணந்தானே.

மேற்கண்ட நாடிக்குறி குணங்கள் காட்டினால் மரணம் ஏற்படும் என்று திட்டவட்டமாகச் சித்தர் நூற்களில் கூறப்பட்டுள்ளன. மேலும்;

**கண்** குழிவிழுதல், பார்வைப்பஞ்சடைதல், மூக்கு மேடிட்டுகாணல்:— நாக்கு உள்ளிழுத்தல், தலை சில்லிடல், உள்ளங்கை, கால்கள் சில்லிடல், குறி தளர்ந்து துவண்டு சுருக்கிக் காணல், படுக்கையில் புரளல், மூச்சுத் திணரல், கழுத்துத் திருகுதல், மிரள மிரளப் பார்த்தல், குறியின் மேல் கையை அடிக்கடி கொண்டுபோதல், மலம், சிறுநீர் தன்னை அறியாமலே கழிதல் போன்ற குறிகுணங்கள் சிற்சிலவைகளாகவோ பலவேனும் காணப்பட்டால் மரண அவத்தையிலுள்ளான் என்று அறியவும்.

## காய கற்பம்

மரணத்தைத் தவிர்க்க முடியாதா? அல்லது மரணத்தை அறவே ஒழித்துவிட முடியாதா? என்ற கேள்விகள் சித்தர்களின் மனதில் வரலாற்றுக் காலங்களுக்கு முன்பே தோன்றவே அவற்றை ஆராய்ந்தார்கள். இக்கேள்விகளுக்கெல்லாம் சித்தன் ஒருவன்தான் பதில் அளித்தான்.

சித்தன் ஆகமத்தைக் கைவரப் பெற்றவன். மரணத்தை மனிதன் தள்ளி வைக்கலாம். மரணத்தை அறவே மனிதனுக்கு இல்லை என்று ஏற்படுத்தலாம். ஆனால், சர்வ சாதாரண மனிதனால் செய்யக்கூடியதல்ல. சித்தன் ஒருவனால்தான் மரணத்தைத் தள்ளிவைக்க முடியும். மரணத்தைத் தவிர்த்துத் தன் உடலையே உயிராக அருவுருவாக மாற்றிச் சிவமாவான். மனிதன் சித்தனாக வேண்டுமானால் சுலபமான காரியமல்ல. அறிவர்களாகிய சித்தர்கள் அநேக முறையைக் கொண்டிருந்தனர். அம்முறைகளை யாவன் ஒருவன் ஒழுக்கம் தவறாமல் அவைகளை முழு மனதுடன் தளராமல் அனுசரிக்கிறானோ அவனுடைய சிறப்பான முயற்சியாலும் குருவின் அருளாலும் சித்தனாவான். இவன் மரணத்தை நிராகரித்த மரபெரும் சித்தனாவான். அதாவது சிவமாவான். காயகற்ப முறைகளின் விரிவைச் சித்த மருத்துவத்தின் இறுதி பாகத்தில் காண்க.

## இந்நூல் யாத்தற்குத் துணை நின்ற நூற்கள்.

1. தொல்காப்பியம்
2. திருக்குறள்
3. புறநானூறு
4. பரிபாடல்
5. மணிமேகலை
6. சூளாமணி
7. நீலகேசி
8. தேவாரம்
9. திருவாசகம்
10. திருமந்திரம்
11. கம்பராமாயணம்
12. சிவஞானபோதம்
13. சிவஞான சித்தியார்.
14. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்
15. மேருமாந்தார புராணம்
16. காஞ்சிபுராணம்
17. கந்தபுராணச் சுருக்கம்
18. பண்டார மும்மணிக்கோவை
19. சிவவாக்கியார் பாடல்கள்
20. தாயுமானவர் பாடல்கள்
21. பாரதியார் பாடல்கள்
22. யூகிமுனி வைத்திய சிந்தாமணி
23. பதார்த்தகுண சிந்தாமணி
24. அறிவியல் ஆராய்ச்சி
25. அகத்தியர் பன்னீராயிரம்
26. போகர் ஏழாயிரம்
27. அங்காதிபாத சுகரண வாத உற்பாலன நூல்
28. பதினெண் சித்தர் நாடி நூல்
29. பரிபூரண நாடி
30. இரத்தினச் சுருக்கம்

# பிழைத்திருத்தம்.

| பக்கம். (1) | வரி. (2) | பிழை (3) | திருத்தம். (4) |
|---|---|---|---|
| 15 | 4 | தங்ருவ து | தங்குவது |
| 19 | 33 | நன்று | நின்று |
| 20 | 6 | அறியியல் | அறியில் |
| 36 | 37 | விளைவுடன் | விளைவுகள் |
| 55 | 3 | முடைத்த னினது | முடைத்தாயினது |
| 69 | 27 | பொருட் பயாம் | பொருட்டயாம் |
| 83 | 3 | திரணங்கள் | கிரணங்கள் |
| 85 | 18 | வக்கிறபோது | வருகிறபோது |
| 99 | 41 | வெகிற ர்கள் | வருகிறார்கள் |
| 109 | 29 | காரணம் | கரணம் |
| 113 | 22 | ஆகமவாடிகள் | ஆகமவாதிகள் |
| 114 | 10 | சொல்லெட்ணாததுமாம். | சொல்லொணாததுமாம். |
| 117 | 1 | சிங்கார | சங்கரா |
| 123 | 8 | வளையகையும் | வளையத்தையும் |
| 132 | 16 | வீலகச் | வீலசச் |
| 134 | 21 | தொங்கி | தொக்கி |
| 146 | 29 | பனனி ங்குலம் | பன்னிரண்டங்குலம் |
| 151 | 11 | ஐந்தாரும் | ஐந்தாகும் |
| 158 | 11 | சந்தத்தின் | சாந்தத்தின் |
| 158 | 18 | வாசப்பழக்க | வாசிப்பழக்க |
| 158 | 28 | முடிவெடித்து | முடிவித்து |
| 1 9 | 29 | யீப்ணை | யீடணை |
| 160 | 31 | பருத்தல் | பழித்தல் |
| 163 | 15 | துரியாக்தம் | துரியாதீதம் |
| 165 | 2 | படம் | பயம் |
| 172 | 20 | யேசி | பேசி |
| 178 | 23 | மாயணி | மாசயணி |

357/1

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 185 | 23 | நடுக்கம் | நடுக்கசம் |
| 185 | 26 | பின்னப்பாட்குக்கிற | பின்னப்பட்டிருக்கிற |
| 189 | 2, 28, 30, 31, 32 | அனுத்திரனை | அனுத்திரளை |
| 190 | 33 | சுகண | சுகரண |
| 193 | 20 | கார | சார |
| 1 7 | 38 | தவிர | தீவிர |
| 205 | 18 | திறப் க்கனில் | திறப் க்களில் |
| 207 | 16 | இ னை | இதனை |
| 207 | 20 | தரை | தசை |
| 210 | 14 | கங்கள் | கபங்கற் |
| 212 | 6 | கபத்தில் | கரத்தில் |
| 221 | 1 | டவீக்க | விடவீச்சம் |
| 221 | 1 | டினிக்க ம்ச்சல் | குளிர் க ச்சல் |
| 221 | 2 | வாத்தி | வாந்தி |
| 223 | 38 | சுகதேகி | சுக தஇ |
| 231 | 14 | த ாயிரத்து | தோர யிரத்து |
| 251 | 26 | த துக்கவி | தா துக்கள் |
| 276 | 12 | அ ர்களை | அ களை |
| 283 | 1 | கிரட்சியாக | திரட்சியாக |
| 293 | 12 | வெட் | வெட்டு |
| 294 | 2 | டெசய்யும் | செய்யும் |
| 306 | 26 | தம்தரத்தில் | தம்தம்சத்தில் |
| 308 | 14 | தூண்டிவிரி | தூண்டிவிச் |
| 3 1 | 25 | கருவியக்கும் | கருவியாகும் |
| 325 | 33 | சவ்வறையால் | சவ்வுறையால |
| 341 | 39 | ான | வசன |
| 358 | 9 | விழுப்பிலிருந்து | விழிப்பிலிருந்து |

தனி அலுவலர்,
தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்.
அரும்பாக்கம்.

சென்னை;
1986 ஆகஸ்ட் 14.